# சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள்

முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.,) சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு


பகுதி நேர ஆய்வாளர்

புலவர் பெ. வரதராசன், எம்.ஏ,. எம்.ஃபில்., எம்.எட்.,

மேற்பார்வையாளர்

முனைவர் சு. தங்கதுரை, எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்,. பி.எச்.டி.,






தமிழ் ஆராய்ச்சித்துறை

திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி

விருத்தாசலம் -606 001.



செப்டம்பர் -2006

முனைவர் சு. தங்கத்துரை,
எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.எட்.,பி.எச்.டி.,
இணைப் பேராசிரியர், தமிழ்த்துறை,
திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி,
விருத்தாசலம்-606 001.

இடம் : விருத்தாசலம்
நாள் : 12.09.2006

---

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"**சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள்**" (The Opponent Characters in the Sangam Literature) என்னும் தலைப்பில் திரு. *பெ. வரதராசன்* அவர்கள் அளித்துள்ள இவ்வாய்வுக்கட்டுரை விருத்தாசலம், திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரித் தமிழ்த்துறையில் சென்னைப் பல்கலைக்கழகப் பகுதி நேர பிஎச்.டி., பட்டத்திற்கு என் மேற்பார்வையில் எழுதப்பட்டது. இவர் இவ்வாய்வுக் கட்டுரையைத் தாமே முயன்று ஆக்கியுள்ளார் என்றும் இவ்வாய்வேடு வேறு எந்த பட்டத்திற்கோ, ஆய்வரங்கத்திற்கோ அனுப்பப்பெறவில்லை என்று சான்றிதழ் வழங்குகிறேன்.

12/9/06

**சு. தங்கத்துரை,**
மேற்பார்வையாளர்.

முனைவர் சு. தங்கத்துரை,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
திருகொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி,
விருத்தாசலம்-606 001.

புலவர் **வெ. வரதராசன்,** எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.எட்.,
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
திருகொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி,
விருத்தாசலம்-606 001.

---

## ஆய்வாளர் உறுதிமொழி

### "சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள்"

என்னும் தலைப்பில் பிஎச்.டி., (பகுதி நேரம்) பட்டத்திற்குச் செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதே ஆகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

**வெ. வரதராசன்,**
பகுதி நேர ஆய்வாளர்.

இடம் : விருத்தாசலம்
நாள் : 12.09.2006

தலைவர்,
தமிழ்த் துறை,
திரு. கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூ
விருத்தாசலம்-606 001.

முதல்வர்,
திரு கொளஞ்சியப்பர் அரசினர் கலைக்கல்லூரி
விருத்தாசலம் - 607 001,

# நன்றியுரை

சென்னைப் பல்கலைக்கழகத்துடன் இணைக்கப்பட்டுள்ள திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரியில் பிஎச்.டி., பகுதிநேர ஆய்வாளராகப் படிக்க வாய்ப்புத் தந்த முதல்வர் பேராசிரியர் திரு. லோ. பழனியாண்டி,எம்.எஸ்சி.,எம்.ஃபில்., அவர்களுக்கு எனது முதற்கண் நன்றி உரித்தாகுக.

முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் திரு. ஆ. தண்டபாணி, எம்.ஏ.,எம்.ஃபில்., அவர்களுக்கும் தற்போதைய தமிழ்துறைத் தலைவர் முனைவர் அ. அழகிரிசாமி, எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி., அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்விற்குத் தூண்டுகோலாகவும் ஊன்றுகோலாகவும் இருந்து என்னை நெறிப்படுத்தி, நன்மொழிகள் நவின்று, தளராமல் ஒத்துழைப்பு நல்கிய இக்கல்லூரியின் தமிழ் இணைப் பேராசிரியரும் மேற்பார்வையாளருமான முனைவர் சு. தங்கத்துரை, எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.எட்.,பிஎச்.டி., அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராகவும் துணை வேந்தராகவும் பணியாற்றி, தமிழ் வளர்ச்சி மேம்பாட்டுக்குப் பல்லாற்றானும் பணியாற்றிக் கொண்டும் வருகின்ற முனைவர் பொன். கோதண்டராமன் (பொற்கோ) அவர்களின் ஊக்குவிப்பிற்குப் பெரிதும் நன்றி உடையேன்.

மேலும், தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் டாக்டர் சு. அமிர்தலிங்கம், எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி., பூ. முத்தழகன், எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்., அ. தண்டபாணி, எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்., கி. சிவக்குமார், எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.எட்., வெ. ராணி, எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.எட்.,பிஎச்.டி., சி. புவனேஸ்வரி, எம்.ஏ.,எம்.ஃபில்., அவர்களுக்கும் மற்றுமுள்ள தமிழ்த்துறை சார்ந்தவர்களுக்கும் நன்றி தெரிவிக்கக் கடப்பாடுடையவனாகின்றேன்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறுந். | - | குறுந்தொகை |
| ச.கா.வே.ச.ப. | - | சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| திருமுரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| நெ. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பட்.வெ. | - | பட்டினப்பாலை வெண்பா |
| பதிப். | - | பதிப்பாசிரியர் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பதிற்.ஆ.ப. | - | பதிற்றுப்பத்து ஆறாம் பத்து |
| பதிற்.ஆ.ப.பதி. | - | பதிற்றுப்பத்து ஆறாம் பத்து பதிகம் |
| பதிற்.இ.ப. | - | பதிற்றுப்பத்து இரண்டாம் பத்து |
| பதிற்.இ.ப.பதி. | - | பதிற்றுப்பத்து இரண்டாம் பத்து பதிகம் |
| பதிற்.எ.ப. | - | பதிற்றுப்பத்து எட்டாம் பத்து |
| பதிற்.எ.ப.பதி. | - | பதிற்றுப்பத்து எட்டாம் பத்து பதிகம் |
| பதிற்.ஏ.ப. | - | பதிற்றுப்பத்து ஏழாம் பத்து |
| பதிற்.ஏ.ப.பதி. | - | பதிற்றுப்பத்து ஏழாம் பத்து பதிகம் |
| பதிற்.ஐ.ப. | - | பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்து |
| பதிற்.ஐ.ப.பதி. | - | பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்து பதிகம் |

| | | |
|---|---|---|
| பதிற்.ஒ.ப. | - | பதிற்றுப்பத்து ஒன்பதாம் பத்து |
| பதிற்.ஒ.ப.பதி. | - | பதிற்றுப்பத்து ஒன்பதாம் பத்து பதிகம் |
| பதிற்.ப. | - | பதிற்றுப்பத்து பதிகம் |
| பதிற்.நா.ப. | - | பதிற்றுப்பத்து நான்காம் பத்து |
| பதிற்.நா.ப.பதி. | - | பதிற்றுப்பத்து நான்காம் பத்து பதிகம் |
| பதிற்.மூ.ப. | - | பதிற்றுப்பத்து மூன்றாம் பத்து |
| பதிற்.மூ.ப.பதி. | - | பதிற்றுப்பத்து மூன்றாம் பத்து பதிகம் |
| பரி. | - | பரிபாடல் |
| பரி. திரட்டு. | - | பரிபாடல் திரட்டு |
| பா.எண். | - | பாடல் எண் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல். | - | முல்லைப்பாட்டு |

## பொருளடக்கம்





# முன்னுரை

**1.** சங்க காலம் தமிழ்நாட்டின் பொற்காலம் எனப்படுகிறது. இச்சங்க காலத்தில் தோன்றிய பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் சங்க இலக்கியங்கள் எனப்படுகின்றன. இவை தமிழரின் பண்பாடு, நாகரிகம், வீரம், புகழ், அறம், கொடை, புலமை, வெற்றி ஆகியவற்றைப் புலப்படுத்துகின்றன. இச்செய்திகளை அடியொட்டிப் பல்வேறு நோக்கில் ஆய்வுகள் செய்துள்ளனர்.

சங்க இலக்கியப் பாத்திரங்கள் பற்றிய ஆய்வுகள் குறைவாகவே தோன்றியுள்ளன. அதிலும் குறிப்பாக எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றிய ஆய்வுகள் வெளி வரவில்லை. சங்க இலக்கியத்தில் அமைந்துள்ள எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றிய ஆய்வினை மேற்கொண்டுள்ளமையால் இவ்வாய்வேடு, **"சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள்"** என்னும் தலைப்பில் அமைகிறது.

## 2. தலைப்புத் தேர்வு:

சங்க இலக்கியங்களைப் பலர் ஆராய்ந்து பல்வேறு தலைப்புகளில் அரிய பல செய்திகளைப் புலப்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியத்தில் செவிலித்தாய், அகப்பாடல்களின் தலைவன், சங்க இலக்கியத்தில் வேந்தர், அகத்திணை மாந்தர் எனப் பாத்திரங்கள் பற்றிச் சில ஆய்வுகளே வெளிவந்துள்ளன. மன்னர், சமயம், சமுதாயம், வரலாறு எனப்பல ஆய்வுகள் வந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் பெயர் குறிப்பிடப்பெறாத தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய் போன்ற பாத்திரங்கள் பற்றிச் செய்திகளும் புலப்படுகின்றன.

வேந்தரும் மன்னரும் வீரரும் பிற நாட்டவரோடு போரிட்டுள்ளனர். புலவர்கள் அரசர்களை நாடிப் பாடிப் பரிசுகள் பல பெற்றுள்ளனர். வேந்தர்கள் புலவர்களை வரவேற்றுப் பொன்னும் பொருளும் தந்து தமிழை வளர்த்தனர். மன்னர் பலர் புலவர்களாகவும் திகழ்ந்து அரிய பாடல்களைப் பாடிக் கொடுத்துள்ளனர்.

திருமால், முருகன், சிவன், பஞ்சபாண்டவர், பரசுராமன், இராமன், சீதை, இரணியன், கௌதமமுனிவன் போன்ற பத்திநிலைப் பாத்திரங்கள் பற்றியும் செய்திகள் பேசப்படுகின்றன. மேலும் நூற்களைப் படிக்கின்றபோது பாத்திரங்கள் பற்றிப் பல செய்திகள் கிடைத்துள்ளன. பாத்திரங்கள் அனைத்தும் பல காரணங்களின் பொருட்டு ஒன்றுக்கொன்று எதிர்நினலயாக அமைந்துள்ளது தெரிய வந்தது. இதனால், "**சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள்**" என்னும் தலைப்பு ஆய்வுத் தலைப்பாகத் தேர்வு செய்யப் பெற்றது.

## 3. ஆய்வு நோக்கம்:

ஆய்வு ஒட்டு மொத்தமாக மனித சமுதாய மேம்பாட்டுக்கே உதவுகின்ற ஒரு மாபெரும் பணி[1]. இந்த ஆய்வினை மேற்கொள்ளும் பொழுது,

> ***குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்***
> ***மிகைநாடி மிக்க கொளல்*** [2]

என்னும் திருவள்ளுவரின் திருக்குறளில் கூறியுள்ள குணம், குற்றம் இரண்டையும் ஆராய்ந்து பார்த்து மிக்க கொளல் என்று திருவள்ளுவர் கூறிய ஆராய்ச்சி முடிவு ஏற்கத்தக்கதாகும்.[3]

இதன் அடிப்படையில் சங்க காலத்தில் ஆண்ட சோழர், பாண்டியர், சேரர், குறுநில மன்னர், வீரர், புலவர், சான்றோர் போன்றோரைக் கால அடிப்படையில் தெரிவிப்பதோடு அவர்களுக்கு யார் யார் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்; எதிர்நிலைப் பாத்திரங்களாக அவர்கள் இருந்தமைக்குரிய காரணங்கள் என்னென்ன என்பதையும் ஆராய்தல் வேண்டும்.

தலைவன் தலைவிக்குரிய எதிர்நிலைப் பாத்திரங்கள் எவ்வாறு அமைந்துள்ளனர் என்பதை அறிந்து அவற்றுக்குரிய காரணங்களையும் ஆராய்தல் வேண்டும். சங்க இலக்கியங்கள் தோன்றிய காலத்தில் பத்திமை நிலை மக்களிடையே எவ்வாறு தாக்கம் பெற்றிருந்தது என்பதனை வெளிப்படுத்தி பத்திநிலையிலும் நட்பு நிலையிலும் சான்றோர் நிலையிலும் யார் யாருக்கு யார் யார் என்னென்ன காரணங்களால் எதிர்நிலையாகியுள்ளனர் என்பதை எல்லாம்

ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

ஒப்பிட்டுப் பார்க்காமல் ஆராய்ச்சி செய்ய முடியாது.[4] எனவே, ஒப்பியல் நோக்கில் சங்க இலக்கியங்களை ஆராய்ந்து அதில் இடம்பெறும் பாத்திரங்களின் எதிர்நிலைப் பற்றிப் புலப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கம் எனலாம்.

## 4. ஆய்வின் கருதுகோள்:

அரசர், புலவர், தலைவன், தலைவி, தோழி போன்ற பாத்திரங்கள் நிலையிலும் பத்தி நிலையிலும் எதிர்நிலைகள் இருந்துள்ளன என்பதனைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன என்ற கருதுகோளை அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வு செய்யப்படுகிறது.

## 5. ஆய்வு அணுகுமுறை:

சங்க இலக்கியங்களில் காணப்படும் ஒவ்வொரு பாத்திரத்தைப் பற்றியும் விளக்கி, அப்பாத்திரத்திற்கு எதிர்நிலையான பாத்திரங்கள் யார் யார் என்னென்ன காரணங்களால் எதிர்நிலையானார்கள் என்பதை விளக்கிக் கூறுவதால் இவ்வாய்வு விளக்கவியல் ஆய்வு (Descriptive Research) முறையிலும்,

யார் யார், யார் யாருக்கு என்ன காரணத்தால் எதிர்நிலையானார்கள் என்பதை ஒப்பாய்வு செய்து தெரிவிப்பதால் இவ்வாய்வு ஒப்பியல் ஆய்வு (Comparative Research) முறையிலும் அமைந்துள்ளன.

## 6. ஆய்வு மூலங்கள்:

ஆய்வுத் தொடர்பான மூலங்களை முதன்மை ஆதாரங்கள், துணை ஆதாரங்கள் எனப் பிரிக்கலாம்.

### 6.1. முதன்மை ஆதாரங்கள்:

தொன்மை இலக்கியங்களாகிய,

1. நற்றிணை, புலவர் நா. இராமையா பிள்ளை-வர்த்தமானன் பதிப்பகம், 1999.
2. குறுந்தொகை, பேராசிரியர் முனைவர் இரா. பிரேமா, ..........”....................”
3. ஐங்குறுநூறு, I,II, புலவர் அ. மாணிக்கனார், ........................”....................”

4. பதிற்றுப்பத்து, ......................"........................................................"......................"

5. பரிபாடல், .............................."........................................................"......................"

6. கலித்தொகை, I,II, ................"........................................................"................2000.

7. அகநானூறு, I,II,III, ..............."........................................................"......................"

8. புறநானூறு, I,II, ......................"........................................................"......................"

9. திருமுருகாற்றுப்படை, ........"........................................................"......................"

10. பொருநராற்றுப்படை, .........."........................................................"......................"

11. சிறுபாணாற்றுப்படை, ........."........................................................"......................"

12. பெரும்பாணாற்றுப்படை, ...."........................................................"......................"

13. முல்லைப்பாட்டு, ................."........................................................"......................"

14. மதுரைக்காஞ்சி, ...................."........................................................"..............1999.

15. நெடுநல்வாடை, ................."........................................................"......................"

16. குறிஞ்சிப்பாட்டு, ................"........................................................"......................"

17. பட்டினப்பாலை, ..................."........................................................"......................"

18. மலைபடுகடாம், ...................."........................................................"......................"

எனப்படும் சங்க இலக்கியங்கள் முதன்மை ஆதாரங்கள் ஆகும்.

## 6.2. துணை ஆதாரங்கள்:

இலக்கண நூலாகிய தொல்காப்பியம், சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கு ஆய்வுகள், பாத்திரங்களைப் பற்றிக்கூறும் கட்டுரைகள், சங்க இலக்கியக் களஞ்சியம், களஞ்சியங்கள், சங்க இலக்கியங்கள் பற்றி வெளி வந்துள்ள ஆய்வேடுகள், சங்க கால மன்னர்களின் கால நிலை ஆய்வுகள், இராமாயணம், மகாபாரதம், ஆங்கில அகராதிகள், தமிழ் அகராதிகள், தமிழ் ஆங்கில அகராதி, நிகண்டுகள், தமிழ் இலக்கிய வரலாறுகள் போன்றவை துணை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## 7. ஆய்வு முன்னோடிகள்:

1. அகத்திணை மாந்தர், ஆ. இராமகிருட்டிணன், மதுரை, 1982.
2. சங்க இலக்கியத்தில் செவிலித்தாய், சோ. கசேந்திரன், சென்னை, 1980.
3. அகப்பாடல்களின் தலைவன், கோ. சுப்புலட்சுமி, சென்னை, 1980.

4. சங்க இலக்கியத்தில் வேந்தர், அரங்க. இராமலிங்கம், சென்னை, 1983.
5. சங்க கால வேந்தர்களின் சமுதாயப் பணி, டாக்டர் அ. ஜம்புலிங்கம், இந்துமதிப் பதிப்பகம், சிதம்பரம், 2003.
6. சங்க கால மன்னர்களின் கால நிலை, தொகுதி I,II, டாக்டர் பத்மா ரமேஷ், வி.பி. புருஷோத்தமன், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2000.
7. சங்க காலத் தமிழக வரலாறு, தொகுதி I,II, மயிலை. சீநி. வேங்கடசாமி, எம். வெற்றியரசி, மனை எண். 9, கதவு எண். 26, ஜோசப் குடியிருப்பு, ஆதம்பாக்கம், சென்னை, 2003.
8. சங்க கால வரலாற்று ஆய்வுகள், தொகுதி I,II, மயிலை. சீநி. வேங்கடசாமி, எம். வெற்றியரசி, மனை எண். 9, கதவு எண். 26, ஜோசப் குடியிருப்பு, ஆதம்பாக்கம், சென்னை, 2001.

மேற்குறிப்பிட்ட ஆசிரியர்கள் தனித்தனியாகவும், மொத்தமாகவும் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பாத்திரங்கள் பற்றி ஆராய்ந்து விளக்கம் தந்துள்ளார்கள். ஆனால், சங்க இலக்கியத்தில் பாத்திரங்கள் என்ற தலைப்பில் ஆய்வு வெளி வந்ததாக அல்லது ஆய்வு மேற்கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. குறிப்பாக எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றிய முழுமையான ஆய்வுகள் வெளிவரவில்லை. எனவே, "**சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள்**" பற்றி முழுமையான ஆய்வினைச் செய்ய வேண்டி இவ்வாய்விற்கு இவ்வாய்வாளர்களின் கருத்துகள் முன்னோடிகளாக உள்ளன.

## 8. ஆய்வின் எல்லை:

ஆய்தல் என்றால் தேடிப் பார்த்தல், தேடிப் பார்த்துத் தேவையானதை எடுத்துக் கொண்டு தேவையற்றதைத் தள்ளுதல் என்ற பொருளில் இக்கால வழக்கில் இந்தச் சொல் பயன்படுத்தப்படுகிறது.[5]

ஆராய்ச்சி என்பது, ஒரு குறித்த பொருளைப் பற்றித் தேவையான தகவல்களைத் திரட்டிக் கொண்டு திட்டவட்டமாக அந்தப் பொருளை ஆராய்ந்து பெற்றுக் கொள்ளுகின்ற அறிவுத் தொகுதி என்று சொல்லலாம்.[6]

சங்க இலக்கியத்தின் கருத்துகள் பரந்துபட்டவை. பல வகையான ஆய்வுக்குக் களம் பதிப்பவை. எனவே, இவ்வாய்வு எதிர்நிலை என்ற நோக்கை அடிப்படையாகக் கொண்டுள்ளதால் அந்த எல்லைக்குள் நின்றே கருத்துகள் வகை தொகை செய்யப்பட்டுள்ளன.

## 9. ஆய்வேட்டின் அமைப்பு:

**9.0.** இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது.

1. **அரசரின் எதிர்நிலைப் பாத்திரங்கள்**
2. **புலவரின் எதிர்நிலைப் பாத்திரங்கள்**
3. **தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள்**
4. **தலைவியின் எதிர்நிலைப் பாத்திரங்கள்**
5. **பிற கூறுகளில் எதிர்நிலைப் பாத்திரங்கள்**

**9.1.** **முன்னுரை** பகுதியில் தலைப்பு விளக்கம், தலைப்புத் தேர்வு, ஆய்வு நோக்கம், ஆய்வின் கருதுகோள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு மூலங்கள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் எல்லை, ஆய்வேட்டின் அமைப்பு போன்றவை சுருக்கமாகச் சுட்டப்பட்டுள்ளன.

**9.2.** **அரசரின் எதிர்நிலைப் பாத்திரங்கள்** என்னும் முதல் இயலில் சோழர், பாண்டியர், சேரர், குறுநில மன்னர், வீரர் எனப் பாத்திரங்கள் கால அடிப்படையில் ஆராயப்பட்டு அப்பாத்திரங்களின் எதிர்நிலை, அவ்வாறு எதிர்நிலையானமைக்குக் காரணங்கள் போன்றவை தெரிவிக்கப்பட்டுள்ளன. எதிர்நிலைக்குக் காரணங்களாக, சினம், பொறாமை, நாடு பிடிக்கும் ஆசை, மாற்றரசனின் பொருள் கவர்தல், புலவர்களுக்குப் பரிசில் தருவதற்காகப் படையெடுத்தல் என எந்தெந்த நிலையில் எப்படி எதிர்நிலைப் பாத்திரங்கள் அமைக்கப்பட்டுள்ளன என்பது ஆராயப்பட்டு விளக்கம் தரப்பட்டுள்ளது.

வீரர் என்ற பகுதியில், சோழரின் வீரர்கள், பாண்டியரின் வீரர்கள், சேரரின் வீரர்கள், குறுநில மன்னரின் வீரர்கள், பெண் தர மறுத்துப் போரிட்ட வீரர்கள்,

ஆநிரைக்காகப் போரிட்ட வீரர்கள், மறக்குடி மடந்தையர்க்கு மக்களாய்ப் பிறந்து போரிட்ட வீரர்கள், பொதுவாகச் சொல்லப்படும் பிற வீரர்கள் எனப் பகுக்கப்பட்டு அவரவர்க்குரிய எதிர்நிலைப் பாத்திரங்களும் எதிர்நிலைக்குரிய காரணங்களும் விளக்கிச் சொல்லப்பட்டுள்ளன.

**9.3.** பல்வேறு புலவர் பல்வேறு காலகட்டங்களில் வாழ்ந்து மன்னரோடும் பிற புலவரோடும் வள்ளல்களோடும் கூடி மகிழ்ந்து அவர்தம் பெருமைகளைப் பாடிப் பரிசில் பெற்றுச் சென்றுள்ளனர். இப்புலவர் (1) ஆண்பாற் புலவர்கள், (2) பெண்பாற் புலவர்கள் எனப் பகுக்கப்பட்டு காலமுறைப்படி ஆராயப்பட்டுள்ளனர். இப்புலவர்கள் மன்னர்களுக்கிடையே போர் நிகழ்ந்தபோது சந்து செய்த வகையிலும் தகுதியறிந்து பரிசு தராத காரணத்தாலும் பலர் எதிர்நிலைப் பாத்திரங்களுக்குக் காரணமாயினர். இச்செய்திகளை உள்ளடக்கிய இரண்டாம் இயலுக்கு, **புலவரின் எதிர்நிலைப் பாத்திரங்கள்** எனப் பெயரிடப்பட்டுள்ளது.

**9.4.** சங்க இலக்கியங்களில் தலைவனது பாத்திரம் மிகச்சிறப்பிடம் பெறுகிறது. தலைவனது கூற்றுகள் தலைவனது வாயிலாகவும், புலவர் வாயிலாகவும், பாணன் வாயிலாகவும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இருப்பினும் இத்தலைவனது கூற்றுகள் (1) அகக்கூறு (2) புறக்கூறு எனப் பகுக்கப்பட்டு, தலைவனுக்கு எதிர்ப்பாயின தலைவி, பரத்தை, தோழி, நற்றாய், செவிலித்தாய், அவையத்தார், பாணன் போன்றோரது காரணங்களை ஆராய்ந்து விளக்கிக் கூறுவதால் **தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள்** என்ற மூன்றாவது இயல் அமைந்துள்ளது.

**9.5.** தலைவி போர்க்காரணமாகவும், பொருள் ஈட்டல் காரணமாகவும், பரத்தமை காரணமாகவும், தலைவனை விட்டுத் தனித்து வருந்தியிருந்த நிலை சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. தலைவிக்குப் போர்க்காரணமாகவும், தொழில் நிமித்தம் காரணமாகவும், பரத்தை நிமித்தம் காரணமாகவும், பிரிவு நிமித்தம் காரணமாகவும் தலைவன் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளான். இக்கூறுகள் (1) போர்க்காரணமாக (2) பிற காரணங்களாக எனப் பகுக்கப்பட்டு, தலைவிக்கு எதிர்நிலையான கூற்றுவன், தலைவன், காவலர், பூவிற்றுக் கொண்டிருந்த ஒருத்தி,

பரத்தை, புலவர் போன்றோர் பற்றி விளக்கமாக ஆராயப்பட்டு நான்காம் இயலாக, **தலைவியின் எதிர்நிலைப் பாத்திரங்கள்** என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

**9.6. பிற கூற்றுகளில் எதிர்நிலைப் பாத்திரங்கள்** என்னும் ஐந்தாம் இயலில் முருகப் பெருமான், தேவர், திருமால், பரசுராமன், சிவபெருமான், பஞ்சபாண்டவர், கௌதமமுனிவன் போன்றோருக்கும் மிஞிலி, ஆஅய் எயினன், திதியன், வெளியன், பாணன், வெண்ணிக்குயத்தியார், சேரன் செங்குட்டுவன், மலையமான் திருமுடிக்காரி போன்றோருக்கும் அசுவத்தாமன், வீமன், விதவையர், கோப்பெருஞ்சோழன், அரசன், தாய், மக்கள், பரத்தை போன்றோருக்கும் சான்றோர், பொத்தியார் மற்றும் பிற புலவர்கள் போன்றோருக்கும் எதிர்நிலை இருந்துள்ளமை பற்றி,

(1) பத்திநிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள்
(2) நட்பு நிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள்
(3) உறவு நிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள்
(4) சான்றோரின் எதிர்நிலைப் பாத்திரங்கள்

எனப் பகுப்பாய்வு மூலம் ஆராய்ந்து விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

**9.7. முடிவுரை:**

முடிவுரைப் பகுதியில் இவ்வாய்வில் கண்ட முடிவுகள் இயல் வரிசையில் கொடுக்கப்பட்டுள்ளன.

**10.** முடிவுரையின் நிறைவுப் பகுதியில் இவ்வாய்வைத் தொடர்ந்து செய்ய இருப்பவர்களுக்குச் சில பரிந்துரைகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

**11.** ஆய்வேட்டின் நிறைவுப் பகுதியில், இந்த ஆய்வுக்குத் துணை நின்ற உசாத்துணைக்குறிப்பு நூற்கள், அகராதிகள், களஞ்சியங்கள், ஆய்வேடுகள் போன்றவை அகர வரிசையில் தரப்பட்டுள்ளன.

**12. மேற்கோள் விளக்கம்:**

சங்க இலக்கியப் பாடல்களை எடுத்தாளுகின்றபோது அந்தந்தப் பகுதியிலேயே நூலின் சுருக்கக் குறியீடு, பாடல்எண் மற்றும் பாடல் வரிகள்

கொடுக்கப்பட்டுள்ளன. திறனாய்வாளரின் கருத்துகளுக்கு எண் கொடுக்கப்பட்டு கட்டுரையின் இறுதிப் பகுதியில் அதன் விளக்கங்கள் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.



## அடிக்குறிப்புகள்:

1. ஆராய்ச்சி நெறிமுறைகள், டாக்டர் பொற்கோ, 2001, ப. 26.
2. திருக்குறள் - தெளிவுரை, டாக்டர் மு. வரதராசன், 1988, ப. 105.
3. இலக்கிய ஆராய்ச்சி, டாக்டர் மு. வரதராசன், 1967, ப. 199.
4. ஆராய்ச்சி நெறிமுறைகள், டாக்டர் பொற்கோ, 2001, ப. 57.
5. மேலது, ப. 2.
6. மேலது, ப. 4.



**1.0.** அரசரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற முதலியலில் எதிர்நிலை தொடர்பான சொல்விளக்கங்கள் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன. சங்க இலக்கியங்களில் காணப்படும் எதிர்நிலைச் சொற்கள் கொடுக்கப்பட்டு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள எதிர்நிலை தொடர்பான சொற்களும் இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

அதனைத் தொடர்ந்து அரசர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றியச் செய்திகள் வகை தொகை செய்து விளக்கப்பட்டுள்ளன.

**எதிர்நிலை:**

எதிர்நிலை என்பதற்கு எதிர்நிற்றல்,[1] மாறுபட்டு நிற்றல், போர் செய்தல், எதிர்த்து நிற்றல்,[2] இகலிநிற்கை,[3] எதிர்நிற்கை,[4] Resistance, Opposition[5] என்று பொருள் கூறுகின்றனர்.

**எதிர்நிற்றல்:**

எதிர்நிற்றல் என்பதற்குப் போர் செய்தல்,[6] மாறாக நிற்றல்,[7] எதிர்த்து நிற்றல்,[8] மாறுபட்டு நிற்றல்[9] என்று பொருள் கொள்வர்.

**எதிர்நில்:**

எதிர்நில் என்பதற்கு மாறுபட்டு நிற்றல்,[10] எதிர்த்து நிற்றல்,[11] மாறுபட்டு நில், போர் செய் என்றும்,[12] To resist, withstand, oppose[13] என்றும் பொருள் விளக்கம் தருவர்.

**எதிர்:**

எதிர் என்பதற்கு முரண்,[14] போர்,[15] Opposite[16], நேர் முரண், எதிர்ப்படுவாய், மாறு[17], எதிரிடையானது[18] என்று பொருள் தருவர்.

**எதிர்தல்:**

எதிர்தல் என்பதற்கு மாறுபடுதல்,[19] எதிர்த்தல்,[20] தோன்றல்,[21] மலைதல்,[22] சம்பவித்தல்,[23] மாறாகத் தாக்குதல்,[24] எதிர்கொள்ளுதல், பகைத்தல்,[25] மலர்தல்,[26] முட்டுதல், தலைப்படல், முடுகல், ஏற்றல், கிடைத்தல்,[27] தாக்கல், கிட்டல்,[28] நேர்தல்[29] எனப் பொருள் கூறுவர்.

**எதிர்த்தல்:**

எதிர்த்தல் என்பதற்கு அலைத்தல்,[30] தாக்குதல்,[31] மாறுபடுதல்,[32] ஆட்சேபித்தல், மறுத்தல், எதிர்ப்புத் தெரிவித்தல், மறுப்புத் தெரிவித்தல்,[33] சந்தித்தல், to meet face to face,[34] தடுத்தல்,[35] மோதுதல்,[36] நோதல்[37] எனப் பொருள் கொள்கின்றார்கள்.

**எதிர்ப்பு:**

எதிர்ப்பு என்பதற்கு எதிர்த்தல்,[38] மாறாகத் தாக்கல்,[39] மறுப்பு, போராட்டம், மறியல், தகராறு, ரகளை, ஆர்ப்பாட்டம், அட்டகாசம், கலகம், கலவரம், புரட்சி, எழுச்சி,[40] ஏறட்டுக் கொண்டு,[41] எதிர்ப்பே சொல்லடுத்த லும்பேர்[42] என்று பொருள் கூறுகின்றனர்.

**எதிரி:**

எதிரி என்பதற்கு எதிராளி,[43] பிரதிவதி, எதிர்நிற்பவன்,[44] எதிர்தொடர்ப் பூவெதிர்த்தல்,[45] பகைவன்,[46] opponent, enemy, foe, antagunist,[47] எதிரி, எதிராளி, பகைவர், விரோதி, சத்துரு, விரோதக்காரர், சண்டைக்காரர், ஆகாதவர், வேண்டாதவர், வில்லன் (வில்லி), பரம விரோதி, பரமசத்துரு போன்ற உறவல்லாத் தொடர்புப் பெயர்கள்,[48] எதிர்வழக்காளி[49] எனப் பொருள் கூறுகின்றனர்.

**எதிராளி:**

எதிராளி என்பதற்கு எதிரி,[50] பகைவன்,[51] enemy, dependent, opponent, competitor,[52] எதிர்வழக்காளி[53] எனப் பொருள் விளக்கம் கூறுகின்றனர்.

**எதிர்ந்தோர்:**

எதிர்ந்தோர் என்பதற்குப் பகைவர்,[54] மாறுபட்டோர்,[55] adversaries, opponents, cambatants[56] எனப் பொருள் கூறுகின்றனர்.

**எதிர்ப்படுதல்:**

எதிர்ப்படுதல் என்பதற்கு முன் தோன்றுதல்[57] என்று பொருள் விளக்கம் கொள்கின்றனர்.

**எதிரிடுதல்:**

எதிரிடுதல் என்பதற்கு oppose in battle[58] என்றும் பொருள் கொள்வர்.

**வில்லன்:**

Villain என்பதற்குக் கேடன், இரண்டகன்,[59] வல்லெதிரி,[60] A wicked person,[61] A person guilty of a crime, A character, whose evil actions or motives are important to the plot,[62] A villain, a violent, malevolent, or unscrupulousevil, playfully, a wretch, The wicked enemy of the hero or heroine in a story or play; a criminal [63] என்றும்,

1. Villain, 2. a person of evil Acts, 3. a character in a story or play who oppose the hero, 4. a person of uncouchmind and manners, 5. a person or thing blamed for a particular evil or difficulty[64] என்றும்,

1.A character in a play or film story having motives and action. 2. A person who acts such a character,[65] Wronged shall he live, insulted o'er, oppressed, who dares be less a villain than the rest[66] என்றும் பொருள் விளக்கம் கொள்கின்றார்கள்.

எதிர்நிலை, எதிர்நிற்றல், எதிர்நில், எதிர், எதிர்தல், எதிர்த்தல், எதிர்ப்பு, எதிரி, எதிராளி, எதிர்ந்தோர், எதிர்ப்படுதல், எதிரிடுதல், வில்லன் போன்று பொருள் விளக்கம் கூறும் சொற்கள் ஒன்றுக்கொன்று உறவுடையதாகவும் ஒரு பொருட் கூறுபாடுடையதாகவும் திகழ்கின்றன.

**பாத்திரம்:**

பாத்திரம் என்பதற்கு நாடக உறுப்பினன்,[67] வேடம் பூண்டு நடிப்போர்,[68] Character in a play; Actor,[69] நாடகத்தில் வேடம்பூண்டு நடிப்பவன், நடிப்பவள்[70] எனப் பொருள் கொள்கின்றனர்.

**பாத்தி:**

பாத்தி என்பதற்கு பகுதி,[71] பங்கு,[72] Share[73] பிரிவு,[74] இன்னும் பகுத்தல்[75] எனப் பொருள் கூறுகின்றனர்.

**பாத்தல்:**

பாத்தல் என்பதற்குப் பங்கிடுதல்,[76] பகுத்தல்[77] என்று பொருள் விளக்கம் கொள்கின்றனர்.

பாத்திரம், பாத்தி, பாத்தல் போன்று பொருள் விளக்கம் கூறும் சொற்கள் ஒன்றுக்கொன்று உறவுடையதாகவும் ஒரு பொருட் கூறுபாடுடையதாகவும் திகழ்கின்றன.

எனவே, எதிர்நிலைப் பாத்திரம், ஒருவருக்கொருவர் மாறுபட்டு எதிர்த்துப் போரிடல், எதிர்த்துத் தாக்கல், எதிர்மாறாக நடத்தல், பகைத்துக் கொள்ளுதல், நேருக்கு நேர் நின்று போரிடல், கருத்துகளில் முரண்படுதல், எதிர்ப்பாக வாதிடுதல் போன்ற கூறுகளில் தத்தம் பங்குப் பணியாக அரசர்கள், குறுநில மன்னர்கள், வீரர்கள், புலவர்கள், தலைவன், தலைவி போன்ற பாத்திரங்கள் செயலாற்றியுள்ளமையால், அந்நோக்கில் இவர்கள் எதிர்நிலைப் பாத்திரங்கள் எனப்படுகின்றனர்.

சங்க இலக்கியங்களில், பொருது (புறம். 63.10), அகம். 125.16), குறுந்.328.6), மாற்று (புறம். 42.24), எதிர்ந்த (புறம்.6.11, 275.9), முரணிய (நெ.188, புறம்.99.9), முரண்கொள் (அகம்.93.8), மாற்றோர் (பதிற்.ஏ.ப.பதி.1, அகம். 177.14), பகைவர் (பதிற்.இ.ப.14.8, பதிற்.ஏ.பத்து,61.6), ஒன்னார் (அகம். 127.6, பதிற்.நா.ப.40.9, அகம், 338.12, அகம்.181.3, புறம்.91.1), நண்ணார் (பதிற்.ஏ.ப.பதி.4), ஏதில் (அகம்.346.24), அடங்கான் (அகம்,126.14), எதிர்கொண்ட (அகம்.142.11), போர்அடு (புறம்.233.6, அகம்.226.16), பொருது களம்பட்டென (அகம்.148.8), பெண்கொலை புரிந்த (குறுந்.292.5), தெவ்வர் (மலை.86, புறம்.6.11, புறம்.87.1, பதிற்.ப.எ.ப.80.9), ஒன்னாத் தெவ்வர் (மலை.386, பெரும்.419, புறம்.335.9), ஒட்டாது அகன்ற ஒன்னாத் தெவ்வர் (மலை.397), பொருந்தாத் தெவ்வர் (மலை.488), பணியாமையின் (அகம்.251.11), வேற்று (அகம்.113.14), நண்ணாத் தெவ்வர் (புறம்.126.22), எதிர்ந்து (புறம்.116.17, புறம்.87.1), அடங்கா (புறம்.200.16, பெரும்.418), ஒழித்த (நற்.180.7), இகல்முனை (அகம்.213.6), அறன்இல் (அகம்.109.14), எதிர்நின்று (பதிற்.ப.எ.ப.80.9), பணிந்து மொழியலனே

(புறம்.349.3), ஒன்னலர் (புறம்.274.4), பகைமுக (குறுந்.292.8), அருளாது (ஐங்.46.4), எடுக்கவல்லேன் (புறம்.255.2), யாத்துப்புடைப்ப (பரி.9.40), எதிர்பூண்டோர் (பரி.திரட்டு.1.73), எதிர்தலைக் கொண்ட (அகம்.386.5), அழிந்த (அகம்.386.6) என்பன போன்ற எதிர்நிலைச் சொற்கள் காணப்படுகின்றன.

அவற்றில், எதிர்ந்த, எதிர்ந்து, எதிர்கொண்ட, எதிர்நின்று, எதிர்பூண்டோர், எதிர்தலைக்கொண்ட போன்ற நேரிடையாக எதிர்நிலைப் பொருள் கொள்ளும் சொற்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

இச்செய்திகள் காலமுறைப்படி அரசரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற முதல் கூறாக வகை செய்யப்பட்டுள்ளது.



# 1.1. சோழர்

**1.1.0.** சோழர்களில் பன்னிருவர் பற்றியும் பெயர் குறிப்பிடப்படாத சோழர் பற்றியும் குறிப்புகள் உள்ளன. அவர்களது எதிர்நிலைக் கூறுகள் இப்பகுதியில் வகை செய்து விளக்கப்பட்டுள்ளது.

## 1.1.1. பெரும்பூண்சென்னி:

**1.1.1.0.** பெரும்பூண் சென்னி முதலாம் கரிகால் வளவனின் தந்தை[78] இவன் அழும்பில் எனப்படும் அழுந்தூரைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டை ஆட்சி புரிந்தவன். இவனது காலம் கி.மு. 300-275[79]. இவன் சென்னி வழிச்சோழன் எனப்படுவான்.

**1.1.1.1.** சோழமன்னன் பெரும்பூண் சென்னியின் படைத்தலைவன் பழையன், சேரமன்னனின் படைத்தலைவர்கள் அறுவரையும் கொன்று தானும் விழுப்புண்பட்டு இறந்ததை அறிந்து, அதனைப் பொறுக்க மாட்டாதவனாய்ச் சோழன் பெரும்பூண்சென்னி நாடு பிடிக்கும் ஆசை காரணமாகச் சேர மன்னனின் மற்றொரு படைத்தலைவனாகிய கணையன் என்பவன் தங்கியிருந்த கழுமலம் என்ற ஊரை முற்றுகையிட்டு, கணையனையும் கழுமலத்தையும் கைப்பற்றித் தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டமையால்,[80] சோழன் பெரும்பூண் சென்னிக்குச் சேர மன்னனின் படைத்தலைவன் கணையன் எதிர்நிலைப் பாத்திரமானான் (அகம். 44.11-14).

**1.1.1.2.** சேர மன்னனின் படைத்தலைவனாகிய கணையன் என்பவன் சோழமன்னன் பெரும்பூண்சென்னிக்கு அவனது நாடு பிடிக்கும் ஆசை காரணமாக எதிர்நிலைப்பாத்திரம்.

## 1.1.2. சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளி:

**1.1.2.0.** சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி தித்தனின் மகன். தித்தன் வெளியன் என்பது இவனது இயற்பெயராகும். வெளியன் என்றும் வெளியன் வேண்மான் என்றும் அழைக்கப்படுகிறான். கிள்ளி வழிச்சோழர் தலைவனாதலால், பெருநற்கிள்ளி என்றும், பழையன் என்பவனுடைய போஓர் எனப்படும் போர்வையை வென்றதால் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளி என்றும் அழைக்கப்பட்டான்.

இவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்துள்ளான்.[81] இவனது காலம் கி.மு.300-275.[82]

**1.1.2.1.** சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி, தன் தந்தை தித்தன் என்பவனுடன் மாறுபட்டு ஆமூரில் தனியே இருந்தபொழுது மல்லன் என்பவன் மிக்க வலிமையுடன் போர் தொடுக்க, கோப்பெருநற்கிள்ளி, தன் வலிய வீரத்தின் காரணமாக ஆமூரில் மல்லனின் வீரத்தைக் கெடுத்து, தலைகால் இரண்டும் முறியுமாறு மோதி அந்தக் களத்தில் மல்லனைக் கொன்றமையால்,[83] சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளிக்கு ஆமூர் மல்லன் எதிர்நிலைப் பாத்திரமானான் (புறம். 80, 1-4;8-9). இச்செய்தியை,

"***என்ஐ புற்கையுண்டும் பெருந்தோ ளன்னே***" (புறம். 84.1)
என்ற பாடல் வரியால் அறியலாகிறது.

**1.1.2.2.** சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி மல்லனுடன் போரிட்டு அவனைக் கொன்றதை, கோப்பெருநற்கிள்ளியுடன் மாறுகொண்டு ஆமூரில் இருந்த கிள்ளியின் தந்தை தித்தன் என்பவன் தன்னுணர்வு காரணமாகத் தனியே இருந்த பொழுது, நேரில் கண்டு மகிழ்ந்தாலும் மகிழாது போனாலும் காண்பானாக என்றதால், சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளிக்கு அவனது தந்தை தித்தன் என்பவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

"***நல்கினும் நல்கான் ஆயினும் வெல்போர்ப்***
***பொரல்அருந் தித்தன் காண்கதில் அம்ம!***" (புறம். 80. 5-6)

என்னும் பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.1.2.3.** விழாவிற்கும் போகவேண்டும், தன் மனைவி பிள்ளைப் பேற்றுக்கும் உதவ வேண்டும் என்ற நிலையில், மழை பெய்யும் மாலைப் போதில், கட்டிலைக் கட்டும் ஒருவன் விரைவாக ஊசியைச் செலுத்திப் பின்னுவதைப் போல, சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளியின் ஊரைக் கொள்ளையிடுவதற்காக வந்த வீரன் ஒருவனுடன் தன் வீர உணர்வு காரணமாக நிகழ்த்திய மற்போர் விரைவாக நிகழ்ந்தது என்றதனால் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளிக்கு, ஊரைக்

கொள்ளையிட வந்த வீரன் எதிர்நிலையானான். இதனை புலவர் சாத்தந்தையாரின்,

***"ஊர்கொள வந்த பொருநனொடு***

***ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே"*** (புறம். 82.5-6)

என்னும் பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.1.2.4.** ஆமூர்மல்லன், ஊரைக் கொள்ளையிட வந்த வீரன் ஒருவன், தந்தை தித்தன் போன்றவர்கள், சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப்பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

**1.1.3. கரிகாற் பெருவளத்தான் I :**

**1.1.3.0.** சங்கப் பாடல்களில் கரிகால் வளவன் என்ற பெயருடைய இருவேறு மன்னர்கள் காணப்படுகின்றனர். இவர்கள் பாட்டனும் பேரனும் ஆவார்கள் என்பார் சிவராசப்பிள்ளை. முதலாம் கரிகாற் பெருவளத்தான் சோழநாட்டை ஆண்டவன். பெரும்பூண்சென்னியின் மகன். இவன் அழுந்தூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான்[84]. இவனது காலம் கி.மு. 275-250[85].

இவன் சேரலாதனையும் ஒன்பது மன்னர்களையும் வேளிர் பதினொருவரையும் சேர பாண்டியர் ஆகிய இருபெருமன்னர்களையும் வெண்ணி, வாகைப்பறந்தலை, வெண்ணிவாயில் என்னும் அழுந்தூர் ஆகிய இடங்களில் நடந்த போர்க்களங்களில் வெற்றி பெற்றுள்ளான்.

அகநானூற்றிலும் புறநானூற்றிலும் பரணரால் பாடப்பட்ட கரிகால் வளவன், முதலாம் கரிகாற்பெருவளத்தான் எனப் போற்றப்படுகின்றான்.

**1.1.3.1.** வெண்ணி என்னும் போர்க்களத்தில் கரிகாலன் தன் வீரத்தின் காரணமாகச் சேரலாதன் என்ற சேரமன்னனைத் தோற்கடித்தான். அதனால் புறப்புண்பட்டு நாணங்கொண்ட சேரலாதன் வடக்கிருக்க முயன்றான்.[86] எனவே கரிகாலனுக்குச் சேரலாதன் எதிர்நிலையானான் (அகம். 55.9-12).

**1.1.3.2.** கரிகால் வளவன், தன் வீரத்தினால் தன்னை எதிர்த்துப் போரிட்ட

ஒன்பது மன்னர்களையும் வாகையூரின் போர்க்களத்தில் வென்றதனால் ஒன்பது மன்னர்களும் எதிர்நிலையாயினர் (அகம். 125.16-21).

**1.1.3.3.** சோழன் கரிகாற் பெருவளத்தான், பகைவரின் நாட்டை எரியூட்டிக் கொள்ளை செய்து அழித்தல் வேண்டும் என்னும் கருத்துடையவனாய், பகைவர் நாட்டைத் தீயிட்டுக் கொளுத்தியதோடு, அத்தீயின் ஒளியில், பகைவர் அழுது புலம்பி ஆரவாரம் செய்தபோதும், விடாமல் தன் சுற்றத்தாரையும் உடன் அழைத்துக் கொண்டுபோய், கொள்ளையடித்துள்ளமையால் சோழன் கரிகாற் பெருவளத்தானுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர்.

இச்செய்தியை கருங்குழல் ஆதனாரின்,

*"எல்லையும் இரவும் எண்ணாய் பகைவர்*
*ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்*
*கொள்ளை மேவலை ..............."* (புறம்.7.7-9)

என்னும் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன.

**1.1.3.4.** சினமும் வலியும் உடைய பெரும்புகழ்க் கரிகால்வளவன், பகைமன்னர் வேளிர் பதினொருவருடன், சேர பாண்டியர் என்ற இருபெரு வேந்தரும் பகை கொண்டு எழுந்த வெண்ணிவாயில் என்னுமிடத்து ஆரவாரமிக்க போர்க்களத்தில், பகைவர்தம் வீரமுரசும் போர்க்களத்தில் கிடக்க, அவர்களை வென்று,[87] அவர்தம் வலிமையைக் கெடுத்த நாளில் வெண்ணிப்பறந்தலைக்குப் புறத்தே இருந்த வெண்ணிவாயில் என்னும் அழுந்தூரில் மிக்க ஆரவாரம் எழுந்தது என்றமையால், பகைமன்னர் வேளிர் பதினொருவரும் சேரபாண்டியர் என்ற இருபெரு வேந்தரும் எதிர்நிலையாயினர் (அகம்.246.7-14).

**1.1.3.5.** சேரமன்னர் இருவர், பிற ஒன்பது மன்னர்கள், வேளிர் பதினொருவர் மற்றும் பகைவர் சிலர் போன்றவர்கள் முதலாம் கரிகாற் பெருவளத்தானுக்கு அவனது வீரம், பகைவரின் நாட்டை எரியூட்டிக் கொள்ளை செய்து அழித்தல் போன்ற காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

**1.1.4. கரிகாற்பெருவளத்தான் II:**

**1.1.4.0.** இரண்டாம் கரிகாற் பெருவளத்தானும் சோழ நாட்டை ஆண்டவன். முதலாம் கரிகாற் பெருவளத்தானின் மகன் உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னிக்குப் பிறந்தவன். முதலாம் கரிகாற் பெருவளத்தானின் பேரன். இவன் காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான். இவன் திருமாவளவன் எனவும் அழைக்கப்பட்டான். இவனது காலம் கி.மு. 225-200.[88]

இவன் சேரனையும், பாண்டியனையும், தன் தாயத்தாரையும், பல ஒளிநாட்டார், பழைய அருவாள நாட்டுமன்னர், வடதிசை மன்னர் சிலர், குடநாட்டு மன்னர், முல்லைநில மன்னர், இருங்கோவேள், பகைவர் சிலர் மற்றும் பகைவரின் மருதநில மக்கள் போன்றவர்களை வெண்ணி, பகைவரது மருதநிலம், பகை மன்னர் நாடுகள் ஆகிய இடங்களில் நடந்த போர்க்களங்களில் வெற்றி பெற்றுள்ளான்.

பொருநர் ஆற்றுப்படையிலும் பட்டினப்பாலையிலும் பாடப்பட்ட கரிகால் வளவனே இரண்டாம் கரிகாற் பெருவளத்தான் எனப் போற்றப்படுகின்றான்.

**1.1.4.1.** பனைமாலையும் வேப்பமாலையும் சூடிய இருபெருவேந்தர்களாகிய சேரனையும், பாண்டியனையும், தன் வலிய வீரத்தின் காரணமாக இளம்பருவத்திலேயே கரிகாற் பெருவளத்தான் வெண்ணி என்ற ஊரிடத்தே போரிட்டுக் கொன்றமையால் சேரனும் பாண்டியனும் எதிர்நிலையாயினர் (பொரு. 139-148).

**1.1.4.2.** பட்டினப்பாலை என்ற நூலுக்குத் தலைவன் கரிகாலன். அவனே திருமாவளவன் எனப்பட்டான். இக்கரிகாற்சோழன் மூவுலகையும் ஆளும் தகுதி பெற்றிருந்தும் இளமையில் அவனது கால் நெருப்பில் சிக்கி எரிந்து போனதால், இவ்வுலகப் பகைவரை மட்டும் வென்று தன் ஒரு குடைக்கீழ் இவ்வுலகம் முழுமையும் ஆண்டுள்ளான் என அறிய முடிகிறது.

இவ்வாறு, கரிகாற் சோழன் எனப்படும் திருமாவளவன் தன்னுணர்வு காரணமாக இவ்வுலகப் பகைவரை வென்று தன் ஒரு குடைக்கீழ்

ஆண்டுள்ளமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இதனை,

> *"முச்சக் கரமும் அளப்பதற்கு நீட்டியகால்*
> *இச்சக் கரமே அளந்ததால் - செய்ச்செய்*
> *அரிகால்மேல் தேன்தொடுக்கும் ஆய்புனல்நீர் நாடன்*
> *கரிகாலன் கால்நெருப் புற்று"* (பட். ப. 519. வெண்பா).

என்னும் பாடல் வரிகளால் புலப்படுகின்றன.

**1.1.4.3.** திருமாவளவனின் தாயத்தார் அவனது அரசாட்சியைப் கவர்ந்து கொண்டு அவன் இளமைப் பருவமாக இருக்கும்போதே சிறையிலடைத்தனர்.

இவ்வாறு தாயத்தார் சிறையிலடைத்து இழிவுபடுத்தி விட்டார்களே என்ற காரணங்கருதி, திருமாவளவன் தன் கூறிய அறிவாற்றலாலும் வாள் வலிமையாலும் சிறையை இடித்து மதிலில் ஏறித்தப்பித்து தாயத்தாரை வென்று மீண்டும் தன் அரசாட்சியைப் பெற்றமையால்[89] அவனது தாயத்தார் எதிர்நிலையாயினர். இதனை கடியலூர் உருத்திரங்கண்ணனாரின்,

> *"கொடுவரிக் குருளைக் கூட்டுள் வளர்ந்தாங்குப்*
> *பிறர், பிணி யகத்திருந்து பீடுகாழ் முற்றி*
> *அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று*
> *பெருங்கை யானை பிடிபுக் காங்கு*
> *நுண்ணிதின் உணர நாடி நண்ணார்*
> *செறிவுடைத் திண்காப்பு ஏறி வாள்கழித்து*
> *உறுகெழு தாயம் ஊழின் எய்தி"* (பட். 220-227)

என்னும் பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.1.4.4.** தன் அரசுரிமை பெற்றபின் திருமாவளவன், யானைப்படையுடனும், குதிரைப்படையுடனும் பூளைப்பூவும் உழிஞைப்பூவும் சூடி, பகை வீரரை வீழ்த்திக் கன்னிப் போரிலேயே தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகைவரை வென்று அவர்களின் மருதநிலத்தில் வாழ்ந்த குடிமக்களைத் துரத்தினமையால், திருமாவளவனுக்கு அவனது பகைவரும் பகைவரின் மருதநிலத்தில் வாழ்ந்த குடிமக்களும் எதிர்நிலையாயினர் (பட். 228-239).

**1.1.4.5.** திருமாவளவன் மிக்க சினம் தணியாதவனாய்ப் பகைவரை வீழ்த்தியதோடு, உலகத்தார் உயர்வாகச் சொல்லும்படி தன் வலிய வீரத்தின் காரணமாகப் பல ஒளிநாட்டார் தாழ்ந்து வீரம் குன்றவும், பழைய அருவாள நாட்டு மன்னர் ஏவல் செய்யவும், வடக்கில் உள்ள மன்னர் வாடவும், குடநாட்டு மன்னர் மனஎழுச்சிக்குன்றவும், பாண்டியன் வலிமை குறையவும், முல்லைநில மன்னர் மரபு கெடவும், இருங்கோவேள் என்பான் சுற்றத்துடன் அழியவும் வெற்றி பெற்றமையால்[90], பல ஒளி நாட்டார், பழைய அருவாள நாட்டு மன்னர், குடநாட்டு மன்னர், பாண்டியன், முல்லைநில மன்னர், இருங்கோவேள் ஆகியோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (பட். 269-282).

**1.1.4.6.** திருமாவளவனுக்குப் பகைவர் அஞ்சி வந்தனர்; வணங்கினர். பகைவர் வணங்குதலால், அவர்களது முடியில் சூடிய சூடாமணி உரிஞ்சிய காலையும், சாந்து பூசப்பெற்ற மார்பையும் உடையவன். ஒள்ளிய அணிகலன்களையுடைய அவன் பகைவரைத் தன் வலிய வீரத்தால் சிங்க ஏற்றை ஒப்ப வருத்திப் பணியச் செய்துள்ளமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை,

> "*மின்ஒளி எறிப்பத் தம்ஒளி மழுங்கி*
> *விசிபிணி முழவின் வேந்தர் சூடிய*
> *பசுமணி பொருத பருஏர்எறுழ்க் கழற்கால்*
> .........................
> *செஞ்சாந்து சிதைந்த மார்பின் ஒண்பூண்*
> *அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்*
> *திருமாவளவன்* ..............." (பட். 292-299)

என்னும் கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

**1.1.4.7.** சேர பாண்டியர், தாயத்தார், பல ஒளி நாட்டார், பழைய அருவாள நாட்டு மன்னர், வடதிசை மன்னர், குடநாட்டு மன்னர், முல்லைநில மன்னர், இருங்கோவேள், பகைவர் மற்றும் பகைவரது மருதநில மக்கள் போன்றவர்கள் இரண்டாம் கரிகாற் பெருவளத்தானுக்கு அவனது வீரத்தின், தன்னுணர்வின், இளமையில் தாயத்தார் சிறையிலடைத்து இழிவுபடுத்தியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

## 1.1.5. இளஞ்சேட்சென்னி:

**1.1.5.0.** அழகிய உருவமுடைய பலதேர்களை வைத்து இருந்ததால், உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி என்றும், சேரமானுடைய பாமுளூரை வென்றதால், சேரமான் பாமுளூர் எறிந்த இளஞ்சேட்சென்னி என்றும், நெய்தலங்கானல் பகுதியை ஆட்சி செய்ததால் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி என்றும், நன்னனின் பாழிநகரைப் போர் செய்து அழித்ததால் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி என்றும், பெரும்பூண் சென்னியின் பேரனாதலால் இளம்பெரும்சென்னி என்றும் அழைக்கப்பட்டான்.[91] இவனது காலம் கி.மு. 250-225.

இவன், தன்னைப் பகைத்த நாட்டவர், சேரமன்னன், தென்நாட்டில் குறும்பு செய்த பரதவர், வடநாட்டு வடுகர் போன்றவர்களைப் பகைவரின் அரண்கள், பாமுளூர், நன்னனின் பாழி நகர் போன்ற இடங்களில் நடந்த போர்க்களங்களில் வெற்றி பெற்றுள்ளான்.

**1.1.5.1.** பகைநாட்டவர் சினந்தபோது, அதனைப் பொறுக்கமாட்டாத சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி, தன்னுணர்வு காரணமாக அப்பகை நாட்டவரைத் தாயில்லாத, உண்ணாத குழந்தை போல் அல்லலுறச் செய்தமையால் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னிக்கு அவனைப் பகைத்த நாட்டவர் எதிர்நிலையாயினர். இதனை பரணரின்,

> *"தாயில் தூவாக் குழவி போல*
>
> *ஓவாது கூஉம்நின் உடற்றியோர் நாடே"* (புறம். 4.18-19)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.1.5.2.** சோழன் பாமுளூர் எறிந்த இளஞ்சேட்சென்னி, பகைவரின் அரண்கள் அவர்களிடத்தில் இருக்கும்பொழுதே, அவற்றை அழிப்பதற்கு முன்பே, உம்முடையது எனப் பாணர்க்குக் கொடையளிக்கும் தன்மையால், தன் வலிய வீரத்தின் காரணமாக வெற்றி பெற்று விடுவோம் என்னும் உறுதியால் கொடுக்கும் தன்மையுடையவனாதலால் இளஞ்சேட் சென்னிக்கு அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தி ஊன் பொதி பசுங்குடையாரின்,

*"...............நீயே ஒன்னார்*

*ஆர் எயில் அவர்கட்கு ஆகவும் நுமது எனப்*

*பாண்கடன் இறுக்கும் வள்ளியோய் ......"* (புறம்.203.9-11)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலனாகிறது.

**1.1.5.3.** சோழன் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி என்னும் இத்தலைப்புள்ள பாடலிலிருந்தே இச்சோழன் தன் வலிய வீரத்தின் காரணமாக, சேரமன்னனைப் பாமுளூரில் வென்றுள்ளமையால் பாமுளூர் எறிந்த என்ற அடைமொழி இச்சோழ மன்னனுக்கு உரியதாகி[92] இளஞ்சேட் சென்னிக்குச் சேரமன்னன் எதிர்நிலையானான் (புறம். 203).

**1.1.5.4.** சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி, தன்னை இழிவுபடுத்தல் காரணமாகத் தென்னாட்டில் புகுந்து குறும்பு செய்த பரதவரின் வன்மையையும், வடநாட்டினின்றும் வந்து குறும்பு செய்த வடுகரின் வாள் வீரத்தையும் ஒரு சேரக் கெடுத்து, அழித்தமையால்,[93] செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னிக்குப் பரதவரும், வடுகரும் எதிர்நிலையாயினர் (புறம். 378.1-5).

**1.1.5.5.** நன்னனை அழிப்பதைச் சோழர் கடனாகக் கருதினார்கள். எனவே, முன்னோர்கள் குறையாக விட்டுச் சென்ற செயலைச் செய்து முடிக்க வேண்டி, செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி, நன்னனின் பாழி நகரை அழித்தது இவன் பெற்ற வெற்றிகளில் பெருமிதத்துக்கு உரியதாகும். இதனால், சோழர்குடி செய்ய வேண்டிய கடமையைச் செய்து முடித்தான் என்பதால் நன்னன் எதிர்நிலையானான். இதனை இடையன் சேந்தன் கொற்றனாரின்,

*"எழூஉத் திணிதோள், சோழர் பெருமகன்*

*விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி*

*குடிக்கடன் ஆகலின் குறைவினை முடிமார்*

*செம்புஉறழ் புரிசைப் பாழி நூறி"* (அகம்.375.10-13)

என்னும் பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.1.5.6.** சேரமன்னன், பரதவர், வடநாட்டு வடுகர், நன்னன், பகைத்த நாட்டவர் மற்றும் பகைவர் சிலர் போன்றவர்கள் இளஞ்சேட்சென்னிக்கு அவனது தன்னுணர்வின், வீரத்தின், முன்னோர்கள் குறையாக விட்டுச் சென்ற செயலைச் செய்து முடித்தல் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

## 1.1.6. சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி:

**1.1.6.0.** சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி, சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி என்றும் அழைக்கப்பட்டான். இவனது தந்தை சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி. இவனது மகன் கோப்பெருஞ்சோழன்.

இவனது தங்கை நற்சோணைக்கும் சேரமான்குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் பிறந்தவனே சேரன் செங்குட்டுவன்.

இவன் உரையூரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்டுள்ளான்.[94] இவனது காலம் கி.மு. 250-225.

இவன் தன் மைத்துனனான (தங்கையின் கணவன்) சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனோடு போரிட்டு, போரின் முடிவில் இறந்து போனான். தன் மைத்துனன் இறக்கவும் காரணமானான்.

**1.1.6.1.** சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி, சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் ஆகிய இருவரும் பொருந்திய படையால், பகைமை காரணமாக மிக்க கோபங்கொண்டு அறநெறியில் எதிர்த்துப் போரிட்டு இருமன்னரும் இறந்தமையால், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளிக்குச் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் எதிர்நிலையானான் (புறம். 62.6-9). இதனையே பரணரும்,

> "*சாந்தமை மார்பின் நெடுவேல் பாய்ந்தென*
>
> *வேந்தரும் பொருது களத்து ஒழிந்தனர்*" (புறம். 63.9-10)

என்றும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.1.6.2.** சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளிக்கு அவனது பகைமை, மிக்க கோபம் போன்ற காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரமாக இருந்துள்ளான்.

**1.1.7. செம்பியன்:**

**1.1.7.0.** செம்பியன் சோழ நாட்டை ஆண்டவன்[95]. இவன், தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் என்றும் புகழப்பட்டான். இவனது மருகன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் காலம் கி.மு. 175-150 எனக் குறிப்பிடப்பட்டுள்ளதால்,[96]அதற்கு முன்னர் கி.மு. 225-200இல் அரசாண்ட சேரன் செங்குட்டுவனது காலம் இச்செம்பியனின் காலம்[97] எனலாம். இவன் உறையூரைத் தலைநகராகக்[98] கொண்டு ஆண்டுள்ளான்.

இச்செம்பியன், பகைவர்களாகிய அசுரர், சேரன் செங்குட்டுவன் போன்றவர்களை அசுரர் வாழ்ந்த மதில்புறத்தும், சேரன் செங்குட்டுவனுக்குச் சொந்தமான கழுமலம் ஆகிய இடங்களில் நடந்த போர்க்களங்களிலும் வெற்றி பெற்றுள்ளான்.

**1.1.7.1.** முன்னொரு காலத்தில் அசுரர் சிலர், மூன்று மதில்களையுடைய அரண்மனையை உடையவராய் இருக்கின்றோம் என்ற வலிய செருக்கால், அவர்கள் நினைத்த விடத்து இழிந்து பலர்க்குத் துன்பத்தைச் செய்து வந்தனர். அதனால் சோழ மன்னனான செம்பியன், தன்னுணர்வு காரணமாக அசுரர்களைப் பகைவர்களாகக் கருதி, அவர்களை அழித்துள்ளான் என்பதால் செம்பியனுக்கு அசுரர்கள் எதிர்நிலையாயினர். இச்செய்தியை, இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனாரின்,

> *"குணபுலம் காவலர் மருமான் ஒன்னார்*
> *ஓங்குஎயிற் கதவம் உருமுச் சுவல்சொறியும்*
> *தூங்குஎயில் எறிந்த தொடிவிளங்கு தடக்கை*
> *நாடா நல்இசை நல்தேர்ச் செம்பியன்"* (சி.பா.79-82)

என்னும் பாடல்வரிகளால் அறியலாகிறது.

**1.1.7.2.** செம்பியன், குட்டுவனை அடக்கியாள வேண்டும் என்னும் கருத்தின் காரணமாக அவனது மதில் அழியும்படி இடித்தொடித்துப் பகலில் தீவைத்துப் போர் செய்தமையால், செம்பியனுக்குச் சேரன் செங்குட்டுவன் எதிர்நிலையானான். இதனை மாமூலனாரின்,

"........................*குட்டுவன்*
*அகப்பா அழிய, நூறி, செம்பியன்*
*பகல்தீ வேட்ட ஞாட்பினும் மிகப் பெரிது*" (நற். 14.3-5)

என்னும் பாடல்வரிகள் மூலம் அறியமுடிகிறது.

**1.1.7.3.** பகைவர்களாகிய அசுரர் சிலர், சேரன் செங்குட்டுவன் போன்றவர்கள் செம்பியனுக்கு அவனது தன்னுணர்வின், பகைவரை அடக்கியாள வேண்டும் என்னும் கருத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

## 1.1.8. கோப்பெருஞ்சோழன்:

**1.1.8.0.** கோப்பெருஞ்சோழன், சோழன்வேல்பல்தடக்கைப்பெரு நற்கிள்ளியின் மகன். இவனைப் பெருங்கோக்கிள்ளி என்றும் தேர்வண் கிள்ளி என்றும் புலவர்கள் அழைக்கிறார்கள். இவன் உறையூரிலிருந்து சோழநாட்டை ஆட்சி புரிந்துள்ளான். இவனது காலம் கி.மு. 225-200.[99]

தன் தந்தை, சேரமான் நெடுஞ்சேரலாதனோடு போர் செய்து, போர்க்களத்தில் பகைவனோடும் படை வீரர்களோடும் இறந்து கிடந்த காட்சியைக் கண்ட கோப்பெருஞ்சோழன் போர்நெறியை வெறுத்து, நல்வினை செய்வதில் ஈடுபட்டு, நாட்டின் நிர்வாகத்தில் போதிய கவனம் செலுத்தவில்லை.

கோப்பெருஞ்சோழன் போக்கை எதிர்த்து, அவன் புதல்வர்களே கலகம் விளைவித்தனர். கோப்பெருஞ்சோழன் புதல்வர்களை அடக்கப் போர் செய்ய எழுந்தபோது, அவனைச் சூழ்ந்திருந்த சான்றோர்கள் அவனுக்கு அறிவுரை கூறித்தடுத்தனர். கோப்பெருஞ்சோழன் முடிதுறந்து வடக்கிருந்து உயிர்விட்டான்.[100]

**1.1.8.1.** கோப்பெருஞ்சோழன் மூண்டு எழுந்த போரில் பகைவரைக் கொன்ற

வலிய முயற்சியுடைய வெண்கொற்றக்குடையால் உலகத்தை நிழல் செய்து காக்கும் வெற்றியுடையவன் என்பதாலும் தன் வீரத்தின் காரணமாகப் பகைவரைக் கொன்றவன் என்றமையாலும் கோப்பெருஞ்சோழனுக்கு அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை புல்லாற்றூர் எயிற்றியனார்,

> *"மண்டுஅமர் அட்ட மதனுடை நோன்தாள்*
> *வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே!"* (புறம். 213.1-2)

என்னும் பாடல்வரிகள் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார்.

**1.1.8.2.** கோப்பெருஞ்சோழனுடன், போர்செய்ய வந்த இருவரையும் எண்ணிப் பார்த்தால், சோழனுக்குப் பகைவர் சேரபாண்டியர் அல்லர்.

சோழனுடன் பகையாய் மாறுபட்டு எழுந்த அவ்விருவரும் சோழனுக்குப் பின் அவனது அரசாட்சியை அடையத் தாயமுறை உடைய அவனது மக்கள் இருவரே என்பதால், கோப்பெருஞ்சோழனுக்கு அவனது மக்கள் இருவரும் தம் அரசாட்சிக் காரணங்கருதி மாறுபட்டு எதிர்நிலையாயினர் (புறம். 213.3-8).

**1.1.8.3.** கோப்பெருஞ்சோழன் சான்றோரால் புகழப்பட்ட நட்பும், வலியோரிடம் வலிமை காட்டும் திறனும், அந்தணர்க்குப் புகலிடம் தரும் தன்மையும் உடையவன் என்பதை எல்லாம் எண்ணிப் பாராது கூற்றம் அவனது உயிரைக் கொண்டு சென்றமையால், அந்தக் கூற்றுவனை வையலாம் வாருங்கள் என்று மற்ற புலவர்களிடம் பொத்தியார் என்ற புலவர் தெரிவித்துள்ளமையால் கோப்பெருஞ்சோழனுக்குக் கூற்றம் எதிர்நிலையாயிற்று (புறம். 221.4-13).

**1.1.8.4.** பகைவர் சிலர், தன் மக்கள் இருவர், உயிரைக் கொண்டு சென்ற கூற்றுவன் போன்றவர்கள் கோப்பெருஞ்சோழனுக்கு அவனது வீரத்தின், தாயமுறை அரசாட்சி, அவனது நல்ல தன்மைகளை எண்ணிப் பாராது கூற்றுவன் அவனது உயிரைக் கொண்டு சென்றதன் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

**1.1.9. நலங்கிள்ளி:**

**1.1.9.0.** நலங்கிள்ளி சேட்சென்னி நலங்கிள்ளி என்றும் அழைக்கப்பட்டவன். இவன் இரண்டாம் கரிகாற் பெருவளத்தானின் மகன். இவன் சோழநாடு முழுவதையும் ஆண்டான். இவனது தலைநகர் உறையூர். இவனது காலம் கி.மு. 200-175.[101]

**1.1.9.1.** சோழன் நலங்கிள்ளி, தன் வெண்குடை மட்டுமே திங்களைப் போல் உயர்ந்து விளங்க, தன் வீரத்தினால், சேர பாண்டியரின் இருகுடைகளும் பின்னால் விளங்கும்படி அவர்களை வென்று எப்போதும் போர் செய்யும் பாடி வீட்டிலேயே தங்கியிருப்பான் என்றமையால், சோழன் நலங்கிள்ளிக்குச் சேர பாண்டியர் எதிர்நிலையாயினர் (புறம்.31.3-6).

**1.1.9.2.** சேட்சென்னி என்னும் சோழன் நலங்கிள்ளி, தன் வலிய வீரத்தின் காரணமாகப் பெரும்படையுடன் சென்று மற்ற மன்னரின் வலிமையை அழித்துள்ளமையாலும் மன்னர்க்கு வெற்றியை உணர்த்தும் சங்கினை ஊதினால், நலங்கிள்ளி அதனைக் கேட்டுச் சினந்து வந்து தம் வலிமையை அழிப்பானோ என்ற அச்சத்தின் காரணமாக மற்ற மன்னர் அச்சங்குகளைத் தம் இல்லத்திலிருந்த தூக்கணாங்குருவியின் கூடுகளைப் போலத் தொங்கவிட்டமையாலும் சேட்சென்னி என்னும் சோழன் நலங்கிள்ளிக்கு மற்ற மன்னர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (புறம். 225. 4-5; 9-11).

**1.1.9.3.** சோழன் நலங்கிள்ளி, பகைவர் கலங்களில் வந்து துன்பம் செய்தபோது, கடலில் படையெடுத்துச் சென்று, அவர்தம் பொருள்களைக் கொள்ளையடித்து வரவேண்டும் என்னும் காரணத்திற்காக மிக்க வீரத்துடன் பகைவரை வென்று பொருள் கொண்டமையால், சோழன் நலங்கிள்ளிக்கு அவனது பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இதனை கோவூர்கிழாரின்,

*"கடல்படை அடல்கொண்டி*
*மண்டுற்ற மறநோன்றாள்*
*தண்சோழ நாட்டுப்பொருநன்"* (புறம்.382. 1-3)

*"பலர்துஞ்சவும் தான்துஞ்சான்*

*உலகுகாக்கும் உயர்கொள்கை*

........................." (புறம்.400.6-7)

*"தன்பகை கடிதல் அன்றியும் சேர்ந்தோர்*

*பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ"* (புறம்.400.16-17)

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

**1.1.9.4.** சேர பாண்டியர், பிற மன்னர்கள், பகைத்தவர் போன்றவர்கள் நலங்கிள்ளிக்கு அவனது வீரத்தின், சினத்தின், பகைவரது பொருள்களைக் கொள்ளையடித்து வரவேண்டல் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

**1.1.10. நெடுங்கிள்ளி:**

**1.1.10.0.** கோப்பெருஞ்சோழனின் மூத்த மகனாகக் கருதப்படுபவன் நெடுங்கிள்ளி ஆவான். இவன் கிள்ளி வழிச்சோழன் என்றும் அழைக்கப்பட்டான். இவன் ஆவூரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆட்சி செய்தவன். பின்னர் உறையூரையும் கைப்பற்றி ஆண்டுள்ளான். இவனது காலம் கி.மு. 200-175.[102]

இவன், நலங்கிள்ளி, புலவர் இளந்தத்தன் போன்றவர்களைக் காரியாறு என்னுமிடத்திலும், தன் அரண்மனையிலும் எதிர்த்துப் போரிட்டுத் தோற்றுப் போனபின் இறந்துள்ளான்.

**1.1.10.1.** சோழன் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளிக்குரிய ஆவூரை நலங்கிள்ளி என்ற சோழன் பகைமை காரணமாக முற்றுகையிட்டிருந்தமையால், சோழன் நெடுங்கிள்ளிக்கு நலங்கிள்ளி எதிர்நிலையானான் (புறம்.44).

**1.1.10.2.** நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் பகைமை உண்டாகி இருந்த சமயத்தில், நெடுங்கிள்ளியைப் பார்த்துப் பாடிப் பரிசில் பெற புலவர் இளந்தத்தன் வந்தார். தன்னிடம் வந்த புலவர் இளந்தத்தனை நலங்கிள்ளியின் ஒற்றன் என

எண்ணி நெடுங்கிள்ளி கொல்ல முற்பட்டமையால்,[103] நெடுங்கிள்ளிக்குப் புலவர் இளந்தத்தன் எதிர்நிலையானான் (புறம்.47).

**1.1.10.3.** சோழன் நலங்கிள்ளி, புலவர் இளந்தத்தன் போன்றவர்கள் நெடுங்கிள்ளிக்கு, அவனுடன் உண்டாகியிருந்த பகைமையினாலும், அவனிடம் வந்த புலவர் இளந்தத்தன் நலங்கிள்ளியின் ஒற்றன் என எண்ணிக் கொல்ல முற்பட்டமையாலும் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

## 1.1.11. கிள்ளிவளவன்:

**1.1.11.0.** கிள்ளிவளவன் சோழ மன்னர்களில் குறிப்பிடத்தக்கவன். புகழ்மிகுமாறு சோழ நாட்டை ஆண்டவன். இவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான். இவனது காலம் கி.மு. 175-150.[104]

இவன் குளமுற்றம் என்ற இடத்தில் இறந்து, உடல் பெரிய தாழியில் அடக்கம் செய்யப்பட்டதால் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் என்றழைக்கப்பட்டான்.

இவன் பாண்டியன் பழையன் மாறன், இமயம் வென்ற சேரன், சேர பாண்டியர் ஆகிய இருபெரு வேந்தர், பகை வீரர்கள், கொங்கு நாட்டவர், அவனை எதிர்த்த பகைவர் போன்றவர்களை மதுரை, கருவூர், பகைவரது அரண்கள், பகைவரது நாடுகள் ஆகிய பல இடங்களில் நடந்த போர்க்களங்களில் வெற்றி பெற்றுள்ளான்.

**1.1.11.1.** கிள்ளிவளவன், மிக்க படையுடன் வேற்றுப்புலத்தில் போர் செய்ய வந்து, மதுரையில் தங்கியிருந்தபொழுது, தன் வலிய வீரத்தின் காரணமாகப் படைபலம் மிக்க பாண்டியன் பழையன் மாறனைப் போரிட்டுச் சாய்த்தமையால்,[105] கிள்ளிவளவனுக்குப் பாண்டியன் பழையன் மாறன் எதிர்நிலையானான் (அகம்.346.18-22).

**1.1.11.2.** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், படைபலம் மிக்க போர்க்களத்தில் தன்னுணர்வு காரணமாகத் தன்னை எதிர்த்துவரும் பகைவரது படை புறங்கொடுத்துச் செல்லுமாறு அவற்றை வென்று ஆரவாரம் செய்யும் படையை

உடையவன் என்பதால் அவனை எதிர்த்த பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (புறம்.35.22-26, 36.8-13,40.1-5,69.13-14). இதனை புலவர் எருக்காட்டூர் தாயங்கண்ணனாரின்,

*"..................வாய்வாள்*
*வலம்படு நீவிற் பொலம்பூண் வளவன்*
*........................*
*........................வென்வேல்*
*அருஞ்சமம் கடக்கும் ஆற்றல்அவன்*
*திருந்துகழல் நோன்தாள் தண்நிழ லேமே"* (புறம். 397.21-22; 25-27)

என்ற பாடல் வரிகளாலும் அறியமுடிகிறது.

**1.1.11.3.** இமயம்வரை சென்று வில் பொறித்த சேரனையும் அவனது கருவூரையும் தன் வீரத்தின் காரணமாகப் போரிட்டு வெற்றி பெற்ற கிள்ளிவளவனின் முயற்சியைப் புலவர் மாறோகத்து நப்பசலையார் பாராட்டியுள்ளமையால், கிள்ளிவளவனுக்கு இமயம்வரை சென்று வில்பொறித்த சேரன் எதிர்நிலையானான் (புறம்.39.13-18).

**1.1.11.4.** கிள்ளிவளவனைச் சினங்கொள்ளுமாறு செய்த பகைவர், அவனது படைத்திறங்கண்டும் வலிய வீரத்தைக் கண்டும் தம் மனைவி மக்களுடன் கலக்கம் அடைந்தனர்[106] என்பதால், அவனது பகைவரும் பகைவர் தம் மனைவி மக்களும் எதிர்நிலையாயினர் (புறம்.41.12-16-18).

**1.1.11.5.** கிள்ளிவளவன், தன்னிடம் வந்த புலவர்களுக்குப் பரிசில் தருவதற்காகச் சேர பாண்டியர் என்ற இருபெரு வேந்தருடன் மாறுபட்டு அவர்களது நிலத்தைக் கைக்கொள்ள எண்ணியமையால், அவனுக்குச் சேர பாண்டியர் எதிர்நிலையானார்கள். இதனை புலவர் இடைக்காடனாரின்,

*"புலவ ரெல்லாம் நின்நோக் கினரே*
*நீயே மருந்தில் கணிச்சி வருந்தி வட்டித்துக்*
*கூற்றுவெகுண் டன்ன முன்பொடு*

*மாற்றுஇரு வேந்தர் மண்நோக் கினையே"* (புறம்.42.21-24)

என்ற பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

**1.1.11.6.** சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மலையமான் மீது கொண்டிருந்த பகைமை காரணமாக மலையமான் மக்களை யானைக்காலில் இட்டுக் கொல்ல இருந்தமையால்[107], கிள்ளிவளவனுக்கு மலையமான் மக்கள் எதிர்நிலையாயினர் (புறம்.46).

**1.1.11.7.** வெல்லும்படையும் தேரும் வலிய வீரமும் உடைய கிள்ளிவளவனது உயிரைத் தன்னுணர்வு காரணமாகக் கொண்டு சென்றுள்ளான் கூற்றுவன் என்பதால் கிள்ளிவளவனுக்குக் கூற்றுவன் எதிர்நிலையானான். இச்செய்தியை புலவர்மாறோகத்து நப்பசலையாரின்,

*"............ பொலந்தார்*
*மண்டமர் கடக்கும் தானைத்*
*திண்தேர் வளவற் கொண்ட கூற்றே"* (புறம்.226.4-6)

என்ற பாடல் வரிகளால் உணர முடிகிறது.

**1.1.11.8.** கிள்ளிவளவன், வாட்போரில் பல வீரர்கள் மடியுமாறு தன் வலிய வீரத்தின் காரணமாக எதிர்நின்று கொன்று கூற்றுவனின் பசி நீங்கும்படி செய்தவன். அத்தகைய ஆற்றலுடைய கிள்ளிவளவனைக் கூற்றுவன், உயிர் கொண்டு சென்றமையால் கிள்ளிவளவனுக்குப் பகையாக வந்த வீரர்களும் கூற்றுவனும் எதிர்நிலையானார்கள். இதனை புலவர் ஆடுதுறை மாசாத்தனார்,

*"நின்னோர் அன்ன பொன்னியற் பெரும்பூண்*
*வளவன் என்னும் வண்டு மூசு கண்ணி*
*இசையோற் கொண்டனை .........."* (புறம்.227.8-10)

என குறிப்பிடுகிறார்.

**1.1.11.9.** கதிரவன் வானத்தில் பரவியதைப் போல், வளவனின் எல்லையற்ற புகழ், அவனது வீரத்தினாலும் கொடைத்திறத்தினாலும் இவ்வுலகத்தில் எங்கும்

பரவி வானளாவ உயர்ந்து நிற்கின்றது. நிலவுலகம் முழுதும் அடங்குமாறு புகழுடையவன் கிள்ளிவளவன் என்பது இதனால் விளங்குகின்றது.

ஆனால், குயவன் நிலவுலகமும் வானம் முழுமையும் மூடவல்ல தாழியை, நிலம் சக்கரமாகவும், மேருமலையை மண் உருண்டையாகவும் கொண்டு செய்தாலும் அத்தகைய தாழியைச் செய்யும் ஆற்றல் குயவனுக்கில்லாமையால் கிள்ளிவளவனுக்குக் குயவன் எதிர்நிலையானான் (புறம்.228.8-9;12;14-15).

**1.1.11.10.** கிள்ளிவளவன், தன் வலிய வீரத்தால் பெரும் படைபலத்தால் கொங்கு நாட்டவரைப் புறங்கொடுத்து ஓடச் செய்துள்ளமையால், கொங்கு நாட்டவர் எதிர்நிலையானார்கள். இதனை புலவர் கோவூர்கிழார்,

*"மைந்தர் ஆடிய மயங்குபெருந் தானைக்*
*கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே"* (புறம்.373.7-8)

இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

**1.1.11.11.** பாண்டியன் பழையன் மாறன், இமயம் வென்ற சேரன், சேர பாண்டிய பெருவேந்தர்கள், அவனை எதிர்த்த பகைவர், பகைவர் தம் மனைவி மக்கள், மலையமான் மக்கள், அவனுக்குப் பகையாக வந்த வீரர்கள் மற்றும் கூற்றுவன், தாழி செய்யும் குயவன், கொங்குநாட்டவர் போன்றவர்கள் கிள்ளிவளவனுக்கு அவனது வீரத்தின், தன்னுணர்வின், சினத்தின், தன்னிடம் வந்த புலவர்களுக்குப் பரிசில் தருவதற்காகப் பகைவர் நிலத்தைக் கைக் கொள்ள எண்ணியமை, பகைமை, அவனை அடக்கம் செய்வதற்கேற்ற நிலவுலகம் முழுமையும் மூடவல்ல தாழியைச் செய்யும் ஆற்றல் குயவனுக்கில்லாமை ஆகியவற்றால் எதிர்நிலைப்பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

### 1.1.12. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி:

**1.1.12.0.** கிள்ளிவளவனின் மக்கள் மூவரில் இரண்டாமவன் சோழன் இராசசூயம் வேட்டநற்கிள்ளி. இராசசூயம் என்ற யாகத்தைச் செய்து இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற பெயரைப் பெற்றான். வெண்ணியைத் தலைநகராகக் கொண்டு இவன் சோழ நாட்டில் கடற்கரைப் பகுதியை ஆட்சி செய்துள்ளான். இவனது காலம் கி.மு. 150-125.[106]

இவன் சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, அம்பர்கிழவோன் எனப்படும் அருவந்தை போன்றவர்களைச் சேரமானோடு போரிட்ட போர்க்களம், அம்பர்நகர் போன்ற இடங்களில் நடந்த போர்க்களங்களில் வெற்றி பெற்றுள்ளளான்.

**1.1.12.1.** ஒருகால், சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் பகைமை காரணமாகப் போரிட்டுக் கொள்ள, இப்போரில் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, வெற்றிபெற்றமையால், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குச் சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறை எதிர்நிலையானான்.

மலைபோன்ற யானை வீழும்படி எதிர்நின்று கொன்று வென்ற சோழன், இச்சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, தம்மை வெற்றியடைச் செய்தவன் என்று தன் வலிய வீரத்தின் காரணமாகச் சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறையை மகிழ்ந்து பாராட்டியமையால், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குச் சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறை எதிர்நிலையானான். இச்செய்தியை,

> "***குன்றத் தன்ன களிறு பெயரக்***
> ***கடந்தட்டு வென்றோனும் நிற்கூ றும்மே***" (புறம்.125.9-10)

இவ்வாறு புலவர் வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார் குறிப்பிட்டுள்ளார்.

**1.1.12.2.** காவிரி ஆற்றின் கிளை ஆறான அரிசில் ஆற்றின் கரையில் அம்பர் என்ற ஊர் இருந்தது. பெருநற்கிள்ளி தன் யானைப் படையை ஏவி, அருவந்தை என்ற கிழான் வசமிருந்த தேர்ப்படையை அழித்து அம்பரைக் கைப்பற்றினான். புதிதாக அலங்கரித்து உயர்த்தப்பட்ட அவனுடைய கொடி அம்பர் நகரில் பறந்தது என்றமையால் சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளிக்கு அவனது பகைவனாகிய அம்பர் கிழவோன் எனப்படும் அருவந்தை எதிர்நிலையானான். இக்கருத்தை புலவர் கல்லாடனார், கீழ்வருமாறு சுட்டியுள்ளார்.

> "***காவிரி அணையும் தாழ்நீர் படப்பை***
> ***நெல்விளை கழனி அம்பர்கிழவோன்***
> ***நல் அருவந்தை, வாழியர் .......***" (புறம். 385.8-10).

மேலும் சல்லியங்குமரனார்,

> "................... பருந்துபடப்
>
> பாண்டிலொடு பொருத பல்பிணர்த் தடக்கை
>
> ஏந்துகோட்டு யானை இசைவெம் கிள்ளி
>
> வம்புஅணி உயர்கொடி அம்பர் சூழ்ந்த
>
> அரிசில் ...................." (நற்.141.7-11)

எனவும் கூறியுள்ளார்.

**1.1.12.3.** சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, அம்பர்கிழவோன் எனப்படும் அருவந்தை போன்றவர்கள் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்கு, பகைமையின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

**<u>1.1.13. சோழர்:</u>**

**1.1.13.0.** தித்தன்வெளியன் எனப்படும் சோழன்போரவைக் கோப்பெருநற்கிள்ளி, பெரும்பூண்சென்னி, சோழன்முடித்தலை கோப்பெருநற்கிள்ளி, முதலாம் கரிகாற் பெருவளத்தான், சோழன் வேல்பல்தடக்கைப் பெருநற்கிள்ளி, சோழன் உருவப்பல்தேர் இளஞ்சேட்சென்னி, கோப்பெருஞ்சோழன், இரண்டாம் கரிகாற் பெருவளத்தான், சேட்சென்னி நலங்கிள்ளி எனப்படும் சோழன் நலங்கிள்ளி, சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தான், காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கோப்பெருஞ்சோழன், சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, சோழன் நல்லுருத்திரன், சோழன் செங்கணான் போன்ற சோழர்கள் அழுந்தூர், காவிரிப்பூம்பட்டினம், உறையூர், நெய்தலங்கானல் எனப்படும் கடற்கரைப்பகுதி, ஆவூர், வெண்ணி, போர்வை (போஓர்) எனப்படும் நிலப்பகுதி போன்றவற்றைத் தலைநகராகக் கொண்டு கி.மு. 325 முதல் கி.மு. 75 வரை சோழநாட்டை ஆட்சி செய்து வந்துள்ளனர்.

இப்படி பல மன்னர்கள் ஆட்சி செய்திருந்தாலும் சில பாடல்களில் மன்னர்கள் பெயர் குறிப்பிடாமல் சோழர் என்றே புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

இவர்களில் சிலர், ஆமூர், பகைவர் நாடுகள், பருவூர், கோசரின் நாடுகள், வல்லம் என்ற ஊரின் புறம், வெட்சிப் போர்க்களம், முள்ளூர்மலை போன்ற இடங்களில் நடந்த போர்க்களங்களில் வெற்றி பெற்றுள்ளனர்.

**1.1.13.1.** வெல்லும் போரையுடைய சோழர், தம் வீரத்தின் காரணமாகத் தம்முடைய ஆமூரில் எதிர்த்த பகைவரைப் போரிட்டு அவர்தம் நலன் அழித்துள்ளனர் என்பதால், சோழருக்கு ஆமூரில் எதிர்த்த பகைவர் எதிர்நிலையாயினர். இதனை,

> "*பகல்கொள் விளக்கோடு இராநாள் அறியா*
> *வெல்போர்ச் சோழர் ஆமூர் ....*" (ஐங்.56.1-2)

என்ற பாடல் வரிகளால் மருதம்பாடிய ஓரம்போகியார் புலப்படுத்தியுள்ளார்.

**1.1.13.2.** உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த சோழர், தன்னுணர்வு காரணமாகப் பகைவரைப் போரிட்டுக் கொன்றுள்ளனர் என்பதால் உறையூர்ச் சோழருக்கு அவரது பகைவர் எதிர்நிலையாயினர் (அகம். 93.3-5).

**1.1.13.3.** அஃதை என்பவளுக்குத் தந்தையான சோழ மன்னன், பருவூர் என்னும் போர்க்களத்தில், தன் வலிய வீரத்தின் காரணமாகப் பாண்டியர், சேரர் என்னும் இருபெரு வேந்தரையும் கொன்று, அப்பகை மன்னர்களின் யானைகளைக் கவர்ந்து கொண்டமையால், அச்சோழ மன்னனுக்குப் பாண்டியர், சேரர் என்னும் இருபெருவேந்தரும் எதிர்நிலையாயினர் (அகம்.96.12-16).

**1.1.13.4.** சோழன், நாடு பிடிக்கும் ஆசை காரணமாக நல்ல புகழுடன் விளங்கிய கோசரின் படையை அழித்து அவர்நாட்டைக் கைக்கொண்டதால், சோழனுக்குக் கோசர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை,

> "*வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்இசை*
> *வளம்கெழு கோசர் விளங்குபடை நூறி*
> *நிலம்கொள வெஃகிய பொலம்பூண் கிள்ளி*
> *பூவிரி நெடுங்கண் நாப்பண்*" (அகம்.205.8-11)

என்ற பாடல் வரிகளால் புலவர் நக்கீரர் புலப்படுத்தியுள்ளார்.

**1.1.13.5.** சோழமன்னன், தன் வீரத்தின் காரணமாக ஆரியர்தம் படையை வலிய அரண்மிக்க வல்லம் என்ற ஊரின் புறத்தே தோற்றோடச் செய்தமையால், சோழமன்னனுக்கு ஆரியர் எதிர்நிலையாயினர் (அகம்.336.19-22).

**1.1.13.6.** பகக்கூட்டத்தைக் கவர்ந்து வரும் வெட்சி வீரர்களுக்குத் தலைவன் சோழன், தன் வலிய வீரத்தின் காரணமாகப் போரிட்டுப் பகைவரை விண்ணுலகு அடையும்படிச் செய்துள்ளமையால் அச்சோழனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர் (அகம்.338.16-19).

**1.1.13.7.** சோழமன்னன் தன்னுடன் மாறுகொண்டு போரிட வந்த பகைவருடன் போரிட்டுத் தோற்று முள்ளூர் மலையில் ஒளிந்து கொண்டிருந்தமையால் அச்சோழ மன்னனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 174.12-14).

**1.1.13.8.** ஆமூரில் எதிர்த்த ஆமூர் மல்லன், பகைவர் சிலர், பாண்டியர், சேரர், கோசர், ஆரியர், முள்ளூர் மலையில் ஒளிந்து கொண்டிருந்த பகைவர் போன்றோர் சோழருக்கு, அவர்தம் வீரத்தின், தன்னுணர்வின், நாடு பிடிக்கும் ஆசையின், பகைமையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

## 1.1.14. முடிவுகள்:

1. சேரமன்னனின் படைத்தலைவனாகிய கணையன் என்பவன் சோழமன்னன் பெரும்பூண் சென்னிக்கு, அவனது நாடு பிடிக்கும் ஆசை காரணமாக எதிர்நிலைப்பாத்திரமாக இருந்துள்ளான்.

2. ஆமூர்மல்லன், ஊரைக்கொள்ளையிட வந்த வீரன் ஒருவன், தந்தை தித்தன் போன்றவர்கள், சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப்பாத்திரங்களாயினர்.

3. சேரமன்னர் இருவர், பிற ஒன்பது மன்னர்கள், வேளிர் பதினொருவர் மற்றும் பகைவர் சிலர் போன்றவர்கள் முதலாம் கரிகாற் பெருவளத்தானுக்கு அவனது வீரம், பகைவரின் நாட்டை எரியூட்டிக் கொள்ளை செய்து அழித்தல் வேண்டும் போன்ற காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

4. சேரபாண்டியர், தாயத்தார், பல ஒளி நாட்டார், பழைய அருவாள நாட்டு மன்னர், வடதிசை மன்னர், குடநாட்டு மன்னர், முல்லைநிலமன்னர், இருங்கோவேள், பகைவர் மற்றும் பகைவரது மருதநில மக்கள் போன்றவர்கள் இரண்டாம் கரிகாற் பெருவளத்தானுக்கு அவனது வீரத்தின், தன்னுணர்வின், இளமையில் தாயத்தார் சிறையிலடைத்து இழிப்படுத்தியதன் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

5. சேரமன்னன், பரதவர், வடநாட்டு வடுகர், நன்னன், பகைத்த நாட்டவர் மற்றும் பகைவர் சிலர் போன்றவர்கள் இளஞ்சேட்சென்னிக்கு அவனது தன்னுணர்வு, வீரம், முன்னோர்கள் குறையாக விட்டுச் சென்ற செயலைச் செய்து முடிக்க வேண்டும் என்னும் காரணத்தால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

6. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி மீது மிக்ககோபம் கொண்டதன் காரணமாக எதிர்நிலைப்பாத்திரம்.

7. பகைவர்களாகிய அசுரர் சிலர், சேரன் செங்குட்டுவன் போன்றவர்கள் செம்பியனுக்கு அவனது தன்னுணர்வு, பகைவரை அடக்கியாள வேண்டும் என்னும் கருத்தின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

8. பகைவர் சிலர், தன் மக்கள் இருவர், உயிரைக் கொண்டு சென்ற கூற்றுவன் போன்றவர்கள், கோப்பெருஞ்சோழனுக்கு அவனது வீரத்தின், தாயமுறை அரசாட்சி, அவனது நல்ல தன்மைகளை எண்ணிப் பாராது கூற்றுவன் அவனது உயிரைக் கொண்டு சென்ற காரணத்திற்காகவும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

9. சேர பாண்டியர், பிற மன்னர்கள், பகைத்தவர் போன்றவர்கள் நலங்கிள்ளிக்கு அவனது வீரத்தின், சினத்தின், பகைவரது பொருள்களைக் கொள்ளையடித்து வரவேண்டும் என்னும் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

10. சோழன் நலங்கிள்ளி, புலவர் இளந்தத்தன் போன்றவர்கள் நெடுங்கிள்ளிக்கு, அவனுடன் உண்டாகியிருந்த பகைமை காரணமாகவும், அவனிடம் வந்த புலவர் இளந்தத்தன் நலங்கிள்ளியின் ஒற்றன் என எண்ணிக் கொல்ல முற்பட்டமையாலும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

11. பாண்டியன் பழையன் மாறன், இமயம்வென்ற சேரன், சேர பாண்டிய பெருவேந்தர்கள், அவனை எதிர்த்த பகைவர், பகைவர் தம் மனைவி மக்கள், மலையமான் மக்கள், அவனுக்குப் பகையாக வந்த வீரர்கள் மற்றும் கூற்றுவன், தாழி செய்யும் குயவன், கொங்கு நாட்டவர் போன்றவர்கள் கிள்ளிவளவனுக்கு, அவனது வீரத்தின், தன்னுணர்வின், சினத்தின், தன்னிடம் வந்த புலவர்களுக்குப் பரிசில் தருவதற்காகப் பகைவர் நிலத்தைப் கைக் கொள்ள எண்ணியமையாலும், பகைமை, அவனை அடக்கம் செய்வதற்கேற்ற நிலவுலகம் முழுமையும் மூடவல்ல தாழியைச் செய்யும் ஆற்றல் குயவனுக்கில்லாமையாலும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

12. சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, அம்பர்கிழவோன் எனப்படும் அருவந்தை போன்றவர்கள் சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளிக்கு, பகைமை, வலிய வீரம், காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

13. ஆமூரில் எதிர்த்த ஆமூர் மல்லன், பகைவர் சிலர், பாண்டியர், சேரர், கோசர், ஆரியர், முள்ளூர் மலையில் ஒளிந்து கொண்டிருந்த பகைவர் போன்றோர் சோழருக்கு, அவர்தம் வீரம், தன்னுணர்வு, நாடு பிடிக்கும் ஆசை, பகைமை காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

14. சோழர்களின் எதிர்நிலைப் பாத்திரங்களைப் பற்றி ஆராய்ந்தபொழுது, பதின்மூன்று சோழ மன்னருக்கும் பெயர் குறிப்பிடப்பெறாத சோழர் சிலருக்கும் எதிர்நிலைப் பாத்திரங்கள் உள்ளனர்.

இச்சோழ மன்னர்களில் கிள்ளிவளவனுக்கு, அவனது

(1) வீரம்

(2) தன்னுணர்வு

(3) சினம்

(4) தன்னிடம் வந்த புலவர்களுக்குப் பரிசில் தருதல்

(5) நாடு பிடிக்கும் ஆசை

(6) பகைமை

(7) கிள்ளிவளவனை அடக்கம் செய்வதற்கேற்ற நிலவுலகம் முழுமையும் மூடவல்ல தாழியைச் செய்யும் ஆற்றல் குயவனுக்கு இல்லாமை

(8) புகழ்

போன்ற முக்கிய காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். அவனது வீரம் காரணமாக இது இருந்துள்ளது.



# அடிக்குறிப்புகள்

1. கழகத் தமிழகராதி, கழகப் புலவர்குழு, 2000, ப.204.

   திருமகள் தமிழகராதி, இராம.சுப்பிரமணியம், 2001, பக்.199,200.

   நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி உதவி ஆர். கார்த்திகாதேவி, 2003, ப. 321.

   இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்பெயரகராதி, பி. இராமநாதன், 1991, பக். 284, 285.

   தமிழ்ச்சொல் அகராதி, ஸ்ரீகதிரைவேற்பிள்ளை, 1998, பக். 630, 631.

   மலேசிய செந்தமிழ்அகராதி, டாக்டர் ஜி.பி. லாசரஸ், 1997, ப. 43.

   தமிழ்மொழி அகராதி, நா. கதிரைவேற்பிள்ளை, 1998, ப. 314.

   கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.

2. திருமகள் தமிழகராதி, இரா. சுப்பிரமணியம், 2001, பக். 199,200.

3. செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகரமுதலி, வை.பழநிச்சாமி, 1997, பக். 228,230,231.

   Tamil Lexicon Vol-I, Published under the Authority of the University of Madras, 1982, ப.523.

   Tamil Lexicon Vol-I Part-I, Published under the Authority of the University of Madras, 1982, பக். 522, 523.

4. Winslow's a Comprehensive Tamil & English Dictionary, வின்சுலோ, 1979, ப.174.

5. தமிழ்-ஆங்கிலம் அகராதி, தொகுப்பு, இர. பாலகிருஷ்ணமுதலியார், 1983, பக். 119-121, 366.

   Winslow's a Comprehensive Tamil & English Dictionary, வின்சுலோ, 1979, ப.174.

   Tamil Lexicon Vol-I, Published under the Authority of the University of Madras, 1982, ப.523.

   Tamil Lexicon Vol-I, Part-I, Published under the Authority of the University of Madras, 1982, பக்.522, 523.

6. கழகத்தமிழகராதி, கழகப் புலவர் குழு, 2000, ப. 204.

   நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, உதவி ஆர். கார்த்திகாதேவி, 2003, ப. 321.

தமிழ்ச்சொல் அகராதி, ஸ்ரீ கதிரைவேற்பிள்ளை, 1998, பக். 630, 631.

7. கழகத் தமிழகராதி, கழகப் புலவர் குழு, 2000, ப. 204.
   தமிழ்ச்சொல் அகராதி, ஸ்ரீ கதிரைவேற்பிள்ளை, 1998, பக். 630, 631.
8. செந்தமிழ் அகராதி, நா.சி. கந்தையா, 2003. ப. 86.
9. நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி உதவி ஆர். கார்த்திகாதேவி, 2003, ப. 321.
10. செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகரமுதலி, வை. பழநிச்சாமி, 1997, பக். 228, 230,231.
    Tamil Lexicon Vol-I, Published under the Authority of the University of Madras, 1982, ப.523.
11. செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகர முதலி, வை.பழநிச்சாமி, 1997, பக்.228,230,231.
    Tamil Lexicon, Vol.I, Published under the Authority of the University of Ma dras,1982, ப. 523.
12. பவானந்தர் தமிழ்ச்சொல் அகராதி,ச. பவானந்தம்பிள்ளை, 2003, ப.88.
13. Tamil Lexicon Vol-I, Published under the Authority of the University of Madras, 1982, ப.523.
14. செந்தமிழ் அகராதி, நா.சி. கந்தையா, 2003, ப.86.
    நர்மதாவின் தமிழ்அகராதி, ஆசிரியர் குழு, 2002, ப. 168.
    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110,406, 407.
    செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகர முதலி, வை. பழநிச்சாமி, 1997, பக். 228, 230, 231.
15. செந்தமிழ் அகராதி, நா.சி. கந்தையா, 2003, ப.86.
    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110,406, 407.
    செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் பேரகர முதலி, வை. பழநிச்சாமி, 1997, பக். 228, 230, 231.
16. தமிழ்-ஆங்கில அகராதி, தொகுப்பு, இர. பாலகிருஷ்ண முதலியார், 1983, பக். 119-121, 366.
17. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104,202.

18. நர்மதாவின் தமிழ்அகராதி, ஆசிரியர் குழு, 2002, ப. 168.
19. செந்தமிழ் அகராதி, நா.சி. கந்தையா, 2003, ப.86.
    சதுரகராதி, வீரமாமுனிவர், 1824, ப. 35.
    ஸ்ரீமகள் தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, ப. 88, 288.
    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110,406, 407.
    சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104, 202.
20. செந்தமிழ் அகராதி, நா.சி. கந்தையா, 2003, ப.86.
    ஸ்ரீமகள், தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, ப. 88, 288.
    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110,406, 407.
21. சதுரகராதி, வீரமாமுனிவர், 1824, ப. 35.
    அரும்பொருள் விளக்க நிகண்டு, அருமருந்தைய தேசிகர், 1931, பக். 41,42. பாட்டு. 246.
22. சதுரகராதி, வீரமாமுனிவர், 1824, ப. 35.
23. ஸ்ரீமகள் தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, பக். 88, 288.
24. கௌரா தமிழ்அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161,500.
25. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104, 202.
26. அரும்பொருள் விளக்க நிகண்டு, அருமருந்தைய தேசிகர், 1931, பக். 41,42. பாட்டு. 246.
27. சூடாமணி நிகண்டு, யாழ்பாணத்துநல்லூர் நாவலர், 1909, பக்..34, 35, 226, 277.
    பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, பிங்கல முனிவர், 1890, பக். 229,391.
28. சூடாமணி நிகண்டு, யாழ்பாணத்துநல்லூர் நாவலர், 1909, பக். 34, 35, 226, 277.
29. பிங்கலத்தை என்னும் பிங்கல நிகண்டு, பிங்கல முனிவர், 1890, பக். 229,331.
30. சதுரகராதி, வீரமாமுனிவர், 1824, ப. 35.
31. ஸ்ரீமகள், தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, ப. 88, 288.
    மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979. ப.125.

கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110, 406, 407.

கல்வித் தமிழகராதி, செ. செந்தூர்ப்பாண்டியன், 1979, பக்.17,74,75.

32. ஸ்ரீமகள் தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, ப. 88, 288.

மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979. ப.125.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, தி.பி. இராமநாதன், 1991, பக். 284, 285.

கல்வித் தமிழ் அகராதி, செ. செந்தூர்ப்பாண்டியன், 1979, பக்.17,74,75.

33. தற்காலத் தமிழ்ச்சொற்களஞ்சியம், முனைவர் ச. இராசேந்திரன், 2001, பக். 195, 196, 260, 267.

34. Tamil Lexicon Vol.I, Part-I, Published under the Authority of the University of Madras, 1982, பக். 522, 523.

35. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, தி.பி. இராமநாதன், 1991, பக். 284, 285.

ஸ்ரீமகள் தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, ப. 88, 288.

கல்வித் தமிழ் அகராதி, செ. செந்தூர்ப்பாண்டியன், 1979, பக்.17,74,75.

36. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979, ப.125.

37. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, தி.பி. இராமநாதன், 1991, பக். 284, 285.

38. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979, ப.125.

39. கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.

40. தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், முனைவர் ச. இராசேந்திரன், 2001, பக். 195, 196, 260, 267.

41. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104, 202.

42. அரும்பொருள் விளக்க நிகண்டு, அருமருந்தைய தேசிகர், 1931, பக். 41,42. பாட்டு. 252.

43. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979. ப.125.

கௌரா தமிழகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.

கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110, 406, 407.

44. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979. ப.125.

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, தி.பி. இராமநாதன், 1991, பக். 284, 285.

45. அரும்பொருள் விளக்க நிகண்டு, அருமருந்தைய தேசிகர், 1931, பக். 41,42. பாட்டு. 246.
46. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, தி.பி. இராமநாதன், 1991, பக். 284, 285.
    பவானந்தர் தமிழ்ச்சொல் அகராதி, ச. பவானந்தம் பிள்ளை, 2003, ப. 88.
    ஸ்ரீமகள் தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, ப. 88, 288.
47. தமிழ்-ஆங்கிலம் அகராதி, தொகுப்பு, இர. பாலகிருஷ்ண முதலியார், 1983, பக். 119-121, 366.
48. தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், முனைவர் ச. இராசேந்திரன், 2001, பக். 195, 196, 260, 267.
49. பவானந்தர் தமிழ்ச்சொல் அகராதி, ச. பவானந்தம் பிள்ளை, 2003, ப. 88.
50. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979. ப.125.
    இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, தி.பி. இராமநாதன், 1991, பக். 284, 285.
    கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.
51. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979. ப.125.
    கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.
    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110,406, 407.
52. தமிழ்-ஆங்கிலம் அகராதி, தொகுப்பு, இர. பாலகிருஷ்ண முதலியார், 1983, பக். 119-121, 366.
53. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், 1979. ப.125.
    கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.
54. கழகத் தமிழகராதி, கழகப் புலவர் குழு, 2000, ப. 204.
    இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, தி.பி. இராமநாதன், 1991, பக். 284, 285.
    சதுரகராதி, வீரமாமுனிவர், 1824, ப. 35.
    தமிழ்ச்சொல் அகராதி, ஸ்ரீ கதிரைவேற்பிள்ளை, 1998, பக். 630, 631.
    கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.

கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110,406, 407.

Tamil Lexicon, Vol-I, Part-I, Published under the Authority of the University of Madras, 1982, ப. 522, 523.

55. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104, 202.
56. Tamil Lexicon, Vol-I, Part-I, Published under the Authority of the University of Madras, 1982, ப. 522, 523.
57. கல்வித் தமிழகராதி, செ. செந்தூர்ப்பாண்டியன், 1979, பக்.17,74,75.
58. தமிழ்-ஆங்கிலம் அகராதி, தொகுப்பு, இர. பாலகிருஷ்ண முதலியார், 1983, பக். 119-121, 366.
59. ஆட்சிச் சொற்கள் அகர முதலி, சி. செந்தமிழ்ச்சேய், 1999, ப. 245.
60. அருங்கலைச் சொல் அகரமுதலி (ஆங்கிலம்-தமிழ்), ப. அருளி, 2002, ப. 1177.
61. Concise Oxford English Dictionary, Edited by Catherine Soans Angus Stevenson, 2004, P. 1612.

    Standard Dictionary Eng-Eng-Telugu, N.C.S. Acharya, Author & Editor, 2002, P, 1589.
62. Concise Oxford English Dictionary, Edited by Catherine Soans Angus Stevenson, 2004, P. 1612.
63. Chamber's English Dictionary, Editor's Catherine Schwarz, George Davidson etc, 1992, p. 1645
64. Webster's Third New International Dictionary, Published by Konemann Verlagesellschaft, 1993, P. 2552.
65. Standard Dictionary Eng-Eng-Telugu, N.C.S. Acharya, Author & Editor, 2002, P, 1589.
66. Dictionary of Quotations, Comments by Bergen Evans, 1978, Pa. 725, 726.
67. ஸ்ரீமகள் தமிழ்அகராதி, சபாபதி முதலியார், 1957, பக். 88, 288.

    கல்வித் தமிழகராதி, செ. செந்தூர்ப்பாண்டியன், 1979, பக்.17,74,75.

    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110,406, 407.

68. கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.
69. தமிழ்-ஆங்கிலம் அகராதி, தொகுப்பு, இர. பாலகிருஷ்ண முதலியார், 1983, பக். 119-121, 366.
    Tamil Lexicon Vol-V, Part-I, Published under the Authority of the University of Madras, 1982, ப. 2603.
70. மேலது.
71. கல்வித் தமிழகராதி, செ. செந்தூர்ப்பாண்டியன், 1979, பக்.17, 74, 75.
    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110, 406, 407.
    சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104, 202.
72. கல்வித் தமிழகராதி, செ. செந்தூர்ப்பாண்டியன், 1979, பக்.17, 74, 75.
    கோனார் தமிழ்க்கையகராதி, ஐயன் பெருமாள் கோனார், 1972, பக். 110, 406, 407.
    பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, பிங்கல முனிவர், 1890, பக். 229,391.
73. தமிழ்-ஆங்கிலம் அகராதி, தொகுப்பு, இர. பாலகிருஷ்ண முதலியார், 1983, பக். 119-121, 366.
74. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104, 202.
75. சூடாமணி நிகண்டு, யாழ்பாணத்துநல்லூர் நாவலர், சௌமிய, 1909, பக். 34, 35, 226, 277.
76. கௌரா தமிழ் அகராதி, எஸ். கௌமாரீஸ்வரி, 2003, பக். 161, 500.
77. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, பக். 104, 202.
78. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 47.
    மேலது, பக்.20, 22.
79. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 167.
    மேலது, பக்.171, 172.
80. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 89.
81. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 22.
82. மேலது, ப.20.
83. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 103.

84. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 46, 47.

85. மேலது, ப.43.

86. சங்க இலக்கியம், பன்முக நோக்கு, முனைவர் இரா. இராசேந்திரன், ப. 119.
சங்க காலம், டாக்டர். கு. முத்துராசன், ப. 399.

87. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப.99.

88. தமிழக வரலாறு, அ.மு. பரமசிவானந்தம், ப. 126.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 75, 80, 229.
சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 93.

89. சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 199.

90. சங்க காலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 199.

91. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, பக். 184, 185.
மேலது, தொகுதி-2, பக். 54, 56.
சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, பக். 104, 105.

92. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 92.

93. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 93.

94. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
மேலது, தொகுதி-1, பக்.182, 183.
சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப.130.

95. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 54.
புறம். 228, 7-9.

96. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 96.

97. நற்றிணை, 14, 3-5.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 214, 216.

98. நற்றிணை, 236, 8.
சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 54.

99. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 75, 79, 80.
தமிழக வரலாறு, அ.மு. பரமசிவானந்தம், ப. 127.

100. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 210.

101. மேலது, பக். 90, 91.
மேலது, தொகுதி-1, பக், 194, 198.

102. மேலது, பக். 200, 201.

103. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப.126.

104. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 96.
சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, பக். 106, 108.
சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 135.
புறம், 228.

105. சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 399.

106. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 126.

107. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப.399.

108. சங்க் கால மன்னர்களின் கால நிலை, தொகுதி-2, ப. 140.
மேலது, தொகுதி-1, ப. 206.



# 1.2. பாண்டியர்

**1.2.0.** அரசரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற தலைப்பில் இரண்டாவதாக பாண்டியரின் எதிர்நிலைப்பாத்திரங்கள் ஆராயப்பட்டுள்ளன. சங்கம் அமைத்து, தமிழ்ப்புலவர்கள் மூலம் தமிழை வளர்த்த பாண்டியர், வரலாற்றில் மிகச்சிறப்பாகப் புகழப்படுகின்றனர். இப்பாண்டியர்தம் எதிர்நிலைப் பாத்திரங்கள் கால அடிப்படையில் ஆராயப்பட்டுத் தெரிவிக்கப்படுகின்றது.

## 1.2.1. பசும்பூண் பாண்டியன்:

**1.2.1.0.** கூடலில் பாண்டிய அரசை நிறுவிய நெடியோனின் மகன் பசும்பூண் பாண்டியன் ஆவான்.[1] இவனது மகன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்.[2] இவன் மதுரையைத் தலைநகராகக் கொண்டு மிகச் சிறப்பாக ஆண்டுள்ளான்.[3] இவனது காலம் கி.மு. 300-275.[4]

**1.2.1.1.** பசும்பூண் பாண்டியன், வானோங்கிய குடையும், நல்ல புகழும் பெற்றவனாய், தன் வீரத்தின் காரணமாகப் பகைவர் தொடுத்த போரினை ஒழித்தவன் என்றமையால் பசும்பூண் பாண்டியனுக்கு அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இதனை மதுரை ஈழத்துப் பூதன் தேவனாரின்,

> "................ ***பொருவர்***
> ***செல்சமம் கடந்த செல்லா நல்இசை***
> ***விசும்பு இவர் வெண்குடைப் பசும்பூண் பாண்டியன்*** " (அகம்.231.10-12)

என்ற பாடல் வரிகளால் அறிய முடிகிறது.

**1.2.1.2.** பசும்பூண் பாண்டியன், தம்மை எதிர்த்த கொங்கரை மதுரையினின்றும் அகற்றி, நாடு பிடிக்கும் ஆசை காரணமாகவும் தம்மை எதிர்த்ததன் காரணமாகவும் கொங்கர்தம் நாடுகள் பலவற்றையும் கைப்பற்றிக் கொண்டான்[5] என்றமையால் பசும்பூண் பாண்டியனுக்குக் கொங்கர் எதிர்நிலையாயினர். இதனைப் புலவர் நக்கீரர்,

> "***வாடாப் பூவின் கொங்கர் ஒட்டி***
> ***நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன்*** " (அகம். 253.4-5)

எனப் புலப்படுத்தியுள்ளார்.

**1.2.1.3.** பசும்பூண் பாண்டியன் உயர்ந்த மலைநாட்டை உடையவன்; வீரம் மிக்க படைகளைப் பெற்று, பேரரசர்களுள் அறவழியில் செங்கோல் செலுத்தி ஆண்டவன். இத்தகையவன் தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகைவரின் போர் செய்யும் அஞ்சாமையைக் கெடுத்து, தன் உயர்வை நிலை நாட்டிய மிக்க செல்வமுடையவன் என்றமையால், பசும்பூண் பாண்டியனுக்கு அவனது பகைவர் எதிர்நிலையானார்கள். இச்செய்தியை மதுரைக் கணக்காயனாரின்,

> "................................ ***அமர்***
> ***மறம்சாய்த்து எழுந்த வலன்உயர் திணிதோள்***
> ***பலர்புகழ் திருவின், பசும்பூட் பாண்டியன்***" (அகம். 338.3-5)

என்ற பாடல் வரிகள் புலப்படுத்தியுள்ளன.

**1.2.1.4.** பகைவர் பலர், கொங்கர் போன்றவர்கள் பசும்பூண் பாண்டியனுக்கு, அவனது வீரத்தின், நாடுபிடிக்கும் ஆசையின் காரணமாகவும் எதிர்நிலைப் பாத்திரங்கள் ஆயினர்.

**<u>1.2.2. பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி:</u>**

**1.2.2.0.** இவன் வழுதி என்றும், பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி என்றும் அழைக்கப்பட்டான்.[6]

இவன், பசும்பூண் பாண்டியனுக்குப் பிறகு பாண்டிய நாட்டை மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான்.[7] இவனது காலம் கி.மு. 275-250.[8]

இவன் பல கோட்டைகளை வென்ற போது இவனுடைய வலிமைமிக்க கைகளில் ஒளி பொருந்திய வாள் ஒன்று சிறப்புற்று விளங்கியமையால், இவன் கருங்கை ஒள்வாள் என்ற அடைமொழியைத் தன் பெயருக்கு முன் பெற்றான்.

கவுரியர் வழியில் வந்தவன். பசும்பூண் பாண்டியன் மகளை மணந்து பாண்டிய மன்னன் ஆனான்.

**1.2.2.1.** காவல் காக்கும் அரணின் வலிமை சிதையும்படி பல யானைகளைப் பரப்பி தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகைவரின் அரண்கள் பலவற்றை அழித்து, அதனால் வெற்றி பெற்ற மிக்க சேனையை உடையவன் வழுதி. அவன் பலகாலம் வாழ்க என நிலையான மதில் உடைய குறுநில மன்னர் பலர் தொழுது நிற்பர் என்று சொல்லப்பட்டிருப்பதில் இருந்து வழுதிக்குப் பகைவர் பலரும் குறுநில மன்னர் பலரும் எதிர்நிலையாயினர். இதனைக் கடுவன் இளமள்ளனாரின்,

"...............**நும்பெருமகன்**

***மிளிவலி சிதையக் களிறுபல பரப்பி,***

***அரண்பல கடந்த முரண்கொள் தானை***

***வழுதி! வாழிய பல! எனத்தொழுது, ஈண்டு***

***மன்எயி லுடையோர்*** ............." (நற். 150.1-5)

என்னும் பாடல்வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.2.2.2.** பகைவர் சிலர், குறுநில மன்னர் பலர், பாண்டியன், கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதிக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள் ஆயினர்.

### 1.2.3. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி:

**1.2.3.0.** கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதிக்குப் பிறகு, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்துள்ளான்[9] என்பதால் இவனும் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான் என்று என்னத்தகும்.[10] இவனது காலம் கி.மு. 250-225.[11]

வழுதி எனப்படும் அரசர்களுள் இவனே காலத்தால் முந்தியவனாகக் காணப்படுகின்றான்.[12] இவன் நான்மறை வல்ல அந்தணர்களைக் கொண்டு, பல வேள்விகளைச் செய்தமையால் பல்யாகசாலை என்னும் அடைமொழியுடன் வழங்கப்பட்டான்.[13]

இந்து சமயத்தைத் தழுவி, யாகங்கள் செய்த முதல் தமிழ் மன்னன் முதுகுடுமி என்று கருதுவாருமுளர்.[14] முதுமையை உணர்த்தும் நரைத்தலை உடையவனாக

இவன் விளங்கியதால் முதுகுடுமி என்னும் பெயர் இவனுக்கு உண்டாகி இருக்கலாம் என்பாருமுளர்.[15]

முதுகுடுமி நெடியோனின் வழிவந்தவன்.[16] இவனது மகன் இளம்பெருவழுதி, தந்தையின் வைதிக மார்க்கத்தை வெறுத்து, பௌத்த மதத்தைத்தழுவி, பிரசாரத்திலும் ஈடுபட்டுள்ளான்.[17]

**1.2.3.1.** பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, போர் செய்வதற்குத் தன்னை எதிர்த்த பகைவர் நாட்டில், தன் வீரத்தின் காரணமாகப் படைகளை உள்ளே செலுத்தி, உடன் யானையையும் செலுத்தி அரிய மதில் அரண்களையும் வென்று கைக்கொண்டமையால் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கு அவனை எதிர்த்த பகைநாட்டவர் எதிர்நிலையாயினர். இதனைப் புலவர் காரிகிழார்,

> ***"செய்வினைக்கு எதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்***
> ***கடற்படை குளிப்ப மண்டி அடர்ப்புகர்ச்***
> ***சிறுகண் யானை செவ்விதின் ஏவிப்***
> ***பாசவற் படப்பை ஆர்எயில் பலதந்து"*** (புறம்.6.11-4)

என்ற பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.2.3.2.** பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, தேர் ஓடியதால் குழிந்த தெருவில், கழுதையான இனத்தைப் பூட்டி, பகைவரின் அகன்ற இடத்தையுடைய நல்ல அரண்களை உழுது பாழ்செய்துள்ளான்[18] என்றமையால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் நெட்டிமையார்,

> ***"கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்***
> ***வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்***
> ***பாழ்செய் தனைஅவர் நனந்தலை நல்லெயில்"*** (புறம். 15.1-3)

இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

**1.2.3.3.** பகை நாட்டவர் பலர், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள் ஆயினர்.

## 1.2.4. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்:

**1.2.4.0.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், செழியன், நெடுஞ்செழியன், பாண்டியன் நெடுஞ்செழியன், முசிறிமுற்றிய நெடுஞ்செழியன் என்றெல்லாம் அழைக்கப்பட்டான்.[19] சங்க காலப் பாண்டியரில் தலை சிறந்தவன் பாண்டியன் அறிவுடை நம்பியின் மகன்.[20]

இவன் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்துள்ளான்.[21] இவனது காலம் கி.மு. 175-150.[22]

**1.2.4.1.** தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், தன் வலிய வீரத்தின் காரணமாகச் சேரன், சோழன் ஆகிய இரண்டு பெரிய முடியுடை மன்னர்களையும், குறுநில மன்னர் (வேளிர்) பலரும் தளரும்படி போரிட்டு அவர்களையும் வென்றுள்ளான்[23] என்பதால் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்குச் சேரன், சோழன் ஆகிய இரண்டு பெரிய முடியுடை மன்னர்களும் குறுநில மன்னர் (வேளிர்) பலரும் எதிர்நிலையாயினர். இதனை மாங்குடி மருதனார்,

> "**இருபெரு வேந்தரொடு வேளிர் சாயப்**
> **பொருது அவரைச் செருவென்றும் ......**" (மது. 55-56)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**1.2.4.2.** தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், குமரியும் இமயவரையும் கிழக்கு மேற்குக் கடல்களும் எல்லையாக அமையும்படி நாவலந்தீவு முழுமையும் உள்ள மன்னர் எல்லாம் ஏவல் செய்யுமாறு வெற்றியுடன் செறிந்து நடந்த அம்மன்னர்க்கெல்லாம் தன்னுணர்வு காரணமாகத் தான் ஒருவனே மன்னனாய் ஒரு குடையின் கீழ் ஆண்டுள்ளமையால், நாவலந்தீவு முழுமையும் உள்ள மன்னர் எல்லாம் எதிர்நிலையாயினர் (மது. 70-74).

**1.2.4.2.1.** தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், தோல்வியடைந்து முதுகு காட்டி ஓடுபவர் மீது படை எறிய எழாத

தோள்களையுடைய மறவருடன் பெரும்படையுடன், பகைவர் மீது படையெடுத்துச் செல்பவன்.

பகைவரது நாட்டைக் கைப்பற்ற வேண்டும் என்ற நாடு பிடிக்கும் ஆசை காரணமாகப் பகைவரின் மறப்பெருமை கெடும்படி அவர்களை வென்று கொன்று, அவர்தம் நாடுகள் பாழாகும்படி கைப்பற்றுபவன்.

பகைவரின் சுற்றத்தாரும் வலிமையழிந்து பாண்டியனின் ஏவல் கேட்டு நடப்பர். நாவலந்தீவில் உள்ள நாடுகள் யாவும் தன்னுடையதாகப் பாண்டியன் வளைத்துப் பிடித்துக் கொண்டு அறநூல் முறைப்படி, செங்கோல் செலுத்திய முறை உலகமக்கள் உணரும்படி செய்து, தன் வெற்றியை வளர்பிறை போல், மேம்படச் செய்தவன்; அதனால் பகைவரின் ஆக்கம் தேய்பிறை போல் அழியத்தக்கதாய் ஆனது என்பதால், அவனது பகைவரும் பகைவரின் சுற்றத்தாரும் நாவலந்தீவில் உள்ள நாட்டு மன்னர்களும் எதிர்நிலையாயினர். இச்செய்தி மதுரைக்காஞ்சியில் உள்ளது.

> "*விரிகடல் வியன் தானையொடு*
> *முருகு உறழப் பகைத்தலைச் சென்று*
> .....................
> .....................
> *பீடு அழியக் கடந்து அட்டுஅவர்*
> *நாடு அழிய எயில் வெளவி*
> *சுற்றமொடு தூ அறுத்தலின்*
> *செற்ற தெவ்வர் நின்வழி நடப்ப*
> *வியன்கண் முதுபொழில் மண்டிலம் முற்றி*" (மது.180-181; 186-190).

**1.2.4.3.** தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், காற்றைப்போல் விரைந்து சென்று பகைவரின் நாடு அழியும்படி தீயைப் பரப்பித் தலையாலங்கானம் என்ற ஊரில் உள்ள படை வீட்டிலிருந்து, நாடு பிடிக்கும் ஆசை காரணமாகச் சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் ஆகிய ஏழு மன்னரும் இறக்கும்படி கொன்று,[24] மற்ற

மன்னர்க்கு அச்சம் உண்டாகுமாறு செய்து, முரசைக் கைக்கொண்ட மறக்கள வேள்வியைச் செய்த பேராற்றல் வாய்ந்த மன்னனாய் விளங்கியுள்ளான் என்பதால், இவனுக்கு அவர்கள் எதிர்நிலையாயினர். இச்செய்தியையும் மதுரைக்காஞ்சியில் காணமுடிகிறது.

"*கால் என்னக் கடிது உராய்அய்*
*நாடு கெடவரி பரப்பி*
*ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்து*
*அரசு படஅமர் உழக்கி*
*முரசு கொண்டு களம்வேட்ட*
*அடுதிறல் உயர்புகழ் வேந்தே*" (மது. 125-130)

இவை போன்ற கருத்து நெடுநல்வாடை, அகநானூறு, புறநானூறு போன்ற நூற்களில் ஒரே மாதிரி உள்ளன. அவை அடிக்குறிப்பால் சுட்டப்படுகின்றன.

"*தவ்வென்று அசைஇ தாதுளி மறைப்ப*
*நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்*
*சிலரொடு திரிதரும் வேந்தன்*
*பலரொடு முரணிய பாசறைத் தொழிலே*"
(நெ. 184-188, அகம். 36.13-22, 209.2-6, புறம். 19.12-17, 76.9-13)

**1.2.4.4.** தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் மனங்கலங்குமாறு அவனுக்குச் சினத்தை உண்டாக்கும் வில்லாற்றலும் வஞ்சின மொழி பேசும் வல்லமையும் உடையவராய்த் திகழ்ந்து வந்தவர் பரதவர்.

அத்தகைய பரதவரைத் தன் வலிய வீரத்தின் காரணமாகப் போர் செய்து, அடக்குவதில் அரிமாவைப் போன்று திகழ்ந்தவன் என்பதாலும், தென்னாட்டிலிருந்து குறும்பு செய்து வந்த குறுநில மன்னர் தென்பரதவரை அவ்வப்போது அடக்கி வந்தவன் அரியேறு போன்ற தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் என்பதாலும் பரதவரும் தென்பரதவர் என்னும் குறுநில மன்னரும் எதிர்நிலையாயினர் (மது. 139-144).

**1.2.4.5.** தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், தன்னுணர்வு காரணமாகத் தொன்று தொட்டுப் பகைவராய் உள்ளவர்தம் நிலத்தில் புகுந்து அவர்கள் காவல் செய்து வந்த சோலைகளை வெட்டி அழித்துள்ளமையால் அவர்தம் பகைவர் எதிர்நிலையாயினர்.

> ***"உறு செறுநர் புலம்புக்கு அவர்***
> ***கடி காவின் நிலை தொலைச்சி"*** (மது. 152-153)

**1.2.4.5.1.** தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் போரில் பகைத்தவரைத் தன் வீரத்தின் காரணமாக வென்று தலையாலங்கானத்தில் யாவரும் அஞ்சும்படி தங்கிய வேற்படை பொருந்திய சேனைக்குத் தலைவன் என்றமையால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் பொதும்பில்கிழார்,

> ***". . . . . . . . . . . . . . . . செரு இறந்து***
> ***ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த***
> ***வேல்கெழு தானைச் செழியன்"*** (நற். 387.6-8)

என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

**1.2.4.5.2.** தம்மை எதிர்த்து நின்ற பகைவரை எல்லாம் தம் வலிய வீரத்தின் காரணமாகப் போரிட்டுக் கலக்கி இறந்துபடச் செய்து, பாண்டியன் நெடுஞ்செழியன் தன் புகழ் பரவுமாறு பகைவரின் முரசையும் கைக்கொண்டுள்ளான் என்பதால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை மாங்குடி மருதனாரின்,

> ***"ஒளிறுஇலைய எஃகுஏந்தி***
> ***அரைசுபட அமர்உழக்கி***
> ***உரைசெல முரசுவெளவி"*** (புறம். 26.5-7)

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

**1.2.4.5.3.** பகைவர் பாதுகாப்பான கோட்டைச் சுவருக்குள் இருக்க, பாண்டியன் செழியன் தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகைவரின் பாதுகாப்பான அரணை வென்று அவர்தம் முரசைக் கைக்கொண்டு அடும்போரைச் செய்யும் செழியனின்

பெரும்புகழுடைய கூடல் நகரம் என்று சொல்லப்பட்டமையால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இதனை மருதன் இளநாகனார்,

> *"................ நண்ணார்*
> *அரண்தலை மதிலாகவும், முரசு கொண்டு*
> *ஓம்புஅரண் கடந்த அடுபோர்ச் செழியன்*
> *பெரும்பெயர்க் கூடல் ............"* (நற். 39.7-10)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.2.4.5.4.** பகைவரின் யானைகள் மிக்க போரினைத் தன்படை வலிமையின் காரணமாக அழியக்கொன்று குவிக்கும் வெற்றி பொருந்திய செழியன் என்று சொல்லப்பட்டமையால், பாண்டியன் செழியனுக்கு அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்தை அள்ளூர் நன்முல்லையார்,

> *"................... செறுநர்*
> *களிறுடை அருஞ்சமம் ததைய நூறும்*
> *ஒளிறுவாட் தானைக் கொற்றச் செழியன்"* (அகம். 46. 11-13)

என்று தெரிவித்துள்ளார்.

**1.2.4.5.5.** வாளினால், வெற்றி பொருந்திய பாண்டியன், தன் படைப்பயிற்சியின் காரணமாகப் பகைவரது நெருங்கிய போரில் சென்று, அதனால் கைக்கொண்ட யானைகளைப் பாணர்க்குப் பரிசாகத் தருவான் என்றமையால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் ஆலங்குடி வங்கனாரின்,

> *"ஒளிறுவாட் தானைக் கொற்றச் செழியன்*
> *வெளிறுஇல் கற்பின் மண்டுஅமர் அடுதொறும்*
> *களிறுபெறு வல்சிப் பாணன் ............"* (அகம்.106.10-12)

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்தியுள்ளன.

**1.2.4.5.6.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் இளமைப் பருவத்திலேயே, தன் வீரத்தின் காரணமாக முறை முறையாகச் சினந்து, எதிர்த்து வந்த பகைவரது புதிய வீரர்களை இறுகப் பற்றிப் பரந்த வானத்தில்

ஒலியுண்டாகுமாறு உடலானது நிலத்தில் கவிழுமாறு பொருந்தக் கொன்றான் என்றமையால், அவனது பகைவரது புதிய வீரர்கள் எதிர்நிலையாயினர்.

**1.2.4.6.** சேர, சோழ மன்னர் இருவரையும் தன் வலிய வீரத்தால் போர்க்களத்தில் இறக்குமாறு வென்று வீழ்த்திய பாண்டியன் நெடுஞ்செழியன், அம்மன்னரின் முரசையும் கவர்ந்து கொண்டான் என்பதால் சேர, சோழ மன்னர் இருவரும் எதிர்நிலையாயினர். (சமகாலத்தில் வாழ்ந்த சேரன், சேரமான் யானைக்கட்சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறையாகவும், சோழன், சோழன் நலங்கிள்ளியாகவும் கொள்ளலாம்) (புறம். 25.3-7).

**1.2.4.7.** பகைவர், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனது மார்பைக் கண்டும் மதியாதவராய், யாம் சிறப்பு உடையோம்; படையால் பெரியோம்; எம்முடன் போர் செய்யும் பாண்டியன் இளையவன்; யாம் கொள்ள இருக்கும் கொள்ளைப் பொருளும் பெரிது என்று பாண்டியனை இகழ்வாக எண்ணி வந்தனர்.

இவ்வாறு தன்னை இழிவுபடுத்தி எதிர்த்துப் பேசி வந்த பகைவரை, தன்னை இழிவுபடுத்தியதன் காரணமாகப் போர்க்களத்திலேயே கொல்லச் சம்மதிக்காதவனாய், அப்பகை வீரரின் மாட்சிமைப்பட்ட அணியை அணிந்த மனைவியர், நாணம் கொண்டு (தாம் மங்கல நாண் இழக்க, தம் கண்முன்னாலேயே கணவர் கொல்லப்படுகின்றனரே என) இறந்து போகுமாறு அவ்வீரரின் தந்தையரின் ஊர்களான சொந்த ஊர்வரை துரத்திச் சென்று போர்ப்பறை ஒலிக்க அங்கே அவர்களைக் கொன்றான் என்றமையால், அவனது பகை வீரரும் பகை வீரர்தம் மனைவியரும், பகைச்சொல், இழிவுச்சொல் காரணமாகவும் பகைவர்களாயினர் (புறம்.78:2-12).

**1.2.4.8.** யவனர் (எகிப்து, கிரேக்கம் முதலிய நாட்டவர்) தம் மரக்கலத்தில் பொன்னைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, மிளகு ஏற்றிச் செல்லும் ஆறு, சேர மன்னரின் 'சுள்ளி' என்னும் பேராறு.

இத்தகைய ஆறு கடலில் கலக்கும் இடத்தில் உள்ள முசிறி என்னும் இப்பட்டினத்தைப் பேராற்றல் மிக்க செழியன் வளைத்துக் கொண்டு, அந்நகரைக் கொள்ளையிட வேண்டும் என்னும் கருத்துடையவனாய் ஆரவாரத்துடன் சென்று சேர மன்னனை வென்று, அங்கிருந்த பொற்பாவையைக் கவர்ந்து கொண்டான் என்றமையால், பாண்டியன் நெடுஞ்செழியனுக்குச் சேரமன்னன் எதிர்நிலையானான். இதனை எருக்காட்டூர்த்தாயங்கண்ணனார்,

*"வளம்கெழு முசிறி ஆர்ப்புஎழ வளைஇ*
*அருஞ்சமம் கடந்து, படிமம் வவ்விய*
*நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்"* (அகம். 149.11-13)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.2.4.9.** சேரன் (சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை) சோழன் (நலங்கிள்ளி), குறுநில மன்னர்களாகிய திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன் ஆகிய வேளிர் ஐவர், நாவலந்தீவு முழுமையும் உள்ள மன்னர்கள், பகைவர் மற்றும் பகைவரின் சுற்றத்தாரும் நாவலந்தீவில் உள்ள நாட்டு மன்னர்களும், பரதவரும் தென் பரதவர் என்னும் குறுநில மன்னர்களும், பகைவர் மற்றும் பகைவரின் புதிய வீரர்கள், பகை வீரர் மற்றும் பகை வீரர்தம் மனைவியர், சேரமன்னன் போன்றவர்கள் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அவனது வீரத்தின், தன்னுணர்வின், நாடு பிடிக்கும் ஆசையின், பகைமையின், படை வலிமையின், படைப் பயிற்சியின், சினத்தின், இழிவுபடுத்திப் பகைச் சொல் பேசியதின், பகைவரது நகரைக் கொள்ளையிட வேண்டும் என்பதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் ஆயினர்.

### 1.2.5. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி:

**1.2.5.0.** பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் மூத்தமகன்.[25] இவன் பாண்டியன் மாறன் வழுதி, பாண்டியன் பன்னாடு தந்தான், பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதி, மாறன் வழுதி, வெல்போர் வழுதி, சினப்போர் வழுதி, இயல்தேர் வழுதி என்றெல்லாம் அழைக்கப்பட்டவன்.[26]

இவனே நற்றிணையைத் தொகுப்பித்தவன்.[27] குறுந்தொகையும் இவன் காலத்திலேயே தொகுக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.[28] இவன் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான்.[29] இவனது காலம் கி.மு. 150-125[30] என்பர்.

**1.2.5.1.** பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, நீரையும் தீயையும் காற்றையும் போன்று சினத்துடன் போரிட வல்லவன். குளிர் தமிழ்நாடு மூவேந்தர்க்கும் பொதுவானது என்பதைப் பொறுத்துக் கொள்ளாத தன்மை மற்றும் தன்னுணர்வு காரணமாகப் போர் செய்ய முற்பட்டுத் திறை தண்டினால், திறையைக் கொள்க என்று முன்னே தந்தவர் அச்சம் தீர்ந்தவராவார். அங்ஙனம் திறைப் பொருளை அவனுக்குத் தராத மன்னர் அவனது அருளை இழந்து துன்புறுவர் என்று சொல்லப்பட்டமையால், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிக்கு திறைப்பொருளைத் தராத மன்னர் எதிர்நிலையாயினர் (புறம்.51.4-8).

**1.2.5.2.** பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி தன் வீரத்தின் காரணமாகத் தம்மை எதிர்க்கும் வடநாட்டு அரசர் வாட கொடிய போரைச் செய்பவன்.

பாண்டியன் இப்படிப் போர் செய்யப் புறப்படுவானாயின், இவ்வுலகத்தில் அவனை எதிர்த்து நிற்கும் நாட்டு மன்னர் எவருமின்றி இரங்கத்தக்கவராவர் என்றமையால் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிக்கு, வடநாட்டு அரசரும் மற்ற நாட்டு மன்னரும் எதிர்நிலையாயினர். இதனை, புலவர் மருதன் இளநாகனாரின்,

> ***"வடபுல மன்னர் வாட அடல்குறித்து***
> ***இன்னா வெம்போர் இயல்தேர் வழுதி***
> ***இதுநீ கண்ணியது ஆயின் இருநிலத்து***
> ***யார்கொல் அளியர் தாமே ......"*** (புறம்.52.5-8)

என்ற பாடல் வரிகளால் புலப்படுத்தப்பட்டுள்ளது.

**1.2.5.3.** திறை செலுத்தாத மன்னர், வடநாட்டு அரசர், மற்ற பகை நாட்டு மன்னர் போன்றவர்கள் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிக்கு,

அவனது பொறுத்துக் கொள்ளாத தன்மையின், தன்னுணர்வின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் ஆயினர்.

## 1.2.6. கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி:

**1.2.6.0.** இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்கு மக்கள் இருவர். ஒருவர் வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, மற்றொருவர் உக்கிரப்பெருவழுதி. இவன் வேங்கை மார்பனிடமிருந்து கானப்பேர் கோட்டையைக் கைப்பற்றினான்.[31] இந்த வெற்றி இவனது வரலாற்றில் மிகவும் சிறப்புடையதாய் விளங்கியது பற்றி, இவன் கானப்பேர் எயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என்று சிறப்பித்துக் கூறப்பட்டான்.[32]

சிவபிரானின் (உக்கிரன் என்ற) பெயரை இவன் பெற்றுள்ளான் என்ற போதிலும் பெருவழுதி என்ற குடிப்பெயரும் இவன் பெயரில் உள்ளது.[33] உக்கிரப் பெருவழுதி கானப்பேரைச் சூழ்ந்த பகுதியை ஆண்டு வந்துள்ளான். இவனது காலம் கி.மு. 125-100[34] என்பர். இவன் கானப்பேர் என்னுமிடத்தில் நடந்த போர்க்களத்தில் வேங்கைமார்பன் என்னும் சிற்றரசனை வென்று அவனது கோட்டையைக் கைப்பற்றி ஆண்டுள்ளான்.

**1.2.6.1.** புலவர்கள் பாடும் ஆற்றலைக் கடந்த புகழ்மிகு உக்கிப் பெருவழுதி, அகன்ற அகழியும் உயர்ந்த மதிலும் மதில் மேல் நட்சத்திரம் போன்ற சிற்றுறுப்பும், மரங்கள் அடர்ந்த காவற்காடும், பகைவர் நுழைவதற்கரிய பல சிற்றரண்களும் கொண்ட கானப்பேர் என்னும் கோட்டையைத் தன் வீரத்தின் காரணமாகக் கைப்பற்றினான். அதனால் அக்கோட்டையை மீட்பது அரிது எனப் பறிகொடுத்துவிட்டு, அக்கோட்டையின் தலைவனான வேங்கைமார்பன் ஓலமிட்டு வருந்தியுள்ளான்.[35] அத்துடன் உக்கிரப்பெருவழுதியை இகழ்ந்தோர் போர்க்களத்தில் இசையுடன் மாய்ந்துள்ளார்கள். எனவே, கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதிக்கு வேங்கை மார்பன் என்னும் சிற்றரசனும் அவனை இகழ்ந்த பகைவரும் எதிர்நிலையாயினர். இதனை ஐயூர் மூலங்கிழாரின்,

*"அருங்குறும்பு உடுத்த கானப் பேரெயில்*
*கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய*
*இரும்புஉண் நீரினும் மீட்டற்கு அரிதுஎன*
*வேங்கை மார்பன் இரங்க வைகலும்*
*ஆடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்*
*பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே*
*இகழுநர் இசையொடு மாயப்*
*புகழொடு விளங்கிப் பூங்கநின் வேலே!"* (புறம்.21.6-13)

என்ற பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.2.6.2.** வேங்கைமார்பன் என்னும் சிற்றரசன், இகழ்ந்த பகைவர் போன்றோர் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலையாயினர்.

## 1.2.7. பாண்டியர்:

**1.2.7.0.** ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், நெடியோன், பசும்பூண் பாண்டியன், கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன், அறிவுடைநம்பி, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதி, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதி, சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் போன்ற பாண்டியர்கள் கூடல் எனப்படும் மதுரையைத் தலைநகராகக் கொண்டு கி.மு. 350 முதல் கி.மு. 75 வரை பாண்டிய நாட்டை ஆட்சி செய்து வந்துள்ளனர்.[36]

**1.2.7.1.** பாண்டியன் பகைவரின் அரண்கள் பலவற்றையும், தன் படைபலத்தின் காரணமாக வென்றவன்; வேம்பு மாலையை அணிந்தவன் என்று சொல்லப்பட்டமையால் பாண்டியனுக்கு அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இதனைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்,

*"அரண்பல கடந்த, முரண்கொள் தானை*
*வாடா வேம்பின் வழுதி கூடல்"* (அகம்.93.8-9)

என்னும் பாடல் வரிகளில் மொழிந்துள்ளார்.

**1.2.7.2.** பாண்டியன் மலர்மாலை சூடியவன்; மையால் அழகு செய்யப் பெற்ற யானைகளைப் பெற்றவனாய்த் தன் வீரத்தின் காரணமாகப் போர்த் தொழில் செய்பவன். ஒரு சமயம் இப்பாண்டியனை எதிர்த்துச் சேர, சோழ மன்னர்கள் மதுரை நகரின் பக்கத்தில் ஏற்பட்ட போர்க்களத்தில் ஒன்று கூடி எதிர்த்தனர்.

பாண்டியன், சேர, சோழர்தம் பெரிய படை கலக்கம் அடையுமாறு செய்து, முரசுகள் போர்க்களத்திலேயே விழுந்து கிடக்க, அம்மன்னர்கள் நான்குபுறமும் தோற்றோடுமாறு செய்தமையால் பாண்டியனுக்குச் சேர, சோழ மன்னர்கள் எதிர்நிலையாயினர் (அகம். 116.12-18).

**1.2.7.3.** தெற்கில் பேராற்றல் மிக்கவர் பாண்டியர்; அப்பாண்டியரின் நாட்டில் காட்டரணைத் திறந்து, பகைவரின் பசுக்களைக் கவர்ந்து கொள்ளும் கள்வர்க்கு முதல்வன். பெரிய கையுடன் நற்புகழும் கொண்டு, பருந்துகள் வந்து கூடுமாறு, தம் வீரத்தின் காரணமாகத் தம் பகைவரின் அரண்களை அழித்துப் பலபோர்களைச் செய்து வென்றவன் பாண்டியன் என்றமையால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்தை மதுரை கணக்காயனாரின்,

*"................ பருந்துபடப்*
*பல்செருக் கடந்த செல்உறழ் தடக்கை*
*கெடாஅ, நல்இசைத் தென்னன் ....."* (அகம். 342.8-10)

என்ற பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.2.7.4.** தம் அரண்களினின்று எதிர்த்த பகைமன்னர், மதுரை நகரின் பக்கத்தில் எதிர்த்த சேர, சோழ மன்னர்கள் மற்றும் பகை நாட்டவர் போன்றவர்கள் பாண்டியருக்கு, அவர்தம் பலத்தின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் ஆயினர்.

**1.2.8. முடிவுகள்:**

1. பகைவர் பலர், கொங்கர் போன்றவர்கள் பசும்பூண் பாண்டியனுக்கு, அவனது வீரத்தின், நாடுபிடிக்கும் ஆசையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

2. பகைவர் சிலர், குறுநில மன்னர் பலர், பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதிக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

3. பகை நாட்டவர் பலர், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்

4. சேரன் (சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை) சோழன் (நலங்கிள்ளி), குறுநில மன்னர்களாகிய திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன் ஆகிய வேளிர் ஐவர், நாவலந்தீவு முழுமையும் உள்ள மன்னர்கள், பகைவர் மற்றும் பகைவரின் சுற்றத்தாரும் நாவலந்தீவில் உள்ள நாட்டு மன்னர்களும், பரதவரும் தென்பரதவர் என்னும் குறுநில மன்னர்களும், பகைவர் மற்றும் பகைவரின் புதிய வீரர்கள், பகை வீரர் மற்றும் பகை வீரர்தம் மனைவியர், சேரமன்னன் போன்றவர்கள் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு, அவனது வீரத்தின், தன்னுணர்வின், நாடு பிடிக்கும் ஆசையின், பகைமையின், படை வலிமையின், படைப் பயிற்சியின், சினத்தின், இழிவுபடுத்திப் பகைச் சொல் பேசியதின், பகைவரது நகரைக் கொள்ளையிட வேண்டும் என்னும் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

5. திறை செலுத்தாத மன்னர், வடநாட்டு அரசர், மற்ற பகை நாட்டு மன்னர் போன்றவர்கள் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிக்கு, அவனது பொறுத்துக் கொள்ளாத தன்மையின், தன்னுணர்வின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

6. வேங்கைமார்பன் என்னும் சிற்றரசன், இகழ்ந்த பகைவர் போன்றோர் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

7. தம் அரண்களினின்று எதிர்த்த பகை மன்னர், மதுரை நகரின் பக்கத்தில் எதிர்த்த சேர, சோழ மன்னர்கள் மற்றும் பகை நாட்டவர் போன்றவர்கள் பாண்டியருக்கு, அவர்தம் படை பலத்தின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

பாண்டிய மன்னர்கள் பலர் ஆட்சி செய்த போதிலும், பசும்பூண் பாண்டியன், பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி, பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், பாண்டியன் கூடகாரத்துத்துஞ்சிய மாறன் வழுதி, கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி மற்றும் சில பாண்டியர் போன்றவர்களுக்கு மட்டும் எதிர்நிலைப் பாத்திரங்களாக உள்ளனர்.

இவர்களில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அவனது,

(1) வீரம்

(2) தன்னுணர்வு

(3) நாடு பிடிக்கும் ஆசை

(4) பகைமை

(5) படை வலிமை

(6) படைப் பயிற்சி

(7) சினம்

(8) பகைவர் இழிவுபடுத்திப் பகைச் சொல் பேசுதல்

(9) பகைவரது நகரைக் கொள்ளையிட வேண்டும்

போன்ற முக்கிய காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இவற்றுள், அவனது வீரம் அதிகக் காரணமாக இருந்துள்ளது.



# அடிக்குறிப்புகள்

1. சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-2, ப.23.
2. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 163.
3. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 186.
4. சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-2, பக். 20,21.
5. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப.137.
6. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 179.
7. சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-2, ப. 53.
   சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 179.
8. சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-2, ப. 43.
9. மேலது, தொகுதி-1, ப. 156.
10. மதுரைக்காஞ்சி, ப.32, வரி 758-759.
11. சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-2, ப. 54.
12. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 174.
13. மேலது. ப. 175.
14 சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-1, ப. 157.
15. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, பக். 175-176.
16. சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-2, ப. 57.
17. மேலது, ப. 58.
18. இலக்கிய வரலாறு, முதற்பாகம், க.சு.பிள்ளை, ப.87.
19. சங்ககால மன்னர்களின் காலநிலை - தொகுதி-2, ப. 249.
20. மேலது, ப. 249.
21. மேலது, தொகுதி-1, ப. 162.
22. மேலது, தொகுதி-2, ப. 96.
23. சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர். இரா.சந்திரசேகரன், ப.67.
    சங்க இலக்கியம், பன்முகப் நோக்கு, முனைவர். இரா.சந்திரசேகரன், ப.194.
24. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 113,
    சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ. தட்சிணாமூர்த்தி, பக். 247,248.
    தமிழர் வரலாறு, மொழிஞாயிறு, ஞா. தேவநேயப்பாவாணர், ப. 67.
25. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 162.
26. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 181.
27. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 162.
28. மேலது, ப. 162.

29. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், தமிழ்ப் பல்கலைக்கழகம், ப.176.

30. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 140, 143.

31. மேலது, தொகுதி-1, பக். 162-164.

32. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 176.

33. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 178.

34. மேலது, தொகுதி-1, ப. 163.

35. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 114.

36. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 1-186.




# 1.3. சேரர்

**1.3.0.** தமிழ்ப்பணி செய்தவர்களில் சேரமன்னர்களின் பங்கு மிகுதி என்பது அறிந்துணரற்பாலது. சேர மன்னர்கள் வீரத்திலும் தீரத்திலும் சிறந்தவர்கள். முதன்முதலில் இமயம்வரை சென்று தமது வில் சின்னத்தைப் பாறையில் பொறித்து வந்தவர்கள். ஆரிய மன்னர்கள், கனகன் விசயன் போன்றவர்களை வென்று வந்தவர்கள். சேரமான் அந்துவஞ்சேரல் முதல்பல சேரமன்னர்கள் ஆண்டு வந்துள்ளனர். அவர்களில் எதிர்நிலைப் பாத்திரங்கள் உள்ள சேரமன்னர்கள் பற்றி இப்பகுதியில் ஆராயப்பட்டுள்ளது.

## 1.3.1. சேரமான் அந்துவஞ்சேரல்:

**1.3.1.0.** சேரன் செங்குட்டுவனுக்குத் தாயாதிப் (பங்காளி) பாட்டன் அந்துவன். சேர அரச பரம்பரையில் இளையகால் வழியில் வந்தவன். இவனது மகனே செல்வக்கடுங்கோ வாழியாதன். அந்துவனுக்குப் பொறையன் என்றும் பெயர் உண்டு. அந்துவன் 'ஒரு தந்தை' என்னும் அரசனின் மகள். பொறையன் பெருந்தேவி என்பவளைத் திருமணம் செய்திருந்தான்.[1] புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ள சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை என்பவன் இவனே.[2] உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்னும் புலவரிடம் பெருமதிப்புக் கொண்டவன்.[3] இவன் கருவூரைத் (வஞ்சி) தலைநகராகக் கொண்டு சேரநாட்டை ஆண்டவன். கொங்கு நாட்டிலுள்ள வஞ்சியே கருவூர் எனப்பட்டது.[4] இவனது காலம் கி.மு. 275-250 என்பர்.[5]

**1.3.1.1.** சேரமான் அந்துவஞ்சேரல், மிக்க நுட்பமான கேள்வியறிவை உடையவன். இவன்தன் வீரத்தின் காரணமாகப் பகைவருடன் ஊக்கத்துடன் போரிட்டு, வென்று அவர்களைச் சிறைபிடித்துக் கொணர்ந்தவன் என்பதால், பகைவர்கள் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் கபிலர்,

> "*மடியா உள்ளமொடு மாற்றோர்ப் பிணித்த*
>
> *நெடுநுண் கேள்வி அந்துவற்கு .......*" (பதிற். ஏ.ப. பதி.1-2)

என குறிப்பிட்டுள்ளார்.

**1.3.1.2.** பகைவர் பலர், சேரமான் அந்துவஞ்சேரலுக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

**1.3.2. சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன்:**

**1.3.2.0.** உதியஞ்சேரலாதன், சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் என்றும் அழைக்கப்படுவான். இவனுக்குப் பெருஞ்சேரலாதன் என்றொரு பெயரும் உண்டு.[6] இவனது நாட்டுக்கு எல்லை வானத்தைக் கூறுவதைத் தவிர வேறு வழியில்லையாதலால் வானவரம்பன் என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப் பெற்றவன் என்று தெரிகிறது.[7]

உதியஞ்சேரல் என்பவன் செங்குட்டுவனின் பாட்டன். அவன் வேறு. இந்தப் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் வேறு.[8]

சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன், கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ்சேரல் இரும்பொறையின் இளைய மகனாவான்.[9] இவன் சுருக்கமாகப் பெருஞ்சேரலாதன் என்றும் குறிப்பிடப்படுகிறான்.[10] இவனது மனைவி நல்லினி. உதியஞ்சேரலாதனுக்கும் நல்லினிக்கும் பிறந்தமகன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆவான்.[11]

உதியஞ்சேரலாதன், குழுமூரிலிருந்து கொண்டு, பெருஞ்சோறு கொடுப்பதிலும் சேரநாட்டை விரிவுபடுத்துவதிலும் ஈடுபட்டுள்ளான்.[12] இவன் முக்கடலும் சூழ தென்பகுதியை ஆண்டு வந்துள்ளான்.[13] இவனது காலம் கி.மு. 275-250.[14]

**1.3.2.1.** சேரமன்னன் வானவரம்பன், சேரமான்பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் எனப்படும் பெருஞ்சேரலாதன் ஆவான். இவன், தன் வலிய வீரத்தின் காரணமாக, கடல் வழி வந்த யவனரைப் புடைபெயர்ந்து தோற்றோடும்படிச் செய்த வெற்றிவேல் உடையவன் என்பதால் யவனர் எதிர்நிலையாயினர். இதனை, வெள்ளி வீதியாரின்,

> ***"......................பொலந்தார்***
>
> ***கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்***
>
> ***வான வரம்பன்...................."*** (அகம்.45.15-17)

என்ற பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.3.2.2.** உதியஞ்சேரலாதனே, பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் எனப்படுவான். இவன், நாடு பிடிக்கும் ஆசை காரணமாகப் பிறநாட்டை வென்று[15] கொண்டமையால் பிற நாட்டார் எதிர்நிலையாயினர். இச்செய்தியை மாமூலனாரின்,

"**நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்**" (அகம். 65.5)

என்னும் பாடல் வரிமூலம் அறியலாகிறது.

**1.3.2.3.** சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் எனப்படும் பெருஞ்சேரலாதனும் கரிகால் பெருவளத்தானும் முழுமதி நாள் ஒன்றில் ஞாயிறும் சந்திரனும் தம்முள் எதிர்நின்று அவற்றுள் ஒன்று மாலைப் பொழுதில், மலையில் ஒளிந்தது போல், தன்னைப் போன்ற மன்னன் கரிகால் பெருவளத்தான், மார்புக்கு முன் என எண்ணி வீசியவேல் முதுகிலும் புண் உண்டாக்கியதை எண்ணி, வீரத்திறல் மிக்க சேரமான் பெருஞ்சேரலாதன் தன் வீரத்திற்கு இழுக்கு உண்டாகிவிட்டதென்ற காரணம் கருதி நாணம் கொண்டு வடக்கிருந்து உயிர்துறக்க முனைந்தான் என்று சொல்லப்பட்டிருப்பதில், கரிகால் பெருவளத்தானுடன் சேரமான் பெருஞ்சேரலாதன் வீரத்தின் காரணமாகப் போரிட்டு மார்பில் பாய்ந்த வேல் முதுகில் பாய்ந்தமையால் நாணம் கொண்டுள்ளான் என்பதால் கரிகாற் பெருவளத்தான் எதிர்நிலையானான் (புறம்.65.6-11).

**1.3.2.4.** கடல்வழி வந்த யவனர், பிற நாட்டவர், கரிகாற் பெருவளத்தான் போன்றவர்கள் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனுக்கு, அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

### 1.3.3. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்:

**1.3.3.0.** சங்க காலத்தில் சேரலாதன் என்னும் பெயரில் நால்வர் இருந்துள்ளனர். அவர்களுள் நெடுஞ்சேரலாதன் இரண்டுபேர். அவர்களுள் ஒருவனே இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். மற்றவன் முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்.[16]

சேரலாதன் என்னும் பெயரில் மற்ற இருவர், பெருஞ்சேரலாதன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்போராவர்.[17]

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் சேர மன்னர்களில் புகழ்பெற்றவன். தலைசிறந்த பேரரசன்.[18] இவனது பெற்றோர் தந்தை அந்துவஞ்சேரல்; தாயார் நல்லினி.[19]

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு இரண்டு மனைவியர். ஒருத்தி வேளாவிக்கோமான் பதுமன் மகள். மற்றொருத்தி சோழன் மணக்கிள்ளியின் மகள் நற்சோணை.[20]

வேளாவிக்கோமான் பதுமன் மகள் வயிற்றில் பிறந்தவர்கள் (1) களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், (2) ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்.[21] நற்சோணை வயிற்றில் பிறந்தவர்கள் (1) சேரன் செங்குட்டுவன், (2) இளங்கோவடிகள்.[22]

இவன் மாந்தை[23] என்னும் கடற்கரை நகரைத் தலைநகராகக் கொண்டு குட்டநாட்டை 58 ஆண்டுகள் ஆட்சி புரிந்துள்ளான்.[24] இவன் இளமையில் முரஞ்சியூர் முடிநாகராயர்பால் கல்வி பயின்று சிறந்த தமிழறிஞராய் விளங்கியவன். தமிழ்ப் புலவர்களை ஆதரித்துப் போற்றியவன்.[25] இவனது காலம் கி.மு. 250-225 என்பர்.[26]

இமயம்வரை சென்று விற்பொறியைப் பொறித்து மீண்டமையால் இவன் இமயவரம்பன் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றான்.[27] இமயவரம்பன் என்றால், இமயமலையினை வரம்பாக வைத்து ஆண்டவன் என்பது பொருளாகும்.[28]

**1.3.3.1.** உதியஞ்சேரலாதனுக்கும் வேண்மாள் நல்லினிக்கும் மகனாப் பிறந்த இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன் வீரத்தின் காரணமாகப் படையெடுத்துச் சென்று புகழ்மிக்க ஆரிய மன்னர்களைப் போர்க்களத்தில் வென்று அவர்கள் தம்மை வணங்குமாறு செய்தவன் என்பதால், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு ஆரிய மன்னர்கள் எதிர்நிலையாயினர். இதனை கீழ்வரும் பாடல் வரிகளால் அறியலாம்.

> ***"தன்கோல் நிறீஇத் தகைசால் சிறப்பொடு***
> ***பேரிசை மரபின் ஆரியர் வணங்கி"*** (பதிற். இ.ப.பதி.1-7)

> "..........................சினைஇ
>
> ஆரியர் அலறத் தாக்கி, பேர்இசைத்
>
> தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து
>
> வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்" (அகம். 396.15-18)

**1.3.3.2.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், கொள்ளையடித்துச் சிறை பிடிக்க வேண்டும் என்னும் கருத்துடையவனாய் நயம் இல்லாத வன்சொற்களைப் பேசித் தன்னை எதிர்த்த யவனர்களைத் தன் வீரத்தின் காரணமாகப் போரில் வென்று அவர்களைச் சிறைப்படுத்தினான். அத்துடன் அவர்தம் தலையில் நெய்யை வார்த்தும், அவர்தம் கைகளைப் பின்னால் கட்டித் தன் நாட்டுக்கு இழுத்து வந்ததோடு அவர்தம் அணிகளை வயிரக்கற்களுடன் கைப்பற்றிக் கொணர்ந்தவன்[29] என்பதால் யவனர்கள் எதிர்நிலையாயினர் (பதிற்.இ.ப.பதி.8-11).

**1.3.3.3.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் கூர்மையான வாள், எதிர்த்த பகைவரை அறுப்பதால், மார்பு பிளந்து குருதி பெருக்கெடுத்து ஓடி, அக்குருதியால் பெரிய கழியில் இருந்த நீர் குங்குமக் குழம்பாக மாற[30] தன் வீரத்தின் காரணமாகப் பகைவரது அரண்களை அழித்தான் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் குமட்டூர்க் கண்ணனார்,

> "செவ்வாய் எஃகம் விலங்குநர் அறுப்ப
>
> வருநிறந் திறந்த புண்ணுமிழ் குருதியின்
>
> மணிநிற இருங்கழி நீர்நிறம் பெயர்ந்து
>
> மனாலக் கலவை போல அரண்கொன்று" (பதிற்.இ.ப.11.7-10)

எனப் புலப்படுத்தியுள்ளார்.

**1.3.3.3.1.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பகைவரை அழிக்க எண்ணிய நாட்டில் ஓர் யாண்டு வரை தங்கியிருக்கும் ஆற்றல் உடையவன் என்பதோடு, தன் வீரத்தின் காரணமாகத் தங்கியிருக்கும் அக்காலத்தில் பகைவர் அடிபணியாமல் எதிர்த்து வந்ததால் அவர்களின் வலிமையை அழிப்பதற்காகப் பகைவரின் ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்தியுள்ளான் என்பதால் அவனது பகைவர் எதிர்நிலையாயினர்.

"*யாண்டுதலைப் பெயர வேண்டுபுலத்து இறுத்து*

*முனையெரி பரப்பிய ......................*" (பதிற்.இ.ப.15.1-2)

**1.3.3.3.2.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தன் வீரத்தின் காரணமாகப் பகைவரைக் கொன்று, அச்செருக்கால் அகன்ற மார்பை உடையவன் என்பதால் அவனது பகைவர் எதிர்நிலையாயினர்.

"*நெடுமதில் நிலைஞாயில்*

*அம்புடை யார்வயில் உள்ளழித் துண்ட*

*அடாஅ அடுபுகை அட்டுமலர் மார்பன்*" (பதிற்.இ.ப.20.18-20)

**1.3.3.3.3.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், வெற்றி உண்டாகும் முரசு கொண்டு, தன் வலிய வீரத்தின் காரணமாகக் கடல் கடந்து அரபுக்கடல் தீவுகளில் வாழ்ந்த மன்னர்களை வென்று அவரது காவல் மரத்தை வெட்டினான். இமயமலையில் தன் முன்னோரைப் போல வளைந்த வில் பொறியைப் பொறித்தான்[31] என்றமையால் அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இதனை மாமூலனார் என்னும் புலவர்,

"*வலம்படு முரசிற் சேர லாதன்*

*முந்நீர் ஓட்டிக் கடம்பு அறுத்து இமயத்து*

*முன்னோர் மருள வணங்குவில் பொறித்து*" (அகம்.127.3-5)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**1.3.3.3.4.** நிறைந்த பெரும்படையையுடைய நெடுஞ்சேரலாதன், தன் வலிய வீரத்தின் காரணமாகப் பெரிய கடல் கடந்து பகைவர்களை ஓட்டி, கடம்பனை வென்று, அவர்களின் காவல் மரமான கடம்ப மரத்தை வெட்டிச் சாய்த்து, அறுத்து, அதில் முரசு செய்து, அம்முரசு கொண்டு ஓசை எழுப்பினான்[32] என்பதால் கடல்வழி வந்த பகைவர்கள் எதிர்நிலையாயினர். இக்கருத்தைப் புலவர் மாமூலனார்,

*"சால்பெருந் தானைச் சேர லாதன்*

*மால்கடல் ஓட்டி, கடம்புஅறுத்து, இயற்றிய"* (அகம்.347.3-4)

என்ற பாடல் வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

**1.3.3.4.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தன் வலியவீரத்தின் காரணமாக ஆரியர் நெருங்கி வாழும் இமயமலை, தெற்கில் உள்ள குமரிமுனை ஆகிய இரண்டிற்கும் இடைப்பட்டநாட்டில், செருக்கினால் தம்மை உயர்த்திக் கூறிக்கொண்ட மன்னரின் வீரம் கெடும்படி போரிட்டு வென்றான் என்றமையால், பிற மன்னர்கள் எதிர்நிலையாயினர்.

*"ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்*

*தென்னங் குமரியொடு ஆயிடை*

*மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே!"* (பதிற்.இ.ப.11.23-25)

**1.3.3.5.** பலபோர்களில் போரிட்டு வெற்றி கண்ட வீரர்களையுடைய மன்னரெல்லாம், தன் வலிய வீரத்தின் காரணமாகத் தன்னிடம் தோற்றுத் தலைவணங்கி நிற்குமாறு செய்து, அம்மன்னரின் காவல் மரத்தை வெட்டிச் சாய்த்த மிக்க சினமுடையவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்று சொல்லப்பட்டமையால் பகை மன்னர்கள் எதிர்நிலையாயினர்.

*"வயவர் வீழ வாளரின் மயக்கி*

*இடங்கவர் கடும்பின் அரசுதலை பனிப்பக்*

*கடம்புமுதல் தடிந்த கடுஞ்சின வேந்தே!"* (பதிற்.இ.ப.12.1-3)

**1.3.3.6.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தன்னுணர்வு காரணமாக வெட்சி, கரந்தை முதலிய போரைச் செய்ய வல்ல தும்பைப் பகைவருடன் வஞ்சனையின்றி நேருக்கு நேர் போரிட்டு, போராற்றல் மிக்க அவர்தம் பெருமையை அழித்து வென்றவன். ஆகையால், வெட்சி, கரந்தை முதலிய போரைச் செய்யவல்ல தும்பைப் பகைவர் எதிர்நிலையாயினர்.

"*அமர்கடந்து மலைந்த தும்பைப் பகைவர்*
*போர்பீடு அழித்த .......................*" (பதிற்.இ.ப.14.8-9)

**1.3.3.7.** போரை விரும்பும் வலிமையுடைய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தனது வல்லமைமிக்க ஆற்றல் காரணமாக, இயமனே சினம் கொண்டு வந்தாலும் அவனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்பவன் என்றதால் இயமன் எதிர்நிலையாயினன்.

"*.................செருப்புகல் முன்ப*
*கூற்று வெகுண்டு வரினுமாற்றும் ஆற்றலையே*" (பதிற்.இ.ப.14.9-10)

**1.3.3.8.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், 'மாந்தை' என்ற தன்நகரின் மனை முற்றத்தில் இருந்தபொழுது, பகைவராகிய வடநாட்டவர் அடிமைப்படுத்தப்பட்டதன் காரணமாகப் பணிந்து, அணிகலன்களையும் பொன்னால் செய்த பாவைகளையும், வயிர மணிகள் முதலியவற்றையும் திறைப்பொருளாகத் தந்தனர். அவற்றைச் சேரலாதன் ஆம்பல் என்னும் எண்ணளவு இடம் நிறையக்குவித்து அக்காலத்தில் அவ்விடத்தே நிலம் உண்ணும்படிக் கைவிட்டுச் சென்றான்[33] என்றமையால், வடநாட்டவர் எதிர்நிலையாயினர்.

"*நல்நகர் மாந்தை முற்றத்து ஒன்னார்*
*பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்*" (அகம்.127.6-7)

**1.3.3.9.** அகநானூற்றில், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், தன் வலிய வீரத்தின் காரணமாகச் சினங்கொண்டு எழுந்து ஆரிய அரசர்கள் அலறும்படி அவர்களைத் தாக்கிப் புகழ்மிக்க இமயமலையில் விற்பொறியைப் பொறித்து, கடுஞ்சினம் உடைய பகை மன்னர்களாகிய ஆரிய அரசர்களைப் பிணித்து வந்த சேரன்[34] என்றுள்ளமையால் ஆரிய அரசர்கள் எதிர்நிலையாயினர் (அகம். 396.15-18).

**1.3.3.10.** ஆரிய மன்னர்கள், யவனர்கள், பிறநாட்டுப் பகைமன்னர்கள், தும்பைப் பகைவர், இயமன், அரபிக்கடல் பகுதியை ஆண்ட மன்னர்கள், வடநாட்டவர், கடலில் ஆட்சி செய்த கடம்பன், பிற ஊர்க்காரர்கள், பகை மன்னர் போன்றவர்கள்

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு, அவனது வீரத்தின், மற்றாரைக் கொள்ளையடித்துச் சிறைபிடித்ததின், வன்சொற்களைப் பேசிப் பகைவர் தன்னை எதிர்த்ததின், தன்னுணர்வின், அவனது வலிமைமிக்க ஆற்றலின், வடநாட்டவர் அடிமைப்படுத்தப்பட்டதின், சினத்தின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

### 1.3.4. பல்யானைச்செல்கெழு குட்டுவன்:

**1.3.4.0.** அந்துவஞ்சேரலுக்கும் நல்லினிக்கும் பிறந்த ஆண் மக்களில் இரண்டாம் மகன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன். இவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குத் தம்பி. செங்குட்டுவனுக்குச் சிறிய தந்தையாவான்.[35]

ஆனைமலைப் பகுதியான உம்பற்காட்டை ஆட்சி செய்தவன்.[36] இவன் ஆண்ட நாட்டின் பகுதி பூழிநாடு எனப்பட்டது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மாந்தை நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டபோது இவன் வஞ்சிநகரைத் தலைநகராக் கொண்டு பூழிநாட்டை 25 ஆண்டுகள் ஆண்டுள்ளான்.[37] இவனது காலம் கி.மு. 250-225 என்பர்.[38]

யானைகளாகிய மேகக்கூட்டத்திடையே இவன் மிகுதியும் தோற்றமளித்ததால் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் எனப்பட்டான். பாலைக் கௌதமனாரால் சிறப்பித்துப் பாடப் பெற்றவன்.[39]

**1.3.4.1.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தம்பியாக விளங்கிய பல்யானைச் செல்கெழு குட்டுவன்[40] தன் வீரத்தின் காரணமாக உம்பற்காட்டுப் பகுதியில் செங்கோல் செலுத்தியதோடு, அங்கிருந்த அகப்பா என்னும் பகைவரின் அரணை (கோட்டையை) அழித்து ஒரு பகல் போதில் தீயிட்டுக் கொளுத்தினவன் என்றதால், பல்யானைச்செல்கெழு குட்டுவனுக்கு, அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் பாலைக் கௌதமனார்,

> ***"இமய வரம்பன் தம்பி அமைவர***
> ***உம்பற் காட்டைத் தன்கோல் நிறீஇ***
> ***அகப்பா எறிந்து பகல்தீ வேட்டு"*** (பதிற்.மூ.ப.பதி.1-3)

*"அண்ணலம் பெருங்கோட் டகப்பா எறிந்த*

*பொன்புனை உழிஞை வெல்போர்க் குட்டுவ"* (பதிற்.மூ.ப.22.26-27)

என்று குறிப்பிட்டுள்ளார்.

**1.3.4.2.** சேரநாட்டை அடுத்து இருந்த கொங்கரின் நாட்டைப் பல்யானைச்செல்கெழு குட்டுவன் தன் வீரத்தின் காரணமாக வென்று தன் கீழ் அடிமைப்படுத்திக் கொண்டவன்.[41] பகைவர்க்கு அச்சத்தை விளைவிக்கும் வேற்படை சிறந்த தோன்றலாகவும் திகழ்ந்துள்ளமையால் கொங்கர்கள் எதிர்நிலையாயினர்.

**"ஆகெழு கொங்கர் நாடகப் படுத்த**

**வேல்கெழு தானை வெருவரு தோன்றல்"** (பதிற்.மூ.ப.22.15-16).

**1.3.4.3.** பல்யானைச்செல்கெழு குட்டுவன் பகைவரிடம் சினம் கொண்டதன் காரணமாக, தான் மறைந்து தோன்றுவதற்கு இடைப்பட்டதாகிய இரவுப் பொழுதாகிய இருளைப் போக்கும் ஞாயிறு ஒரு பக்கமும் சாயாமல் நிற்கும் உச்சிப் பொழுதான நண்பகற் காலத்தில்,

(அ) குறுநரிகள் முழவுபோல ஊளையிட்டுக் கொண்டிருக்க,

(ஆ) வெளிப்பிதுங்கிய கண்களையுடைய கோட்டான்கள் குழறிக் கொண்டிருக்க,

(இ) அக்கோட்டான்களின் குழறு குரலின் தாளத்துக்கு ஏற்ப, பெரிய கண்களையுடைய பேய்மகள் கூத்தாடும் வண்ணம், பகைவரின் மருதநிலங்கள் பாழ்நிலமாகிவிட்டன என்றதால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர் (பதிற்.மூ.ப.22. 30-38).

**1.3.4.4.** பல்யானைச்செல்கெழு குட்டுவனின், வலிய வீரத்தை முன்னமே அறியாத பகை மன்னர், குட்டுவனுடன் பகைத்துப் போரேற்று எதிர்நின்று அவனது அகப்படையும் மூலப்படையும் காணாமல் தூசிப்படையைப் பார்த்த அளவிலேயே அழிந்தவராய்த் தோற்று ஓடினர் என்பதால் பகைமன்னர் எதிர்நிலையாயினர் (பதிற்.மூ.ப.23.15-17).

**1.3.4.5.** பல்யானைச்செல்கெழு குட்டுவன் தன் படைபலத்தின் காரணமாகவும், வீரத்தின் காரணமாகவும் பகைவரின் அரிய அரண்களை அழித்துக் கொண்டு செல்லும் தன் தூசிப் படையினாலும் கடப்பதற்கரிய பகைவரின் கோட்டைக்குள் புகுந்து வெற்றி கொண்ட படைத்தலைவன் என்பதால், பகைவர் எதிர்நிலையாயினர்.

> *"ஆரரண் கடந்த தார்அரும் தகைப்பின்*
> *பீடு கொள்மாலைப் பெரும்படைத் தலைவ"* (பதிற்.மூ.ப.24.4-5)

**1.3.4.6.** பல்யானைச்செல்கெழு குட்டுவனுடன் பகைவர்தம் நாடுகள்,

(1) ஏரால் உழப்படாமல் குதிரைப்படை போய்ப் பொருத அளவில் வயல்கள் அழிந்தன.

(2) யானைப் படைபோய்ப் போரிட்ட வயல்கள் மிக்க வளம் தராது போயின.

(3) காலாட்படை நின்று பொருத மன்றங்கள், கழுதை ஏர்ப் பூட்டிப் பாழாயின.

இப்படி, பல்யானைச்செல்கெழு குட்டுவனின் படை பலத்தாலும் வலிய வீரத்தின் காரணமாகவும் பகைத்தவரின் பெரியநகர் மதில்கள் வாழ்பவர் யாருமின்றிக் கதவுகளும் வைக்கப்படாமல் அழிந்தன. காட்டுத்தீ பரவியதால் காட்டுக்கோழிகள் உலவும் காடுகள் அழிந்து, அரிய வழிகளும் ஆறலைப்போர் தங்கி வழிச் செல்பவரை வருத்தும் அகன்ற பாழ் இடங்களாக அழிந்தன என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர் (பதிற். மூ.ப.25.1-13).

**1.3.4.7.** பல்யானைச்செல்கெழு குட்டுவன், தன் வீரத்தின் காரணமாகப் போரைப் புலப்படுத்த வானம் எங்கும் எதிரொலிக்குமாறு முரசு கொண்டு முழங்கி, தம்முள் ஒரு செயலையே எண்ணித் துணிந்து செய்யும் முப்பக்கமும் கடலை அரணாகக் கொண்ட பாண்டியரும், கிழக்கில் கடலையும் காடுகளையும் அரணாகக் கொண்ட சோழரும், வேளிர் எனப்பட்ட குறுநில மன்னரும் வலிமையற்றவராய் நடுக்கம் அடையும்படி போரிட்டமையால் பாண்டியரும், சோழரும் வேளிர்

எனப்பட்ட குறுநில மன்னரும் எதிர்நிலையாயினர். இச்செய்தியை கீழ்வரும் பாடல் வரியால் அறியலாம்.

"**பணைகெழு வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து**
**கடலவும் காட்டவும் அரண்வலியார் நடுங்க**" (பதிற்.ஏழ.ப.30;30-31)

**1.3.4.8.** உம்பற்காட்டுப் பகுதியை ஆண்ட பாண்டியர், கொங்கர்கள், பகை மன்னர், பகை கொண்ட மருத நில மக்கள், மற்றும் சில பகைவர், முப்பக்கமும் க்டலை அரணாகக் கொண்ட பாண்டியர், கிழக்கில் கடலையும் காடுகளையும் அரணாகக் கொண்ட சோழர், எதிர்த்த வேளிர் எனப்படும் குறுநில மன்னர் போன்றவர்கள் பல்யானைச்செல்கெழு குட்டுவனுக்கு, அவனது வீரத்தின், பகைவரது அரண்களை அழித்ததின், பகைவரிடம் சினம் கொண்டதின், பகைவரது நிலங்களை அழித்ததின், பகைத்தவரது நகரும் காடுகளும் தீவைத்துக் கொளுத்தப்பட்டதின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

## 1.3.5. செல்வக்கடுங்கோ வாழியாதன்:

**1.3.5.0.** வேணாட்டில் அக்காலத்தில் புகழ்பெற்றிருந்த வேளிர் தலைவனின் மகள் பொறையன் பெருந்தேவிக்கும் அந்துவன் சேரல் (அந்துவஞ் சேரலிரும்பொறை) மன்னனுக்கும் பிறந்த மகன் செல்வக்கடுங்கோ வாழியாதன்.[42] இவன், வேள் ஆவிக்கோமான் பதுமன் என்பவனின் இளைய மகளை மனைவியாக மணந்துள்ளான்.[43]

இவனுக்கு, செல்வக்கோ, செல்வக்கோமான், வாழியாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன், சேரமான் சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன், கோ ஆதன் செல்லிரும்பொறை முதலான பெயர்கள் உண்டு.[44]

இவன், பக்கமலைகள் பல சூழ்ந்த பூழிநாட்டு நேரிமலைப் பகுதியை ஆண்டு கொண்டிருந்தான். தன் தந்தைக்குப் பிறகு, கொங்கு நாட்டுக் கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான். அக்காலத்தில் கொங்குநாட்டுக் கருவூர் வஞ்சிநகரம் என்ற பெயருடன் விளங்கிற்று. நறவுப்பட்டினமும் இவனது ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. உன்னமரத்துப் பகைவன் எனப் போற்றப்பட்டவன் இவனே.[45]

இவன், சிக்கற்பள்ளி என்னுமிடத்தில் இறந்து போனதால் சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதன் என்று அழைக்கப்பட்டான். இவன் இருபத்தைந்து ஆண்டுகள் ஆட்சி செய்துள்ளான்.[46] இவனது காலம் கி.மு. 250-225 என்பர்.[47]

**1.3.5.1.** சேரமான் அந்துவஞ்சேரலுக்கும், பொறையன்தேவிக்கும் மகனாகப் பிறந்த செல்வக்கடுங்கோ வாழியாதன், தன் வீரத்தின் காரணமாகத் தன் நாட்டில் உள்ள ஊர்களை ஏற்படுத்தியதோடு, தன் படை பலத்தால் பல போர்களைச் செய்து தன் பகைவரைத் தோற்று ஓடும்படிச் செய்தவன் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர் (பதிற்.ஏ.ப.பதி.2-5).

**1.3.5.2.** வடபுலத்துப் பகைவர்கள் சிலர் அவ்வப்போது வந்து புகுந்து செய்த அழிம்புகளால் சீர்குலைந்த குடிமக்கள் பலர் குட்டநாட்டிலும், பொறை நாட்டிலும் வந்து குடியேறி வருந்தி வாழ்ந்தனர்.

சேரன் வாழியாதன் அவர்கள் வாழ்வதற்கெனப் பல ஊர்களை அமைத்துக் கொடுத்தான். அந்நிலையை ஏற்படுத்திய வடபுலத்துப் பகைவர்கள் வேரோடு கெடும்படி பொருது அழித்தான். இச்செய்தியைப் புலவர் கபிலர்,

> ***"நாடுபதி படுத்து, நண்ணார் ஒட்டி***
> ***வெருவரு தானைகொடு செருப்பல கடந்து"*** (பதிற்.ஏ.ப.பதி.4-5)

என்னும் பாடல்வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

**1.3.5.3.** செல்வக்கடுங்கோ வாழியாதன், தன் வீரத்தின் காரணமாகப் பகைவர்தம் நாட்டுக்கு உழிஞைப் பூச் சூடிச்சென்று கொள்ளையடித்துக் கொள்ளும் பொருள் மிகுதியாகும்படி தன் தமிழ் வீரர்களை மிகுதியாகச் செலுத்தி குன்றுகள் நிலை தளர ஒலிக்கும் இடியேற்றைப் போல் சினங்கொண்டு சென்று ஒரு வளைப்புச் சுற்றிலேயே இரண்டு பேரரசர்களாகிய சோழ பாண்டிய நாட்டுத் தலைவர்களை வென்று அவர்களைப் புறங்கண்ட பேராற்றல் மிக்கவன் என்பதால் இரண்டு பேரரசர்கள் எனப்படும் சோழ பாண்டிய நாட்டுத் தலைவர்கள் எதிர்நிலையாயினர்.

*"சிறியிலை உழிஞைத் தெரியல் சூடிக்*
*கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்துக்*
*குன்றுநிலை தளர்க்கும் உருமிற் சீறி*
*ஒருமுற்று இருவர் ஓட்டிய ஒள்வாள்*
*செருமிகு தானை வெல்போ ரோயே"* (பதிற்.ஏ.ப.63.8-12)

**1.3.5.4.** போரினால் மக்கள், விலங்குகளின் நிணம் (கொழுப்பு) எங்கும் சிதறி விழுந்து காட்சியளிக்கும் பரந்தகளம். கூட்டமாக வந்து பருந்துகள் குருதியை உண்ணும்; தலை வெட்டுதலால் எஞ்சிநிற்கும் குறையுடலானது ஆண்மை மிக்கு ஆடும். தலை குறைந்த பிணத்தோடு பேய் மகள் பார்ப்பவர் வருந்தும்படி அச்சுறுத்த, செல்வக்கடுங்கோ வாழியாதன், தன் வீரத்தின் காரணமாகப் பல போர்களிலும் தன்னை எதிர்த்தவரை வென்று அழித்தவன் என்பதால், எதிர்த்தவர்கள் எதிர்நிலையாயினர் (பதிற்.ஏ.ப.67.8-12).

**1.3.5.5.** செல்வக்கடுங்கோ வாழியாதன், தன் பெரும்படையின் காரணமாகத் தன்னுணர்வு மிக்கவனாய்ப் பகைவரை எறிதலால் சிதைந்த வாள் வீரர்; வேல் வீரர்; பனகவரைத் தாக்கி ஓய்ந்த குதிரைகளைக் கொண்ட போரை விரும்பும் வீரர் ஆகியோர் கொண்ட பெரும்படையுடன் போய், போர்க்களத்தில் பிணங்கள் குவிந்து உயரும்படி பகைவரைக் கொன்றான்.

அதன் பிறகு பகைவரது கொடுங்கோன்மையால், கெட்டுப் போன குடிகளை மீண்டும் வாழும்படி செய்தவன் என்றமையால் பகைவர்கள் எதிர்நிலையாயினர் (பதிற்.ஏ.ப.69.5-10).

**1.3.5.6.** செல்வக்கடுங்கோ வாழியாதன், தன் வீரத்தின் காரணமாக நல்ல பல போர்களை வஞ்சிக்காமல் போரிட்டு அழித்து, பகைவர்தம் ஆற்றலையும் அழித்து, அவர்தம் தலைமையையும் கெடுத்த வெற்றிக்கழல் அணிந்த வீரர்க்குத் தலைவன் என்றதால் பகைவர் எதிர்நிலையாயினர்.

*". . . . . . . நல்லமர் கடந்து மறங்கெடுத்து*
*கடுஞ்சின வேந்தர் செம்மல் தொலைத்த*
*வலம்படு வான்கழல் வயவர் பெரும"* (பதிற்.ஏ.ப.70.9-11).

**1.3.5.7.** பகைவர் சிலர், இரண்டு பேரரசர்கள் எனப்படும் சோழ பாண்டிய நாட்டுத் தலைவர்கள், போரிட்ட வீரர், போர்க்களங்களில் எதிர்த்தவர் போன்றவர்கள் செல்வக்கடுங்கோ வாழியாதனுக்கு, அவனது வீரத்தின், படைபலத்தின், வடபுலத்துப் பகை மன்னர்களால் சீர்குலைந்த குடிமக்களுக்குப் பாதுகாப்புக் கொடுத்ததின், சினத்தின், சோழ, பாண்டிய மன்னர்களின் படைத்தளபதிகளை வென்றதின், பெரும்படை மற்றும் தன்னுணர்வின், பகைவரது கொடுங்கோன்மையால் கெட்டுப் போன குடிமக்களை வாழவைத்தமை ஆகிய காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

## 1.3.6. மாந்தரம் பொறையன் கடுங்கோ:

**1.3.6.0.** பொறைநாடு என்பது தற்போதுள்ள மலையாள நாட்டின் ஒரு பகுதியாக இருந்துள்ளது. இப்பொறை நாட்டில் குறும்பர் நாட்டுப்பகுதியில் மாந்தரம் என்றொரு மலைக்குன்றும் அதைச் சார்ந்து மாந்தரம் என்றொரு நகரமும் இருந்துள்ளது.[48] மாந்தரம் என்னும் நகரைத் தலைநகராகக் கொண்டு சில வேந்தர்கள் ஆண்டுள்ளனர். இவர்கள் பொறையர் மரபினராதலின் மாந்தரம் பொறையன் என்று அழைக்கலாயினர்.[49]

இவர்கள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் காலத்திற்கு முன்பிருந்தே சேர நாட்டை ஆண்டு வந்த தொன்மை உடையவர்.[50] மாந்தரஞ் சேரர்களுள் மிகப் பழையோன் மாந்தரம் பொறையன் கடுங்கோ என்று வரலாற்றறிஞர் கூறுகின்றனர்.[51]

மாந்தரம் என்னும் நகரைத் தலைநகராகக் கொண்டு மாந்தரம் பொறையன் கடுங்கோ ஆண்டுள்ளான்.[52] இவனது காலம் கி.மு. 250-225 என்பர்.[53]

**1.3.6.1.** மாந்தரம் பொறையன் கடுங்கோ தன் வீரத்தின் காரணமாகப் பகைவரால் தடுத்து நிறுத்துவதற்கரிய படையை உடைய எத்தகைய பகைவரையும் போரிட்டு வெல்லும் ஆற்றலுடையவன் என்பதால், பகைவர்கள் எதிர்நிலையாயினர்.

> "*நிறையருந் தானை வெல்போர் மாந்தரம்*
> *பொறையன் கடுங்கோ* ..............." (அகம். 142.4-5)

**1.3.6.2.** பகைவர் பலர், மாந்தரம் பொறையன் கடுங்கோவிற்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

## 1.3.7. சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ:

**1.3.7.0.** இவன் செல்வக்கடுங்கோ வாழியாதனின் தம்பியாவான். சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறையின் இளைய மனைவிக்குப் பிறந்தவன். செல்வக்கடுங்கோ வாழியாதன் இறந்தபோது அவன் மகனான பெருஞ்சேரல் இரும்பொறை சிறுவனாக இருந்தான். அதனால் செல்வக்கடுங்கோவின் சகோதரனான பெருங்கடுங்கோ ஆட்சி செய்து வந்தான்.[54]

பெருஞ்சேரல் இரும்பொறைக்கு ஆட்சிப் பொறுப்பேற்கும் வயது வந்தபின் பெருங்கடுங்கோ ஆட்சிப் பொறுப்பில் இருந்து விலகி கவி பாடுவதில் காலங்கழித்து வந்தான்.[55] எனவே, பெருங்கடுங்கோ என்னும் பெயரே பின்னாளில் பாலை பாடிய பெருங்கடுங்கோ (கலித்தொகை - பாலைக் கலி பாடியமையால்) என்றும் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்றும் வழங்கலாயிற்று.[56]

இவன் வஞ்சி நகரைத் தலைநகராகக் கொண்டு சில காலம் ஆண்டுள்ளான்.[57] வஞ்சி நகர் என்பது தண்பொருநை ஆறு பாயும் விறல்வஞ்சி. இப்போதுள்ள தாராபுரம் வஞ்சி என்னும் பெயர் பெற்றுள்ளது.[58] இவனது காலம் கி.மு. 250-225 என்பர்.[59]

**1.3.7.1.** பாடல் பாடுவதற்கேற்ற வெற்றி கொண்ட மன்னன் பெருங்கடுங்கோ, ஆன்பொருநை ஆறு பாயும் கருவூரில், தன் வீரத்தின் காரணமாகப் பகைவரின் அரணை வென்று அழித்து, தன்னை வலிமையுடன் எதிர்த்தவர் புறமுதுகு காட்டி ஓடுவதைக் காணப்பெற்றவன் என்றதால், பகைவரும் எதிர்த்தவரும் எதிர்நிலைப்பாத்திரமாயினர். இச்செய்தியினைப் பேய்மகள் இளவெயினி,

> ***"தண்பொருநைப் புனல்பாயும்***
> ***விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்***
> ***பாடல்சான்ற விறல்வேந் தனும்மே***
> ***வெப்புடைய அரண் கடந்து***

**நுப்புறுவர் புறம்பெற்றிசினே**

**புறம்பெற்ற வயவேந்தன்"** (புறம். 11.5-10)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.3.7.2.** பகைவர், எதிர்த்தவர் போன்றவர்கள் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவிற்கு, அவனது வீரத்தின், பகைவரது அரணை வென்று அழித்ததின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

## 1.3.8. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்:

**1.3.8.0.** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு இரண்டு மனைவியர்.[60] மூத்த மனைவி, வேளாவிக் கோமான் மகள் பதுமன் தேவி. இளைய மனைவி, சோழன் மணக்கிள்ளி மகள் நற்சோணை.[61]

இவருள் மூத்த மனைவி வேளாவிக்கோமான் மகள் பதுமன்தேவி வயிற்றில் பிறந்த மூத்த மகன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல். செங்குட்டுவனது மாற்றாந்தாயின் மகன். செங்குட்டுவனது அண்ணன்.[62] நெடுஞ்சேரலாதன் இறப்பால் சீர்குலைந்த சேரர் குடியை மீண்டும் சிறப்படையச் செய்தவன்.[63]

இவன் நேரிமலைத் தலைவன்.[64] குன்ற நாட்டிலிருந்து பூழிநாட்டைக் கடந்து, குட்டநாடு புகுந்து முடிசூடும் பொறுப்பை ஏற்றவன்.[65] இவனுக்கு வானவரம்பன் என்னும் சிறப்புப் பெயருண்டு.[66] இவன் இருபத்தைந்து ஆண்டுகள் அரசாண்டுள்ளான்.[67] இவனது காலம் கி.மு. 225-200 என்பர்.[68]

களங்காய்க் கண்ணியும் நாரால் முடியும் செய்து தலையில் அணிந்திருந்தமையால் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் எனப்பட்டான்.[69] இவன் மனைவி அருந்ததி போன்ற கற்புநலம் வாய்ந்தவள்.[70] அறக்கற்பினள்.[71] இவனைக் காப்பியாற்றுக் காப்பியனார் சிறப்பித்துப் பாடியுள்ளார்.[72]

**1.3.8.1.** களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், நாடு பிடிக்கும் ஆசை காரணமாக, முறைமையால் உண்டாகிய சிறப்புடன், பூழிநாட்டின் மீது படையெடுத்துச் சென்று தன் நாட்டுடன் அதனைச் சேர்த்துக் கொண்டவன்[73]

என்பதால் பூழிநாட்டவர் எதிர்நிலையாயினர். இதனைக் காப்பியாற்றுக் காப்பியனார்,

> *"ஊழின் ஆகிய உயர்பெருஞ் சிறப்பின்*
> *பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ"* (பதிற்.நா.ப.பதி.5-6)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**1.3.8.2.** களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், தன் வீரத்தின் காரணமாக, உருண்டு விளங்கும் பூக்களையுடைய கடம்பமரம் உடைய கடம்பனைப் பெருவாயில் என்னுமிடத்தில் இருந்தவனான - நன்னன் என்பவனது நிலையான போர் ஆற்றல் முற்றும் அழித்து வென்றவன்[74] என்றதால், நன்னன் என்பவன் எதிர்நிலையாயினன்.

> *"உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை*
> *நிலைச் செரு வின்ஆற் றலைஅ றுத்தவன்"*

(பதிற்.நா.ப.பதி.7-8; பதிற்.நா.ப.40.14-16; அகம்.199.19-23)

**1.3.8.3.** களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், நாடு பிடிக்கும் ஆசை காரணமாக, நெடுமிடல் அஞ்சி என்பவன் இறந்ததால், பெரிய மலைபோல் யானைப் படைகொண்டுபோய் நெடுமிடல் அஞ்சியின் நாட்டு விளைபுலங்கள் கெடும்படி தங்கி, நாரைகள் வயல்நீருக்குள் படிந்து மீன்களைக் கவர்ந்து உண்ணும், தப்பாத நெல்விளைச்சலையுடைய நாட்டைத் தன் நாட்டுடன் சேர்த்துக் கொன்டான் என்பதால், நெடுமிடல் அஞ்சி எதிர்நிலையாயினன் (பதிற்.நா.ப.32.9-14).

**1.3.8.4.** கார்காலத்தில் இடிக்கும் இடிபோல முரசுகளும், வெல்வதற்கரிய அரணாகக் காலாட்படையினையும் பெற்றிருந்த களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் மீது பகைவர் வெற்றி கொள்ள எண்ணினர். ஆயின் அவனது வலிமையும் படைபலமும் காரணமாகக் கருதி, பகைவர் போரிட எண்ணாது அஞ்சிப் புறங்காட்டி ஓடி ஒளிந்து கொள்வர் என்பதால் பகைவர் எதிர்நிலையாயினர் (பதிற்.நா.ப.33.10-12).

**1.3.8.5.** முரசு முழங்கும் பெரிய போர்க்களத்தில், படைகளால் ஆரவாரம் உண்டாகத் தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகை மன்னர் தம் வலிமை முழுதும்

அழியும்படி போரிட்டு எதிர்நின்று வெல்லும் ஆற்றலும் வலிமையும் உடைய களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் தன் நாட்டைப் பாதுகாக்கும் தன்மையால் அவனது வலிமை அறிந்து பகைவர் அவனுடன் போரிடுவதைக் கைவிட்டு நீங்குவர் என்றதால் பகைவர் எதிர்நிலையாயினர் (பதிற். நா.ப.34.10-12).

**1.3.8.6.** களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல், தன்னுடன் வெற்றிவளம் சிறந்த மன எழுச்சியுடன் போரில் சிறந்த வலிமை பொருந்திய வீரர்களுடன் கூடிச் சேர்ந்து புதுமுறைகளைக் கையாண்டு பகைவர் செய்த போர்களை எல்லாம் தன்னுணர்வு காரணமாக வஞ்சிக்காமல் போரிட்டு வென்றவன் என்பதால், பகைவர் எதிர்நிலையாயினர் (பதிற்.நா.ப.36.3-4).

**1.3.8.7.** களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், பெரிய வீரக்கழல் அணிந்தபடிப் போய், தன்னுணர்வு காரணமாகப் பகைவரின் மதிலை அழித்து, அப்பகை மன்னரின் சீரிய வீரர்களைப் பிடித்துக் கொணர்ந்தவன் என்பதால் பகை மன்னரும் பகை மன்னரின் வீரர்களும் எதிர்நிலையாயினர்.

> "................. ***மாக்கழல் புனைந்து***
> ***மன்னெயில் எறிந்து மறவர்த் தழீஇ***" (பதிற்.நா.ப.37.8-9)

**1.3.8.8.** சேரநாட்டுக்கு உரிமை அற்றவராய் இருந்தும் மன்னர் சிலர் சேரமன்னராய்க் கூறிக் கொண்டு சேரநாட்டின் சில பகுதிகளை ஆண்டு வந்தனர். அத்தகைய பகை மன்னர் வந்து போரிட்டபோது, களங்காய்க் கண்ணிநார்முடிச்சேரல், தன்னை இழிவுபடுத்தல் காரணமாக எதிர்த்துப் போரிட்ட அவரைத் திரும்பவும் ஒருமுறை போர் தொடுக்காத வண்ணம் தோல்வியடையச் செய்து அவர்களை வென்று, புறங்காட்டி ஓடச் செய்தவன் என்பதால், சேர மன்னர் எனக் கூறிப் போரிட்ட பகைவர் எதிர்நிலையாயினர்.

> "***ஒன்னார் தேயப் பூமலைந் துரைஇ***
> ***வெண்டோடு நிரைஇய வேந்துடை அருஞ்சமம்***
> ***கொன்றுபுறம் பெற்று*** ............." (பதிற். நா.ப.40.9-11)

**1.3.8.9.** பூழிநாட்டவர், நன்னன், நெடுமிடல் அஞ்சி, பகைவர், பகை மன்னர்,

பகை மன்னரது வீரர்கள், சேரமன்னர் எனக் கூறிப் போரிட்ட பகைவர் போன்றவர்கள் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கு, அவனது நாடுபிடிக்கும் ஆசை, வீரத்தின், விளை நிலங்கள் பலவற்றைக் கெடுத்துத் தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டதின், அவனது வலிமை மற்றும் படைபலம், வீரர்களுடன் சேர்ந்து புதுமுறைகளைக் கையாண்டு போரிட்டதின், தன்னுணர்வின், பகை மன்னரின் வீரர்களைப் பிடித்துக் கொணர்ந்ததின், இழிவுபடுத்தியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

### 1.3.9. சேரன் செங்குட்டுவன்:

**1.3.9.0.** இமயவரம்பன் நெஞ்சேரலாதனுக்கும் அவனது இரண்டாவது மனைவி சோழன் மணக்கிள்ளி மகள் நற்சோணை என்பவளுக்கும் பிறந்தவன் சேரன் செங்குட்டுவன்.[75]

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் இறந்த பிறகு செங்குட்டுவனே சேரநாட்டு மன்னனாக முடிசூடினான்.[76] இவனது உடன் பிறந்த தம்பி சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள் ஆவார்.[77]

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலும் அவனது தம்பி ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் இவனது தமையன்மார் ஆவர்.[78] கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனப்படுபவனும் சிலப்பதிகாரத்தில் காணப்படும் சேரன் செங்குட்டுவனும் இவனே.[79] சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன் என்று புறநானூறு இவனைக் குறிப்பிடுகிறது.[80]

இவன் குடநாட்டு மாந்தை நகரில் இருந்து கொண்டு ஆட்சி செய்தான். அத்துடன் குட்டநாட்டுக் கிழக்குப் பகுதியையும் பூழிநாட்டையும் தன்னகத்தே கொண்ட பகுதியில் இருந்து ஆண்டுள்ளான். முசிறி இவன் காலத்தில் சிறந்த துறைமுகப்பட்டினமாக விளங்கியது. இவன் சேரநாட்டுக் கெல்லாம் பெருவேந்தனாக விளங்கினான்.[81]

இவன் மனைவி வேண்மாள் சோழர் குடிப்பெண். சிறந்த அழகியாகத் திகழ்ந்தவள்.[82] இவனது காலம் கி.மு. 225-200 என்பர்.[83]

**1.3.9.1.** சேரன் செங்குட்டுவன், தன்னுணர்வு காரணமாகக் கடவுள் தன்மை பெற்ற பத்தினியாம் கண்ணகிக்குச் சிலை சமைப்பதற்குரிய கல்லைக் கொள்ள இமயமலை செல்ல எண்ணியவாறு, காட்டுவழியில் அம்பைப் போன்று விரைவாய்ச் சென்று எதிர்ப்பட்ட கனகன், விசயன் போன்ற ஆரிய மன்னரைப் போரில் வீழ்த்திப் புகழ்மிக்க கங்கையில் அவன் கொணர்ந்த கல்லை நீராட்டினான்[84] என்பதால், கனகன், விசயன் போன்றோர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் பரணர்,

"***கடவுள் பத்தினிக் கற்கோள் வேண்டிக்***
***கான்நவில் கானம் கணையில் போகி***
***ஆரிய அண்ணலை வீட்டிய பேரிசை***
***இன்பல் அருவிக் கங்கை மண்ணி***" (பதிற்.ஐந்.ப.பதி.4-7)

என்னும் பாடல்வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.3.9.2.** செங்குட்டுவன் நிகழ்த்திய பெரும்போர்களில் ஒன்று வடவேந்தருடனும் யவனருடனும் செய்த மேலைக் கடற்போர்.

செங்குட்டுவனை, நிலப்போரில் வெல்ல இயலாமல் தோற்றோடிய வடநாட்டு வேந்தர் சிலர், மேலை நாட்டு யவனச் சிற்றரசர் சிலருடன் கூடி கடல் வழியாகப் பெரும் படை திரட்டி வந்து சேரரைத் தாக்க முயன்றனர்.

அதனை ஒற்றர்களால் அறிந்த செங்குட்வன், வில்லவன் கோதை, அழும்பில் வேள் முதலிய படைத்தலைவர்ளையும் அமைச்சர்களையும் தருவித்துக் கடற்போர் செய்தவற்கான விற்படையும், வேல்படையும், வாள்படையும் கொண்ட கப்பற்படையைத் தயார் செய்யுமாறு பணித்தான். தேர்ப்படையும், புரவிப்படையும் அறுகை என்ற மன்னன் தலைமையில் கரைப் பகுதிகளைக் காத்து நின்றன.

செங்குட்டுவன், படைக்கலங்கள் ஏற்றப்பட்ட தனது கப்பற்படையைக் கருங்கடலிடையே செலுத்திப் பகைவரது கப்பல்களைச் சென்று வளைத்தான். பெரும்போர் மூண்டது. பகைவர் கடுமையாகப் போரிட்டனர். எனினும் செங்குட்டுனது வீரத்தின்முன் ஆற்றாது தோல்வியுற்றனர். பலர் மடிந்தனர். எஞ்சியோர் சிறைப்பட்டனர். அவர்கள் கலங்களில் கொணர்ந்த பொருள்களை

எல்லாம் சேர வீரர்கள் கைப்பற்றினர் என்றமையால் சேரன் செங்குட்டுவனுக்கு வடவேந்தர் கனகனும், விசயனும், யவனச் சிற்றரசரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**1.3.9.3.** சேரன் செங்குட்டுவன், வில்லாற்றலுடையவருடன் இடும்பாவனத்தில் தங்கியிருந்தபொழுது, தன் வலிமை மிக்க வீரத்தின் காரணமாக, புலியைப் போன்ற இடும்பாவனத்து வீரர்கள் விழும்படி வென்றவன் என்பதால், இடும்பாவனத்து வீரர்கள் எதிர்நிலையாயினர்.

> "*மாறா வல்வில் இடும்பில் புறத்திறுத்து*
> *உறுபுலி அன்ன வயவர் வீழ்*" (பதிற்.ஐந்.ப.பதி.9-10).

**1.3.9.4.** பழையன் என்பவன் பாண்டி நாட்டு மோகூர் என்னும் பகுதியைக் குறுநிலமன்னனாய் ஆண்டு வந்தான். சேரன் செங்குட்டுவன், தன் வீரத்தின் காரணமாக மோகூர் மக்களைக் காத்து வந்த பழையனின் காவல்மரமான வேப்ப மரத்னத வெட்டி வீழ்த்தியதோடு பழையனையும் தோற்கடித்தான்.[85] அதன் பிறகு மங்கல அணியின்றி இருந்த மோகூர் மகளிரின் நறுமணம் மிக்க கூந்தலைக் களைந்து, அம்மயிரால் கயிறு திரித்து, அக்கயிற்றினைக் கொண்டு யானைகளை வண்டிகளில் எருதுகளாகப் பூட்டி, அவன் வெட்டிய காவல் மரத்தைத் தலைநகருக்கு இழுத்துச் சென்றான் என்றமையால் பழையனும் அவனது நாட்டு மகளிரும் எதிர்நிலையாயினர். இச்செய்தி கீழ்வரும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது.

> "*பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்*
> . . . . . . . . . . . . . . . .
> *குஞ்சர ஒழுகை பூட்டி*" (பதிற்.ஐந்.ப.பதி.13-17)

> "*அரண்கள் தாவுநீஇ அணங்கு நிகழ்ந்தன்ன*
> *மோகூர் மன்னன் முரசங் கொண்டு*
> *நெடுமொழி பணித்தவன் வேம்பு முதல் தடிந்து*
> *முரசுசெய முரற்சி, களிறு பல பூட்டி*
> *ஒழுகை உய்த்தோய் . . . . . .*" (பதிற்.ஐந்.ப.44.13-17)

**1.3.9.5.** சேரன் செங்குட்டுவன், தன் வலிய வீரத்தின் காரணமாக ஆற்றலும் இடைவிடாத போரினையும் கொண்ட சோழரின் அரசுரிமைக்கு உரியவர்களான ஒன்பது மன்னரும் இறந்து விழும்படி அவர்களை நேரிவாயில் என்ற இடத்தில் நிகழ்ந்த போரில் வென்றான்.

அத்துடன் நேரிவாயிலில் தங்கியிருந்து, அச்சோழர் குடிக்குரியவர் செய்யும் போரைத் தொடர்ந்து செய்து, சோழரின் தலைவனையும் அவர்தம் ஆற்றலையும் அழித்தான் என்று சொல்லப்பட்டமையால் சோழ நாட்டுக் குறுநில மன்னர் ஒன்பதின்மரும் அவர்தம் தலைவனும் எதிர்நிலையாயினர் (பதிற்.ஐந்.ப.பதி.17-22).

**1.3.9.6.** சேரன் செங்குட்டுவன், தன்னுணர்வு காரணமாகக் கெடுதல் இல்லாத அரிய படைப்பெருக்கத்துடன் கடலும் பின்னிடும்படிச் சென்று, கடலிடத்திருந்த பகைவரையும் தோற்றோடச் செய்தான்[66] என்றதால், கடலிடத்திருந்த பகைவர் எதிர்நிலையாயினர்.

> ***"கெடலருந் தானையொடு***
>
> . . . . . . . . . . . . . . . . .
>
> ***கடல் பிறக்கு ஓட்டிய செங்குட் டுவனை"*** (பதிற்.ஐந்.ப.பதி.21-23).

**1.3.9.7.** சேரன் செங்குட்டுவன், நண்பன் அறுகையின் பொருட்டு, நட்புநிலை காரணமாகச் சோழ மன்னரும் குறுநில மன்னருமாகச் செருக்கிவந்த மோகூர்ப் பழையனின் படைக்கூட்டம் திரிந்து அழியுமாறு தாக்கினான் என்றமையால், மோகூர்ப் பழையனின் படைக்கூட்டம் எனப்படும் சோழநாட்டு ஒன்பது குறுநில மன்னரும் எதிர்நிலையாயினர்.

> ***"வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து***
>
> ***மொய்வளம் செருக்கி மொசிந்து வருமோகூர்***
>
> ***வலம்படு குழூஉநிலை அதிர மண்டி"*** (பதிற்.ஐந்.ப.49.7-9).

**1.3.9.8.** சேரன் செங்குட்டுவன், கடல் போன்ற படையை உடையவன். அஞ்சாமையுடன் போர் செய்வதில் வல்லவன். வானைப் பிளந்து வன்மையுடன்

எழும் மேகம் போல், பகைத்து, வலிமையுடன் பாசறையைத் தான் வேண்டும் இடங்களில் அமைப்பவன்.

தன்னுடன் போர் செய்யும் பகையை நில எல்லைக்குள் காணாதவன். அதனால், பெருகி எழும்சினம் கொண்டு, தன் வலிய வீரத்தின் காரணமாகப் போர் ஆற்றும் வன்மை கொண்டு, கடலின் நடுவே பகைவர் வாழும் தீவைச் சூழ்ந்து அவர்க்கு அரணாக இருந்த கடல் வலிமை கெட (பிறக்கிடும்படி) அக்கடற் பகையைப் போக்கிய செங்குட்டுவன் என்றமையால், கடற்பகைவரும் பிற பகைவரும் எதிர்நிலையாயினர் (அகம். 212.12-20).

**1.3.9.9.** சேரன் செங்குட்டுவன், தன் வலிய வீரத்தின் காரணமாகக் கடலில் படையெடுத்துச் சென்று குறும்பரை வெற்றி கண்டான். அதன்பின் மற்றவர் அக்கடலில் கலம் செலுத்த இயலாதவாறு உரிமை இழந்தனர்.

இவ்வாறு செங்குட்டுவனது ஆணை கடலில் சென்றதால், மற்றவர் கலம் செலுத்தவில்லை. இதனால், சேரன் செங்குட்டுவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனப்பட்டான் என்றமையால், குறும்பரும் மற்றவரும் எதிர்நிலையாயினர். இதனைப் புலவர் மாறோகத்து நப்பசலையார்,

> "***சினம்மிகு தானை வானவன் குடகடல்***
> ***பொலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்***
> ***பிறகலம் செல்கலாது அனையேம்*** ....." (புறம். 126. 14-16)

என்னும் பாடல் வரிகளில் கூறியுள்ளார்.

**1.3.9.10.** சேரன் செங்குட்டுவன், தன் வீரத்தின் காரணமாகப் பகைவரைக் கொன்று, அதனால் வெற்றி கண்ட வீரர்களின் முழக்கத்தைக் கேட்டு வண்டாழங் குருகின் கூட்டம் அஞ்சுவதற்கு இடமாக விளங்கியது மாந்தை என்னும் குட்டுவனது நகரம் என்றதால், பகைவர் எதிர்நிலையாயினர் (குறுந்.34.3-6).

**1.3.9.11.** வடநாட்டுக் கனக விசயர், யவனச் சிற்றரசர், இடும்பாவனத்து வீரர்கள், பழையன், பழையனது நாட்டு மகளிர், சோழ நாட்டுக் குறுநிலமன்னர் ஒன்பதின்மர்

மற்றும் அவர்தம் தலைவன், கடற்பகைவர், மோகூர்ப் பழையனின் படைக்கூட்டம் எனப்படும் சோழ நாட்டுக் குறுநில மன்னர் ஒன்பதின்மர், கடலில் காணப்பட்ட பிற பகைவர், குறும்பர் அவரைச் சார்ந்த மற்றவர் போன்றவர்கள் சேரன் செங்குட்டுவனுக்கு அவனது தன்னுணர்வின், கண்ணகிக்குச் சிலை சமைப்பதற்குரிய கல்லை இமயமலையிலிருந்து எடுத்துவர எண்ணியதின், கப்பற்படையைக் கருங்கடலில் செலுத்திப் பகைவருடன் போரிட்டதின், மாற்றரசரின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்தியதின், மாற்றரசர்தம் மகளிரின் கூந்தலைக் களைந்தமையின், சினத்தின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

## 1.3.10. பெருஞ்சேரல் இரும்பொறை:

**1.3.10.0.** செல்வக்கடுங்கோ வாழியாதனுக்கும் வேளாவிக் கோமான் பதுமன் என்பவனின் இளைய மகளுக்கும் பிறந்தவனே பெருஞ்சேரல் இரும்பொறை.[87]

இவன், அதிகமான் நெடுமிடல் அஞ்சியின் மகனான அதிகமான் நெடுமான் அஞ்சியுடன் போர் செய்து தகடூர்க் கோட்டையை வென்றவன் என்பதால் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்று அழைக்கப்பட்டான்.[88]

செங்குட்டுவனுக்குத் தாயாதி (பங்காளி) அண்ணன் முறையினன்.[89] தொடக்கக் காலத்தில் இவன் நாட்டுக்கு அண்மையிலிருந்த பூழிநாடும் இவன் பொறுப்பில் இருந்தது.[90] கொங்குக் கருவூரைத் தலைநகராகக் கொண்டு சேரநாட்டை ஆண்டவன்.[91]

மையூர்கிழான் எனப்படும் மையூர் (மைசூர்) மக்களின் தலைவனது மகள் அந்துவஞ்செள்ளை இவனது மனைவி ஆவாள்.[92] அரிசில்கிழார் என்னும் புலவரை அமைச்சராகக் கொண்டவன்.[93] இவன் 17 ஆண்டுகள் அரசாண்டுள்ளான்.[94] இவனது காலம் கி.மு. 225-200 என்பர்.[95]

**1.3.10.1.** பெருஞ்சேரல் இரும்பொறை, தன் வலிய வீரத்தின் காரணமாக மலைகள் சூழ்ந்த கொல்லி மலை நாட்டினது உச்சியில் நிகழ்ந்தபோரில் வேற்படை வீரர்கள் நிறைந்த படையைப் பெற்றிருந்த அதிகமானுடன், சோழ பாண்டியர்[96] என்ற

இருபெரு மன்னரையும் ஒருசேர வெற்றி கண்டவன். அத்துடன் அவர்தம் முரசுகளையும் குடைகளையும் கவர்ந்து, சிறப்புடைய போர்க்களத்தில் கள வேள்வியைச் செய்தவன் என்பதால், அதிகமானும் சோழ பாண்டியர் என்ற இருபெரு மன்னரும் எதிர்நிலையாயினர் (பதிற்.எ.ப.பதி.3-7).

**1.3.10.2.** பெருஞ்சேரல் இரும்பொறை, நாடு பிடிக்கும் ஆசை காரணமாகப் பகையரசரின் மனைவியர் இரங்கி வருந்தும்படி அதிகமானின் வலிமையைத் திரும்பவும் அழித்து, தகடூர்க் கோட்டையை முற்றி அதையும் கைக்கொண்டான் [97] என்பதால், அதிகமானும் பகையரசரின் மனைவியரும் எதிர்நிலையாயினர். இதனை புலவர் அரிசில்கிழார்,

> "*தூகன்தீர் மகளிர் இரங்கத் துப்பறுத்துத்*
> *தகடூர் எறிந்து நொச்சி தந்தெய்திய*
> *அருந்திறல் ஒள்ளிசைப் பெருஞ்சேர லிரும்பொறை*"
>
> (பதிற்.எ.ப.பதி.8-10)

என்று கூறியுள்ளார்.

**1.3.10.3.** கழுவுள் என்னும் ஆரியர் தலைவன் மற்ற மன்னருடன் கூடிப் பெருஞ்சேரல் இரும்பொறை இடம் பெரும்பகை கொண்டிருந்தான். தன்னைச் சார்ந்த ஆயர், போர்செய்வதைக் கைவிட்டுக் கன்றுடன் ஆட்களையும் சேர மன்னர்க்குத் தந்தனர் என்பதை அறிந்த கழுவுள் பகற் போதில் போய்ச் சேரனைக் காணாமல் இரவில் போனாலும் ஏதம் உண்டாகும் என்று அஞ்சி, விடியற்காலையில் தயிர் கடைய மத்தில் கயிறு இடாத நேரத்தில் போய்க் கண்டபோது, பெருஞ்சேரல் இரும்பொறை, அவர்கள் தந்த திறைப் பொருளைப் பெற்றுக் கொண்டு, அவர்களைப் போரிட்டுக் கொல்லாது மீண்டான் என்பதால், கழுவுள் என்னும் ஆயர்தலைவனும் மற்ற மன்னர் எனப்பட்ட (14 வேளிர் தலைவர்கள்) வரும் எதிர்நிலையாயினர் (பதிற்.எ.ப.71,14-17).

**1.3.10.4.** பெருஞ்சேரல் இரும்பொறை, தன் வீரத்தின் காரணமாகப் பகை மன்னர் தம்மில் கூடி, யானைகளைக் கொண்டும் வாள் கொண்டும் வந்தபோது, வேல், வாள் ஆகியவற்றை ஏந்திச் சென்று பகைவர் படை தாறுமாறாக ஓடும்படி

அவர்தம் போர்நிலையைக் கொன்றழித்தான் என்பதால், பகை மன்னர் எதிர்நிலையாயினர்.

> *"களிறுடைப் பெருஞ்சமம் ததைய எஃகுயர்த்து*
> *ஒளிறுவாள் மன்னர் துதைநிலை கொன்று"* (பதிற்.எ.ப.76.1-2).

**1.3.10.5.** பெருஞ்சேரல் இரும்பொறை, தன் வலிமையின் காரணமாகவும் வீரத்தின் காரணமாகவும் பகைவரின் படையில் இருந்த வீரர்கள் அழிந்தோடவும், பகை மன்னர் போர்க்களத்தில் விழுந்து இறக்குமாறு அவர்களைக் கொன்றும் தன் தோளை உயர்த்திக் கையை வீசித் துணங்கை என்னும் கூத்தாடியுள்ளான். அச்சமயத்தில் புண்பட்டு விழுந்தவர் மீது உருண்டோடிய சக்கரத்தையுடைய தேர்களும் குதிரைகளும் காலாட்களும் எண்ணிட இயலாதவை என்றதால் பகை மன்னரும் அவர்தம் வீரரும் எதிர்நிலையாயினர் (பதிற்.எ.ப.77.3-7).

**1.3.10.6.** பல்வளத்துடன், காட்டில் அமைந்து பல ஊர்களைப் பெற்றதும் மறத்தையே விரும்பிய போராற்றல் மிக்க ஆடவர்கள் காத்துப் பேணுவதும் காக்கும் விற்படை உடையதுமான தகடூர்க் கோட்டையைப் பெருஞ்சேரல் இரும்பொறை, தன் வலிய வீரத்தின் காரணமாக அழித்தவன்[98] என்பதால், தகடூர்க் கோட்டையைக் கொண்டு ஆண்டு வந்த அதிகமான் எதிர்நிலையானான்.

> *"பல்பய னிலைஇய கடறுடை வைப்பின்*
> *வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்*
> *வில்பயில் இறும்பில் தகடூர் நூறி"* (பதிற்.எ.ப.78.7-9).

**1.3.10.7.** பெருஞ்சேரல் இரும்பொறையின் விருப்பப்படி, ஒழுகுதற்கு இசையாமல், மாறுபட்டுத் தங்கள் நாட்டிலேயே இருந்து, எதிர்த்த அயல்மன்னரை, அவர் ஏறிவந்த யானையின் பிடரி புல்லென்னும்படி அவர் ஏற்றுப் போரிட்ட வில், நாணை அறுத்து, தன்னை மதியாமை காரணமாக, அவரைக் கொன்று வெற்றிமேம்பட்டவன்.

அதனைக் கண்டும் தன் ஆட்சிக்குக் கீழ்ப்பட்டு வாராத போராற்றல் மிக்க மன்னரின் முழங்கும் முரசின் கண்ணைக் கிழித்து, அவர்தம் பட்டத்து யானை கதறுமாறு கொம்பை அறுத்தவன் என்றமையால், அயல்மன்னரும், கீழ்ப்பட்டு வாராத பிறபகை மன்னரும் எதிர்நிலையாயினர் (பதிற்.எ.பு.79.9-13).

**1.3.10.8.** பெருஞ்சேரல் இரும்பொறை, எழினி திறை செலுத்த மறுத்த போது, போரிட்டுக் கொன்றான். அதனால் கலங்காத செங்கோலும், உலகத்தவர் புகழ்ந்து கூறும் போர்வாளும் தப்பாத சொல்லை உடைய எழினி போரிட்டுப் போர்க்களத்தில் வீழ்ந்தான் என்றதால், எழினி எதிர்நிலையாயினன். இக்கருத்தைப் புலவர் அரிசில் கிழார்,

> "................. ....... *கலங்காச் செங்கோல்*
> *வையகம் புகழ்ந்த வயங்குவினை ஒள்வாள்*
> *பொய்யா எழினி பொருதுகளம் சேர*" (புறம்.230.4-6)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**1.3.10.9.** அதிகமான் மற்றும் சோழ பாண்டியர், பகையரசரின் மனைவியர், கழுவுள் என்னும் ஆயர் தலைவன் மற்றும் பதினான்கு வேளிர்கள், பகை மன்னர், பகை மன்னரது வீரர்கள், அயல்மன்னர் மற்றும் பணிந்து வராத பகை மன்னர், அதிகமானின் மகன் எழினி (பொகுட்டெழினி) போன்றவர்கள், பெருஞ்சேரல் இரும்பொறைக்கு, அவனது வீரத்தின், சோழ பாண்டியர் என்னும் இருபெருமன்னரின் முரசு, குடை போன்றவற்றைக் கவர்ந்து கொண்டதின், நாடு பிடிக்கும் ஆசையின், பகைவரிடம் திறைப் பொருள் பெற வேண்டி எண்ணியதின், வலிமையின், தகடூர்க் கோட்டையை அழித்ததின், அயல்மன்னர் தன்னை மதியாமையின், கீழ்ப்பட்டு வராத மன்னரின் யானைக் கொம்புகளை அறுத்ததின், பிற மன்னர் திறை செலுத்த மறுத்ததின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

### 1.3.11. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்:

**1.3.11.0.** உதியஞ்சேரல் வழிவந்த இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கும், வேளாவிக் கோமான் மகள் பதுமன் தேவிக்கும் பிறந்த இரண்டாவது மகன்

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்குப் பின்னவன். கடல் பிறக்கோட்டிய சேரன் செங்குட்டுவனுக்கும் இளையவன். செங்குட்டுவனுக்குப் பின் சேரநாட்டு அரியணை ஏறியவன்.[99]

இவன் தொடக்கக் காலத்தில் சேரநாட்டுக் கடற்கரையில் இருந்த பந்தர் என்னும் நகர்ப்பகுதியையும், கானலம் பெருந்துறைப் பகுதியையும் அதனை அடுத்திருந்த நன்னாட்டையும் ஆண்டு வந்தான். அதன்பின் அப்பகுதிக்குத் தெற்கிலிருந்த குடநாட்டையும் ஆண்டுள்ளான்.[100] வானவரம்பன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்பன இவனது சிறப்புப் பெயர்கள்.[101]

இவனது தலைநகரம் நறவு என்பதாகும். இவன் பெண்களின் ஆடல் பாடல் அழகில் மூழ்கிக் காலங்கழித்தவன்[102]. இவனது காலம் கி.மு. 200-175 என்பர்.[103]

**1.3.11.1.** வானவரம்பன் எனப்படும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், தன் வலிய வீரத்தின் காரணமாக, மழவரைப் போரில் வெற்றி கொண்டு, அவரது வன்மையைக் குன்றும்படிச் செய்தவன்.[104]

தன்னுடன் மாறுபாடு கொண்டு படையுடன் வந்த மற்ற மன்னர்களைப் (பகை மன்னரைப்) போர்க்களத்தினின்றும் புறங்காட்டி ஓடச்செய்தான் என்பதால், மழவரும் மற்ற பகை மன்னரும் எதிர்நிலையாயினர். இதனைக் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்,

> ***"வான வரம்பன் எனப்பேரினிது விளக்கி***
> ***ஏனை மழவரைச் செருவில் சுருக்கி***
> ***மன்னரை ஓட்டி ............"*** (பதிற்.ஆ.ப.பதி.6-8)

என்ற பாடல் வரிகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.3.11.2.** ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், பகைவரைப் போரிட்டு வென்று அவரது செல்வங்களைக் கொண்டு வருவதற்காகத் தக்க இடத்தில் போய்த் தங்குவான்.

அப்போது, பகை மன்னர், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை வெல்வது அரிது என்று எண்ணி, நாங்கள் கொடுக்கின்ற இலக்கங்களை ஏற்று எமக்கு அருள வேண்டும் என்று தம் நாட்டில் உள்ள அரிய செல்வங்களைத் திறையாகக் கொண்டு வந்து செலுத்திப் பணிவாகப் பேசுவார்கள். அவ்வாறு பணிந்தவரை அருளும் பண்பு ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு இருந்துள்ளது என்பதால், அவனைப் பணியாத பகைமன்னர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் என அறிய முடிகிறது (பதிற்.ஆ.ப.53.1-3).

**1.3.11.3.** ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், நாடு பிடிக்கும் ஆசை காரணமாக, அகன்ற இடம் பொருந்திய நாட்டையுடைய பகை மன்னர் தம் தூசிப்படை கெடுவதால், புலம்பிக் கொண்டிருக்க, பெரிய மலைகளையுடைய அவர்தம் நாடுகளைக் கைப்பற்றி, அவரைத் தன் வீரத்தால் போரிட்டுத் தொலைத்து அவர்தம் சினத்தைத் தணிவிக்கும் ஆண்மையுடையவன் என்றதால், பகை மன்னர்கள் எதிர்நிலையாயினர்.

> ***"............. பெரும அல்கலும்***
> ***நனந்தலை வேந்தர் தாரழிந்து அலற***
> ***நீடுவரை அடுக்கத்த நாடுகைக் கொண்டு***
> ***பொருதுசினந் தணிந்த செருப்புகல் ஆண்மை"*** (பதிற்.ஆ.ப.55.16-19).

**1.3.11.4.** தண்டகாரண்யம் (மகாராட்டிரத்தில் உள்ள நாசிக்) என்ற பகுதியில் வாழ்ந்த ஆரிய மக்கள் சிலர் இவன் நாட்டிலிருந்த ஆட்டுமந்தைகளைக் கவர்ந்து சென்றனர். இவன் தண்டகாரண்யத்தின் மீது படையெடுத்துச் சென்று வென்று அவர்கள் கவர்ந்து சென்ற ஆடுகளை மீட்டுக் கொண்டு வந்தான். அவற்றைத் தன் தொண்டி நகருக்குக் கொண்டு வந்து ஆட்டுக்குரியாருக்குக் கொடுக்க ஏற்பாடு செய்தான் என்பதால், தண்டகாரண்யத்தில் வாழ்ந்த ஆரிய மக்கள் சிலர் எதிர்நிலையாயினர்.

> ***"தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்***
> ***தொண்டியுள் தந்து கொடுப்பித்துப் .........."*** (பதிற்.ஆ.ப.பதி.3-4).

**1.3.11.5.** மழவர் மற்ற பகை மன்னர், திறை செலுத்திப் பணியாத.பகை மன்னர், தூசிப் படையுடன் வந்த பகை மன்னர், தண்டகாரணியத்து வாழ்ந்த ஆரிய மக்கள் சிலர் போன்றவர்கள் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு, அவனது வீரத்தின், பகைவரது செல்வங்களைத் திறைப்பொருளாகக் கொண்டு வருவதின், நாடு பிடிக்கும் ஆசையின், கவர்ந்து சென்ற ஆடுகளை மீட்டுக் கொண்டு வருவதற்காகப் போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

## 1.3.12. இளஞ்சேரல் இரும்பொறை:

**1.3.12.0.** இவன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் தம்பி குட்டுவன் இரும்பொறையின் மகன்,[105] அதாவது செங்குட்டுவனது தாயாதித் (பங்காளி) தமயனின் மகன்.[106] அந்துவஞ்சேரல் வழிவந்தவன்.[107]

தம்பி மகன் ஆதலால், இளஞ்சேரல் இரும்பொறை, சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் மகன் என்றே அழைக்கப்பட்டுள்ளான். குட்டுவன் இரும்பொறை மணந்த அந்துவஞ்செள்ளை இவனது தாய்.[108]

இவனுக்குக் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை என்றும் சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறை என்றும் சிறப்புப் பெயர்கள் உண்டு.[109]

இவனுக்கு அமைச்சனாக இருந்தவர் மையூர் கிழார் எனப்படும் இவனது மாமனாரே யாவார்.[110] இவன் சேரநாட்டின் வடபகுதியைக் கொங்குக் கருவூரைத் (வஞ்சி) தனலநகராகக் கொண்டு 16 ஆண்டுகள் அரசாண்டுள்ளான் எனத் தெரிய வருகிறது.[111] இவனது காலம் கி.மு. 200-175 என்பர்.[112]

**1.3.12.1.** இளஞ்சேரல் இரும்பொறை, தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகைவர் அஞ்சக்கூடிய பெரும்படையுடன் கடுஞ்சினம் கொண்டு போர்க்களம் நோக்கிச் சென்று, இருபெரு மன்னரான பாண்டியரும் சோழரும் விச்சிக்கோமானும் வீழ்ச்சியடையும்படி செய்தான்.[113] காவற்காடும் மலைகளும் உடைய அவர்க்குரிய ஐந்து கோட்டைகளையும் அழித்தான் என்று சொல்லப்பட்டுள்ளமையால், இருபெருமன்னரான் பாண்டியரும் சோழரும் மற்றும் விச்சிக்கோமானும்

எதிர்நிலையாயினர். இக்கருத்தைப் புலவர் பெருங்குன்றூர் கிழார்,

*"வெருவரு தானையொடு வெய்துறச் செய்துசென்று*
*இருபெரு வேந்தரும் விச்சியும் வீழ*
*அருமிளைக் கல்லகத்து ஐந்தெயில் எறிந்து"* (பதிற்.ஒ.ப.பதி.3-5)

என்ற பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.3.12.2.** இளஞ்சேரல் இரும்பொறை, பொத்தியார் என்ற புலவரைக் காத்து வந்த கோப்பெருஞ்சோழனையும் போர்க்கலைகளில் வல்ல பழையன் மாறனையும் அவர்களுக்கு எதிராகக் கொண்ட வஞ்சினம் காரணமாக, வஞ்சினத்தை நிறைவேற்றி அவர்களை வெற்றி கண்டவன்[114] என்பதால், கோப்பெருஞ்சோழனும் பழையன் மாறனும் எதிர்நிலையாயினர்.

*"பொத்தி யாண்ட பெருஞ்சோ ழனையும்*
*வித்தை யாண்ட இளம்பழையன் மாறனையும்*
*வைத்த வஞ்சினம் வாய்ப்ப வென்று"* (பதிற்.ஒ.ப.பதி.6-8).

**1.3.12.3.** இளஞ்சேரல் இரும்பொறை, பகைவர் பலமுறை போரிட்டு அழித்தபோதும் குறையாத தானை வீரரை உடையவன் என்றதால் பகைவர் எதிர்நிலையாயினர்.

*".................. செற்றோர்*
*கொலக்கொலக் குறையாத் தானை"* (பதிற்.ஒ.ப.82.12-13).

**1.3.12.4.** பகைத்தவரின் நாடுகள் கெட்டழியும்படிச் சிதைத்து, அந்நாடுகளிலிருந்து நல்ல அணிகளைக் கவர்ந்து கொண்டுவரும் இளஞ்சேரல் இரும்பொறையின் போராற்றல் மிக்க வீரத்தின் காரணமாக, அவனது சினத்துக்கு இலக்காகி மாறுகொண்ட பகை மன்னரின் பாசறையில் தங்கியிருப்போரது நிலை, மிக்க துன்பம் அளிப்பதாகும் என்றதால் பகை மன்னர் எதிர்நிலையாயினர் (பதிற்.ஒ.ப.83.6-9).

**1.3.12.5.** நல்ல மரங்கள் செறிந்த பல நாடுகளையும் வென்று, அங்கிருந்து பெற்ற வேலைப்பாடமைந்த பேரணிகலன்களையும், தன்னுடன் பொருந்தாது பகைத்த சோழர்களுக்குத் தலைவனான மன்னனையும் என் முன் கொண்டு வருக என்று இளஞ்சேரல் இரும்பொறை தன்படை வீரர்க்கு உரைத்தான்.

அதைக் கேட்டதும் சோழனின் படைவீரர்கள் தோல்விக்கு அறிகுறியாகக் கீழே வேல்களை எறிந்தனர். அவ்வேல்கள், செல்வக்கடுங்கோ வாழியாதன், கபிலருக்கு நன்றா என்ற குன்றின் மீது ஏறி நின்று தரப்பட்ட ஊர்களைக் காட்டிலும் பலவாகும்.

இதனால், சோழர் படையினர் பலர் எனவும், பலராயினும் அவர்களால், சேரனை வெல்ல இயலாது எனவும் அறியலாம் என்றதால், சோழ மன்னனும் அவனது படை வீரர்களும் எதிர்நிலையாயினர் (பதிற்.ஒ.ப.85.1-4; 12-13).

**1.3.12.6.** இளஞ்சேரல் இரும்பொறை, தன் கொடிய ஆற்றல் காரணமாகவும் வலிய வீரத்தின் காரணமாகவும் வெட்டுப்பட்ட உடல்களிலிருந்து செந்நீர் ஒழுகுவதால் புலால் நாற்றம் வீசுமாறு பகைவரைக் கொன்று குவித்தவன் என்றதால் பகைவர்கள் எதிர்நிலையாயினர் (பதிற்.ஒ.ப.86.1-3).

**1.3.12.7.** இளஞ்சேரல் இரும்பொறை எனப்படும் சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை, முரசு முழங்கப் படையெடுத்துச் சென்று, வலியதன் வீரத்தின் காரணமாக அரசர்கள் இறக்கும்படி எதிர்நின்று கொல்கின்ற புகழ் பொருந்திய தலைவன் எனக் கூறப்பட்டதன் வாயிலாக, பகை அரசர்கள் எதிர்நிலையாயினர்.

> "*முரசுஎழுந்து இரங்கும் தானையொடு தலைச்சென்று*
> *அரைசுபடக் கடக்கும் உரைசால் தோன்றல் ....*" (புறம்.211.5-6).

**1.3.12.8.** சோழ பாண்டியர், விச்சிக்கோன், கோப்பெருஞ்சோழன், பழையன் மாறன், பகைவர், பகை மன்னரின் பாசறையில் தங்கியிருப்போர், சோழமன்னன் அவனது படை வீரர்கள், பகையரசர் போன்றவர்கள், இளஞ்சேரல் இரும்பொறைக்கு, அவனது வீரத்தின், சினத்தின், வஞ்சினத்தின், பகைவரின் நாடுகள்

கெட்டழியும்படிச் சிதைத்து அவர்தம் அணிகலன்களைக் கவர்ந்து வந்ததின், படை பலத்தின், ஆற்றலின், புகழின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

## 1.3.13. சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை:

**1.3.13.0.** யானையைப் போல் கூர்மையான பார்வையும் முருகனைப் போன்ற அழகும் உடையவனாக இவன் விளங்கினமையால், யானைக்கண்சேய் என்ற அடைமொழிகளால் அழைக்கப்பெற்றான்.[115]

இவன் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்றும் பொறையன் என்றும் போற்றப்பட்டவன். மாந்தரன் குடியில் தோன்றியவன்.[116]

அந்துவஞ்சேரல் வழிவந்தவன். இளஞ்சேரல் இரும்பொறையின் மகன்.[117] இவனது ஆட்சிக் காலத்தில் சேரநாட்டின் எல்லை தெற்கில் தென்பாண்டி நாடுவரையிலும், கிழக்கில் கொங்கு நாடு முற்றிலும் பரவி இருந்தது.[118] மக்கள் நேசிக்க ஆட்சி செலுத்தியவன்.[119] இவனது தலைநகர் தொண்டி.[120] இவனது காலம் கி.மு. 175-150 என்பர்.[121]

இவனே, கூடலூர் கிழாரைக் கொண்டு ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்தவன். இவன் நோய்வாய்ப்பட்டிருந்த பொழுது, எரிநட்சத்திரம் விழக்கண்ட கூடலூர் கிழார் இவன் இறந்துவிடுவானோ என்று அஞ்சிய வண்ணமே எரிநட்சத்திரம் விழுந்த ஏழாம் நாளே மாந்தரஞ்சேரல் இரும்பொறை இறந்தான் என்பர்.

**1.3.13.1.** சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை பாண்டியனால் சிறைப்படுத்தப்படுவதற்கு முன்பு, அவனால் அழிக்கப்பட்டு, அரசை அடையாது இருந்தவர் அவன் வருகையை எதிர்பார்த்து, அவன் அருள்வதால் மீண்டும் நாடும் அணிகலன்களும் அவனிடம் சென்றவை கிடைக்கலாம் என்று எண்ணியும் மாந்தரஞ்சேரலிரும் பொறையின் வரவை எதிர்ப்பார்க்காது நாட்டைக் கவர்ந்து கொண்ட பகைவர், எடுத்த கொடியுடைய மதிலையும், காடும் அகழியும் முதலான அரண்களையும் இனி நாம் இழந்து விடுவோம் ஏனென்றால் இவன் சினந்து பார்த்தான் என எண்ணியும், அவன் பகைவேந்தர் அவனுக்குப் பணி செய்யத் தொடங்கினர் என்றமையால், பாண்டியனும்[122] பகைவேந்தரும் எதிர்நிலைப்

பாத்திரங்களாக இருந்த போதும் நாட்டை இழக்காமலிருக்கப் பணி செய்துள்ளனர் (புறம். 17.24-33).

**1.3.13.2.** மாந்தரஞ்சேரலிரும்பொறை, யானைப்படையும் குதிரைப்படையும் பெற்றிருந்த வலிய வீரத்தின் காரணமாக, விளங்கில் என்ற நகரத்திற்குப் பகைவரால் துன்பம் உண்டானபோது, போர்க்களத்தைத் தனதாக்கிக் கொண்டு பகைவரால் ஏற்பட்ட துன்பத்தை நீக்கியதால், பகைவர் எதிர்நிலையாயினர்.

> "..............*விளங்கில் விழுமம் கொன்ற*
>
> *களங்கொள் யானைக் கடுமான் பொறைய*" (புறம்.53.4-5).

**1.3.13.3.** பொறையன் எனப்படும் சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பவன் தொண்டி நகரின் தலைவன்; வெற்றி தரும் வேற்படையும் பிறபடையும் கொண்டு பகைவரால் வெல்ல முடியாதவனாய் விளங்கியவன்.

இப்பொறையன், தன் வீரத்தின் காரணமாக, மூவன் என்பவனது வலிமையைக் கெடுத்து, அவனது முள் போன்ற பல்லைப் பிடுங்கித் தொண்டி நகருக்குக் கதவு செய்துள்ளான் என்பதால், மூவன் என்பவனும் பிற பகைவரும் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் பொய்கையார்,

> "........... .........*மூவன்*
>
> *முழுவலி முள்எயிறு அழுத்திய கதவின்*
>
> *கானல்அம் தொண்டிப் பொருநன், வென்வேல்*
>
> *தெறல்அருந் தானைப் பொறையன்*........." (நற்.18.2-5)

என்று புலப்படுத்தியுள்ளார்.

**1.3.13.4.** பகைவரால் கிட்டுவதற்கரிய வலிமை வாய்ந்த வேலையுடைய சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை (சேரன்), தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகைவரின் நாடு பாழாகும்படி அழிப்பதில் வல்லவன் என்றதால் பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்து மதுரைக்கணக்காயனாரின்,

"ஒன்னார் தேஎம் பாழ்பட நூறும்

துன்அருந் துப்பின் வென்வேற் பொறையன்" (அகம்.338.12-13)

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.3.13.5.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பகை வேந்தர், விளங்கில் நகருக்கு ஊறு செய்த பகைவர், மூவன், பகைநாட்டவர் போன்றவர்கள் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறைக்கு பகைவர்தம் நாட்டை அழித்து அவர்தம் அணிகலன்களைக் கவர்ந்ததின் வீரத்தின், போரிட்டுப் பல்லைப் பிடுங்கியதின், பகைவரின் நாட்டை அழிப்பதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

**1.3.14. சேரமான் கோக்கோதை மார்பன்:**

**1.3.14.0.** சேரமான் கோக்கோதை மார்பன் உதியஞ் சேரல் வழி வந்தவன். இவன் வஞ்சியில் முடிசூடி ஆண்டவன்.[123] வலிமையற்ற அரசனாகத் திகழ்ந்தவன்.[124] இவன் காலத்தில்தான் வஞ்சி, கருவூர் என்று பெயர்மாற்றம் பெற்றுள்ளது. இவனது தலைநகர் வஞ்சி எனப்படும் கருவூர்.[125] இவனது காலம் கி.மு. 175-150 என்பர்.[126]

**1.3.14.1.** சேரமான் கோக்கோதை மார்பன், வரி பொருந்திய நெற்றியையும், வாயில் புகும் மதநீரையும் வலிமை விளங்கும் மறத்தன்மை ஆற்றலுடன் பகைவர் படையை அணுகி ஆளைப் பற்றி நிலத்தில் அறைந்து கொல்லும் அச்சம் தரும் ஆண் யானையையும், பெரிய தேரினையும் உடையவன். இவனுக்குச் செல்வம் மிக்க அகன்ற தலைநகரம் கருவூர் என்று சொல்லப்பட்டிருப்பதால் இச்சேரமன்னனுக்குப் பகைவர்படை எதிர்நிலையாயிற்று (அகம்.93.16-21).

**1.3.14.2.** தேரும்யானையும் உடைய பழையன் மாறன், மிக்க தெருக்களையுடைய மதுரையிலேயே மிக்க படையுடன் வேற்றுப் புலத்தில் தங்கியிருந்த கிள்ளிவளவனை நல்ல போரில் சாய்த்தான். அத்துடன் அக்கிள்ளிவளவனின் குதிரைகளையும் ஆண்யானைகளையும் பற்றிக் கொண்டு அப்பகை மன்னனின் ஊரைக் கவர்ந்து கொண்டான். இதனை அறிந்த கோதை மார்பன் என்ற சேரமன்னன் மகிழ்ச்சியடைந்தான் என்றமையால், சேரமான்

கோக்கோதை மார்பனுக்குக் கிள்ளிவளவன் எதிர்நிலையானான் (அகம். 346,18-25).

**1.3.14.3.** பகைவர் பலர், கிள்ளிவளவன் போன்றவர்கள் சேரமான் கோக்கோதை மார்பனுக்கு அவனது படை வலிமையின், பழையன் மாறன் கிள்ளிவளவனின் ஊரைக் கவர்ந்து கொண்டதைக் கண்டு மகிழ்ச்சியடைந்ததின் காரணங்களால் எதிராளிகள்.

### 1.3.15. சேரமான் குட்டுவன் கோதை:

**1.3.15.0.** சேரமன்னர் குடியின் கிளை மரபினர் கோதை என்ற பெயரினர். இவர்கள் குட்டநாட்டில் இருந்துள்ளனர்.[127] சிலப்பதிகாரத்தில் செங்குட்டுவனின் அமைச்சனாக இருந்த வில்லவன் கோதை என்ற அமைச்சனின் வழிவந்தவர்கள் பிற்காலத்தில் குட்டநாட்டுக்கு வேந்தராயினர் எனக் கருதுவர்.[128]

குட்டநாட்டில் கோதையாறு என்ற ஆறும் உள்ளது. கோதைக்குறிச்சி, கோதைச்சேரி போன்ற ஊர்கள் குட்டநாட்டில் இன்றும் உள்ளன. இவை, குட்டநாட்டில் கோதை வம்சத்து மன்னர்கள் ஆண்டனர் என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளன.[129]

சேரமான் குட்டுவன் கோதை, கோதை மார்பனின் மகன்.[130] குட்டநாட்டை ஆண்ட மிகப் பழங்காலத்தவன்.[131] இக்குட்டுவன் கோதையின் படைத்தலைவன் பிட்டங்கொற்றன்.[132]

இவனது தலைநகர், கொங்குக் கருவூர் எனப்படும் வஞ்சிமாநகரமாகும்.[133] இவனது காலம் கி.மு. 150-125 என்பர்.[134]

**1.3.15.1.** சேரமான் குட்டுவன் கோதையின் நாடு, இடையன், தன் ஆட்டு இனத்துடன் நெருங்கிச் செல்லாத புலியுள்ள அகன்ற இடத்தைப் போன்றதாகும். இது சேரமான் குட்டுவன் கோதையின் வீரத்தின் காரணமாக அவனது வலிமையுடன் மாறுபட்டு எழுந்து வஞ்சினம் கூறிய வேந்தர் அவனால் கொல்லப்படுவர் என்பதை உணர்த்தவேயாகும் என்பதால், எதிர்த்த பகைவேந்தர் எதிர்நிலையாயினர்.

குட்டுவன் கோதையோ புலி, அவனை எதிர்த்த பகை வேந்தரோ ஆட்டுடன் கூடிய இடையர். இதனை, கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்,

> *"கடுமான் கோதை துப்பெதிர்ந்து எழுந்த*
> *நெடுமொழி மன்னர் நினைக்கும் காலைப்*
> *பாசிலைத் தொடுத்த உவலைக் கண்ணி*
> *மாகண் உடுக்கை மடிவாய் இடையன்*
> *சிறுதலை ஆயமொடு குறுகல் செல்லாப்*
> *புலிதுஞ்சு வியன்புலத்து அற்றே"* (புறம்.54.8-13)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.3.15.2.** எதிர்த்த பகைவேந்தர், சேரமான் குட்டுவன் கோதைக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரம்.

## 1.3.16. சேரமான் கணைக்காலிரும்பொறை:

**1.3.16.0.** சங்க காலத்தில் சேரநாட்டை ஆண்ட இரும்பொறை மரபு மன்னர்களில் இறுதியானவன் சேரமான் கணைக்காலிரும்பொறை.[135] இவனது தந்தை சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை. இவனது பாட்டன் சேரமான் மாரி வெண்கோ.[136]

இவன், குட்டநாட்டின் தென்பகுதியை ஆண்டுள்ளான்.[137] சோழன் செங்கணானோடு போர் செய்து தோற்றதால் அவனால், குடவாயில் கோட்டத்தில் சிறை வைக்கப்பட்டவன் இவனே. சேரன், சிறைக்காவலரைக் குடிநீர் கேட்டான். சிறைக்காவலர் நெடுநேரம் கழித்து நீரைக் கொண்டு அலட்சியமாக நீட்டினர். சிறைக் காவலரின் அலட்சியத்தைப் பொறுக்காத சேரமான் கணைக்காலிரும்பொறை நீரை அருந்தாமல் உயிர்விட்டான்.[138]

இவன் ஆட்சியில் வஞ்சி தலைநகரமாகச் சிறப்புற்றிருந்தது.[139] இவனது காலம் கி.மு. 100-75 என்பர்.[140]

**1.3.16.1.** சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும் சோழ மன்னன் செங்கணானுக்கும் கழுமலத்தை அடுத்த திருப்போர்ப்புறம் என்ற இடத்தில் போர்

நிகழ்ந்தது. அப்போரில் இரும்பொறை தோற்றான். அதனால் குணவாயிற் கோட்டம் என்னுமிடத்தில் சிறை வைக்கப்பட்டான்.

சிறையில் ஒருநாள் நீர்வேட்கை மிக காவலரை நீர் கேட்டான். பகைவன் செங்கணானின் சிறைக்காவலர்களோ காலம் தாழ்ந்து அசட்டையாக நீரைத் தந்தனர்.

சேரமான் கணைக்காலிரும்பொறை, மன்னர்க்கு மானத்துக்கு மேலானது வேறெதுவும் இல்லை என்னும் கருத்துடையவனாய், பகைவனது காவலர்கள் தந்த நீரை உண்ணாது, அவமானத்தில் குன்றி, தன் உள்ளத்தின் எண்ண ஓட்டங்களை ஒரு பாட்டாக எழுதி வைத்துவிட்டு உயிர் துறந்தான்[141] என்பதால் சோழன் செங்கணானும் அவனது சிறைக் காவலர்களும் எதிர்நிலையாயினர்.

> *"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்*
> *ஆள்அன்று என்று வாளின் தப்பார்*
> *தொடர்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய*
> *கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்*
> *மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்*
> *தாம்இரந்து உண்ணும் அளவை*
> *ஈன்ம ரோஇவ் உலகத் தானே?"* (புறம்.74).

**1.3.16.2.** சோழன் செங்கணான், அவனது சிறைக்காவலர்கள் போன்றவர்கள், சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கு, அவன் போரில் தோற்றுச் சிறை வைக்கப்பட்டாலும், மானத்தைக் காக்க வேண்டி உயிர் துறந்ததன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

**<u>1.3.17. முடிவுகள்:</u>**

1. பகைவர் பலர், சேரமான் அந்துவஞ்சேரலுக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

2. கடல்வழி வந்த யவனர், பிற நாட்டவர், கரிகாற் பெருவளத்தான் போன்றவர்கள் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனுக்கு அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

3. ஆரிய மன்னர்கள், யவனர்கள், பிறநாட்டுப் பகைமன்னர்கள், தும்பைப் பகைவர், இயமன், அரபிக்கடல் பகுதியை ஆண்ட மன்னர்கள், வடநாட்டவர், கடலில் ஆட்சி செய்த கடம்பன், பிற ஊர்க்காரர்கள், பகை மன்னர் போன்றவர்கள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு, அவனது வீரத்தின், மற்றாரைக் கொள்ளையடித்துச் சிறைபிடித்ததின், வன்சொற்களைப் பேசிப் பகைவர் தன்னை எதிர்த்ததின், தன்னுணர்வின், அவனது வல்லமைமிக்க ஆற்றலின், வடநாட்டவர் அடிமைப்படுத்தப்பட்டதின், சினத்தின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

4. உம்பற்காட்டுப் பகுதியை ஆண்ட பாண்டியர், கொங்கர்கள், பகை மன்னர், பகை கொண்ட மருத நில மக்கள், மற்றும் சில பகைவர், முப்பக்கமும் கடலை அரணாகக் கொண்ட பாண்டியர், கிழக்கில் கடலையும் காடுகளையும் அரணாகக் கொண்ட சோழர், எதிர்த்த வேளிர் எனப்படும் குறுநில மன்னர் போன்றவர்கள் பல்யானைச்செல்கெழு குட்டுவனுக்கு அவனது வீரத்தின், பகைவரது அரண்களை அழித்ததின், பகைவரிடம் சினம் கொண்டதின், பகைவரது நிலங்களை அழித்ததின், பகைவரது நகரும் காடுகளும் தீவைத்துக் கொளுத்தப்பட்டதின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

5. பகைவர் சிலர், இரண்டு பேரரசர்கள் எனப்படும் சோழ பாண்டிய நாட்டுத் தலைவர்கள், போரிட்ட வீரர், போர்க்களங்களில் எதிர்த்தவர் போன்றவர்கள் செல்வக்கடுங்கோ வாழியாதனுக்கு அவனது வீரத்தின், படைபலத்தின், வடபுலத்துப் பகை மன்னர்களால் சீர்குலைந்த குடிமக்களுக்குப் பாதுகாப்புக் கொடுத்ததின், சினத்தின், சோழ, பாண்டிய மன்னர்களின் படைத்தளபதிகளை வென்றதின், பெரும்படை மற்றும் தன்னுணர்வின், பகைவரது கொடுங்கோன்மையால் கெட்டுப் போன குடிமக்களை வாழவைத்தமை ஆகிய காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

6. பகைவர் பலர், மாந்தரம் பொறையன் கடுங்கோவிற்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

7. பகைவர், எதிர்த்தவர் போன்றவர்கள் சேரமான் பாலை பாடிய

பெருங்கடுங்கோவிற்கு, அவனது வீரத்தின், பகைவரது அரணை வென்று அழித்ததின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

8. பூழிநாட்டவர், நன்னன், நெடுமிடல் அஞ்சி, பகைவர், பகை மன்னர், பகை மன்னரது வீரர்கள், சேரமன்னர் எனக் கூறிப் போரிட்ட பகைவர் போன்றவர்கள் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கு, அவனது நாடு பிடிக்கும் ஆசையின், வீரத்தின், விளை நிலங்கள் பலவற்றைக் கெடுத்துத் தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டதின், அவனது வலிமை மற்றும் படைபலத்தின், வீரர்களுடன் சேர்ந்து புதுமுறைகளைக் கையாண்டு போரிட்டதின், தன்னுணர்வின், பகை மன்னரின் வீரர்களைப் பிடித்துக் கொணர்ந்ததின், இழிவுப்படுத்தல் ஆகிய காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

9. வடநாட்டுக் கனக விசயர், யவனச் சிற்றரசர், இடும்பாவனத்து வீரர்கள், பழையன், பழையனது நாட்டு மகளிர், சோழ நாட்டுக் குறுநிலமன்னர் ஒன்பதின்மர் மற்றும் அவர்தம் தலைவன், கடற்பகைவர், மோகூர்ப் பழையனின் படைக்கூட்டம் எனப்படும் சோழ நாட்டுக் குறுநில மன்னர் ஒன்பதின்மர், கடலில் காணப்பட்ட பிற பகைவர், குறும்பர் அவரைச் சார்ந்த மற்றவர் போன்றவர்கள் சேரன் செங்குட்டுவனுக்கு, அவனது தன்னுணர்வின், கண்ணகிக்குச் சிலை சமைப்பதற்குரிய கல்லை இமயமலையிலிருந்து எடுத்துவர எண்ணியதின், கப்பற்படையைக் கருங்கடலில் செலத்திப் பகைவருடன் போரிட்டதின், மாற்றரசரின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்தியதின், மாற்றரசர்தம் மகளிரின் கூந்தலைக் களைந்தமையின், சினத்தின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

10. அதிகமான் மற்றும் சோழ பாண்டியர், பகையரசரின் மனைவியர், கழுவுள் என்னும் ஆயர்தலைவன் மற்றும் பதினான்கு வேளிர்கள், பகை மன்னர், பகை மன்னரது வீரர்கள், அயல்மன்னர் மற்றும் பணிந்து வராத பகை மன்னர், அதிகமானின் மகன் எழினி (பொகுட் டெழினி) போன்றவர்கள், பெருஞ்சேரல் இரும்பொறைக்கு, அவனது வீரத்தின், சோழ பாண்டியர் என்னும் இருபெருமன்னரின் முரசு, குடை போன்றவற்றைக் கவர்ந்து கொண்டதின், நாடு

பிடிக்கும் ஆசையின், பகைவரிடம் திறைப் பொருள் பெற வேண்டி எண்ணியதின், வலிமையின், தகடூர்க் கோட்டையை அழித்ததின், அயல்மன்னர் தன்னை மதியாமையின், கீழ்ப்பட்டு வராத மன்னரின் யானைக் கொம்புகளை அறுத்ததின், பிற மன்னர் திறை செலுத்த மறுத்ததின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

11. மழவர், மற்ற பகை மன்னர், திறை செலுத்திப் பணியாத பகை மன்னர், தூசிப் படையுடன் வந்த பகை மன்னர், தண்டகாரணியத்து வாழ்ந்த ஆரிய மக்கள் சிலர் போன்றவர்கள் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு, அவனது வீரத்தின், பகைவரது செல்வங்களைத் திறைப்பொருளாகக் கொண்டு வருவதின், நாடு பிடிக்கும் ஆசையின், கவர்ந்து சென்ற ஆடுகளை மீட்டுக் கொண்டு வருவதற்காகப் போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

12. சோழ பாண்டியர் மற்றும் விச்சிக்கோன், கோப்பெருஞ்சோழன் மற்றும் பழையன் மாறன், பகைவர், பகை மன்னரின் பாசறையில் தங்கியிருப்போர், சோழமன்னன் மற்றும் அவனது படை வீரர்கள், பகையரசர் போன்றவர்கள், இளஞ்சேரல் இரும்பொறைக்கு அவனது வீரத்தின், சினத்தின், வஞ்சினத்தின், பகைவரின் நாடுகள் கெட்டழியும்படிச் சிதைத்து அவர்தம் அணிகலன்களைக் கவர்ந்து வந்ததின், படை பலத்தின், ஆற்றலின், புகழின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

13. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், பகை வேந்தர், விளங்கில் நகருக்கு ஊறு செய்த பகைவர், மூவன், பகைநாட்டவர் போன்றவர்கள் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறைக்கு பகைவர்தம் நாட்டை அழித்து அவர்தம் அணிகலன்களைக் கவர்ந்ததின், வீரத்தின், போரிட்டுப் பல்லைப் பிடுங்கியதின், பகைவரின் நாட்டை அழிப்பதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

14. பகைவர் பலர், கிள்ளிவளவன் போன்றவர்கள் சேரமான் கோக்கோதை மார்பனுக்கு, அவனது படை வலிமையின், பழையன்மாறன் கிள்ளிவளவனின் ஊரைக் கவர்ந்து கொண்டதைக் கண்டு மகிழ்ச்சியடைந்ததின் காரணங்களால் எதிராளிகள்.

15. எதிர்த்த பகைவேந்தர், சேரமான் குட்டுவன் கோதைக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

16. சோழன் செங்கணான், அவனது சிறைக்காவலர்கள் போன்றவர்கள் சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கு, அவன் போரில் தோற்றுச் சிறை வைக்கப்பட்டாலும் மானத்தைக் காக்க வேண்டி உயிர் துறந்ததின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

17. மேற்கண்டவாறு சேரர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றி ஆராய்ந்த பொழுது பதினாறு சேர மன்னருக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள் உள்ளனர்.

இவர்களில் மூவருக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

(1) களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்:

இச்சேரமன்னனுக்கு,

1. நாடு பிடிக்கும் ஆசை
2. வீரம்
3. விளைநிலங்கள் பலவற்றைக் கெடுத்துத்தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டது.
4. வலிமை மற்றும் படைபலம்.
5. வீரர்களுடன் சேர்ந்து புதுமுறைகளைக் கையாண்டு போரிட்டது.
6. தன்னுணர்வு
7. பகைமன்னர்களின் வீரர்களைப் பிடித்துக் கொண்டு வந்தது.
8. இழிவுப்படுத்தல்

போன்ற காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இவற்றுள், நாடு பிடிக்கும் ஆசை அதிகக் காரணமாக இருந்துள்ளது.

(2) சேரன் செங்குட்டுவன்:

இச்சேர மன்னனுக்கு,

1. தன்னுணர்வு
2. கண்ணகிக்குச் சிலை சமைப்பதற்குரிய கல்லை இமயமலையிலிருந்து எடுத்து வர எண்ணியது

3. கப்பற்படையைக் கருங்கடலில் செலுத்திப் பகைவருடன் போரிட்டது
4. மாற்றரசரின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்தியது
5. மாற்றரசர்தம் மகளிரின் கூந்தலைக் களைந்தது
6. சினம்
7. வீரம்

போன்ற காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இவற்றுள், அவனது வீரம் அதிகக் காரணமாக இருந்துள்ளது.

(3) பெருஞ்சேரல் இரும்பொறை:

இச்சேரமன்னனுக்கு,

1. வீரம்
2. சோழ பாண்டியர் என்னும் இருபெரு மன்னரின் முரசு, குடை போன்றவற்றைக் கவர்ந்து கொண்டது.
3. நாடு பிடிக்கும் ஆசை
4. பகைவரிடம் திறைப்பொருள் பெற வேண்டி எண்ணியது
5. வலிமை
6. தகடூர்க் கோட்டையை அழித்தது
7. அயல் மன்னர், தன்னை மதியாதது
8. கீழ்ப்பட்டு வராத மன்னரின் யானைக் கொம்புகளை அறுத்தது
9. பிற மன்னர் திறை செலுத்த மறுத்தது

போன்ற காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இவற்றுள் அவனது வீரம் அதிகக் காரணமாக இருந்துள்ளது.



# அடிக்குறிப்புகள்

1. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, பக். 213, 214.
2. புறநானூறு, இரண்டாம் தொகுதி, ப. 399.
3. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 46.
4. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 192.
5. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 43.
6. மேலது, தொகுதி-1, ப. 215.
   புறநானூறு, ப. 65.
7. புறநானூறு, 2. 12.
8. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, பக். 99, 101.
9. சங்க கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 215.
10. மேலது, ப. 215.
11. மேலது, ப. 216.
12. மேலது, ப. 215.
13. புறநானூறு, 2ஆம் தொகுதி, பாடப்பட்டவர் வரலாறு, ப. 401.
    புறநானூறு, 2.9-11.
14. சங்க கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 43.
15. சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், பக். 394.
16. சங்க காலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப.101.
17. மேலது, ப.101.
18. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப.56.
19. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 111.
20. சங்க கால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 58.
21. மேலது, ப. 58.
22. மேலது, ப. 58.
23. மேலது, பக். 56, 57.
24. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 112.
25. சங்க கால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 57.
26. சங்க கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 192, 54.
27. சங்க கால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 57.
28. சங்க காலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 112.

29. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, பக். 66, 140.
30. சங்க இலக்கியம்-பன்முக நோக்கு, முனைவர், இரா. சந்திரசேகரன், ப. 201.
    புதியநோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, தமிழண்ணல், பக். 145, 146.
31. தமிழக வரலாறு, அ.மு.பரசிவானந்தம், ப. 131.
    சங்க காலம், டாக்டர். கு. முத்துராசன். பக். 394, 395.
32. சங்க இலக்கியம் - பன்முக நோக்கு, முனைவர், இரா. சந்திரசேகரன், பக். 202, 203.
33. சங்க காலம், டாக்டர். கு. முத்துராசன், பக். 256, 257.
34. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 67.
35. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 116.
36. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 219.
37. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 59.
38. சங்க கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
39. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 123.
40. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 88.
41. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப.88.
    சங்ககாலம், டாக்டர் கு. முத்தராசன், ப. 395.
42. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 77.
    சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 161.
43. மேலது, ப. 166.
44. மேலது, ப. 165.
45. மேலது, பக். 161, 162.
46. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 80.
47. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
48-52. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 77.
53. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக், 259, 54.
54, 55. மேலது, தொகுதி-1, ப. 217.
56. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 56.
    சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, பக். 87,88.
57. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 56.
    மேலது, தொகுதி-1, ப. 217.
58. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 206.

59. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
60. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 230.
61. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 111.
62. மேலது, ப. 126.
63. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 77,202.
64. மேலது, ப.202.
65. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 66.
66. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 230.
சங்ககாலத் தமிழகவரலாறு, தொகுதி-1, ப. 130.
67. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 234.
68. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.
69. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 230.
70. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 66.
71, 72. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 131.
73, 74. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, பக்.68, 92.
சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 395.
75. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, பக். 221, 222.
76. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 69.
77. மேலது, ப. 70.
78. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 230.
79. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 133.
80. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 222.
81. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, பக். 134, 135.
82. மேலது, ப. 143.
83. சங்க கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.
84. தமிழக வரலாறு, அமு.பரமசிவானந்தம், பக். 131, 132.
இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 174.
சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், பக். 175, 176.
85. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.க. பிள்ளை. ப.101.
86. நெடுந்தொகைச் செல்வம், டாக்டர் மு. வரதராசன், பக். 172, 173.
87. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 170.
88. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, பக். 235, 236.

89. மேலது, ப. 234.

90. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 51.
சங்ககாலத் தமிழக வரலாறு, ப. 171.

91. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 80.

92, 93. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 177.

94. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 236.
சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 178.

95. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.

96. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, பக். 69, 98, 140, 141.
சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ.தட்சிணாமூர்த்தி, ப.270.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 43.

97,98. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 118.

99. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, பக். 230,231.
சங்ககாலத்தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 147.

100. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 147.

101. மேலது, ப. 150.

102. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 91.

103. மேலது, ப. 90.

104. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப.105.

105. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப.180.
சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 256.

106. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 256.

107. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 91.

108. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 180.

109. சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 256.

110. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 180.

111. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 181.
சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 87.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 233.

112. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 90.

113, 114.

115. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 211.

116. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப.90.

117. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 98.

118, 119. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 90.

சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 213.

120. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 90.

121. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 96.

122. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 72.

சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 398.

123. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப.235.

124. மேலது, தொகுதி-2, ப. 99.

125. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 218, 219.

126. மேலது, ப. 96.

127-129. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 95.

130. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 235.

131. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 96.

132. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 235.

133. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 96.

134. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 140,143.

135. சங்க்கால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 97.

136. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 236.

137. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 97.

138. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 226.

139. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 97.

140. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 182, 183.

141. தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன், ப. 46.



# 1.4. குறுநில மன்னர்

| | | |
|---|---|---|
| 1.4.14.3. | மோகூர் மன்னன் பழையன் 3 | கி.மு. 175-150 |
| 1.4.15. | அன்னி மிஞிலி | கி.மு. 300-275 |
| 1.4.16. | கட்டி | கி.மு. 300-275 |
| 1.4.17. | எழினி | |
| 1.4.17.1. | எழினி 1 | கி.மு. 275-250 |
| 1.4.17.2. | எழினி 2 | கி.மு. 225-200 |
| 1.4.17.3. | எழினி 3 | கி.மு. 175-150 |
| 1.4.17.4 | எழினி 4 | கி.மு. 125-100 |
| 1.4.18. | ஆய் அண்டிரன் | கி.மு. 275-250 |
| 1.4.19. | அள்ளன் | கி.மு. 275-250 |
| 1.4.20. | மலையமான் திருமுடிக்காரி | |
| 1.4.20.1. | மலையமான் திருமுடிக்காரி 1 | கி.மு. 250-225 |
| 1.4.20.2. | மலையமான் திருமுடிக்காரி 2 | கி.மு. 175-150 |
| 1.4.21. | பாரி | கி.மு. 250-225 |
| 1.4.22. | பாரி மகளிர் | கி.மு. 250-225 |
| 1.4.23. | பறம்பு நாட்டு மகளிர் | கி.மு. 250-225 |
| 1.4.24. | வயவன் | கி.மு. 250-225 |
| 1.4.25. | விச்சிக் கோன் | கி.மு. 250-200 |
| 1.4.26. | புல்லி | கி.மு. 175-150 |
| 1.4.27. | அன்னி | கி.மு. 175-150 |
| 1.4.28. | கடலன் | கி.மு. 175-150 |
| 1.4.29. | பண்ணன் | கி.மு. 175-150 |
| 1.4.30. | வடுகர்குலத் தோன்றல் எருமை | கி.மு. 175-150 |
| 1.4.31. | ஆதன் எழினி | கி.மு. 150-125 |
| 1.4.32. | அதியமான் நெடுமான் அஞ்சி | கி.மு. 150-125 |
| 1.4.33. | மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் | கி.மு. 150-125 |
| 1.4.34. | ஏனாதி திருக்கிள்ளி | கி.மு. 150-125 |
| 1.4.35. | கொடுமுடி | கி.மு. 150-125 |
| 1.4.36. | தொண்டையர் | கி.மு. 150-125 |

**1.4.0.** சங்ககாலத்தில் தமிழ்நாட்டைச் சேர சோழ பாண்டிய மன்னர்களேயன்றிக் குறுநில மன்னர்கள் பலரும் ஆங்காங்கே தமிழ்நாட்டின் சில பகுதிகளில் ஆண்டுள்ளனர். இக்குறுநில மன்னர்கள் குறுகிய நிலப்பரப்பைத் தமக்குச் சொந்தமாகக் கொண்டு ஆண்டு வந்தமையால் குறுநில மன்னர்கள் எனப்பட்டனர்.

இவர்கள் குறுநில மன்னர்களேயாயினும் பெருவேந்தர்களுக்குக் கட்டுப்படாமலும் அடங்கி ஆட்சி செய்யாமலும் சுதந்திரமாக ஆண்டு வந்தனர். வேந்தர்களைப் போலவே தமிழ்ப்புலவர்களை ஆதரித்துத் தமிழை வளப்படுத்தியுள்ளனர்.

இவர்களில், கொங்கர்கள் பற்றிப் பல இடங்களில் அறிய முடிகிறது. சோழன் கிள்ளிவளவன் கொங்கரைப் புறமுதுகிட்டு ஓடுமாறு செய்துள்ளான் (புறம். 373) என்பதையும், வேள்ஆய் அண்டிரன் கொங்க நாட்டவரை மேற்குக் கடலில் விரட்டியடித்த நாளில் அவர்கள் தம்மிடமிருந்த வேல்களைப் போட்டுவிட்டு ஓடியிருக்கிறார்கள் (புறம். 130) என்பதையும், கொங்கரின் நாட்டைச் சேரர் பலமுறை வென்று அடிப்படுத்திக் கொண்டார்கள் (பதிற். 22) என்பதையும் சங்கப் பாடல்களில் இருந்து அறிய முடிகிறது.

திதியன் என்ற பெயரில் மூவர் ஆண்டுள்ளனர். நன்னன் என்ற பெயரில் ஐவர் ஆண்டுள்ளனர். எவ்வி என்ற பெயரில் மூவர் ஆண்டுள்ளனர். பாணன் என்ற பெயரில் இருவர் ஆண்டுள்ளனர். பழையன் என்ற பெயரில் மூவர் ஆண்டுள்ளனர். எழினி என்ற பெயரில் நால்வர் ஆண்டுள்ளனர். மலையமான் திருமுடிக்காரி என்ற பெயரில் இருவர் ஆண்டுள்ளனர்.

இப்படி ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் ஒரே பெயரில் வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு பகுதிகளை ஆண்டுள்ளமையால், காலநிலை வேறுபாட்டைக் கருத்தில் கொண்டு, இவர்கள் முறையே முதலாம், இரண்டாம், மூன்றாம், நான்காம் என ஒரே பெயரின் எண்ணிக்கை அடிப்படையில் சுட்டப்பட்டுள்ளனர்.

இரண்டாம் நன்னன், மூன்றாம் நன்னன், நான்காம் நன்னன் எனக் குறிப்பிடப்படும் குறுநில மன்னர், வாட்டாற்று எழினியாதன், மற்றும் சில குறுநில

மன்னர்களுக்கும் எதிர்நிலைப்பாத்திரங்கள் இருப்பதாக அறிய முடியவில்லை. ஏனைய குறுநில மன்னர்கள், மற்ற குறுநில மன்னர்களுடனும் வேந்தர்களுடனும் போரிட்டதால் இவர்களுக்குப் பலர் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர் என்பது ஆய்வின் காரணமாக அறியப்பட்டு இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### 1.4.1. அழிசி:

**1.4.1.0.** அழிசி என்பவன் ஆர்க்காட்டின் தலைவன். சோழர் குடியில் பிறந்தவன். சேந்தன் இவனது மகன். தென்னார்க்காட்டிலிருந்து உறையூர் வரை இருந்த நிலப்பரப்பை ஆண்டவன். பின்னர் ஆண்ட சோழர், இந்த ஆர்க்காட்டை அழிசி, அவனது மகன் சேந்தன் போன்றவர்களிடமிருந்து கைப்பற்றி ஆர் (அத்தி) மாலையைத் தம் அடையாள மாலையாகக் கொண்டுள்ளனர். இவனது காலம் கி.மு. 375-350 என்பர்.[1]

**1.4.1.1.** தேன்மணம் கமழும் மாலையை அணிந்து அழகிய தேரினைக் கொண்ட அழிசி என்பவன், புள்ளிபரந்த வேற்படையை உடைய சேந்தன் என்பவனுக்குத் தந்தையாவான். இவ்வழிசி, தன் வீரத்தின் காரணமாகப் பகைவரது புகுதற்கரிய அரண்களை வென்று, மாரிபோல் வண்மை செய்து மகிழ்ந்தான் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர் (நற். 190.1-4,87.3-4).

**1.4.1.2.** அழிசி மிக்க யானைகளை உடையவன். பல வீரர்களுக்குத் தலைவனாய் விளங்கியவன். அழிசியின் வீரர்கள் மிக்க வீரத்தின் காரணமாகப் பகைவருக்கு நரக வாழ்வைப் போன்று துன்பத்தைத் தருபவர்கள் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இதனைப் புலவர் பரணர்,

> **"ஏந்துகோட்டு யானைச் சேந்தன் தந்தை**
> **அரியல்அம் புகவின் அம்கோட்டு வேட்டை**
> **நிரைய ஒள்வாள் இளையர் பெருமகன்**
> **அழிசி ....................."** (குறுந். 258.4-7).

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.1.3.** பகைவர், அழிசிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிரியாக இருந்துள்ளனர்.

**1.4.2. கொங்கர்கள்:**

**1.4.2.0.** பிற்காலத்தில் கொங்குநாடு என்ற பகுதியில் வாழ்ந்தவர்கள் கொங்கு நாட்டவர் என்றும் கொங்கர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். இந்நாடு சேரநாட்டை அடுத்து இருந்தது. கொங்கர்கள் பசுக்களை மேய்த்து வாழ்ந்தவர். சேர சோழ பாண்டியர்களால் ஒடுக்கப்பட்டவர்கள். மூவேந்தர்க்கும் கொங்கருக்கும் பல போர்கள் நிகழ்ந்துள்ளமையைச் சங்கப் பாடல்களில் காண முடிகிறது.[2]

இரண்டு நூற்றாண்டுகளாக சுமார் கி.மு. 350 முதல் 150 வரை கொங்கரை மூவேந்தரும் அடக்க முயன்றுள்ளனர். ஆனாலும் மூவேந்தரும் கொங்கரை முழுமையாகப் பணிவிக்கவோ அடக்கியாளவோ முடியவில்லை. கொங்கரிடையே நிலவிய குடியாட்சி முறை அவர்கள் வெற்றிக்கு அடிப்படை என்று சங்கச் சான்றுகள் கூறுவதிலிருந்து அறியலாம். இக்கொங்கர்களின் காலம் கி.மு. 350-150 என்பர்.[3]

**1.4.2.1.** வாகை என்னும் இடத்தில் உள்ள போர்க்களத்தில் அதிகன் தனது யானையோடு எதிர்கொண்டு போரிட்டபோது, வாட்படையில் வல்ல கொங்கர்கள், தம் வீரத்தின் காரணமாக அதிகனை அவனது யானையோடு சேர்த்துக் கொன்றுள்ளதால், கொங்கர்க்கு அதிகன் எதிர்நிலைப்பாத்திரமானான். இக்கருத்தைப் புலவர் பரணர்,

> *"..................வாகைப் பறந்தலைப்*
> *......................... அதிகன்*
> *களிறொடு பட்ட ஞான்றை*
> *ஒளிறுவாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே"* (குறுந். 393.3-6)

எனப் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.2.2.** அதிகன், கொங்கருக்கு, அவர்களது வீரத்தின் காரணமாக எதிராளியாக இருந்துள்ளான்.

**1.4.3. திதியன்:**

**1.4.3.0.** சங்கப் பாடல்களில் மூன்று திதியர்களைப் பற்றி அறிய முடிகிறது. அவர்களை முறையே திதியன்-I, திதியன்-II, திதியன்-III எனக் காலநிலையைக்

கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர் குறிப்பிடுவர். இவர்கள் வெவ்வேறு கால நிலையில் வாழ்ந்தவர்களாயினும் ஓரிடத்தில் தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

## 1.4.3.1. திதியன்-I:

**1.4.3.1.0.** இவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனால் புகழ்ந்து பாடப்பட்டவன். பொதிய மலையை ஆண்டவன் இவனே. பொதியில் நாடு பூதப்பாண்டியன் ஆண்ட நாட்டை விட நிலப்பரப்பில் மிகப் பெரியது. இவனது காலம் கி.மு. 350-325 என்பர்.[4]

**1.4.3.1.1.** திதியன் பொதிய மலைக்குரிய செல்வன்; பொன்னால் ஆன தேரினை உடையவன். வில்லாற்றல் மிக்க கையை உடையவன். தன்னுணர்வு காரணமாகப் போரிடச் சென்று எதிர்த்து வந்த பகைவரை வென்றவன்[5] என்றதனால் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்,

> *"....................பொருநர்*
> *செல்சமம் கடந்த வில்கெழு தடக்கைப்*
> *பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன்"* (அகம்.25.18-20)

என்னும் பாடல் வரிகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.4.3.1.2.** பாணர்கள் ஆரவாரம் செய்யும்படி பல அணிகளைத் தந்து தன் நாளோலக்கத்தில் வீற்றிருப்பவன் திதியன். இவன் தன் வீரத்தின் காரணமாக வேளிருடன் போர் செய்வதற்கு வாளை உருவினான் என்பதால் வேளிர் எதிர்நிலையாயினர். இக்கருத்தைப் புலவர் மாமூலனார்,

> *"பாணர் ஆர்ப்ப பல்கலம் உதவி*
> *நாளவை இருந்த நனைமகிழ் திதியன்*
> *வேளிரொடு பொரீஇய கழித்த*
> *வாள்வாய் அன்ன வறுஞ்சுரம் இறந்ததே"* (அகம். 331.11-14)

என்ற பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.3.1.3.** பகைவர், வேளிர் போன்றவர்கள் முதலாம் திதியனுக்கு அவனது தன்னுணர்வின், வீரத்தின் காரணங்களால் எதிராளியாக இருந்துள்ளனர்.

**1.4.3.2. திதியன்-II:**

**1.4.3.2.0.** இரண்டாம் திதியன் எனப்படும் இவன் அழுந்தையிலிருந்து ஆட்சி புரிந்தவன். அன்னி மிஞிலியின் வழக்கை விசாரித்து அவள் வழக்கின் குறையைத் தீர்த்த திதியன் இவனே. இவன் திதியன் வெளியன் என்றும், அழுந்தை திதியன் என்றும் அழைக்கப்பட்டான். இவன் தன் நாள்அவையில் (தர்பார் மண்டபத்தில்) இருந்து கொண்டு யாழிசையில் மிக்க பாணர்களுக்குக் கள்ளும், ஆபரணங்களும் அளித்துள்ளான்.

இவன் தன் கூரிய வாளைக் கொண்டு வேளிர்களோடு போரிட்டுள்ளான். இவனது படைத் தலைவன் குறும்பியன். அன்னி மிஞிலியின் வழக்கைத் தீர்க்க நடுவராக இருந்தவன் இக்குறும்பியனே.

இரண்டாம் திதியனைப் புகழ்ந்து பாடியவர் பரணர். அன்னி மிஞிலி, அழுந்தை திதியன் ஆகிய இருவரும் வாழ்ந்த காலம் கி.மு. 300-275.[6]

**1.4.3.2.1.** அன்னி மிஞிலி என்பவள், கோசர் தன் தந்தையின் கண்ணைப் பிடுங்கிய செய்தியை வீரம் பொருந்தி படையை உடையவனும், வெற்றி பெறுவதில் வல்ல குதிரையையும் உடைய திதியன் என்பவனுக்குச் சொன்னாள்.

திதியன் கோசரைக் கொன்று தீர்த்தான். இதனால் அன்னி மிஞிலி சினம் ஒழிந்து மகிழ்ச்சி அடைந்தாள் என்றமையால் இரண்டாம் திதியனுக்குக் கோசர் எதிர்நிலயாயினர். இக்கருத்து புலவர் பரணர் மூலம்,

> "*மறம்கெழு தானைக் கொற்றம் குறும்பியன்*
> *செருஇயல் நல்மான் திதியற்கு உரைத்து, அவர்*
> *இன்னுயிர் செகுப்பக் கண்டுசினம் மாறிய*
> *அன்னி மிஞிலி* .............." (அகம். 262, 9-12, 196,322)

எனப் புலப்படுத்தப்பட்டுள்ளது.

**1.4.3.2.2.** கோசர் இரண்டாம் திதியனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

**<u>1.4.3.3. திதியன்-III:</u>**

**1.4.3.3.0.** இவன் அன்னியை அழித்தவன். தலையாலங்கானத்தில் நடைபெற்ற போரில் நெடுஞ்செழியனிடம் தோற்ற எழுவருள் (சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன்) ஒருவன் இத்திதியனே. இவனது காலம் கி.மு. 175-150 என்பர்.[7]

**1.4.3.3.1.** திதியனின் காவல் மரம் புன்னை. இவனது புன்னை மரத்தை எவ்வி என்பவன் நன்மொழி கூறி அடக்கவும் அடங்காதவனாக அன்னி என்பவன் வலியச் சென்று வெட்டி வீழ்த்தினான். எனவே, திதியன் தன் காவல் மரத்தை வெட்டியதன் காரணமாக அன்னியுடன் போரிட்டு அவனைக் கொன்றான்[8] என்றமையால் அன்னி எதிர்நிலைப் பாத்திரமானான். இக்கருத்தைப் புலவர் நக்கீரர்,

> "***பயங்கெழு வைப்பின் பல்வேல் எவ்வி***
> ***நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான்***
> ***பொன்இணர் நறுமலர்ப் புன்னை வெஃகி,***
> ***திதியனொடு பொருத அன்னி*** ........"  (அகம். 126.13-16)

என்னும் பாடல் வரிகளில் தெரிவித்துள்ளார்.

**1.4.3.3.2.** அன்னி, மூன்றாம் திதியனுக்கு, அவனது காவல் மரத்தை வெட்டியதன் காரணமாக எதிராளியானான்.

**<u>1.4.4. மிஞிலி:</u>**

**1.4.4.0.** பாரம் என்ற பெயருடைய நாட்டை ஆண்டு வந்த முதலாம் நன்னனின் படைத்தலைவன் மிஞிலி. குறுநில மன்னன். அதிகன், ஆஅய் எயினன் போன்றவர்களை மிஞிலி போரிட்டுக் கொன்றுள்ளான் என்பது பற்றி அறிய முடிகிறது. இந்த மிஞிலியின் தலைநகர் பாழி. இவனது காலம் கி.மு.325-300.[9]

**1.4.4.1.** மிஞிலி என்பவன், தன் அஞ்சாமை காரணமாக நன்னனுக்குரிய பாழி என்ற ஊரில் பலியூட்டுவதற்கு அரிய இயல்புடைய அஞ்சத்தக்க பேய்கள் உண்ணுமாறு நன்னனின் பகைவராகிய வீரர்களைக் கொன்று, அவர்தம் குருதியை

ஊட்டும் இயல்புடையவன் என்பதால் நன்னனின் பகை வீரர்கள் எதிர்நிலையாயினர் (அகம். 142. 8-11).

**1.4.4.2.** நன்னனாலும் வெல்வதற்கரிய பகைவரை வென்று களவேள்வி செய்து, அக்குருதியைப் பேய்க்கு ஊட்டுவேன் என்று வஞ்சினம் கூறிய மிஞிலி என்பவன், தன் வீரத்தின் காரணமாகப் பறவைகளுக்கும் காவலாய் விளங்கிய பெரும்புகழ் உடையவனும் வெள்ளம் போன்ற படையை உடையவனுமாகிய அதிகன் என்பவனைக் கொன்று, வாகை சூடினான்[10] என்றமையால் அதிகன் எதிர்நிலையானான். இதனை, புலவர் பரணர்

> *"..................நன்னன் பாழி*
> *ஊட்டுஅரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்*
> *கூட்டுஎதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி*
> *புள்ளிற்கு ஏமம் ஆகிய பெரும்பெயர்*
> *வெள்ளத் தானை அதிகற்கொன்று உவந்து"* (அகம். 142. 9-13)

எனப் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.4.3.** வெளியன் வேண்மான் மகன் ஆஅய்எயினனை யானையும் தேரும் உடைய நன்னனின் படைத்தலைவன் மிஞிலி என்பவன், பாழி என்னும் ஊரில் நண்பகற் போதில் உண்டான போரில் தன் வீரத்தின் காரணமாக வாட்படை கொண்டு போரிட்டு வீழ்த்தினான்.[11] எனவே, நன்னன் படைத்தலைவன் மிஞிலிக்கு ஆஅய்எயினன் எதிர்நிலையானான் (அகம். 208. 3-14).

**1.4.4.4.** நன்னனுக்குப் பகைவராய் இருந்த வீரர்கள், அதிகன், ஆஅய்எயினன் போன்றோர் மிஞிலிக்கு, அவனது அஞ்சாமையின், வீரத்தின் காரணத்தால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

## 1.4.5. அகுதை:

**1.4.5.0.** பாண்டியருக்கு முன் கூடலை ஆட்சி புரிந்த வேந்தன். கபிலர், கூடலை அதன் பழைய வேந்தனான அகுதையின் பேரால் "மணம் நாறு மார்பின் மறப்போர் அகுதி" (புறம். 347) என்று அழைக்கின்றார். அகுதை பெரும் வள்ளல்.

ஆஅய் எயினன் உடலை நன்னனிடமிருந்து வேள் மகளிருக்குப் பெற்றுத் தந்தவன். இவன் தலைநகர் கூடல் எனப்படும் மதுரை. இவனது காலம் கி.மு. 325-300.[12]

**1.4.5.1.** அகுதை என்பவன் கடலின் நடுவே இருந்த கூடல் என்ற ஊரையுடையவன். இவன் பெருவீரன். பெரிய படையும் இவனுக்கு உரியதாய் இருந்தது. இவனிடம் பொன்னால் ஆன சக்கரப்படை இருந்தது. அதனைக் கொண்டு, முதலாம் எவ்வியின் மார்பில் செலுத்தி அவனைத் தோற்கடித்துக் கொன்றான் என்றமையால், அகுதைக்கு முதலாம் எவ்வி (வேள்எவ்வி) எதிர்நிலையானான். இதனைப் புலவர் வெள்ளெருக்கிலையார்,

> ***"சீர்கெழு நோன்றாள் அகுதைகண் தோன்றிய***
> ***பொன்புனை திகிரியின் பொய்யா கியரோ! .....***
> ...............................
> ***போர்அடு தானை எவ்வி மார்பின்***
> ***எஃகுறு விழுப்புண் பலவென"*** (புறம். 233.3-4, 6-7)

என்னும் பாடல் வரிகளால் குறிப்பிட்டுள்ளார்.

**1.4.5.2.** நன்னன் புனல்நாடு என்னும் நாட்டை, படைத் தலைவன் மிஞிலியோடு எதிர்த்தபோது, அந்நாட்டு மக்களை ஆஅய்எயினன் அஞ்ச வேண்டா எனக் காப்பாற்றினான். எனவே, நன்னன் படைத்தலைவனான மிஞிலியோடு பாழி நகரில் ஆஅய் எயினன் போர் செய்து இறந்து போனான். அவன் உடலை உறவினரிடம் ஒப்படைக்க நன்னன் மறுத்தான். வேள்மகளிர் அழுது அரற்றினார்கள். அகுதை பெரும் படையோடு சென்று ஆஅய்எயினன் உடலை எடுத்து வந்து வேள் மகளிரிடம் ஒப்படைத்து அவர்கள் துன்பத்தைக் களைந்தான் என்றமையால், அகுதைக்கு நன்னனும் அவன் படைத்தலைவன் மிஞிலியும் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இதனைப் பரணர்,

> ***"பெருவிதுப் புற்ற பல்வேல் மகளிர்,***
> ***குருஉப் பைந்தார் அருக்கிய பூசல் ,***
> ***வசைவிடக் கடக்கும் வயங்கு பெருந்தானை***
> ***அகுதை களைதந் தாங்கு ..........."*** (அகம்.208.5-9,13-18)

என்னும் பாடல் வரிகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.4.5.3.** முதலாம் எவ்வி, நன்னன் மற்றும் அவனது படைத்தலைவன் மிஞிலி ஆகியோர் அகுதைக்கு, அவன் சக்கரப் படை வைத்திருந்ததின், ஆஅய்எயினனின் உடலை எடுத்து வந்து வேள்மகளிரிடம் ஒப்படைத்ததின் காரணங்களால் எதிராளியானார்கள்.

## 1.4.6. தழும்பன்:

**1.4.6.0.** தழும்பன் வாய்மொழி தவறாதவன்.[13] பெருநல்லொழுக்கமுடையவன். போரிலே மார்பில் பெரும்புண்ணை ஏற்று அழகிய தழும்பைப் பெற்று அதனால் தழும்பன் என அழைக்கப் பெற்றவன். இவன் பெண் யானை மிதித்தலால் வழுதுணைங்காய் போன்ற தழும்பை உடையவன். இதனால் வழுதுணைத் தழும்பன் என்றும் அழைக்கப்படுவான். தமிழகம் முழுதும் தன்னடிப் படுத்திய முரசினை உடையவன். பாடி வருபவர்க்கு வரையாமல் கொடுக்க நாள் ஓலக்கத்தில் காத்திருப்பவன்.

தூங்கல் ஓரியார் என்ற புலவரால் பாடப்பட்டவன்.[14] இவன் பாண்டியன் நெடியோனின் படைத்தலைவனாக இருந்திருக்கலாம்.[15] யானைகள் வாழும் மலை சூழ்ந்த ஊருக்குரியவன். இவனது ஊர், ஊணூர் என்பது.[16] இவனது காலம் கி.மு. 325-300.[17]

**1.4.6.1.** தழும்பனது ஊர் ஊணூர் என்பது. இவன் வாய்மொழி தவறாதவன். இவனது பெண்ணைக் கேட்டுப் பெற முடியாமல், இவனது பகைவர் இவனுக்குச் சொந்தமான மரங்கள் தோறும் யானைகளைக் கட்டியதால், மரங்கள் வேர் வெளியே தெரியப் பாழாகிவிட்ட நிலை ஏற்பட்டது. இதனால், தழும்பனும் அவனது பகைவரும் போருக்கு ஆயத்தமானார்கள் என்றமையால் தழும்பனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 348.5-10).

**1.4.6.2.** பகைவர், தழும்பனுக்கு, அவனது மரங்களைப் பாழாக்கியதன் காரணமாக எதிராளியானார்கள்.

## 1.4.7. ஆஅய்எயினன்:

**1.4.7.0.** ஆஅய்எயினன் சோழரின் படைத்தவைன். முதலாம் நன்னனின் படைத்தலைன் மிஞிலியோடு போரிட்டு மடிந்தவன். ஆஅய்எயினன் பறவைகளின்

காவலன். இவன் இறந்தபோது, பறவைகள் எல்லாம் அவன்மீது வெயில்படாதபடி வானில் கூடி அவனுக்கு நிழலைச் செய்தன. பகலில் கண் தெரியாத கூகை, பகலில் கண் தெரியாத காரணத்தால், அவனுக்கு நிழல் செய்யச் செல்ல முடியாததால் நாணமுற்றதாம். இவனது காலம் கி.மு. 325-300.[16]

**1.4.7.1.** ஆஅய்எயினன், விரைந்து செல்லும் குதிரையை உடையவனாய், தன் வீரத்தின் காரணமாகப் பெரிய தேரைப் பெற்றிருந்த மிஞிலி என்பவனுடன் போர் செய்து போர்க்களத்தில் இறந்தான் என்றதனால், ஆஅய்எயினனுக்கு மிஞிலி எதிர்நிலையானான்.

> ***"கடும்பரி குதிரை ஆஅய் எயினன்***
> ***நெடுந்தேர் ஞிமிலியொடு பொருது, களம்பட்டென"*** (அகம்.148.7-8).

**1.4.7.2.** ஆஅய்எயினன் என்ற மன்னன் முருகப்பெருமானைப் போன்று ஆற்றலுடன் நின்று போரிடுவதில் வல்லவன். இவ்ஆஅய்எயினன் தன் வீரத்தின் காரணமாகப் பகைவர் பாதுகாக்கும் அரண்களை இடித்துப் பகைவரை வென்ற போர்வன்மை மிக்க மிஞிலி என்பானுடன் போரிட்டான்.

அவ்வாறு போரிட்டபோது, பகைவரின் குருதியால் போர்க்களம் சிவக்குமாறு செய்து இறுதியில் விழுப்புண்பட்டு ஆஅய்எயினன் இறந்தான் என்றமையால், ஆஅய்எயினனுக்கு மிஞிலியும், பகைவர் சிலரும் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் பரணர்,

> ***".................. ஒன்னார்***
> ***ஓம்பு அரண் கடந்த வீங்குபெருந் தானை***
> ***அடுபோர் மிஞிலி செருவிற்கு உடைஇ***
> ***முருகுஉறழ் முன்பொடு பொருதுகளம் சிவப்ப***
> ***ஆஅய் எயினன் வீழ்ந்தென .........."*** (அகம்.181.3-7)

என்னும் பாடல் வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

**1.4.7.3.** நன்னன் புனல்நாட்டவருடன் பொங்கிப் போருக்கு எழுந்தபோது,

புனல் நாட்டவரைக் காப்பாற்ற வேண்டி, ஆஅய் எயினன், யாழிசையுள்ள தெருக்களையுடைய பாழி என்ற நகரில் நின்று அஞ்சாதீர் என்று உரைத்தான். அத்துடன் நில்லாது, தான் சொல்லிய சொல் பிழையாதவாறு பேராற்றல் மிக்க நன்னனின் படைத்தலைவன் மிஞிலி என்பவனுடன் போரிட்டுத் தனது உயிரையும் இழந்தான்[19] என்றமையால் ஆஅய்எயினனுக்கு நன்னனின் படைத்தலைவன் மிஞிலி என்பவன் எதிர்நிலையானான். இதனைப் பரணர்,

> “*யாழ்இசை மறுகின் பாழி ஆங்கண்*
> *அஞ்சல் என்ற ஆஅய் எயினன்*
> *இகல்அடு கற்பின் மிஞிலியொடு தாக்கி*
> *தன்னுயிர் கொடுத்தனன்* ..........” (அகம்.396.3-6)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**1.4.7.4.** நன்னனின் படைத்தலைவன் மிஞிலி மற்றும் பகைவர் போன்றோர் ஆஅய்எயினனுக்கு, அவனது வீரத்தின், அஞ்சாமையின் காரணத்தால் எதிராளியானார்கள்.

## 1.4.8. நன்னன்:

**1.4.8.0.** நன்னன் என்ற பெயரில் பல குறுநில மன்னர்கள் ஆண்டுள்ளனர். இவர்களை முறையே, நன்னன்-1, நன்னன்-2, நன்னன்-3, நன்னன்-4, நன்னன்-5 என்று காலநிலையைக் கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுவர்.

இவர்கள் வெவ்வேறு கால நிலையில் வாழ்ந்தவர்களாயினும் ஓரிடத்தில் தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

**நன்னன்-2:** இவர்களில் சேரமன்னன் உதியஞ்சேரலாதனால், வெல்லப்பட்டவன் (அகம்.258) இரண்டாம் நன்னன். இவன் நன்னன் உதியன் என்று அழைக்கப்பட்டவன். இவனது காலம் கி.மு. 275-250.

**நன்னன்-3:** களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்ற சேரமன்னனால் வெல்லப்பட்டு பெருந்துறை என்ற ஊரில் நிகழ்ந்த போரில் இறந்து போகுமாறு வீழ்த்தப்பட்ட நன்னன் (அகம்.199. பதிற்.40) மூன்றாம் நன்னனாவான். இவனது

காலம் கி.மு. 225-200.[20]

**நன்னன்-4:** மதுரைக்காஞ்சி (614-618) குறிப்பிடும் நன்னன் நான்காம் நன்னனாவான். இவனது காலம் கி.மு. 175-150.[21]

நன்னன் 2,3,4 ஆகியோருக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள் இருந்ததாகக் குறிப்புகள் காணப்படவில்லை.

### 1.4.8.1. நன்னன்-1:

**1.4.8.1.0.** காலத்தால் முந்தியவன் முதலாம் நன்னன். சேர சோழ பாண்டியர்கள், வேந்தர்கள் ஆவதற்கு முன்பு கொண்கான மலைப்பகுதியை இவன் ஆண்டு வந்துள்ளான்.

இவனது நாடு பாரம் என்று அழைக்கப்பட்டது. இவனது படைத்தலைவன் பெயர் மிஞிலி. இவனது தலைநகரம் பாழி. இவனது காலம் கி.மு. 325-300.[22]

**1.4.8.1.1.** நன்னன், தன் வீரத்தின் காரணமாக, அழகிய விரிந்த பிடரியுடன் கூடிய குதிரைப்படையைப் பெற்ற பிண்டன் முதலான பகைவரைப் போரிலே தோற்றோடச் செய்தவன்; அவர்தம் மகளிரின் கூந்தல் கயிற்றால், அப்பகைவர் தம் களிற்றைப் பிணிக்கும் வேலை ஏந்தியவன்[23] என்றமையால் பிண்டன் முதலான பகைவரும் அவர்தம் மகளிரும் எதிர்நிலையாயினர் (நற். 270.7-10).

**1.4.8.1.2.** மிக்க பகையைத் தரும் பிண்டன் என்பவனின் போர் செய்யும் மாறுபாடு அழிய அவன் படையைத் தன் வீரத்தின் காரணமாக வென்றவன்[24] நன்னன் என்றமையால் பிண்டன் என்பான் எதிர்நிலையானான். இச்செய்தியைப் பரணர்,

> "*உறுபகை தருஉம் மொய்ம்மூசு பிண்டன்*
> *முனைமுரண் உடையக் கடந்த வென்வேல்*" (அகம்.152.9-10)

எனப் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.8.1.3.** நீராடும் பொருட்டுச் சென்ற பெண், அந்நீரால் அடித்து வரப்பட்ட பசுங்காயை உண்ட குற்றத்தின் காரணமாக எண்பத்தியொரு ஆண் யானைகளையும், அவளது பொன் பாவையையும் கொண்டு வந்து கொடுத்தாள். அதனை ஏற்றுக் கொள்ளாத நன்னன், அப்பெண்ணைக் கொலை செய்து விட்டான்[25] என்றமையால் நீராடச் சென்ற பெண், அவளது சுற்றத்தார் போன்றோர் எதிர்நிலையானார்கள். இச்செய்தியைப் பரணர்,

> ***"மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை***
> ***புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு***
> ***ஒன்பதிற் றொன்பது களிற்றோடு அவள்நிறை***
> ***பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்***
> ***பெண்கொலை புரிந்த நன்னன்"*** (குறுந். 292. 1-5)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.8.1.4.** நன்னன் என்பவனுக்கு உரிய அரணைப் பகைமன்னன் கைப்பற்ற வந்து, அவனுடன் போரிட்டு அத்தகைய செயல் முடியாத போது, தோற்று ஓடியவன் ஒருவன். மேலும் பகைமன்னன் ஒருவன் திரும்பவும் பெரும்படையுடன் வந்து அந்த அரணை முற்றினான். அதை எதிர்த்து நிற்க மாட்டாமல் அரணில் உள்ளவர் வருந்தினர். அதனை அறிந்த அரணுக்குரிய நன்னன் தன்னுணர்வு காரணமாக விரைந்து வந்து முற்றியிருந்த பகைவரை ஓட்டித்தன் பழைய வீரப் புகழை நிலை நாட்டினான் என்றமையால், பகை மன்னர் எதிர்நிலையாயினர் (அகம்.392.21-27).

**1.4.8.1.5.** நன்னனுடைய காவல் மரமாகிய நறிய மாமரத்தை வெட்டி, அவனது நாட்டிற்குள் கொடிய வஞ்சினம் உடைய கோசர்கள் புகுந்தனர்[26] என்றமையால் கோசர்கள் எதிர்நிலையாயினர். இதனைப் புலவர் பரணர்,

> ***".................. நன்னன்***
> ***நறுமா கொன்று நாட்டில் போக்கிய***
> ***ஒன்றுமொழிக் கோசர் ........."*** (குறுந். 73.2-4)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**1.4.8.1.6.** கொடி கட்டப்பட்ட தேரையும் பொன் அணிகளையும் உடைய நன்னன் புனல்நாடு என்ற நாட்டவர் மீது கொண்ட சினத்தின் காரணமாகப் பொங்கிப் போருக்கு எழுந்தான் என்றமையால் புனல்நாட்டவர் எதிர்நிலையாயினர்.

> "..................**கொடித் தேர்ப்**
>
> **பொலம்பூண் நன்னன் புன்னாடு கடிந்தென**" (அகம். 396.1-2).

**1.4.8.1.7.** பிண்டன், பிண்டனது மகளிர், பகைவர் மற்றும் பகை மன்னர், நீராடச் சென்று மாங்கனி உண்ட பெண் மற்றும் அவளது சுற்றத்தார், கோசர், புனல் நாட்டவர் போன்றோர் முதலாம் நன்னனுக்கு, அவனது வீரத்தின், பெண் கொலை புரிந்ததின், தன்னுணர்வின், காவல் மரத்தை வெட்டி வஞ்சினம் உடைய கோசர் புகுந்ததின், சினத்தின் காரணங்களால் எதிராளியாக இருந்துள்ளார்கள்.

**1.4.8.2. நன்னன்-5:**

**1..4.8.2.0.** ஐந்தாம் நன்னன் எனப்படுபவன் கொண்கானத்தை ஆட்சி புரிந்த நன்னன் மரபில் வந்தவன். அதனைச் சுட்டிக் காட்ட 'நன்னன் சேய் நன்னன்' என்று அழைக்கப்பட்டவன். பழங்காலத்து நன்னர்கள் கொண்கானத்து ஏழில் குன்றப் பகுதியை ஆட்சி செய்தவர்கள். இவனோ, திருவண்ணாமலையை அடுத்த பல்குன்றக் கோட்டத்தைச் சேர்ந்த செங்கம் என்று தற்போது அழைக்கப்படும் செங்கண்மாவை ஆட்சி புரிந்தவன்.[27]

இவன் ஆண்ட நவிரமலை இக்காலத்தில் திரிசூலகிரி, பர்வதமலை என வழங்குகிறது. இது திருவண்ணாமலையை அடுத்து உள்ளது. இவன் மலைபடுகடாமின் தலைவன். இவனது தலைநகரம் செங்கண்மா (செங்கம்). இவனது காலம் கி.மு. 100-75.[28]

**1.4.8.2.1.** செங்கண் மாத்துவேள் நன்னன் சேய் நன்னன் எனப்படும் நன்னன் வேண்மான், பகைவர் நாடுகள் தொலைவில் உள்ளவையேயாயினும், அப்பகைவர் நாட்டில் போய், நாடு பிடிக்கும் ஆசை காரணமாக அவர்தம் தூசிப் படையை வென்று கொன்று குவித்து, மேலும் அணி வகுத்து நிற்கும் யானைப் படையையும் வென்று, அதனால் கைப்பற்றிக் கொண்டவைகளைத் தனக்காகப் போரிட்ட

வேற்கலையில் வல்ல வீரர்க்கு நாடும் ஊரும் முதலியவற்றைத் தந்து காப்பவன். அவ்வாறு நாடும் ஊரும் பெற்ற நன்னன் வேண்மானின் தொன்று தொட்டு வந்த பழங்குடி மறவர்தம் தோற்றத்தை யான் கூறுவேன் என்று இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் தெரிவித்திருப்பதால் பகைவர் எதிர்நிலையாயினர். இதனை இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார்,

> **"இகந்தன ஆயினும் தெவ்வர் தேஎம்**
> **நுகம்படக் கடந்து நூழி லாட்டி**
> **புரைத்தோல் வரைப்பின் வேல்நிழல் புலவோர்க்குக்**
> **கொடைக்கடன் இறுத்தஅவன் தொல்லோர் வரவும்"** (மலை.86-89)

என்னும் பாடல் வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

**1.4.8.2.2.** நன்னன் வேண்மான், தன் ஏவலை ஏற்காத பகைவருடன் போரிட்டு வெற்றி பெற்றான். இவ்வெற்றியைக் கண்டு அவனது பகைவர் ஆரவாரித்தனர். எனவே, பகைவரது ஆரவாரத்தைப் பொறுத்துக் கொள்ளாமல் மீண்டும் அப்பகைவரிடமே போய்ப் போரிட்டு உயிரைக் கொடுத்தனர் நன்னன் வேண்மானின் நாணம் மிக்க மறவர்.

இவ்வாறு உயிரை விட்டவர்களுக்காகப் புகழ்பொறித்து அழியாத வண்ணம் நடப்பட்ட நடுகற்கள் புறங்காட்டி ஓடுபவரை இகழும் வகையில் அமைந்தன என்றமையால், நன்னன் வேண்மானுக்கு அவனது ஏவலை ஏற்காத வீரர்கள் எதிர்நிலையாயினர்.

> **"ஒன்னாத் தெவ்வர் உலைவுஇடத்து ஆர்த்தென**
> **நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்**
> **செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட**
> **கல்ஏசு கவலை எண்ணு மிகப்பலவே"** (மலை.386-389)

**1.4.8.2.3.** நன்னன் வேண்மாணின் வீரர்கள் போகும் வழிகளில் உயிரைத் தந்து புகழ்பெற்ற வீரரின் பெயரும் பீடும் எழுதப்பட்டு மரநிழலில் நடப்பட்ட தெய்வத்தன்மையுடைய மறக்கல் இருக்கும்.

இவ்வாறு நன்னன் வேண்மானின் காடுகள் மேற்குறிப்பிட்ட மறக்கல்லைப் பெற்றுள்ள நிலையில், பகைவர் அத்தகைய காடுகளைப் பெறாமைக்காக இகழும்நிலை பெறுவர். எனவே, நன்னனுடன் பொருந்தாது அவன் ஆணையை மறுத்து, பகைவர் மனத்தால் நினைத்தாலும் நடுங்கும் கொடிய சுரம்பல உடையது என்றமையால் அவனது பகைவர் எதிர்நிலையாயினர்.

> ***"செல்லும் தேஎத்து பெயர்மருங்கு அறிமார்***
> ***கல்எறிந்து எழுதிய நல்அரை மராஅத்து***
> ***கடவுள் ஓங்கிய காடுஏசு கவலை***
> ***ஒட்டாது அகன்ற ஒன்னாத் தெவ்வர்***
> ***சுட்டினும் பனிக்கும் சுரம்தவப் பலவே"*** (மலை.394-398).

**1.4.8.2.4.** நன்னன் வேண்மான், தன் வலிய வீரத்தின் காரணமாகப் போரிடும் போது, பொருந்தாத பகைவரின் தலைகள் துண்டிக்கப்பட்டு விழுந்து கிடக்கும். அங்கே பருந்துகள் உண்ணப்படிந்திருக்கும். எத்தகைய ஆற்றல் வாய்ந்தவரையும் வஞ்சியாது, எதிர்நின்று வெல்லும் ஒள்ளிய வாளேந்திய மறவர் கரிய காம்புடைய வேலைச் சாத்தி வைத்துவிட்டு விழிப்புடன் காவல் செய்வர் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர்.

> ***"பொருந்தாத் தெவ்வர் இருந்தலை தூமிய***
> ***பருந்து படக்கடக்கும் ஒள்வாள் மறவர்***
> ***கருங்கடை எஃகம் சாத்திய புதவின்"*** (மலை. 488-490).

**1.4.8.2.5.** தம்பெயர் இக்காலத்தில், இவ்வுலகத்து நடத்தலோடு ஒழியாமல் உலகம் உள்ளவரை நிற்கும்படி நின்று இது தீது இது நன்று என்று ஆராய்ந்து உணரும் வள்ளல்களாகிய பாரி, வல்வில் ஓரி, மலையமான் திருமுடிக்காரி, எழினி, பேகன், ஆய், நள்ளி முதலிய எழுவரும் மாய்ந்து போக, அவர்கள் யாவரும் மேற்கொண்டிருந்த கொடையாகிய கடனை முடித்த தலைமை உடையவன் நன்னன் வேண்மான் என்றதால், இத்தகைய கொடையாகிய கடனைப் பிற மன்னர் முடிக்காதவராய் இருந்துள்ளனர் என்றுணர வைத்துள்ளமையால், கொடைக் கடன் முடிக்காத பிற மன்னர்கள் எதிர்நிலையாயினர் (மலை.541-543).

**1.4.8.2.6.** பகைவர், அவனது ஏவலை ஏற்காத வீரர்கள், கொடைக்கடன் முடிக்காத பிற மன்னர்கள் போன்றோர் ஐந்தாம் நன்னனுக்கு, அவனது நாடு பிடிக்கும் ஆசையின், பகைவரது ஆரவாரத்தைப் பொறுத்துக் கொள்ளாமையின், பகைவரது இகழத்தக்க நிலையின், வீரத்தின், கொடைக் கடனை உணர்த்த வேண்டியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

## 1.4.9. எவ்வி:

**1.4.9.0.** சங்கப் பாடல்களில் எவ்வி என்ற பெயரில் மூவர் ஆண்டிருப்பதாக அறிய முடிகிறது. இவர்களை முறையே எவ்வி-1, எவ்வி-2, எவ்வி-3 என்று காலநிலையைக் கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுவர்.

இவர்கள் வெவ்வேறு காலநிலையில் வாழ்ந்தவராயினும் ஓரிடத்தில் தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

## 1.4.9.1. எவ்வி-1:

**1.4.9.1.0.** கூடலின் வடக்கே இருந்த பகுதியை எவ்வியர் குடியினர் சுதந்திரமாக ஆண்டு வந்துள்ளனர். இந்த எவ்வியர் பழங்குடியில் வந்தவனே எவ்வி-1 எனப்படுவான்.

நீடூர் (நீழல்), மிழலை முதலிய பகுதிகள் எவ்வியர் நாட்டில் இருந்தன. முதலாம் எவ்வி அகுதை காலத்தவன்.[29]

பாரி மகளிர் எவ்வி குடியினர் என்று கபிலர் கூறியுள்ளதால் (புறம்.202), பாரியின் மனைவியும் எவ்வியர் குடியைச் சேர்ந்தவளாக இருக்கலாம் என்பர். எவ்வியின் மனைவியர் அவன் இறந்து கிடந்த இடத்தை மெழுகியுள்ளனர். எவ்வி பலர் சூழ உடன் இருந்து உண்பவன்.[30]

எவ்வியின் இறப்பால் பாணர்கள் வறுமையுற்று, மலர் சூடவும் வழியின்றி வருந்தியுள்ளனர். இம்முதலாம் எவ்வியின் காலம் கி.மு. 325-300.[31]

**1.4.9.1.1.** அகுதை என்பவனிடம் பொன்னால் (இரும்பால்) ஆன சக்கரம்

இருந்தும் அவன் இறந்துவிட்டதால், அவனது சக்கரம் பொய்யானதைப் போல, எவ்வியின் மார்பில் பகைவருடன் போரிட்டு வேலால் தைத்த புண்கள் பல இருந்தும் அகுதை என்பவனால் எவ்வி கொல்லப்பட்டதால் எவ்வியின் புண்களும் பொய்யாகிவிட்டன என்றமையால், முதலாம் எவ்விக்கு அகுதை எதிர்நிலைப் பாத்திரமானான் (புறம்.233.3-7).

**1.4.9.1.2.** இலக்குத் தவறாமல் வாளேந்திப் போரிடும் வீரத்தில் சிறந்த எவ்வி என்பவன் போர்க்களத்தில் பகைவருடன் போரிட்டு விழுப்புண்பட்டு இறந்து கிடந்தான்.[32] அதனை அறிந்த பாணர் ஒன்று கூடித்தம் யாழ்களை ஒடித்து எறிந்து கையால் தொழுதனர் என்பதில், போர்க்களத்தில் விழுப்புண்பட்டு இறந்து கிடந்தான் என்பதைக் குறிப்பதால், பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை மாமூலனார்,

"................. ***வாய்வாள்***
***எவ்வி வீழ்ந்த செருவில் பாணர்***
***கைதொழு மரபின்*** ............" (அகம். 115.7-9)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.9.1.3.** பகைவர், அகுதை என்னும் மன்னன் போன்றோர் முதலாம் எவ்விக்கு, அவனது மார்பில் வேலால் தைத்த புண்கள் பல இருந்தும் கொல்லப்பட்டமையின், வீரத்தின், விழுப்புண் பட்டு போர்க்களத்தில் இறந்ததின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமானார்கள்.

### 1.4.9.2. எவ்வி-2:

**1.4.9.2.0.** அகுதையின் சக்கரப் படையால் கொல்லப்பட்ட முதலாம் எவ்வியின் மகன் இரண்டாம் எவ்வி ஆவான். இவன் நீழல் எனப்படும் நீடூரின் தலைவன். (மாயவரத்தின் அருகில் நீடூர் என்ற ஊர் உள்ளது.) புசும்பூண் பாண்டியனின் மேம்பாட்டை ஒப்புக் கொண்டு அவனுக்கு அடங்கி ஆண்டு வந்துள்ளான். இவனது காலம் கி.மு.300-275.[33]

**1.4.9.2.1.** யாழிசை ஒலிக்கும் தெருக்களையுடைய நீடூரின் தலைவன் வாள் வெற்றியுடைய எவ்வி என்பான். இவன்தன் ஏவுதலை ஏற்றுக் கொள்ளாத நெடுமிடல்

என்னும் குறுநில மன்னனைத் தன் ஏவலைக் கேட்டு நடக்கவில்லை என்னும் காரணத்தினால் பசும்பூண் பாண்டியனிடம் சொல்லிச் சாய்த்தான் என்றமையால் எவ்வியின் ஏவலைக் கேட்டு நடக்காத நெடுமிடல் எதிர்நிலையானான். இச்செய்தியைப் புலவர் பரணர்,

*"யாழ்இசை மறுகின் நீடூர் கிழவோன்*
*வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்*
*நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருந்தலர்"* (அகம்.266.10-12)

என்னும் பாடல் வரிகள் மூலம் தெரிவித்துள்ளார்.

**1.4.9.2.2.** நெடுமிடல் என்பவன் இரண்டாம் எவ்விக்கு, அவனது ஏவலைக் கேட்டு நடக்கவில்லை என்னும் காரணமாக எதிராளியானான்.

**1.4.9.3. எவ்வி-3:**

**1.4.9.3.0.** மூன்றாம் எவ்வி எனப்படும் இவன் நெடுஞ்செழியன் தலைமுறையில் வாழ்ந்தவன். மிழலைக் கூற்றத்தை ஆண்டு வந்தவன். இம்மூன்றாம் எவ்விக்குப் பிறகு எவ்வியர் நாடு நெடுஞ்செழியனின் பாண்டிய நாட்டோடு இணைக்கப்பட்டுவிட்டது. இவனது காலம் கி.மு. 175-150.[34]

**1.4.9.3.1.** வளமான ஊர்களையும் பலவேற்களையும் உடைய எவ்வி, அன்னியைத் திருத்தி அடக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, நன்மை தருகின்ற அறிவுரை மொழிகளைச் சொல்லி அடக்கிப் பார்த்தும் அன்னி அடங்காதவன் ஆனான். எனவே, அன்னி திதியனோடு போரிட்டு அழிந்தான் என்றமையால், அன்னி எவ்வியின் அறிவுரையை ஏற்றுக் கொள்ளாததால் எவ்விக்கு அன்னி எதிர்நிலையானான் (அகம். 126.13-16).

**1.4.9.3.2.** அன்னி என்பவன் மூன்றாம் எவ்விக்கு, அவனது அறிவுரையை ஏற்றுக் கொள்ளாததன் காரணமாக எதிர்நிலையானான்.

**1.4.10. கோசர்:**

**1.4.10.0.** மிகப் பழங்காலத்தில் கோசர்கள் அயல்நாட்டிலிருந்து தமிழ்நாட்டில்

குடியேறியவர்களாகக் கருதப்படுகின்றனர். எட்டாம் நூற்றாண்டில் கிரேக்க நாட்டிலிருந்து தமிழ்நாட்டுக்கு வந்த கோசர், குறி சொல்லும் வழக்கத்தைத் தமிழ்நாட்டிலும் மேற்கொண்டதாகத் தெரிகிறது.

**கோசரைப் பற்றிச் சங்கப் பாடல்கள் கூறுவன:** நான்கு ஊரிலிருந்து வந்தவர் நாலூர்க் கோசர் எனப்பட்டனர். நான்கு மொழிகளைப் பேசியவர்கள் நான்மொழிக் கோசர் எனப்பட்டனர். எனினும் நாலூர்க் கோசரும் நான்மொழிக் கோசரும் ஒரே இனத்தவர் எனப்படுகின்றனர். ஊர்ப்பொதுவிடத்திலுள்ள ஆலமரத்தடியில் அமர்ந்து நல்ல வார்த்தை அதாவது குறிசொன்னவர்கள் முதுகோசர் எனப்பட்டனர். இவர்களது குறிபலிக்கும் என்றும் மக்கள் நம்பினார்கள்.

மன்னர்களின் அவையில் இவர்கள் வீற்றிருந்து அறிவுரை வழங்கியும் வந்துள்ளார்கள். தமிழ் மன்னர்களின் படை வீரர்களாகப் பணியாற்றியவர்கள் இளங்கோசர் எனப்பட்டனர்.

கோசர் துளு நாட்டிலும் செல்லூரிலும் வாட்டாற்றிலும் மதுரையிலும் மோகூரிலும் வாழ்ந்துள்ளனர். இவர்களின் தலைநகர் செல்லூரின் கிழக்கில் உள்ள நியமம். இவர்களது காலம் கி.மு. 325 முதல் கி.மு. 125 வரை.[35]

**1.4.10.1.** கோசர், தன்னுணர்வு காரணமாக வஞ்சினங்கொண்டு, நன்னனுடைய காவல் மரமாகிய மணம் மிக்க மாமரத்தை வெட்டி அவனது நாட்டினுள் புகுந்தனர்[36] எனச் சொல்லப்பட்டமையால் கோசருக்கு நன்னன் எதிர்நிலையானான் (குறுந்.73.2-5).

**1.4.10.2.** அரிய தெய்வங்களையுடைய செல்லூரின் கிழக்கில் உள்ளது கோசர்களின் தலைநகர் நியமம்.

இக்கோசர்கள், கடல் போன்ற ஆரவாரமும் இரும்பால் இயன்ற படைக்கலங்களும் உடையவர். வடுக்களையுடைய முகம் உடையவர். அஞ்சாமை உடையவர். பகைவரை எதிர் கொண்டு வெல்லும் ஆற்றலர் என்பதை உணர்த்துவதால் கோசர்க்கு, பகைவர் எதிர்நிலையாயினர் (நற்.90.9-12).

**1.4.10.3.** பயற்றங் கொடி படர்ந்த வயலில் பசு புகுந்து மேய்ந்த உண்மையைக் கூறியதற்காக அன்னிமிஞிலியின் தந்தையின் கண்களைக் கோசர், இரக்கமின்றிப் பிடுங்கினர். அக்கொடுமை காரணமாக உணவைக் கலத்தில் இட்டு உண்ணாமலும் தூய உடையை உடுக்காமலும் சினத்தால் மேற்கொண்ட விரதத்தினின்றும் மாறாமலும் இருந்தாள் அன்னிமிஞிலி[37] என்றமையால் கோசர்க்கு அன்னிமிஞிலி எதிர்நிலையானாள். இதனைப் பரணர்,

> *"வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து, அருளாது*
> *ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்*
> *கலத்தும் உண்ணாள், வாலிதும் உடாஅள்*
> *சினத்தின் கொண்ட படிவம் மாறாள்"* (அகம். 262.5-8)

என்னும் பாடல் வரிகளால் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.10.4.** வெல்லும் கொடியும், விரைவாய் ஓடும் தேரும் உடைய கோசர், கிளைகள் பரந்த ஆலமர மன்றத்தில் முரசு ஒலிக்க, பகைவனாகிய பழையனின் மோகூரில் வஞ்சினம் கூறிப் போரிட்டனர்.[38] அந்நாளில், மோகூர் மன்னன் கோசர்க்குப் பணிந்து வராமையால், கோசர்க்கு மோகூர் மன்னன் பழையன் எதிர்நிலைப் பாத்திரமானான். இச்செய்தி மாமூலனாரின்,

> *"................... வெல்கொடித்*
> *துனைகால் அன்ன புனைதேர்க் கோசர்*
> *தொல்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்*
> *இன்இசை முரசம் கடிப்புஇகுத்து இரங்க*
> *தெம்முனை சிதைத்த ஞான்றை, மோகூர்*
> *பணியா மையின் ................"* (அகம். 251.6-11)

என்றும் பாடல் வரிகளில் அறியலாகிறது.

**1.4.10.5.** நன்னன், பகைவர், அன்னிமிஞிலி, மோகூர் மன்னன் பழையன் போன்றோர் கோசருக்கு அவர்தம் தன்னுணர்வு மற்றும் வஞ்சினம், அஞ்சாமை, ஆற்றல், அன்னிமிஞிலியின் தந்தையின் கண்களைப் பிடுங்கியது, வஞ்சினம் போன்ற காரணங்களால் எதிராளியானார்கள்.

## 1.4.11. பதினான்கு வேளிர்:

**1.4.11.0.** சங்க காலத் தொடக்கத்தில் சிலநூறு ஊர்களின் தலைவன் 'வேள்' என்று அழைக்கப்பட்டான். 'வேள்பாரி' முந்நூறு ஊர்களைக் கொண்ட பறம்பு மலைப் பகுதியை ஆண்டு வந்தான்.

சோழர்களும் ஆரம்பத்தில் வேள் என்றே அழைக்கப்பட்டனர். உறையூரில் சோழ அரசை நிறுவியவன் தித்தன் வீரை வேள்மான். தித்தன் வீரைவேண்மானின் மகன் வெளியன் வேண்மான் என்று அழைக்கப்பட்டான். வெளியன் வேள்மானின் மகன் ஆஅய்எயினன் எனப்படுவான். இவன் சோழனின் படைத்தலைவன்.

முதலாம் எவ்வி கூடலுக்கு வடக்கே இருந்த பெருநிலப் பகுதியை ஆண்ட வேள் ஆவான். இரண்டாம் எவ்வி நீழல் எனப்படும் நீடூரின் தலைவன். மூன்றாம் எவ்வி மிழலைக் கூற்றத்தை ஆண்டு வந்தவன்.

முதலாம் நன்னன் கொண்கான மலைப்பகுதியை ஆண்டு வந்துள்ளான். இரண்டாம் நன்னன் எனப்படும் நன்னன் உதியன் சேரமன்னன் உதியன் சேரலாதனால் வெல்லப்பட்டவன். இவன் வேளிர்குலத் தலைவனாக இருந்துள்ளான்.

பெருந்துறை என்ற ஊரில் நிகழ்ந்த போரில் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்ற சேரமன்னனால் கொல்லப்பட்டவன் மூன்றாம் நன்னன். மதுரைக்காஞ்சி குறிப்பிடும் நன்னன் நான்காம் நன்னனாவான். ஐந்தாம் நன்னன் திருவண்ணாமலையை அடுத்த பல்குன்றக் கோட்டத்தைச் சேர்ந்த செங்கம் என்று தற்போது அழைக்கப்படும் செங்கண்மாவை ஆட்சி புரிந்தவன் ஆவான்.

துவரை என்ற பகுதியை ஆட்சி செய்தவர்கள் இருங்கோவேள் எனப்பட்டார்கள். முதலில் ஆண்டவன் முதலாம் இருங்கோவேள். அவனை அடுத்து ஆண்டவன் இரண்டாம் இருங்கோவேள் எனப்படுவான். கடைசியாக ஆண்டவன் மூன்றாம் இருங்கோவேள் என்றழைக்கப்பட்டான்.

இவர்கள் அனைவரும் பதினான்கு வேளிர் எனப்பட்டனர். முதல் மூவரைத்

தவிர்த்து ஏனைய வேளிரை பதினொரு வேளிர் என்றே அழைக்கலாம். காலப்போக்கில் படைபலம் மிகுந்த வேள் ஒருவன் மற்றொரு வேளை வென்று தன் நிலப்பரப்பைப் பெரிதாக்கிக் கொண்டான். ஒரு வேளின் மகளை மற்றொரு வேளோ அவன் மகனோ திருமணம் செய்து கொள்வதன் மூலமாகவும் வேளிரின் நிலப்பகுதி பெருகலாயிற்று.

இந்த வேளிர் தலைவர்கள் தாய்வழி உறவினரான பழனிமலைவேளிர், மனைவி வழி உறவினரான மையூர் வேளிர், இந்த வேளிர்க்கு உறவினரான பிற வேளிர் ஆகியோர் சேர்ந்த குழுவினராவர்.

வேள் என்ற பெயருடன் நிலப்பகுதியை ஆண்ட தலைவர்களைத் தவிர மிகப் பழங்காலத்து வேளிர், குன்றூரிலும், முத்தூரிலும் வாழ்ந்துள்ளனர் என அறிய முடிகிறது. மிகப் பழங்காலத்து வேளிர் தொன்று முதிர் வேளிர், தொன்முது வேளிர் என்றும் அழைக்கப்பட்டனர். இவ்வேளிர் ஆண்ட காலம் கி.மு. 325-75.[39]

**1.4.11.1.** வெல்லும் போரையும் நீங்காத புகழையும் வான் அளாவிய குடையையும் உடையவன் கழுவுள். இவனது ஊர் காமூர். இந்தக் கழுவுள் என்பவனது காமூரைப் பதினான்கு வேளிர் ஒன்று கூடித் தாக்கிப் போரிட்டு அழித்துள்ளனர் என்றமையால், பதினான்கு வேளிர்க்குக் கழுவுள் என்பவன் எதிர்நிலைப் பாத்திரமானான். இக்கருத்தைப் புலவர் பரணர்,

> "...................அடுபோர்
> ***வீயா விழுப்புகழ், விண்தோய் வியன்குடை***
> ***ஈர்எழு வேளிர் இயைந்துஒருங்கு எறிந்த***
> ***கழுவுள் காமூர்*** ................"  (அகம்.135.10-13)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.11.2.** கழுவுள் என்பவன், பதினான்கு வேளிர்க்கு, அவர்கள் ஒன்று கூடித் தாக்கிப் போரிட்டதன் காரணமாக எதிராளியானான்.

### 1.4.12. பெருஞ்சாத்தன்:

**1.4.12.0.** ஒல்லையூர் என்பது தற்போது புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள ஒலியமங்கலம் என்றும் திருமெய்யத்துக்குப் பக்கத்தில் உள்ள ஒல்லையூர் என்றும் கூறப்படுகிறது. முதலில் பூதப்பாண்டியன் ஒல்லையூரைக் கைப்பற்றினான். ஒல்லையூர் பழம்பெரும் பாண்டிய நாட்டிலே இருந்திருக்க வேண்டும் என்பர்.

பூதப்பாண்டியன் இறந்தபின் ஒல்லையூர் கிழான் மீண்டும் ஒல்லையூரைக் கைப்பற்றினான். ஒல்லையூர் கிழான் இறந்த பிறகு அவன் மகன் பெருஞ்சாத்தன் ஒல்லையூரை ஆட்சி புரியலானான்.

பூதப்பாண்டியன் பேரனான பசும்பூண் பாண்டியன், பெருஞ்சாத்தனைத் தோற்கடித்துக் கொன்றான். பெருஞ்சாத்தனை இழந்த குடவாயிற் கீரத்தனார் என்ற புலவர் பாடிய பாட்டு அனைவரது நெஞ்சையும் கரைக்கும் உருக்கமான பாட்டு.

இப்பெருஞ்சாத்தன் ஒல்லையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவன். இவனது காலம் கி.மு. 300 - 275.[40] இவன் பசும்பூண் பாண்டியனுடன் நடந்த போரில் பகைவரது வீரருடன் வீரத்தோடு போரிட்டு இறந்தவன்.

**1.4.12.1.** ஒல்லையூர் கிழானுக்கு மகனாகத் தோன்றியவன் பெருஞ்சாத்தன். தன் வீரத்தின் காரணமாகப் பாண்டியர் வெற்றி காண உழைத்தபின் வானுலகு அடைந்தவன். அதைக் கண்டு வருந்திய குடவாயிற் கீரத்தனார், வழியில் பூத்திருந்த முல்லையைக் கண்டு பாடியபோது, பெருஞ்சாத்தன், தன் ஆண்மை புலப்பட பகைநாட்டு வீரரை எதிர்நின்று கொன்ற வலிய வேலை உடையவன் என்றமையால் பகைவர் நாட்டு வீரர்கள் எதிர்நிலையானார்கள்.

> **"ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த**
> **வல்வேற் சாத்தன்**............" (புறம். 242.4-5).

**1.4.12.2.** பசும்பூண் பாண்டியனும் அவனது வீரர்களும் பெருஞ்சாத்தனுக்கு, அவனது ஆண்மையின் காரணமாக எதிராளியாயினர்.

**1.4.13. பாணன்:**

**1.4.13.0.** பாணன் என்ற பெயரில் சங்க இலக்கியத்தில் இருவர் காணப்படுகின்றனர். இவர்களை முறையே பாணன்-1, பாணன்-2 என்று காலநிலையைக் கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர் குறிப்பிடுவர். இவர்கள் வெவ்வேறு காலநிலையில் வழ்ந்தவர்களாயினும் ஓரிடத்தில் தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

**1.4.13.1. பாணன்-1:**

**1.4.13.1.0.** இவன், வெளியன் தித்தன் என்று அழைக்கப்படும் சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளியின் ஆதரவில் உறையூரில் வாழ்ந்த மற்போர் வீரன் பாணன் ஆவான். மல்யுத்தம் செய்வதில் இவனுக்கு நிகர் யாரும் இல்லை என்று பேசுவர். இவனை முதலாம் பாணன் எனக் கொள்ளலாம். இவனது தலைநகர் உறையூர். இவனது காலம் கி.மு. 300-275.[41]

**1.4.13.1.1.** பாணன் என்பவன் மற்போர் செய்தலில் வல்ல மார்பினை உடையவன். கணையன் என்பவனை வலிமைமிக்க வீரத்தின் காரணமாக வருந்திப் போர் செய்ய முயன்ற போது, அவனது முழவு போன்ற தோள்கள் பாணன் கையில் அகப்பட்டுக் கொண்டு வெல்ல இயலாமற் போயிற்று. எனவே, கணையன் ஆரியமல்லன் என்பவனை ஏவினான்.

இப்போரில், பாணன் ஆரிய மல்லனை வென்று விட்டான். எனவே, கணையன் நாணம் கொண்டான் என்பதால், கணையனும் ஆரியமல்லனும் எதிர்நிலையாயினர் (அகம். 386, 3-8).

**1.4.13.1.2.** ஆற்றல் மிக்க வன்மையுடைய பாணன் என்பவனுடன் கூடிப் போரிடுதலில் வல்ல படையையுடைய கட்டி என்பவன் போரிட வந்து, வெளியன் தித்தன் (சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி) என்பவனது அவையிலே உண்டான இனிய ஓசையை உடைய கிணைப்பறையினது ஒலியைக் கேட்டு அவனது பெருமையை உணர்ந்து, அச்சம் காரணமாக அஞ்சிப் போரிடாமல் ஓடினான் என்றமையால் பாணனுக்கும் கட்டி என்பவனுக்கும் வெளியன் தித்தன்

எதிர்நிலையானான். இக்கருத்துப் பரணரின்,

> "***வலிமிகும் முன்பின் பாணனொடு, மலிதார்த்***
> ***தித்தன் வெளியன் உறந்தை நாள்அவைப்***
> ***பாடுஇன் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சிப்***
> ***போர்அடு தானைக் கட்டி***
> ***பொராஅது ஓடிய .......*** " (அகம். 226.13-17)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.13.1.3.** கணையன், ஆரியமல்லன், வெளியன் தித்தன் (சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளி) போன்றோர் முதலாம் பாணனுக்கு அவனது வல்லமை, அச்சம் காரணத்தால் எதிராளியானார்கள்.

**1.4.13.2. பாணன்-2:**

**1.4.13.2.0.** தமிழ்நாட்டின் வடஎல்லையில் இவனது நாடு இருந்தது. இவன் பாணன் என்னும் மன்னன் எனப்பட்டான். இவனை இரண்டாம் பாணன் எனக் கொள்ளலாம். இவன் எப்போதும் கல்லைப் பொருவதால், செருப்பணிந்த காலை உடையவன். மூங்கில் குழாயில் இடப்பட்ட உணவை உடையவன். நெடுஞ்செழியன் தலைமுறையில் வாழ்ந்தவன். இவனது காலம் கி.மு. 175-150.[42]

**1.4.13.2.1.** இரண்டாம் பாணன் எனப்படும் இவன், பிறர் பொருளைக் கவர்ந்து வர வேண்டும் என்னும் காரணத்திற்காகப் பகைவரின் ஆனிரை இனத்தைக் கவர்ந்து வருபவன். அத்துடன் பகைவர்க்குப் புறங்கொடாதவன் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைக் கல்லாடனார்,

> "...................... ***பகைவர்***
> ***ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பில்***
> ***குவைஇமில் விடைய வேற்றுஆ ஒய்யும்***
> ...........................
> ***எழாஅப் பாணன் நல்நாட்டு உம்பர்"*** (அகம். 113.12-14, 17)

எனத் தம் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.13.2.2.** பகைவர், இரண்டாம் பாணன் எனப்படும் மன்னனுக்கு, அவன் பிறர் பொருளைக் கவர்ந்து வரவேண்டும் என்னும் காரணத்திற்காக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 1.4.14. பழையன்:

**1.4.14.0.** பழையன் என்ற பெயரில் சங்க காலத்தில் மூவர் ஆண்டு வந்துள்ளனர். அவர்களை முறையே பழையன்-1, மோகூர் மன்னன் பழையன்-2, மோகூர் மன்னன் பழையன்-3 எனக் கால நிலையைக் கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுவர். இவர்கள் வெவ்வேறு காலநிலையில் வாழ்ந்தவர்களாயினும் ஓரிடத்தில் தொகுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

## 1.4.14.1. பழையன்-1:

**1.4.14.1.0.** இவனை முதலாம் பழையன் எனக் கொள்ளலாம். இவன் காவிரி ஆற்றங்கரையில் அமைந்த போர்வை (போஓர்) என்ற நிலப்பகுதியின் தலைவன். இவன் சோழர் படைத் தலைவனாகப் பணியாற்றியுள்ளான். இவனைத் தித்தன் வெளியன் என்று சொல்லப்படும் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி போரில் தோற்கடித்துள்ளான். இவன் போர்வையை ஆண்ட குறுநில மன்னன். போஓர் என்னும் ஊர் இவனது தலைநகர். முதலாம் பழையன் எனப்படும் இவனது காலம் கி.மு. 300-275.[43]

**1.4.14.1.1.** சோழர், கொங்கரை அடக்கி வைக்க வேண்டுமென்று விரும்பினர். எனவே, கொம்புடைய யானைகளை உடையவனும் போஓர் என்னும் ஊருக்கு உரியவனுமாகிய பழையன் என்னும் தானைத் தலைவனைத் துணைக்கழைத்தனர். எனவே, சோழருக்கு உதவ வேண்டும் என்னும் காரணத்திற்காக, இப்பழையன் கொங்கரோடு போரிட்டு வெற்றி பெற்றுள்ளான் என்றமையால் கொங்கர் எதிர்நிலையாயினர். இதனை, பெயர் குறிப்பிடப்பெறாத புலவர் ஒருவர்,

> *"கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்*
> *வெண்கோட்டு யானைப் போஓர் கிழவன்*
> *பழையன் வேல்வாய்த் தன்ன ........"* (நற்.10.6-8)

எனப் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.14.1.2.** நன்னனும் ஏற்றையும் நல்ல அணிகள் அணிந்த அத்தியும் பகைவர் கிட்டுதற்கரிய பேராற்றலையுடைய கங்கனும் கட்டியும் பொன் அணிகள் அணிந்த வலிய படையையுடைய புன்றுறையும் ஆகிய சேர மன்னன் படைத்தலைவர் அறுவரும் தம்தம் படைகளுடன் ஒன்று கூடி எதிர்ப்பதற்காகப் பாசறையில் தங்கியிருந்த பொழுது சோழமன்னனின் படைத்தலைவனாகிய பழையன் தன் வீரத்தின் காரணமாகப் போரிடச் சென்று அப்பாசறையில் அறுவரின் உடலையும் பருந்து உண்ணுமாறு செய்து, பின் விழுப்புண்பட்டு இறந்தான் என்றமையால், பழையனுக்கு நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை போன்றோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தியைக் குடவாயிற் கீரத்தனாரின்,

> ***"நன்னன், ஏற்றை நறும்பூண் அத்தி,***
> ***துன்அருந் கடுந்திறற் கங்கன், கட்டி***
> ***பொன்அணி வல்வில் புன்துறை, என்று ஆங்கு***
> ***அவன்அவர் குழூஉ அளப்புஅருங் கட்டூர்***
> ***பருந்து படப்பண்ணி, பழையன் பட்டென"*** (அகம்.44.7-11)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.14.1.3.** கொங்கர், அறுவர் கூட்டணியாகச் சேர்ந்த சேர மன்னனின் படைத்தலைவர்கள் நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை ஆகியோர் முதலாம் பழையனுக்கு, பிறருக்கு உதவ வேண்டும் என்பதின், வீரத்தின் காரணங்களால் எதிராளியானார்கள்.

### 1.4.14.2. மோகூர் மன்னன் பழையன்-2:

**1.4.14.2.0.** மோகூர் மன்னன் பழையன் எனப்படும் இவன் இரண்டாம் பழையன் எனப்படுபவன். இவன் செங்குட்டுவனால் கொல்லப்பட்டவன். இவனது காலம் கி.மு. 225-200.[44] இவன் அறுகை, சேரன் செங்குட்டுவன் போன்றவர்களை எதிர்த்துப் போரிட வந்த போதும், வேப்ப மரத்தை வெட்டிய போதும் வெற்றியும் தோல்வியும் கண்டுள்ளான்.

**1.4.14.2.1.** மோகூர் மன்னனின் வீரத்திற்கு அஞ்சி, அறுகை என்னும் பகைவன்

தன் நாட்டை விட்டு ஓடி ஒளிந்து கொண்டான் என்றமையால், இரண்டாம் பழையன் எனப்படும் மோகூர்ப் பழையனுக்கு அறுகை என்னும் மன்னன் எதிர்நிலையானான். இச்செய்தியைப் பரணர்,

*"நுண்கொடி உழிஞை வெல்போர் அறுகை*
*சேண னாயினும் கேளென மொழிந்து*
*புலம்புபெயர்ந்து ஒளித்த களையாப் பூசற்கு"* (பதிற் 5.44.10-12)

என்னும் பாடல்வரிகளில் மொழிந்துள்ளார்.

**1.4.14.2.2.** சேரன் செங்குட்டுவன், பழையன் என்பவனால் காக்கப்பட்டு வந்த கரிய கிளைகளையுடைய வேப்ப மரத்தின் முழவு போன்ற அடிமரத்தை வெட்டினான். அப்பழையனையும் வென்றான் என்றமையால் பழையனுக்குச் சேரன் செங்குட்டுவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

*"பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்*
*முழாரை முழுமுதல் துமியப் பண்ணி*
.............................
*கடல்பிறக்கு ஓட்டிய செங்குட் டுவனை"* (பதிற்.பதி.5.13-14;23)

**1.4.14.2.3.** அறுகை, சேரன் செங்குட்டுவன் போன்றோர், இரண்டாம் பழையன் எனப்படும் மோகூர் மன்னனுக்கு, அவனது வீரத்தின், காவல் மரமான வேப்ப மரத்தைக் காக்க இயலாமையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**<u>1.4.14.3. மோகூர் மன்னன் பழையன்-3:</u>**

**1.4.14.3.0.** மூன்றாம் பழையன் எனக் கொள்ளப்படும் மோகூர் மன்னன் பழையன், பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தவன். பழையன் மாறன் என்றும் இவன் அழைப்படுவான். இவன் மோகூர் என்ற ஊரில் இருந்து ஆண்ட குறுநில மன்னன். பாண்டிய மரபினன். இவனது அவையில் இருந்த கோசர் என்ற ஒருவகை வீரர்கள் நான்கு பிரிவினர் ஆயினும், இரண்டு உரையாமல் ஒன்றே மொழியும் பண்பினர். எனவே, இவன் அவையில் இருந்த வீரர்க்கு ஒன்றுமொழி கோசர் என்ற பெயர் உண்டு. இவனது காலம் கி.மு. 175-150.[45]

**1.4.14.3.1.** மோகூர்ப் பழையனின் அவையிலிருந்த கோசர், முரசு ஒலிக்கப் பகைவரின் போர்முனையை அழித்தனர். அக்காலத்தில், மோகூர் மன்னனான பழையன் பணிந்து வாராமையால், அவனிடம் பகைமை கொண்டவராகிய படையையுடைய மோரியர் என்பவர் தேர்ச்சக்கரம் உருண்டு செல்வதற்கேற்ற செம்மையான பாதையை அமைத்தார்கள்[46] என்றமையால் மோரியர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (அகம். 251.7;10-13).

**1.4.14.3.2.** கிள்ளிவளவன் வஞ்சி நகரை அழித்துவிட்டுத் திரும்பிய பின் வெற்றிச் செருக்கோடு கூடலையும் தாக்கத் திட்டமிட்டான். வெள்ளம் போன்ற படையோடு கூடலுக்கு அருகில் வேறு புறத்தில் தங்கி இருந்தான். மோகூர் மன்னன் பழையன் மாறன், கிள்ளி வளவனைத் தாக்கி அவனுடைய குதிரைகளையும் யானைகளையும் கைப்பற்றினான் என்றமையால், பழையன் மாறனுக்குக் கிள்ளிவளவன் எதிர்நிலைப்பாத்திரமானான். இச்செய்தியை நக்கீரர்,

"***இழையணி யானைப் பழையன் மாறன்***
***மாடமலி மறுகின் கூடல் ஆங்கண்***
***வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த***
***கிள்ளி வளவன் நல்அமர் சாஅய்***" (அகம்.346.19-22)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.14.3.3.** மோரியர் எனப்படும் பகைவர், கிள்ளிவளவன் போன்றோர் மூன்றாம் பழையன் எனப்படும் மோகூர் மன்னன் பழையனுக்கு, அவன் பகைவரின் போர்முனையை அழித்தமையின், எதிரியின் குதிரை, யானை போன்றவற்றைக் கைப்பற்றியதின் காரணங்களால் எதிராளியானார்கள்.

**1.4.15. அன்னிமிஞிலி:**

**1.4.15.0.** அன்னிமிஞிலி ஒரு பெண். இவளது தந்தை அன்னி. இவள், தந்தையின் ஊரான குறுக்கையைச் சொந்தமாகக் கொண்டவள். இவளது காலம் கி.மு. 300-275 என்பர்.[47]

**1.4.15.1.** பயற்றங்கொடி படர்ந்த வயலில் பசு புகுந்து மேய்ந்த உண்மையைக் கூறிய குற்றத்திற்காக அன்னியின் கண்களைக் கோசர் பிடுங்கினர். அதனால் சினங்கொண்ட அன்னியின் மகள் அன்னிமிஞிலி, கோசரைப் பழிவாங்குவதற்காகக் கலத்தில் உண்ணாமலும், தூய ஆடையை உடுக்காமலும் நோன்பு மேற்கொண்டு திதியன் என்பவனுக்குச் சொல்லி, அக்கோசர்களைக் கொன்று பழி தீர்த்தாள். கோபம் தீர்ந்து திதியனின் அழுந்தை நகர் வீதியில் வெற்றி உலா வந்தாள் என்பதால், அன்னிமிஞிலிக்கும் திதியனுக்கும் கோசர் எதிர்நிலையாயினர் (அகம். 196. 8-12, 262.4-13).

**1.4.15.2.** கோசர்கள் அன்னிமிஞிலிக்கு, அவள் அக்கோசர்களைக் கொன்று பழிதீர்த்துக் கொண்டதன் காரணமாக எதிர்நிலையானார்கள்.

**<u>1.4.16. கட்டி:</u>**

**1.4.16.0.** கட்டியின் நாடு வடுகர் வாழும் நிலப்பகுதியின் எல்லையில் இருந்தது. அவன் நாட்டுக்கு அப்பால், மொழி வேறுபட்ட தேசங்கள் இருந்தன என்று ஒரு பாடல் (குறுந்.11) கூறுகிறது. கட்டி போரிடுவதில் வல்ல படையை உடையவன். அவனது காலம் கி.மு. 300-275[48]

**1.4.16.1.** கட்டி என்பவன் போரிடுவதில் வல்ல படையை உடையவன். இவன் தன்னுணர்வு காரணமாகத் தித்தன் வெளியன் அவையில் இருந்த பாணன் என்ற மறவனுடன் உறையூரில் போர் செய்வதற்கு வந்தான்.

அவ்வாறு வந்தவன், தித்தன் வெளியனின் அரண்மனை அவையில் எழுந்த முரசொலியைக் கேட்டு, அவனது பெருமையினை உணர்ந்து, அஞ்சிப் போர் செய்யாது ஓடிவிட்டான்[49] என்றமையால் கட்டி என்பவனுக்குப் பாணனும் தித்தன் வெளியன் எனப்படும் சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியும் எதிர்நிலையாயினர் (அகம்.226.13-17).

**1.4.16.2.** சோழர் படைத்தலைவனான நன்னன் போர் செய்தபோது நன்னன் கூட்டணியில் (நன்னனுடன் ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை சோழ

மன்னன் படைத்தலைவர் அறுவர்) கட்டியும் சேர்ந்து போர் செய்து, பழையனைக் கொன்றான் என்றமையால் கட்டிக்குப் பழையன் எதிர்நிலையானான் (அகம்.44.7-11).

**1.4.16.3.** தித்தன் வெளியன் அவையிலிருந்த பாணன், பழையன் போன்றவர்கள் கட்டி என்பவனுக்கு, அவனது தன்னுணர்வின், கூட்டணியில் சேர்ந்து போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

### 1.4.17. எழினி:

**1.4.17.0.** எழனி என்ற பெயரில் சங்கப் பாடல்களில் பல குறுநில மன்னர்கள் வாழ்ந்துள்ளனர். அவர்களில், நால்வர் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களை முறையே காலநிலையைக் கணக்கில் கொண்டு எழினி-1, எழினி-2, எழினி-3, எழினி-4 எனக் குறிப்பிடலாம். காலநிலையைக் கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர் குறிப்பிட்டுள்ள மேற்குறிப்பிட்ட நால்வரும் வெவ்வேறு கால நிலையில் வாழ்ந்தவர்கள்.

### 1.4.17.1. எழினி-1:

**1.4.17.1.0.** இவன் அதியமான் நெடுமான் அஞ்சியின் முன்னோன். முதலாம் எழினி எனக் கொள்ளப்படும் இவன் சேரர்களுக்கு உரியவனாய் அவர்களுக்குரிய தாரும் மாலையும் அணிந்து விளங்கியவன். இவனது தலைநகர் இக்காலத்தில் தருமபுரி என வழங்கும் தகடூர் ஆகும். இவனது காலம் கி.மு. 275-250.[50]

**1.4.17.1.1.** சோழர் யானைகளைப் பிடிப்பதற்காக எழினி என்பவனை வரச் சொன்னார்கள். அவர்களது ஏவலைக் கேட்டு நடக்காத காரணத்தால் அவன் வரவில்லை. கோபங்கொண்ட சோழர் மத்தியை ஏவி அவ்எழினியைப் பிடிக்கச் சொன்னார்கள். நெடுந்தூரமுள்ள நாட்டில் எழினியைப் பிடித்து, மத்தி அவன் பல்லைப்பிடுங்கி வெண்மணி என்னும் ஊரின் வாசல் கதவில் பதித்தான். தன் வெற்றிக்கு அடையாளமாக அவ்வூர் நீர்த்துறையில் கல் நாட்டினான் என்றமையால் முதலாம் எழினிக்கு, சினங்கொண்ட சோழமன்னனும், அவன் படைத்தலைவன் மத்தியும் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (அகம். 211.9-15).

**1.4.17.1.2.** சோழ மன்னனும் சோழனின் படைத்தலைவன் மத்தியும் முதலாம் எழினிக்கு, அவன் அவர்களது ஏவலைப் கேட்டு நடக்காத காரணத்தால் எதிர்நிலையானார்கள்.

**1.4.17.2. எழினி-2:**

**1.4.17.2.0.** இரண்டாம் எழினி என்று கொள்ளப்படும் இவனும் அதியமான் நெடுமான் அஞ்சியின் முன்னோன் என அறியமுடிகிறது. இவன் காலத்திலிருந்துதான் கரும்பு தமிழ்நாட்டில் கொண்டு வந்து பயிர் செய்யப்பட்டுள்ளது. சங்க கால வள்ளல்கள் எழுவரில் சிறந்த ஒருவன்.

சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை, எழினி தனக்குத் திறை தர வேண்டும் என்று கேட்டபோது, எழினி திறை தர மறுத்ததோடு நில்லாமல், பெரும் படை திரட்டிக் கொண்டு சேரநாட்டின் மேல் படையெடுத்து வந்தான். ஆனால், சேரனின் படை, கொல்லிக் கூற்றத்தில் எழினியின் படையைத் தோற்கடித்ததோடு, எழினியின் படையைத் துரத்திச் சென்றது. அதியமான் எழினி சேரனால் கொல்லப்பட்டு வீழ்ந்தான். அன்று முதல் இவன், அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினி என்று அழைக்கப்பட்டான். இவனே அதியமான் எனப்பட்டவன்.

இவ்வெழினி மூவேந்தர்க்கும் பணியாமல், குதிரைமலைப் பகுதியையும் தகடூர்ப் பகுதியையும் ஆண்டு வந்தான். இவனது தலைநகர் தகடூர். இவனது காலம் கி.மு. 225-200.[51]

**1.4.17.2.1.** கலங்காத செங்கோல் ஆட்சியையும், உலகத்தவர் புகழ்ந்து கூறும் போரைச் செய்யும் ஒளியுடைய வாளையும் தப்பாத சொல்லையும் உடைய எழினி பெருஞ்சேரல் இரும்பொறையுடன், வீரத்தின் காரணமாக போரிட்டபோது, போர்க்களத்தில் இரும்பொறையால் கொல்லப்பட்டான். அப்போது, அரிசில் கிழார், கூற்றமே! உழவன் ஒருவன் விதையை உண்பதைப் போல் பல உயிர்களையும் நீ உண்ணுமாறு தரக்கூடியவனாய், எழினி இருப்ப, அவனது உயிரை நீ உண்டாய். அதன் மூலம் நீ உனக்கே கேடு சூழ்ந்து கொண்டாய் என்று பாடியுள்ளமையால், எழினிக்குப் பெருஞ்சேரல் இரும்பொறையும் கூற்றமும் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (புறம், 230.4-6.11-16, பதிற்.78.7-9, பதிற்.பதி.-8.3-5;9-10).

**1.4.17.2.2.** பெருஞ்சேரல் இரும்பொறை, கூற்றம் போன்றோர் இரண்டாம் எழினி எனப்படும் அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினிக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

**1.4.17.3. எழினி-3:**

**1.4.17.3.0.** தலையாலங்கானப் போரில் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் எழுவர் கூட்டணியோடு வந்தபோது தோற்றவன். மூன்றாம் எழினி எனக் கொள்ளப்படும் இவன், யானைப்படையும், குதிரைப்படையும், வேற்படையும் உள்ளவனாக இருந்துள்ளான் (அகம்-105.10). இவன் அஞ்சியின் வழியில் வந்தவன். இவனது காலம் கி.மு. 175-150.[52]

இவன், பாண்டியன் நெடுஞ்செழியனிடம் எழுவர் கூட்டணியோடு தலையாலங்கானப் போரில் போரிட்டுள்ளான்.

**1.4.17.3.1.** மூன்றாம் எழினி எனக் கொள்ளப்படும் இவன், தன்னுடன் சேரன், சோழன், சினம் மிகு திதியன், எருமையூரின் தலைவன், இருங்கோவேண்மான், நல்தேர்பொருநன் ஆகியோருடன் சேர்ந்து தனது வீரத்தை நிலைநாட்டவேண்டும் என்னும் காரணமாக அதுவரை பெற்றிருந்த வெற்றிப் புகழ் யாவும் அழியும்படி பாண்டியன் நெடுஞ்செழியனிடம் தலையாலங்கானம் என்ற ஊரில் நடந்த போரில் தோற்றுள்ளான் என்பதால், அறுவரைத் துணையாகக் கொண்டு போரிட்ட மூன்றாம் எழுனிக்குப் பாண்டியன் நெடுஞ்செழியன் எதிர்நிலைப்பாத்திரமாக இருந்துள்ளான் என அறியமுடிகிறது (அகம்.36.13-21).

**1.4.17.3.2.** பாண்டியன் நெடுஞ்செழியன், (சேரன், சோழன், திதியன், எருமையூரின் தலைவன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகியோருடன் எழுவர் கூட்டணியாக வந்த) மூன்றாம் எழினிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிராளியானான்.

**1.4.17.4. எழினி-4:**

**1.4.17.4.0.** அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினிக்குப் பிறகு, எழுவர் கூட்டணியாகச் சென்று பாண்டியன் நெடுஞ்செழியனிடம் தோற்ற எழினி, மூன்றாம்

எழினியாகக் கொள்ளத்தக்கவன் என்றும் இவனும் அஞ்சியின் வழியில் வந்தவன் என்றும் அறிய முடிகிறது. அதன் பிறகு தகடூரை ஆண்டவன் அதியமான் நெடுமான் அஞ்சி எனப்படுபவன்.

இந்த அதியமான் நெடுமான் அஞ்சியின் மகனே பொகுட்டெழினி. இவன், அதியமான் பொகுட்டெழினி என்றும் அழைப்படுவான். இவன் நான்காம் எழினியாகக் காலநிலையைக் கருத்தில் கொண்டு கருதப்படுகிறான்.

இவன், தந்தை உயிரோடு இருந்தபொழுதே ஔவையாரால் புகழ்ந்து பாடப்பட்டவன். உப்பு வணிகர் தம் வண்டியில் உபரியாக ஒரு சக்கரத்தை (சேமஅச்சு) வண்டியின் கீழ் மரத்தில் கட்டி எடுத்துச் செல்வார்கள். அத்தகைய சேமஅச்சு போன்றவன் பொகுட்டெழினி என்று புறநானூறு இவனைப் புகழ்கிறது. தந்தை அதியமான் நெடுமான் அஞ்சிக்குப் போரில் உறுதுணையாக இருந்தவன். ஔவையாரை உபசரித்தவன். இவன் தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான். இவனது காலம் கி.மு. 125-100.[53]

**1.4.17.4.1.** அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினிக்கு எழுந்த பகை இரண்டு. ஒன்று அவன் மீது காதல் கொண்ட மகளிர் தோள் மெலிதலால் பகை கொள்ளுதல், மற்றொன்று வீரத்தின் காரணமாக, அவன் படையெடுக்கும் நாடுகளில் ஆறு, குளம் முதலிய துறைகளில் அவனது யானைகள் நீர் பருகுவதால், அந்நாட்டு நீர்த்துறைகள் நீர் இல்லாது பாழாகும். இவ்வாறு, பாழாகுமே என்பதைப் படையெடுப்பால் பாதிக்கப்படும் நாட்டு மக்கள் உணர்ந்து தத்தம் ஊர்களில் தங்குதலை வெறுத்ததால், பொகுட்டெழினி மீது பகை கொள்வர் என்றமையால், அவன் படையெடுப்பால் பாதிக்கப்பட்ட நாட்டு மக்கள் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (புறம்.96.6-9).

**1.4.17.4.2.** எழினி என்னும் அரசன் கொடிய போரில், பகைவரை வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் தன்மை உடையவன்.[54] அவன் தன் நிரையைக் கைக் கொண்ட பகைவரிடத்திலிருந்து, கவர்ந்த நிரையை மீட்டல் காரணமாக அதனை மீட்டுக் காத்துள்ளான் என்று சொல்லப்பட்டமையால், பகைவர் எதிர்நிலைப்

பாத்திரமாயினர். இச்செய்தியை ஔவையாரின்,

"....................வெம்போர்

நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி

முனைஆன் பெருநிரை போலக்

கிளையொடு காக்க தன்கொழுநன் மார்பே" (குறுந்.80.4-6)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.17.4.3.** படையெடுப்பால் பாதிக்கப்பட்ட நாட்டு மக்கள், தன்னுடன் பகை கொண்டவர்கள் போன்றவர்கள் நான்காம் எழினி எனப்படும் பொகுட்டெழினிக்கு, அவனது வீரத்தின், கவர்ந்த நிரையை மீட்டல் காரணங்களால் எதிராளியானார்கள்.

## 1.4.18. ஆய்அண்டிரன்:

**1.4.18.0.** சங்ககாலத்தில் வாழ்ந்த சிறந்த வள்ளல்கள் எழுவரில் ஆய்அண்டிரன் ஒருவன். உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரால் புகழ்ந்து பாடப்பட்டவன். ஆய்அண்டிரன் மிகச் சிறந்த வீரன். பாரியைப் போல ஆய்அண்டிர வள்ளலும் வேளிர் குலத்தலைவன். இரவலர்க்குக் கொடுத்து மகிழும் சிறந்த பண்பாளன். குறுநில மன்னன். பொதிய மலை அடிவாரத்திலுள்ள ஆய்குடி இவனது தலைநகர். இவனது காலம் கி.மு. 275-250.[55]

**1.4.18.1.** ஆய்அண்டிரன், தன் வீரத்தின் காரணமாகப் பகைவரின் அரண்களை அழித்து, புலவர்க்குப் பரிசில் தருவதற்காக அம்மன்னர் தரும் அணிகலன்களைக் கொணர்ந்து தருகின்ற வன்மைமிக்க மறவர்களின் தலைவன் ஒளி வீசும் அணிகலன்களை அணிந்த ஆய் என்ற வள்ளல் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இதனை உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார்,

"..................... பலமாண்

அம்புடைக் கையர் அரண்பல நூறி

நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன்

சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் ......" (அகம்.69.15-18)

எனத் தம் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.18.2.** வேள்ஆய் அண்டிரன், மேகம் தவழ்கின்ற பொதிய மலைக்குரியவன். சுழலுமாறு அணியப்பட்ட வீரவளையுடையவன். இவனை ஆடுதலில் வல்லமை காரணமாக விறலி நெருங்கிச் செல்லலாமே அன்றிப் பெருமை பொருந்திய (பகை) மன்னர் நெருங்குதல் அரிதாகும் என்றமையால், மற்ற மன்னர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (புறம். 128.5-7).

**1.4.18.3.** வேள்ஆய்அண்டிரனிடம், பகைவரான கொங்கர் போரிட்டுத் தோற்றுப் புறங்கொடுத்து முதுகுகாட்டி ஓடியபோது[56] கைவிட்டுச் சென்ற வேல்களின் தொகையை விட, அவன் பரிசிலர்க்கு வழங்கிய யானைகளின் தொகை அதிகமாகும் என்றமையால், கொங்கர் எதிர்நிலைப்பாத்திரமாயினர். இச்செய்தியை உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரின்,

> "..................***நீ அளித்த***
> ***அண்ணல் யானை எண்ணின் கொங்கர்க்***
> ***குடகடல் ஓட்டிய ஞான்றைத்***
> ***தலைப்பெயர்த் திட்ட வேலினும் பலவே***" (புறம்.130.4-7)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.18.4.** பகை மன்னர், கொங்கர் போன்றவர்கள் ஆய்அண்டிரனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

### 1.4.19. அள்ளன்:

**1.4.19.0.** அதியனின் படைத்தலைவன் அள்ளன். போர் வேட்கை மிக்கவன். அதியன் பல நாடுகளைக் கைப்பற்ற அள்ளன் துணையாக இருந்து போரிட்டுள்ளான். பின்னர், அதியன் நாட்டை அள்ளன் ஆண்டுள்ளான். இவனது காலம் கி.மு. 275-250.[57]

**1.4.19.1.** அதியன் தனக்குப்பின் நாட்டை அள்ளனிடம் ஒப்படைத்ததால் அள்ளன் நாட்டை ஆண்டுள்ளான். அதுமுதற் கொண்டு இரவலர் அதியன் அரண்மனைக்கு வரவில்லை. அதனால், கிணைப்பறை ஒலியும் அடங்கியது என்றமையால், அள்ளனுக்கு இரவலர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இதனை மாமூலனார்,

*"ஆடுநடைப் பொலிந்த புகற்சியின், நாடுகோள்*
*அள்ளனைப் பணித்த அதியன் பின்றை,*
*வள்உயிர் மாக்கிணை கண்அவிந் தாங்கு"* (அகம். 325.7-9)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.19.2.** இரவலர், அள்ளனுக்கு, அவனை நாடி வராத காரணத்தால் எதிராளியானார்கள்.

**1.4.20. மலையமான் திருமுடிக்காரி:**

**1.4.20.0.** சங்கப் பாடல்களில் மலையமான்கள் பலர் காணப்படுகின்றனர். மலையமான் திருமுடிக்காரி என்ற பெயரில் இருவர் ஆண்டுள்ளனர். இவர்களை முறையே மலையமான் திருமுடிக்காரி-1, மலையமான் திருமுடிக்காரி-2 என்று காலநிலையைக் கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுவர்.

**1.4.20.1. மலையமான் திருமுடிக்காரி-1:**

**1.4.20.1.0.** முதலாம் மலையமான் திருமுடிக்காரி முள்ளூர் மலைப்பகுதியைச் சுதந்திரமாக ஆண்டு வந்தவன். மலையமான் திருமுடிக்காரி தங்களுக்குப் படைத்துணையாக வரவேண்டுமென்று அவனுக்குப் பெரும் பொருளை அனுப்பி வைப்பார்கள் என்று சொல்லத்தக்க வகையில் சிறந்த வீரன். இவன் தனது குதிரைக்கும் காரி என்றே பெயரிட்டுள்ளான். இவன், முள்ளூர் நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான். இவனது காலம் கி.மு. 250-225.[58]

**1.4.20.1.1.** மலையமான் திருமுடிக்காரி, இரவலர்களுக்குக் கொடையாக அளிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, பகைவரது ஊரின் போர்முனையிலே நிற்கும் நெடிய பல ஆநிரைகளைத் தன் வில்லாற்றலால் கைப்பற்றி அவற்றை ஓட்டிக் கொண்டு வருவதில் வல்லவன் என்றமையால், பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தி பரணரின்,

*"............... முனை ஊர்ப்*
*பல்ஆ நெடுநிரை வில்லின் ஒய்யும்*
*தேர்வண் மலையன் முந்தை ...."* (நற்.100.7-9)

என்னும் பாடல் வரிகளில் அறிய முடிகிறது.

**1.4.20.1.2.** புகழ்மிக்க முள்ளூர் என்ற ஊரில் நடைபெற்ற போர்க்களத்தில், ஆரியர்கள் நெருங்கிப் பல எண்ணிக்கையில் இருந்து மற்றவர்களோடு போரிட்டனர். அத்தகைய ஆரியர்கள் அனைவரையும் மலையமான் திருமுடிக்காரி தன் வீரத்தின் காரணமாக, ஒளி பொருந்திய வாளைக் கையில் கொண்டு, தன் ஒரு வேற்படை ஒன்றினாலேயே அஞ்சித் தோற்றோடுமாறு செய்தான்[59] என்றமையால், ஆரியர்கள் எதிர்நிலையாயினர். இதனை பெயர் குறிப்பிடப் பெறாத புலவர் ஒருவர்,

"***ஆரியர் துவன்றிய பேர்இசை முள்ளூர்***
***பலர் உடன் கழித்த ஒள்வாள் மலையனது***
***ஒருவேற்கு ஓடியாங்கு .......*"** (நற். 170.6-8)

என்னும் பாடல் வரிகள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

**1.4.20.1.3.** பேராற்றல் மிக்க முள்ளூர் மன்னன் மலையமான் திருமுடிக்காரி தன் வீரத்தின் காரணமாகக் குதிரை ஏறிச் சென்று இரவில் பசுநிரையைத் திருப்பிக் கவர்ந்து கொண்டு வரும்போது அப்பசுக் கூட்டத்திற்குச் சொந்தமான பகைவர், போர்முனையில் அழிந்தனர் என்றமையால், பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இக்கூற்றினைப் புலவர் கபிலரின்,

"***மாஇரு முள்ளூர் மன்னன் மாஊர்ந்து,***
***எல்லித் தரீஇய இனநிரைப்***
***பல்ஆன் கிழவரின் அழிந்த இவள் நலனே*"** (நற். 291.7-9)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.20.1.4.** மலையமான் திருமுடிக்காரி, தன் வீரத்தின் காரணமாக வெற்றி பொருந்திய வலிய வில்லாற்றல் மிக்க ஓரியைக் கொன்றுள்ளான்[60] என்று சொல்லப்பட்டமையால் ஓரிஎதிர்நிலையாயினன் எனலாம். இச்செய்தியைப் புலவர் கபிலரின்,

"..............பழவிறல்

ஓரிக் கொன்ற ஒருபெருந் தெருவில்

காரி புக்க நேரார் புலம்போல்,

கல்லென் றன்றால், ஊரே ......." (நற். 320.4-7)

என்ற பாடல் வரிகள் மூலமும், புலவர் கல்லாடனாரின்,

"முள்ளூர் மன்னன் கழல்தொடிக் காரி

செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்

ஓரிக் கொன்று சேரலர்க்கு ஈத்த

செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகம்.209.12-15)

என்னும் பாடல் வரிகள் மூலமும் அறியலாகிறது.

**1.4.20.1.5.** பகைவர், ஆரியர்கள், ஆநிரைக்குரியோர், ஓரி போன்றவர்கள் முதலாம் மலையமான் திருமுடிக்காரிக்கு, இரவலர்களுக்குக் கொடை அளிக்க ஆநிரைகளைக் கவர்ந்ததின், வீரத்தின் காரணத்தால் எதிரியானார்கள்.

**1.4.20.2. மலையமான் திருமுடிக்காரி-2:**

**1.4.20.2.0.** இவன் முதலாம் மலையமான் திருமுடிக்காரியின் பேரன். தேர்வண் மலையன் என்று அழைக்கப்பட்டவன். கபிலரால் சிறப்பித்துப் பாடப்பட்டவன். இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி எனக் கருதப்படுபவன். இவனது மக்கள் மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன், கோவல் கோமான் காரி என்னும் இருவராவர். இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி எனப்படும் இவனும் முள்ளூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். இவனது காலம் கி.மு. 175-150.[61]

**1.4.20.2.1.** ஒருகால், சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் போரிட்டனர். அப்போரில், சேரன் வென்றுவிடுவான் போலத் தோன்றியது. அத்தருணம், தேர்வண்மலையன் உதவும் மனப்பான்மை காரணமாகப் படைகளோடு விரைந்து வந்து சோழனுக்குத் துணை புரிந்து சேரனை வென்றான் என்றமையால் இரண்டாம் மலையமான்

திருமுடிக்காரிக்கு சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை எதிர்நிலைப் பாத்திரமானான் (புறம். 125.10-18).

**1.4.20.2.2.** முள்ளூர் என்ற ஊரின் அரசனே! பகை மன்னன், போர்க்களத்திலே இறக்கும்படி, தன் வீரம் காரணமாக அரிய போரை அழியும்படிச் செய்து, பெரிதும் பொருத்தமற்ற பகைவரைத் தடுக்கும் ஆற்றல் கொண்ட பெண்ணையாற்றின் பக்கம் பொருந்திய நாட்டின் மன்னனே என்றமையால், இரண்டாம் மலையமான் திருமுடிக்காரிக்குப் பகை மன்னனும், பிற பகைவரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தி மாறோகத்து நப்பசலையாரின்,

> *"..................முள்ளூர்ப் பொருந*
> *..................முள்ளெயிற்று*
> *அரவுஎறி உருமின் முரசெழுந்து இயம்ப*
> *அண்ணல் யானையோடு வேந்துகளத்து ஒழிய*
> *அருஞ்சமம் ததையத் தாக்கி நன்றும்*
> *நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்*
> *பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே"* (புறம்.126.8,18-23)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.20.2.3.** சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, பிற மன்னர் மற்றும் பகைவர் போன்றவர்கள், இரண்டாம் மலையமான் திருமுடிக்காரிக்கு அவனது உதவும் மனப்பான்மையின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

**1.4.21. பாரி:**

**1.4.21.0.** பாரி, வேளிர் குலத்தினன் ஆதலின், வேள் பாரி என்றும், உன்னத்துப் பகைவன் பாரி என்றும் அழைக்கப்பட்டவன். வேள் பாரி பறம்பு மலையையும் அதைச் சுற்றியிருந்த முந்நூறு ஊர்களையும் சுதந்திரமாக ஆண்டு வந்த தலைவனாவான்.

பாண்டிய நாட்டில் உள்ள பிரான்மலையே பறம்பு மலை என்று சொல்லப்படுகிறது. பாரிக்கு மகளிர் இருவர் இருந்துள்ளனர். கபிலர் என்னும் புலவர்

உயிர் நண்பனாக இருந்துள்ளார். முல்லைக்குத் தேர் தந்த பாரி சிறந்த கொடை வள்ளல்.

பறம்பு மலையைச் சில வேந்தர்கள் முற்றுகையிட்ட போது, கபிலர் பழக்கிய பறவைகள் வெகு தூரத்தில் விளைந்த நெற்கதிர்களைப் பறித்துக் கொண்டு பறம்பு மலைக்குத் திரும்பியதால், மக்கள் போர்க்காலங்களிலும் பசியின்றி வாழ்ந்துள்ளார்கள். பறம்பு மலையில் எண்ணற்ற சுனைகளில் இனிய நீர் இருந்துள்ளது. எனவே, உணவுக்கும் நீருக்கும் பஞ்சமின்றிப் பகை மன்னர் முற்றுகை காலத்திலும் மக்கள் அஞ்சாமல் வாழ்ந்துள்ளார்கள் என்பது வியப்பிற்குரியது.

பாரியின் நாடு பறம்பு நாடு. இவனைப் புகழ்ந்து பாடிய மிகச்சிறந்த புலவர் கபிலரே. இவனது காலம் கி.மு. 250-225.[82]

**1.4.21.1.** உன்னமரம் போர் வீரர் நிமித்தம் அறிய உதவுவது. போருக்குப் புறப்படும் முன் இது தழைத்துக் காணப்பட்டால், அரசனுக்கு வெற்றி கிட்டும் என்பது பொருள்.

இத்தகைய மரம் பொன்னிற மலரையும் சிறிய இலையையும் புல்லிய அடிப்பகுதியையும் உடையது. இவ்வுன்ன மரத்திற்குப் பகைவன் பாரி என்றது, இத்தகைய உன்னமரம் கரிந்து காட்டிய போதும் பாரி அஞ்சாமையும் அறமும் வலியும் துணையாகக் கொண்டு, தன் வீரத்தின் காரணமாகப் பகைவரை வென்றான் ஆதலால், உன்னத்துப் பகைவன் பாரி எனப்பட்டான் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர்,

*"பொன்னின் அன்ன பூவிற் சிறியிலைப்*
*புன்கால் உன்னத்துப் பகைவன் எங்கோ"* (பதிற்.ஏ.பத்து. 61.5-6)

**1.4.21.2.** பாரி, மூவேந்தரையும் வெல்ல வேண்டும் என்ற தன்னுணர்வு காரணமாகத் தக்க சமயம் வாய்த்த போது, அதனைத் தப்பவிடாமல் பகைவர்தம் வாட்போரினைக் கலக்கி, முயற்சியால் வென்று, மூவேந்தரையும் தோற்றோடும்படிச்

செய்தான் என்றமையால் மூவேந்தரும் எதிர்நிலையாயினர். இச்செய்தியை மதுரை நக்கீரனார்,

> *"தாள்இடூஉக் கடந்து வாள்அமர் உழக்கி*
> *ஏந்து கோட்டு யானைவேந்தர் ஓட்டிய*
> *கடும்பரிப் புரவிக் கைவண் பாரி"* (அகம்.78.20-22)

என்னும் பாடல் வரிகளால் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.21.3.** பறம்பு நாடு, பகைவர் மூவேந்தரின் புகழை அடக்கி, பாரி ஒருவன் புகழை மட்டுமே ஓங்கச் செய்தமையால், தமிழ் முடியுடைய மன்னர் மூவரும் பொறாமையின் காரணமாகப் பகைமை கொண்டனர். இரவலராக வந்து, அவனைப் பரிசிலாக வேண்டிய பொழுது இல்லை என்னும் அறம் பூண்டவனாதலால் அவர்பின் சென்று கொலையுண்டான்.[63]

சேர, சோழ, பாண்டியராகிய மூவரும் ஒன்று சேர்ந்ததன் காரணமாகப் பாரியை எதிர்த்துப் பறம்பு மலையை முற்றுகையிட்டாலும் அங்குள்ள மக்கள் இனிதே வாழ்வர்.

உங்கள் முயற்சியால் பறம்பு மலையைக் கைக்கொள்ள மாட்டீர்! உங்களது வாள் வன்மையைக் கண்டு பாரி பறம்பு மலையைத் தரமாட்டான் என்றும் கபிலர் பாடியுள்ளமையால் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தரும் எதிராளியாக இருந்துள்ளனர். இச்செய்தியை, கபிலர்,

> *"பறம்பு பாடினர் அதுவே அறம்பூண்டு*
> *பாரியும் பரிசிலர் இரப்பின்*
> *வாரேன் வன்னான் அவர்வரை யன்னே*
> ........................
>
> *அளிதோ தானே பாரியது பறம்பே*
> *நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்*
> *உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே*

..........................

*தாளின் கொள்ளலிர் வாளின் தாரலன்*

..........................

*கடந்துஅடு தானை மூவிரும் கூடி*

*உடன்றனிர் ஆயினும் பறம்புகொளற்கு அரிதே"*

(புறம்.108.4-6, 109.1-2, 110.1-2)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.21.4.** பலவேற்படைச் சிறப்புடைய பாரி மிக்க ஆற்றல் உடையவனாய் இருந்ததன் காரணமாக, மற்ற மன்னர்க்குக் கொடியவனாய் இருந்துள்ளான். கொடைத்தன்மையால் மட்டும் இரவலர்க்கு இனியவனாக இருந்துள்ளான் என்றமையால் மற்ற மன்னர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இதனை, புலவர் கபிலரின்,

*"................... பல்வேல்*

*அண்ணல் யானை வேந்தர்க்கு*

*இன்னான் ஆகிய இனியோன் குன்றே"* (புறம்.115.4-6)

என்னும் பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.4.21.5.** பகைவர், மூவேந்தராகிய சேர, சோழ, பாண்டியர் மற்ற மன்னர் போன்றவர்கள் பாரிக்கு, அவனது வீரம், தன்னுணர்வு, பொறாமை, ஆற்றல் காரணங்களால் எதிராளியாக இருந்துள்ளனர்.

### 1.4.22. பாரி மகளிர்:

**1.4.22.0.** பாரிக்கு மகளிர் இருவர் இருந்துள்ளனர். பாரி இறந்த பிறகு அவனது மகளிர் இருவரும் கபிலரின் மகளிராகவே கருதிப் போற்றப்பட்டு, மலையமான் திருமுடிக்காரியின் புதல்வர்களுக்கு மணம் முடித்து வைக்கப்பட்டவர்கள். இவர்களது காலம் கி.மு. 250-225.[64]

**1.4.22.1.** மூவேந்தரும் முற்றுகையிட்டிருந்த அன்றைய முழுமதியின் அந்த

வெண்மையான நிலவில் எம் தந்தையையும் யாம் உடையோம். எம்மலையை மற்றவர் கொள்ளவுமில்லை. ஆனால், எம் தந்தையை மூவரும் முற்றுகையிட்டு வஞ்சித்துக் கொன்றுவிட்ட காரணத்தால் இற்றை முழுமதி - இந்த வெண்மையான நிலவில், வென்றி முரசையுடைய மன்னர் எம்மலையையும் கொண்டார். யாம் எந்தையை இழந்தோம்[65] என்றமையால் பாரி மகளிர்க்குச் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தரும் எதிர்நிலையானார்கள். இக்கருத்து கபிலரின்,

> **"வென்றுஎறி முரசின் வேந்தர்எம்**
> **குன்றும் கொண்டார்யாம் எந்தையும் இலமே"** (புறம். 112.4-5)

என்றும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.22.2.** மூவேந்தரும் பாரியின் மகளிர்க்கு, பாரியை வஞ்சித்துக் கொன்று விட்டதன் காரணமாக எதிரியானார்கள்.

### 1.4.23. பறம்பு நாட்டு மகளிர்:

**1.4.23.0.** பாரியின் பறம்பு நாடு செழிப்புடையது. பறம்பு நாட்டு மகளிர் முழுமலர்களால் ஆன தழையுடை அசையும் அல்குலைப் பெற்றவர்கள். குவளை எனப்படும் செங்கழுநீர் மலரைப் பறித்துப் புற இதழை ஒடித்து நீக்கி மாலையாகக் கட்டி இடையில் உடுத்துக் கொள்ளும் வழக்கம் உடையவர். மிக்க அழகுடையவர். குளிர்ந்த கண்களை உடையவர். இவர்கள் பாரியோடு வாழ்ந்த காலம் இத்தகைய சிறப்புடையது என்பது வெளிப்படை. பாரி தந்தை போலக் காத்தமையால் பறம்பு நாட்டு மகளிர் பாரியைத் தந்தை என்று கூறுவதையே வழக்கமாகக் கொண்டவர்கள். இப்பறம்பு நாட்டு மகளிரின் காலம் கி.மு. 250-225.[66]

**1.4.23.1.** பாரி வாழ்ந்த நாளில், பறம்பு நாட்டு மகளிர் உயர்ந்த பறம்பு மலையில் ஏறிநின்று, பகைவரின் குதிரைப்படையை அறிய வேண்டும் என்னும் காரணத்தால் தம் தந்தை போன்றவனாகிய பாரியின் வெல்வதற்கரிய அருமையை அறியாதவராக எதிர்த்துப் போரிடப் படையெடுத்து வந்த மன்னரின் குதிரைகளை, ஒன்று இரண்டு என எண்ணிப் பார்த்திடுவர் என்றமையால், பறம்பு நாட்டு மகளிர்க்குப் பாரியை எதிர்த்த மன்னர் எதிர்நிலையாயினர். இதனை புலவர் கபிலர்,

*"அருமை அறியார் போர்எதிர்ந்து வந்த*
*வலம்படு தானை வேந்தர் . . . . . .*
*பொலம்படைக் கலிமா எண்ணு வோரே"* (புறம். 116.16-19)

என்னும் பாடல் வரிகள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

**1.4.23.2.** பாரியை எதிர்த்த மன்னர், பறம்பு நாட்டு மகளிர்க்கு, பகைவரின் குதிரைப் படையை அறிய வேண்டும் என்னும் காரணத்தினால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**1.4.24. வயவன்:**

**1.4.24.0.** வயவன், விராஅன் என்றும் அழைக்கப்பட்டான். இவன் வளப்பமுடைய இருப்பையூர் என்ற ஊரின் தலைவன். விராஅன் எனப்படும் வயவன் இரவலர்க்குத் தேர் வழங்கும் வள்ளல். விராஅனின் மலை இப்போது விராலிமலை என்று வழங்குகிறது என்று கூறுவர். இவனது காலம் கி.மு. 250-225.[67]

**1.4.24.1.** வயவன், தன் வேற்படை வல்லமை காரணமாகத் தன்னோடு மாறு கொண்டு எழுந்த பகைவர்களைப் போரிட்டுத் தொலைத்தவன் என்றமையால் பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தியைப் பரணரின்,

*". . . . . . . . . . . . . . . . . . . . முனைஎழத்*
*தெவ்வர் தேய்த்த செவ்வேல் வயவன்*
*மலிபுனல் வாயில் இருப்பை . . . . . . . ."* (நற்.260.5-7)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.24.2.** பகைவர், விராஅன் எனப்படும் வயவனுக்கு, அவனது வேற்படை வல்லமை காரணமாக எதிராளியானார்கள்.

**1.4.25. விச்சிக்கோன்:**

**1.4.25.0.** விச்சிமலைப் பகுதியை ஆட்சி செய்த தலைவன் விச்சிக்கோன்என்று அழைக்கப்பட்டான். விச்சி என்பது ஒரு மலை. அதனைச் சூழ்ந்த நாடு விச்சி நாடு. அதன் மன்னன் விச்சி, விச்சிக்கோ, விச்சிக்கோன், விச்சியர் பெருமகன்

என்றெல்லாம் அழைக்கப்பட்டான். விச்சி மலைப்பகுதியில் வாழ்ந்தோர் விச்சியர் எனப்பட்டனர். விச்சிக்கோன், ஐந்தெயில் என வழங்கப்பட்ட கோட்டையில் இருந்து கொண்டு அரசாண்டு வந்தான்.

விச்சிக்கோனைச் சேரமான் இளஞ்சேரல் இரும்பொறை வென்றதாகப் பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பதிகம் கூறுகிறது.

கபிலர், பாரி மகளிரை விச்சிக்கோனிடம் கொண்டு சென்று மணக்குமாறு வேண்டிய பொழுது, விச்சிக்கோன் மறுத்ததோடு, கபிலர் தன்னை தொந்தரவு செய்யாமல் இருக்க வாசல் கதவையே அடைத்துவிட்டான். அது முதல் விச்சிக்கோனையும் அவன் வழியில் வந்தோரையும் புலவர்கள் பாடுவதில்லை எனத் தெரிகிறது. இவன் கி.மு. 250-200 வரை இரண்டு தலைமுறை ஆண்டுகளாக வாழ்ந்துள்ளான்.[68]

**1.4.25.1.** விச்சிக்கோன் எனப்படும் விச்சிக்கோ தன் வீரத்தின் காரணமாகப் போர் செய்கின்ற முறைப்படிப் போரிட்டுப் பகைவரைத் தாழச்செய்கின்ற தன்மையால் வாள்மேன்மை அடைபவன்.

மிக்க சினத்தின் காரணமாகப் போரிடச் சென்று, அடங்காத பகைவரை, அடக்குபவன்; மிக்க விளைச்சலை உடைய நாட்டவன் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இதனைக் கபிலர்,

> *"........................ நீயே*
>
> *வரிசையில் வணக்கும் வாள்மேம் படுநன்*
>
> *நினக்குயான் கொடுப்பக் கொண்மதி சினப்போர்*
>
> *அடங்கா மன்னரை அடக்கும்*
>
> *மடங்கா விளையுள் நாடுகிழ வோயே"* (புறம்.200.13-17)

என்னும் பாடல் வரிகள் மூலம் மொழிந்துள்ளார்.

**1.4.25.2.** விற்படையைக் கொண்ட படைகளுடைய விச்சியர்களுக்குத் தலைவன் விச்சிக்கோன். இவன், பிற அரசர்களோடு போர் செய்த காலத்தில்,[69]

புலியினது பார்வையை ஒத்துக் காணப்பட்ட பாணர்களின் பார்வையைக் கண்ட ஆரவாரமிக்க குறும்பூரினர் செய்த முழக்கத்திலும் பெரிய முழக்கத்தினை உடையதாயிற்று என்றமையால் விச்சிக்கோனுக்குப் பிற அரசர்கள் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் பரணர்,

> *"வில்கெழு தானை விச்சியர் பெருமகன்*
> *வேந்தரொடு பொருத ஞான்றை, பாணர்*
> *புலிநோக்கு உறழ்நிலை கண்ட*
> *கலிகெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிதே"* (குறுந்.328.5-8)

என்னும் பாடல் வரிகள் மூலம் மொழிந்துள்ளார்.

**1.4.25.3.** பகைவர், பிற அரசர்கள் போன்றோர் விச்சிக்கோனுக்கு அவனது வீரத்தின், சினத்தின், விற்படை வல்லமையின் காரணங்களால் எதிரியானார்கள்.

**1.4.26. புல்லி:**

**1.4.26.0.** வேங்கடத்தின் ஒரு பகுதியை ஆண்ட குறுநில மன்னன். புல்லி ஆட்சி புரிந்த வேங்கடத்தின் பகுதி, தமிழ்நாட்டின் வடஎல்லையில் இருந்தது என்பர். இவன் கள்வர் என்ற மறக்குலத்தினரின் தலைவன் ஆதலால், கள்வர் கோமான் என்றும், வேங்கடத்தின் ஒருபகுதியை ஆண்டதால் வேங்கடத்தலைவன் என்றும் அழைக்கப்பட்டான். இவனது காலம் கி.மு. 175-150.[70]

**1.4.26.1.** புல்லி என்பவன் வேங்கடமலையை ஆண்ட தமிழ் மன்னன். அவன் பகைவரையும் பகைவரது செல்வத்தையும் கவர்ந்து கொள்ளும் காரணத்திற்காக, வில்லில் அம்பைத் தொடுத்துப் பகைவரை வீழ்த்தும் மறவர் பலரை வென்று கைக் கொண்டவன்.

பகை மறவரது யானைக் கொம்புகளையும் கவர்ந்து கொண்டவன். கள்ளை விற்றுக் கொண்ட நெல்லால் களியாட்டம் செய்பவன். கழலணிந்த பாதத்தான். கள்வர் கோமான்.

தன் வீரத்தின் காரணமாக மழநாட்டாரை வென்று, மழவரின் நிலத்தை

வணங்கச் செய்தவன் என்றமையால், புல்லி என்னும் மன்னனுக்குப் பகை வீரர்கள் எனப்படும் மழவர் பலர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (அகம்.61.7-13).

**1.4.26.2.** புல்லி பெரிய யானையையும் வீரத்துடன் போரிடும் ஆற்றலும் உடையவன். பகைவருடன் தன் வீரத்தின் காரணமாகப் போரிடும் ஆற்றல் மிக்கவன் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இதனைக் கல்லாடனார்,

> "***மாஅல் யானை மறப்போர்ப் புல்லி***
>
> ***காம்புடை நெடுவரை வேங்கடத்து .....***" (அகம்.209.8-9)

என்னும் பாடல் வரிகளால் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.4.26.3.** மழவர் எனப்படும் மழநாட்டார், பகைவர் போன்றவர்கள் புல்லி என்னும் குறுநில மன்னனுக்கு, பகைவரது செல்வத்தைக் கவர்ந்து கொள்ளுதலின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளனர்.

**<u>1.4.27. அன்னி:</u>**

**1.4.27.0.** அன்னி ஓர் அரசன். குறுநில மன்னன். இவன் திதியனுக்குப் பகைவன். அன்னிமிஞிலி என்பவளுக்குத் தந்தை. திதியனின் காவல் மரமான புன்னை மரத்தை அடிமரம் துணியும்படி வெட்டியவன். இவன், திதியனுடன் போர் செய்யும்போது அவனால் கண் களையப்பட்டவன். திதியனால் கொல்லப்பட்டவன். இவனது காலம் கி.மு. 175-150.[71]

**1.4.27.1.** அன்னியும் பெரியனும் ஆகிய இருபெரு வேந்தர்களும் ஒருவருக்கொருவர் பகைத்துக் கொண்டு போரிட்டனர். அவரது போர்க்களத்தில் புன்னைமரம் ஒன்று அழிந்தது. அதனால், அவ்விருவரது இகலும் ஒழிந்தது என்றமையால் அன்னிக்குப்பெரியன் எதிர்நிலையானான். இதனை, பெயர் குறிப்பிடப் பெறாத புலவர் ஒருவர்,

> "***அன்னியும் பெரியன்; அவனினும் விழுமிய***
>
> ***இருபெரு வேந்தர்; பொருகளத்து ஒழித்த***
>
> ***புன்னை விழுமம் போல***" (நற்.180.6-8)

என்னும் பாடல் வரிகளால் மொழிந்துள்ளார்.

**1.4.27.2.** அன்னி என்பவன் குறுக்கை என்ற ஊரின் போர்க்களத்தில் திதியன் என்பவனின் பழமையான புன்னை மரத்தின் பெரிய அடியை வெட்டித் துண்டித்தான்[72] என்றமையால், திதியன் எதிர்நிலைப் பாத்திரமானான். இச்செய்தியை வெள்ளி வீதியாரின்,

*"அன்னி குறுக்கைப் பறந்தலை, திதியன்*
*தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணி*
*புன்னை குறைத்த ஞான்றை .........."* (அகம்.45.9-11)

என்னும் பாடல் வரிகளால் அறியலாகிறது.

**1.4.27.3.** பெரியன், திதியன் போன்றோர் அன்னிக்கு, பகைமையின், காவல் மரத்தை வெட்டிச் சாய்த்தமையின் காரணங்களால் எதிராளியானார்கள்.

## 1.4.28. கடலன்:

**1.4.28.0.** கடலன் என்பவன் ஒரு குறுநில மன்னன். இவனை ஆலம்பேரி சாத்தனார் பாடியுள்ளார். விளங்கில் தலைவன் என்று போற்றப்பட்டவன் இவனே.

நெடுஞ்செழியனும் கடலனும் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள். மாங்குளம் கல்வெட்டு கூறும் கடலன்வழுதி என்பவன் விளங்கில் தலைவனான கடலனே ஆவான்.

கடலனை சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை வென்றுள்ளமையால் சேரமானும் கடலன் வழுதியின் காலத்தவனே என்பதை உணரலாம்.

நெடுஞ்செழியனின் பணவன் (அதிகாரி - படைத்தலைவன்), கணியநந்தி என்ற சமணத் துறவி தங்குவதற்காக மாங்குளம் மலைக்குகையில் கல் படுக்கை அமைத்துக் கொடுத்தவன். இவனது தலைநகரம் விளங்கில். இவனது காலம் கி.மு. 175-150.[73]

**1.4.28.1.** கடலன் என்பான், ஒரு குறுநில மன்னன். அவனது நகரம் விளங்கில் என்பது. இக்கடலன், ஒளிரும் வேலையுடைய சினம்மிக்க பகைவரின் போர்க்களத்தினைத் தன் வீரத்தின் காரணமாக எதிர் கொண்டு போரிட்டுப் பகைவரின் யானைகள் மடியுமாறு செய்தான் என்றமையால், பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தியை ஆலம்பேரி சாத்தனார்,

> **" ........................ கறுத்தோர்**
>
> **ஒளிறுவேல் அழுவம் களிறுபடக் கடக்கும்**
>
> **மாவண் கடலன் விளங்கில் ..........."** (அகம்.81.11-13)

என்னும் பாடல் வரிகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.4.28.2.** பகைவர், கடலன் வழுதிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிரியானார்கள்.

## 1.4.29. பண்ணன்:

**1.4.29.0.** காவிரி ஆற்றங்கரையில் இருந்த சிறுகுடியின் தலைவன் பண்ணன். இவன் கிள்ளிவளவனின் படைத்துணைவனாக இருக்கக்கூடும் என்று கருதுவர். பசிப்பிணி மருத்துவன் என்றும், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் என்றும் பாராட்டப்படுபவன். சிறந்த வள்ளல்.

இப்பண்ணன் சிறுகுடி கிழான் பண்ணன் என்று அழைக்கப்பட்டான். இவனுக்குப் பிறகு வாழ்ந்த வல்லார் கிழான் பண்ணன் (காலம் கி.மு. 150-125) இவனது மகனாக இருக்கலாம் என்பர். இப்பண்ணனின் காலம் கி.மு. 175-150 என்பர்.[74]

**1.4.29.1.** வீரக்கழலை அணிந்த காலையுடைய பண்ணன், தன் வீரத்தின் காரணமாகத் தன் வேலின் இலை போன்ற உறுப்பு நிறம் மாறவும், குருதியால் தன்வேல் செந்நிறமடையவும் பகைவர் மீது வேலைச் செலுத்திப் பகைவரின் மலை போன்ற யானைகளைப் போரில் அழித்தவன் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இதனை செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனாரின்,

"..................... வென்வேல்

இலைநிறம் பெயர ஓச்சி, மாற்றோர்

மலைமருள் யானை மண்டுஅமர் ஒழித்த

கழற்கால் பண்ணன்............" (அகம். 177.13-16)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.29.2.** பகைவர், சிறுகுடிகிழான் பண்ணனுக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானார்கள்.

## 1.4.30. வடுகர் குலத்தோன்றல் எருமை:

**1.4.30.0.** எருமை என்பவனும் எருமையூரன் என்பவனும் ஒருவரே என்று நக்கீரர் பாடலால் (அகம்:36,253) அறிய முடிகிறது. பகைவர் நாட்டில் புகுந்து பசுக்களைக் கவர்ந்து வரும் வீரர்களின் தலைவன் எருமை. அவன் பெரும்புகழ் படைத்த வடுகர் பெருமகன்.

நெடுஞ்செழியனிடம் தலையாலங்கானத்துப் போரில் தோற்ற எழுவர், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன், யானைக்கண் சேய்மாந்தரஞ்சேரலிரும்பொறை (சேரன்), சோழன் நலங்கிள்ளி (சோழன்) என்போராவர்.

இவர்களில், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகிய ஐவர் குறுநிலத் தலைவர்கள். அந்த ஐந்து குறுநிலத்தலைவர்களில் ஒருவன் எருமையூரன். அல்லது எருமையின் மகன் எருமையூரனாக இருக்கலாம் என்றும் கருதுவர்.

இந்த எருமை எனப்படும் எருமையூரன் குடநாட்டை ஆண்ட தலைவன். இவன் நாட்டில் அயிரி ஆறு ஓடியது. எருமையின் குடநாடு, வடஎல்லைக்கு அப்பால் இருந்தது என்பதால், அக்குடநாடு இக்காலத்து மைசூர்ப் பகுதி என்றும் கருதுவர். இவனது காலம் கி.மு. 175-150.[75]

**1.4.30.1.** வடுகர் குலத்தில் தோன்றிய தலைவன் எருமை என்பவன். இவன்

பகைவர்தம் பொருள்களைக் கவர வேண்டும் என்னும் காரணத்திற்காகப் பகைவரைப் போர்க்களத்தில் வென்று அவர்தம் பசுக்களை ஓட்டி வருவான்.

இடையரின் கூப்பிடும் ஒலியை அறிந்து கொண்டு தம் பசுக்கூட்டத்தை தம்மிடத்து அணைத்துக் கொண்டு வரும் காளையின் கழுத்தில் தொங்குமாறு கட்டப்பட்ட உள்துளை உடைய மூங்கில் குழாய்க்குள் உணவை இட்டுக் கொண்டு வரும் கோவலரின் பசுத் தொழுவறையையும், அத்தொழுவத்தினுள் உள்ள கன்றுடை ஆநிரையையும் கவர்ந்து கொண்டு வந்து தனது ஊராகிய மன்றம் நிறையுமாறு செய்பவன் என்றமையால், வடுகர்குலத் தோன்றல் எருமைக்குப் பகைவர் பலரும் கோவலரும் எதிர்நிலைப் பாத்திரமானார்கள் (அகம். 253.11-19).

**1.4.30.2.** பகைவர், கோவலர் (இடையர்) போன்றவர்கள், வடுகர் குலத்தோன்றல் எருமைக்கு, பகைவர்தம் பொருளைக் கவர்ந்து வருதல், கோவலரின் ஆநிரையைக் கவர்ந்து வருதல் காரணங்களால் எதிராளியானார்கள்.

## 1.4.31. ஆதன் எழினி:

**1.4.31.0.** இவன் வாட்டாற்று எழினியாதன் மகன். ஆதன் எழினி என்பது இவனது பெயர். இவன் தந்தை வாட்டாற்றில் வாழ்ந்தவன். இவனோ, கடற்கரைப் பகுதியில் கோசர்களுடன் கோசர்களின் கோமானாக வாழ்ந்துள்ளான். கோசர்களைப் படை வீரர்களாகக் கொண்டு செல்லூர் மன்னன் என்றழைக்கப்பட்டவன். இவனது தலைநகர் கடற்கரை நகரமான செல்லூர் என்பது. இவனது காலம் கி.மு. 150-125.[76]

**1.4.31.1.** செல்லூரின் மன்னன் ஆதன் எழினி. பல இளைய கோசர்கள் குவளை, முல்லை ஆகியவற்றை மாலையாகக் கட்டி விளையாடும் வளமும் வருவாயும் உடையது செல்லூர்.

இச்செல்லூர் மன்னன் ஆதன் எழினி, தன் வீரத்தின் காரணமாகப் பகைவர் மீது போரிடும் போது, அப்பகைவர், வேல் மார்பில் பாய்ச்சப் பெற்ற ஆண் யானையின் துன்பத்தைப் போன்று வருத்தம் அடைவர் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர் (அகம். 216.11-15).

**1.4.31.2.** பகைவர், ஆதன் எழினிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிராளியாக இருந்துள்ளனர்.

**1.4.32. அதியமான் நெடுமான் அஞ்சி:**

**1.4.32.0.** சிறுபாண் ஆற்றுப்படை குறிப்பிட்டுக் கூறும் சங்ககால வள்ளல்கள் எழுவரில் ஒருவன் அதியமான் நெடுமான் அஞ்சி. ஆயுளை வளர்க்கும் நெல்லிக்கனியை ஔவைக்குத் தந்தவன். இவன் தகடூர்ப் பகுதியை ஆட்சி செய்தவன். இவன் தலைநகர் தகடூர். இவனது காலம் கி.மு. 150-125.[77]

**1.4.32.1.** விரைந்து செல்லும் ஆண் யானைகளையும் உயர்ந்தோரையும் உடைய அதியமான் அஞ்சியின் போர்க்களத்தில், அஞ்சியின் அச்சத்தால், இரவை என்னும் ஊரினர் தூங்காமல் கழித்தனர் எனக் கூறினமையால், அதியமான் நெடுமான் அஞ்சிக்கு இரவை என்னும் ஊரினர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (குறுந்.91.5-8).

**1.4.32.2.** அதியமான் நெடுமான் அஞ்சி, நீண்ட காட்டு வழியில் பிறை போன்ற கொம்பையுடைய யானைகளையும் சினமும் வலிமையும் சேர்ந்தாற் போல், தாவிச் செல்லும் குதிரைகளையும் உடையவன். இவ்அஞ்சி, மாற்றார் பொருளைக் கைப்பற்ற வேண்டும் என்ற காரணத்திற்காகத் தன் பகைவரின் ஆனினங்களைக் கைப்பற்றினான். பின் அவற்றை மறைத்திடும் செயல் செய்தான் என்றமையால், அவனது பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் புலவர் மாமூலனார்,

> "..................... *அத்த நீளிடை*
> *பிறைமருள் வான்கோட்டு அண்ணல் யானை*
> *சினம்மிகு, முன்பின், வாம்மான், அஞ்சி*
> *இனம்கொண்டு ஒளிக்கும் அஞ்சுவரு கவலை"* (அகம். 115.12-15)

என்னும் பாடல் வரிகள் வாயிலாக மொழிந்துள்ளார் (வாம்மான் = குதிரை).

**1.4.32.3.** ஒருகால் அதியமான் நெடுமான் அஞ்சி, தன் வலிய வீரத்தின் காரணமாகப் பகைவருடன் போர் செய்யும் எண்ணத்துடன் இருந்தான். அப்போது பகைவரும் வீரமே பொருளாகக் கொண்டு செருக்கி வந்தனர். ஆதலின் அப்பகைவர்க்கு, அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரத்தைப் பற்றி ஔவையார்

கூறுவதாவது, பகைவர்களே! எதிர்த்துப் போரிடும் ஆற்றல் உடையவன் எமக்குள்ளும் ஒருவன் உள்ளான். அவன் ஒரு நாளைக்கு எட்டுத் தேர்களைச் செய்யும் தச்சன், ஒரு மாதகாலம் முயன்று திண்மையாகச் செய்த தேர்ச்சக்கரத்தைப் போன்ற பெருவிரைவும் திட்டமும் உடையவன். ஆகவே, அவனுடன் பகை கொண்டு, போர் செய்யப் போர்க்களம் புகுதலைக் கைவிடுங்கள் என்று பாடியுள்ளமையால், பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

> "*களம்புகல் ஓம்புமின் தெவ்வீர் போர்எதிர்ந்து*
> *எம்முளும் உளன்ஒரு பொருநன்; வைகல்*
> *எண்தேர் செய்யும் தச்சன்*
> *திங்கள் வலித்த கால்அன் னோனே!*" (புறம்.87)

பகைவரே! நீங்கள் அதியமானைக் காண்பதற்கு முன்னம் அவனுடன் கூழைப்படையும் தார்ப்படையும் கொண்டு போர் செய்வோம் என்பது கூடாது, கண்டால், அங்ஙனம் எண்ணுவதற்கே அஞ்சுவீர் என்று ஔவையார் கூறினமையால், பகைவர் எதிர்நிலையாயினர்.

> "*யாவிர் ஆயினும் கூழை தார் கொண்டு*
> *யாம்பொருதும் என்றல் ஓம்புமின் ....*" (புறம்.88.1-2)

உம்பெரிய நாட்டில், என்னுடன் போர் செய்பவர், உள்ளாரோ என்ற பகை மன்னர்க்கு, எம் நாட்டில் அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிர்க்கும் பாம்பு போன்ற இளைய வலிய வீரரும் உள்ளனர். அது மட்டுமன்று, மன்றில் உள்ள முழவில், காற்றால் அசைவு ஏற்பட்டு ஒலியுண்டானால் அதைப் போர்ப்பறையினது ஓசை என்று எண்ணி மகிழும் எம்மன்னனும் உள்ளான் என்று அதியமான் நெடுமான் அஞ்சியைப் பற்றி ஔவையார் பாடியுள்ளமையால், பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 89.3-9).

அதியமான் நெடுமான் அஞ்சி, தன் வலிய வீரத்தின் காரணமாக வெற்றி பொருந்திய வாளேந்திப் பகைவர் தம் போர்க்களத்தில் அப்பகைவர் இறக்குமாறு

வென்றவன் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை ஔவையார்,

*"வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்*
*களம்பட......................."* (புறம்.91.1-2)

என்னும் பாடல் வரிகளால் புலப்படுத்தியுள்ளார்.

அதியமான் நெடுமான் அஞ்சி, தன் வீரத்தின் காரணமாகப் பகைவரின் காவல் பொருந்திய மதிலையுடைய அரண் பலவற்றையும் வென்றவன் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியும் ஔவையாரால்,

*"..................ஒன்னார்*
*கடிமதில் அரண்பல கடந்து*
*நெடுமான் அஞ்சி............"* (புறம். 92.4-6)

என்னும் பாடல் வரிகள் மூலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும் அதியமான் நெடுமான் அஞ்சி, தன் வீரத்தின் காரணமாகப் பெரிய தகுதியை உடையவனாய், தேனீக்கள் ஒலிக்கும் வாயிலில், வந்து புகுகின்ற மதங் கொண்ட யானைகள், போர்க்களத்தில் விழும்படி பகைவர் தம் போர்க்களத்தில் பகைவரைக் கொன்று அதனால், விழுப்புண்பட்டவன் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 93.2-4,12-15).

அதியமான் நெடுமான் அஞ்சி, தன்னுணர்வு காரணமாக, யானை மதங்கொண்ட போது எப்படிக் கொடியதாய் இருக்குமோ, அப்படித் தன் பகைவர்க்குக் கொடியவனாய் இருந்தான் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்தும் ஔவையாரின்,

*"....................மற்றதன்*
*துன்னருங் கடாஅம் போல*
*இன்னாய் பெருமநின் ஒன்னா தோர்க்கே"* (புறம். 94.3-5)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தப்பட்டுள்ளது.

**1.4.32.4.** அதியமான் நெடுமான் அஞ்சிக்கும், தொண்டைமானுக்கும் நிகழ இருந்த போரைத் தவிர்ப்பதற்காகத் தொண்டமானிடம் தூது சென்ற ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சி, தன் வீரத்தின் காரணமாகக் கூரிய வேற்படையின் துணை கொண்டு பகைவரைக் குத்துவதால் அவனது வேற்படையின் முனை முறிந்து கொல்லனது உலைக்களக் கொட்டிலில், பழுதாகிக் கிடக்கின்றன என்று கூறினமையால், தொண்டைமானிடம் அதியமான் போர் ஆற்றல் மிக்கவன் என்பதை ஔவையார் புலப்படுத்தியதிலிருந்து தொண்டமான் எதிர்நிலைப் பாத்திரமானான்.

> *"...................... அவ்வே*
> *பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து*
> *கொல்துறைக் குற்றில மாதோ ........"* (புறம். 95.3-5).

**1.4.32.5.** அதியமான் நெடுமான் அஞ்சி, தன் வீரத்தின் காரணமாகப் போர் செய்வதற்காக உறையினின்றும் உருவிய வாள்கள் பகைவரின் காவல் மிக்க அரணை அழித்ததோடு, பகைவரைத் தாக்கித் தசையில் மூழ்கி வடிவத்தை இழந்தன. அவனுடைய வேல்களோ குறும்பர் சேர்ந்த அரண்களை வென்று பகைவரின் நாட்டை அழித்ததோடு கரிய காம்புடன் ஆணிகள் நிலை கலங்கிக் கெட்டன என்றமையால், குறும்பர் எதிர்நிலையாயினர் (புறம். 97. 1-7).

**1.4.32.6.** அதியமான், தன் வீரத்தின் காரணமாக கோவலூரிலிருந்து ஆட்சி செய்து வந்த மலாடர்[78] மன்னன் மேல் பகைமை உண்டானதன் காரணமாகப் பெரும்படையுடன் படையெடுத்து அவனை வென்றான். அதியமானின் யானைப் படை செல்வதைக் கண்ட பகைவர் தம் அரணில் இருந்த கதவுகளையும், கணைய மரங்களையும் மாற்றிப் புதியனவாய் இட்டனர் என்றமையால் மலாடர் மன்னன் எதிர்நிலையானான். இச்செய்தி, ஔவையாரின்,

> *"...................... இன்றும்*
> *பரணன் பாடினான் மற்கொல் மற்றுநீ*
> *முரண்மிகு கோவலூர் நூறிநின்*
> *அரண்அடு திகரி ஏந்திய தோளே"* (புறம்.98.1-11, 99.11-14)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.32.7.** அதியமான் நெடுமான் அஞ்சி, தன் வீரத்தின் காரணமாகப் பகைத்துப் படையெடுத்துச் சென்று போர் முரசு கொண்டு முழக்கும் ஏழ்மன்னருடன் போரிட்டு, அப்போரில் வெற்றி பெற்று நின்றான்.[79] அன்றும் பாடுபவர்க்கு அரிய புகழ் உடையவனாய் விளங்கினான் என்றமையால் புகழ்மிக்கவன் என்னும் பொறாமை காரணமாகச் சேரன் (சேரமான் யானைகட்சேய் மாந்தரஞ்சேலிரும்பொறை), சோழன் (சோழன் நலங்கிள்ளி), பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகிய ஏழ்மன்னரும் எதிர்நிலையாயினர். இதனை ஔவையார்,

> "......................செருவேட்டு
> ***இமிழ்குரல் முரசின் எழுவரோடு முரணிச்***
> ***சென்றுஅமர் கடந்துநின் ஆற்றல் தோற்றிய***
> ***அன்றும் பாடுநர்க்கு அரியை*** ........." (புறம். 99. 8-11)

என்னும் பாடல் வரிகள் வாயிலாக மொழிந்துள்ளனர்.

**1.4.32.8.** இரவை என்னும் ஊரினர், பகை மன்னர், தொண்டைமான், குறும்பர், கோவலூர் மலாடர் மன்னன், சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் போன்ற ஏழ்மன்னர்கள், அதியமான் நெடுமான் அஞ்சிக்கு, அவனது அச்சத்தின், படை வலிமையின், மாற்றார் பொருளைக் கவருதலின், வீரத்தின், தன்னுணர்வின், போர் ஆற்றலின், பனகனமயின், புகழ்மிக்கவன் என்னும் பொறாமையின் காரணங்களால் எதிராளியானார்கள்.

## <u>1.4.33. மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன்:</u>

**1.4.33.0.** இவன் மலையர் குடியைச் சேர்ந்தவன். இவனுக்கும் சேனாபதி (ஏனாதிதிரு, சேனாபதிஸ்ரீ) என்ற பட்டப்பெயர் சூட்டப்பட்டுள்ளது. சோழனின் மூன்று படைத்தலைவர்களில் இரண்டாமவன் சோழிய ஏனாதி திருக்கண்ணன். சோழரின் புலி உருவம் பொறித்த கோட்டையை உடையவன். இவனது காலம் கி.மு. 150-125.[80]

**1.4.33.1.** சோழிய ஏனாதி திருக்கண்ணன், பகைவரிடம் தோற்று முள்ளூர் மலையில் ஒளிந்து கொண்டிருந்த சோழ மன்னனை, தன் வீரத்தின் காரணமாக மீட்டு அழைத்துச் சென்று, திங்கள் போன்ற வெண்குடையை வெளிப்படுத்தித்

தோற்றுவித்து, அக்குடைக்குப் புதுமை உண்டாகுமாறு சோழ நாட்டின் அரசனாக்கிப் புகழ் மேம்படுமாறு நிலை நிறுத்தினான் என்பதால், சோழ மன்னனுக்குப் பகைவர்களாக இருந்தவர்கள் இவனுக்கு எதிர்நிலையாயினர். இச்செய்தி மாறோகத்து நப்பசலையாரின்,

"அரசிழந்து இருந்த அல்லற் காலை
............................................................
...............................முன்னூர் மீமிசை
அருவழி இருந்த பெருவிறல் வளவன்
மதிமருள் வெண்குடை காட்டி அக்குடை
புதுமையின் நிறுத்த புகழ்மேம் படுந" (புறம்.174.6;13-16)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

**1.4.33.2.** சோழ மன்னனுக்குப் பகைவர்களாக இருந்தவர்கள், மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிராளியானார்கள்.

## 1.4.34. ஏனாதி திருக்கிள்ளி:

**1.4.34.0.** கிள்ளி வளவன் விட்டுச்சென்ற பரந்த சோழ நாட்டை மூன்று சோழ மன்னர்கள் பங்கு போட்டுக் கொண்டு ஆண்டு வந்தனர். சோழனின் சேனாதிபாதி, ஏனாதி திரு, சேனாதிபதிஸ்ரீ என்ற பட்டத்தோடு மூன்று படைத் தலைவர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவனே, மூன்றாவன் ஏனாதி திருக்கிள்ளி. இந்த ஏனாதி திருக்கிள்ளி, கிள்ளி என்ற பெயருடைய சோழர் வழியில் வந்தவன். இவன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற சோழனின் படைத்தலைவர்களில் ஒருவனாக இருக்கலாம் என்றும் கருத இடமளிக்கிறது (புறம். 167). இவனது காலம் கி.மு. 150-125.[81]

**1.4.34.1.** ஏனாதி திருக்கிள்ளியின் பகைவர், அவனைக் கண்ட அளவில் அச்சம் காரணமாகப் புறம் காட்டி ஓடுகின்றனர் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இதனை, கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார்,

"*அவரே நிற்கா ணின்புறங் கொடுத்தலின்*" (புறம். 167.5)

என்னும் பாடல் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

**1.4.34.2.** பகைவர், ஏனாதி திருக்கிள்ளிக்கு அச்சத்தின் காரணமாக எதிராளியானார்கள்.

**1.4.35. கொடுமுடி:**

**1.4.35.0.** குறும்பொறை என்னும் மலை நாட்டை ஆண்டவன் கொடுமுடி. அதன் பக்கத்தில் நெடிய மதில் சூழ்ந்த ஆமூரைக் காத்து வந்தவன் இவனே. ஆமூர் சோழநாட்டில் உள்ள ஓர் ஊர். இவனது காலம் கி.மு. 150-125.[82]

**1.4.35.1.** வானில் பேரிடி இடித்ததற்கு இடமான உச்சியையும் மலர்மணம் நிறைந்த சாரலையும் உடையது குறும்பொறை என்னும் மலை.

அம்மலையின் கிழக்கே இருந்த, நெடிய மதில் சூழ்ந்த ஆமூர் என்னும் ஊரைக் கொடுமுடி என்னும் மன்னன் காத்து வந்தான். இக்கொடுமுடி, தன் வீரத்தின் காரணமாக வில்லேந்திப் போரிடுவதில் வல்ல பெரிய கையினன் ஆகிய சேர மன்னனின் மதங்கொண்ட யானையின் கொம்பினை ஒடியும்படி அழித்துத் தன் ஆமூரைக் காத்தவன் என்றமையால், சேரமன்னன் எதிர்நிலையானான். இக்கருத்தினை, ஆமூர்க் கௌதமன் சாதேவனார்,

"*விசும்பின் நல்ஏறு சிலைக்கும் சேண்சிமை*
*நறும்பூஞ் சாரற் குறும்பொறைக் குணாஅது*
*வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்*
*மிஞிறு மூசுகவுள சிறுகண் யானைத்*
*தொடியுடைத் தடமருப்பு ஒடிய நூறி*
*கொடுமுடி காக்கும் குருஉக்கண் நெடுமதில்*
*சேண்விளங்கு சிறப்பின் ஆமூர் எய்தினும்*" (அகம். 159.13-19)

என்னும் பாடல் வரிகள் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார்.

(மேற்கண்ட பாடலில் குறிப்பிடப்படும் வானவன் சேரமான் குட்டவன் கோதையாக

இருக்கலாம் என்றும் அவன் படைத்தலைவன் பிட்டன் ஆமூரின் மேல் படையெடுத்தபோது கொடுமுடியால் தோற்கடிக்கப்பட்டான் எனவும் கருத முடிகிறது.)

**1.4.35.2.** சேரர், கொடுமுடி என்னும் குறுநில மன்னனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிரியானார்கள்.

**1.4.36. தொண்டையர்:**

**1.4.36.0.** கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் தொண்டையர் என்போர் கடல் வழியாகக் கூடூர்ப் பகுதியில் புகுந்து, வேங்கடத்தின் ஒரு பகுதியைக் கைப்பற்றியவர்கள். வேங்கடமலை அவர்களுக்குரியது. பின்னர் மெல்ல மெல்லக் காஞ்சிபுரத்தை அடைந்து அங்கிருந்து ஆட்சி புரிந்தவர்கள். இவர்கள் திருமால் அடியவர்கள். காஞ்சிபுரத்து திருவெஃகாவில் திருமால்கோயிலை இவர்கள் கட்டியிருக்கலாம். பேராற்றல் மிக்க யானைகளைப் பெற்றவர் ஆதலால் போர்த்திறமும் மிக்கவர்கள். இவர்கள் சோழநாட்டு மன்னருள் ஒருவகையினர். இவர்கள் வம்சா வழியைச் சேர்ந்தவர்களே தொண்டைமான், தொண்டைமான் இளந்திரையன் போன்றோர். இவர்களது தலைநகரம் காஞ்சிபுரம். இவர்களது காலம் கி.மு. 150-125க்கு முற்பட்டது எனலாம்.[84]

**1.4.36.1.** தொண்டையர், மாற்றார்தம் ஆநிரையைக் கவர்ந்து வரவேண்டும் என்னும் காரணத்திற்காக வேங்கடமலைக்கு அப்பாலிருக்கும் காட்டுமல்லிகை மலர்களைச் சூடி, பகைவர் போர்முனையில் கள்ளாகிய நறவையை விடியற்காலத்தில் பலியாகச் (விடியற்காலையில் நறவுடன் கொற்றவைக்கு நாட்பலி கொடுக்கும் உணவு) செலுத்துவர் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை, தாயங்கண்ணனாரின்,

> ***"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்***
> ..................................
> ***சுரிஇரும் பித்தை சுரும்புபடச் சூடி***
> ***இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை***
> ***நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்"*** (அகம்.213.1.5-7)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.36.2.** பகைவர், தொண்டயருக்கு, ஆநிரை கவர்ந்ததின் காரணமாக எதிர்நிலை ஆயினர்.

**1.4.37. நல்லியக்கோடன்:**

**14.37.0.** இவன் ஓவியர் பெருமகன் என்றும் மாவிலங்கையின் தலைவன் என்றும் கூறப்படுகிறான். மூவேந்தர் தலைநகரங்கள் வறுமையுற்ற பின், ஏழு வள்ளல்கள் மாய்ந்த பிறகு ஈகையை மேற்கொண்டவன் நல்லியக்கோடன் என்று சிறு பாணாற்றுப்படை கூறுகிறது. இவன், ஓய்மான் நல்லியக்கோடன் என்றும் அழைக்கப்பட்டான். இவன், திண்டிவனப் பகுதியை ஆட்சி புரிந்துள்ளான். இவன் நாட்டில் எயில்பட்டினம், வேலூர், ஆமூர் என்ற ஊர்கள் இருந்துள்ளன. இவனது காலம் கி.மு. 100-75.[85]

**1.4.37.1.** நல்லியக்கோடன், தன் வீரத்தின் காரணமாக வன்மையும் வெற்றியும் உடைய பகைவரை, அவர்தம் நாட்டை விட்டுப் போகச் செய்தவன் என்பதால் பகைவர்கள் எதிர்நிலையாயினர். இதனை, இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்,

"*திறல்சால் வென்றியொடு தெவ்வப்புலம் அகற்றி*" (சிறு. 246)

என்னும் பாடல் வரி மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.37.2.** நல்லியக்கோடன், தன் வீரத்தின் காரணமாக வெற்றி பொருந்திய வேலையுடைய முடிவேந்தர்களான சேர, சோழ, பாண்டியரின் அரண்களை அழித்தவன் என்றமையால் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

"*விறல்வேல் மன்னர் மன்எயில் முருக்கி*" (சிறு. 247)

**1.4.37.3.** பகைவர், சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர் போன்றோர் ஓய்மான் நல்லியக்கோடனுக்கு அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணங்களால் எதிரியானார்கள்.

## 1.4.38. தொண்டைமான் இளந்திரையன்:

**1.4.38.0.** தொண்டைமான் இளந்திரையன் எனப்படும் இவன் பெரும்பாண் ஆற்றுப்படையின் தலைவன். காஞ்சிபுரத்திலிருந்து மாமல்லபுரம் வரை பரவியிருந்தது இளந்திரையனின் நாடு. இவன் காஞ்சிபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்துள்ளான். இவனது காலம் கி.மு. 100-75.[86]

**1.4.38.1.** தொண்டைமான் இளந்திரையன், காஞ்சி நகரத்தில் கொடைத் தன்மை உடையவனாய் விளங்கினான். இவன் தன் வீரத்தின் காரணமாக அளவற்ற பெரும் படையுடன் சினந்து தன் மீது வந்த பகைவர் கெடும்படி ஆரவாரம் செய்தவன் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தி, கடியலூர் உருத்திரங் கண்ணனாரின்,

> "**அடங்காத் தானையொடு உடன்று மேல்வந்த**
> **ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்துக்**
> **கச்சி யோனே கைவண் தோன்றல்**" (பெரும். 418-420).

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.38.2.** யானையைக் கொன்ற அரிமா பின்பு அந்த யானையினும், சிறந்த புலிக்குட்டியைப் பாய்ந்து கொல்ல எண்ணியதைப் போன்று, தொண்டமான் இளந்திரையன் முதலில் புலவர் முதலியவர்க்கு அணிகலன் முதலியவற்றைத் தரும் கொடைக்கடனை ஆற்றுவான். அதன் பின்பு மிக்கு எழும் தன்னுணர்வு காரணமாகப் பகை மன்னரின் மதில்களை அழித்து, அந்த அரசரின் முடிக்கலன் முதலியவற்றைக் கொள்ளும் வெற்றியையே விரும்புவான். அத்துடன் அமையாது, பகையரசர் சந்து செய்து கொள்ள எண்ணி முயன்றபோதும் அதற்கு உடன்படாதவனானான் என்பதனால் பகை மன்னர் எதிர்நிலையாயிளர் (பெரும். 448-453).

**1.4.38.3.** திரையன் நாடு திருவேங்கடம் வரை பரவியிருந்தது. இவன் திருமாலிடம் அன்பு கொண்டிருந்துள்ளான். வேங்கட மலைக்குரிய இவனைத் தொண்டைமான் இளந்திரையன் எனக் கருதுபவரும் உளர். இத்திரையன், தன் வீரத்தின் காரணமாக வேற்படை கொண்டு பல வெற்றிகள் பெற்றவன் என்பதால், பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை காட்டூர் கிழார் மகனார் கண்ணனாரின்,

*"வெவ்வேல் திரையன் வேங்கட நெடுவரை"* (அகம்.85.9)

என்னும் பாடல் வரி வெளிப்படுத்தியுள்ளது.

**1.4.38.4.** பகைவர், பகை மன்னர் போன்றோர் தொண்டைமான் இளந்திரையனுக்கு, அவனது வீரத்தின், தன்னுணர்வுமிக்கப் பகைவரது நாட்டில் பொருள் கவர்தல் காரணங்களால் எதிராளியாக இருந்துள்ளனர்.

## 1.4.39. கண்ணன் மகன் எழினி:

**1.4.39.0.** இவன் கண்ணன் எழினி என்றும் அழைக்கப்பட்டான். தமிழ்நாட்டில் இருந்த மலை சூழந்த நாட்டை ஆண்டவன். முதுகுன்றத்தைச் சார்ந்த நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான். இவனது காலம் சரியாக அறிந்துணர இயலாமல் உள்ளது.[87]

**1.4.39.1.** கண்ணன் மகன் எழினி எனப்படும் இவனது ஊர், தேன் மணம் மிக்க முதுகுன்றம். இவன் வீரம் மிக்க படையுடன் வீரத்தையே செல்வமாகக் கொண்டதன் காரணமாகத் தன்னுடன் போர் செய்ய முற்பட்டு வந்த பகைவரை ஓட்டினவன் என்றமையால் பகைவர் எதிர்நிலையாயினர். இதனை, மாமூலனார்,

*"................... முனைஎழ*
*முன்னுவர் ஓட்டிய முரண்மிகு திருவின்*
*மறம்மிகு தானை, கண்ணன் எழினி*
*தேம்முது குன்றம் .............."* (அகம். 197. 5-8)

என்னும் பாடல் வரிகள் மூலம் மொழிந்துள்ளார்.

**1.4.39.2.** பகைவர், கண்ணன் மகன் எழினிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலை ஆயினர்.

## 1.4.40. எயினர் மன்னன்:

**1.4.40.0.** (1) ஆய்அண்டிரன் கடையெழு வள்ளல்களுள் ஒருவன். (2) ஆஅய்எயினன் பறவைகளின் காவலன். (3) எயினன் என்றொரு மன்னன் வாகை நகரைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்துள்ளான். இவன் கொடைத்தன்மை உடையவன்.[88]

மேற்கண்ட மூவரிலிருந்து முற்றிலும் வேறுபட்டவன் எயினர் மன்னன். இவனைப் பற்றிய வரலாறு முழுமையாக அறியக் கிடைக்கவில்லை. எயினர் என்பதற்குப் பாலைநில மக்கள், மறவர், வேடர் என்ற பொருள் கழகத் தமிழகராதியில் காணக்கிடக்கிறது.[89] எனவே, எயினர் மன்னன் என்றால், பாலைநில மக்களின் தலைவன் என்ற பொருளில் பொதுப்பட அறியலாம். இவன் அறப்பண்புகள் இல்லாதவன். வறண்ட பலகுன்றுப் பகுதிகளை ஆண்டவன் என்பதும் தெரிகிறது.[90] இவனது காலம் இன்னதென்று அறிய கிடைத்திலது.

**1.4.40.1.** எயினர் மன்னன், கொள்ளையடிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, வழிப்போக்கரிடம் உள்ள பொருள்களைப் பறிக்குமாறு தன் ஏவலர்களுக்குக் கட்டளை இட்டுள்ளான். வழிச் செல்பவரிடம் பொருள் இல்லையாயின், வழிச்செல்வாரின் உயிரைப் போக்க வேண்டும்.

ஏவலர்கள், அவ்வாறு பொருள் இல்லாதவரை உயிரைப் போக்காமல் தப்பவிட்டதற்காக யானைக் கொம்பும் புலித்தோலும் தண்டமாகத் தர வேண்டும்.

அறப்பண்பு சிறிதும் இல்லாத இத்தகைய எயினர் மன்னன் ஆளும் வறண்ட பல குன்றுகள் என்று தெரிவித்துள்ளமையால் எயினர் மன்னனுக்கு, வழிப்போக்கரும், எயினர் மன்னனின் ஏவலர்களும் எதிர்நிலையாயினர். இதனை, கடுத்தொடைக்காவினாரின்,

> **"வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்**
> **கைப்பொருள் இல்லை ஆயினும் மெய்க்கொண்டு**
> **இன்உயிர் செகாஅர் விட்டுஅகல் தப்பற்குப்**
> **பெருங்களிற்று மருப்பொடு வரிஅதள் இறுக்கும்**
> **அறன்இல் வேந்தன் ஆளும்**
> **வறன்உறு குன்றம் .... .... ........."** (அகம்.109.10-15)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.4.40.2.** வழிப்போக்கர், எயினர் மன்னனின் ஏவலர்கள் போன்றோர் எயினர் மன்னனுக்குப் பொருளின் ஆசை காரணமாக எதிர்நிலை ஆயினர்.

**1.4.41. பெருவேந்தன்:**

**1.4.41.0.** இப்பெருவேந்தன் யார் என அறியக்கிடக்கவில்லை. பெருவேந்தனாகிய இவனுக்கும் சீறூர் மன்னன் ஒருவனுக்கும் போர் நிகழ்ந்தது பற்றி கோவூர்கிழார் என்னும் புலவர் பாடியுள்ளமையால், இப்பெருவேந்தனது காலம் கோவூர் கிழாரின் காலமாக (கி.மு. 175-150) இருக்கலாம் எனக் கருத வாய்ப்புள்ளது.[91]

**1.4.41.1.** பெருவேந்தன் ஒருவனுக்கும் சீறூர் மன்னன் ஒருவனுக்கும் போர் நிகழ்ந்தது. பெருவேந்தன் சினந்து எறிந்தவேல் சீறூர் மன்னனின் சாந்து பூசிய மார்பில் தைத்து, உருவிச் சென்றது. சீறூர் மன்னன் எறிந்த வேல் பெருவேந்தனின் யானையின் நெற்றியில் பாய்ந்தது. எனவே பெருவேந்தனுக்குச் சீறூர் மன்னன் எதிர்நிலையானான். இதனைக் கோவூர்க் கிழார்,

> "*சீறூர் மன்னன் சிறியிலை எஃகம்*
> *வேந்துஊர் யானை ஏந்துமுகத் ததுவே*
> *வேந்துஉடன்று எறிந்த வேலே என்னை*
> *சாந்தார் அகலம் உள்மகிழ்ந் தன்றே*" (புறம்.308.4-7)

என்னும் பாடல் வரிகளால் மொழிந்துள்ளார்.

**1.4.41.2.** சீறூர் மன்னன் ஒருவன், பெருவேந்தனுக்குக் கோபம் காரணமாக எதிரியாக இருந்துள்ளான்.

**1.4.42. மன்னன்:**

**1.4.42.0.** இவனைப் பற்றிய வரலாறு ஏதும் அறிய இயலவில்லை. இவன் சங்ககாலக் குறுநில மன்னனாக இருத்தல் வேண்டும். இவன் பழைய குடிகள் பொருந்தியவன். இவனது காலம் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனாரின் காலமாகிய (கி.மு. 150-125) இருக்கலாம் எனக் கருத வாய்ப்புள்ளது.[92]

**1.4.42.1.** மன்னன் பழைய குடிகள் பொருந்தியவன். இவன் மகளை, முன்னாளில் திருமணஞ் செய்து கொள்ள வேண்டி முதிய மன்னர் பலர் வந்தனர். அவர்களுக்குப் பெண்ணைத் தராத பெண்ணின் தமையர் அஞ்சத்தக்க இயல்பு

உடையவராய்ப் போரிடத் தயாராயினர் என்பதால் மன்னன் என்பவனுக்கும் பெண்ணின் தமையருக்கும் பெண் கேட்டு வந்த மன்னர் பலர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை, காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்,

> ***"தொல்குடி மன்னன் மகளே முன்நாள்***
>
> ***கூறி வந்த மாமுது வேந்தர்க்கு***
>
> ......................
>
> ***அஞ்சுதகவு உடையர் இவள்தன்னை மாரே"*** (புறம்.353.11-12;17)

என்னும் பாடல் வரிகளால் புலப்படுத்தியுள்ளார்.

**1.4.42.2.** பெண் கேட்டு வந்த மன்னர் பலர் பழங்குடிகள் பொருந்திய மன்னன் என்பவனுக்குப் பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்க இசையாததன் காரணமாக எதிராளியாக இருந்துள்ளனர்.

**<u>1.4.43. முடிவுகள்:</u>**

1. பகைவர், அழிசிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிரிகள்.

2. அதிகன் கொங்கருக்கு, அவர்களது வீரத்தின் காரணமாக எதிரி.

3.1. பகைவர், வேளிர் போன்றவர்கள் முதலாம் திதியனுக்கு அவனது தன்னுணர்வின், வீரத்தின் காரணங்களால் எதிராளிகள்.

3.2. கோசர், இரண்டாம் திதியனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

3.3. அன்னி, மூன்றாம் திதியனுக்கு, அவனது காவல் மரத்தை வெட்டியதன் காரணமாக எதிராளி.

4. நன்னனுக்குப் பகைவராய் இருந்த வீரர்கள், அதிகன், ஆஅய்எயினன் போன்றோர் மிஞிலிக்கு, அவனது அஞ்சாமையின், வீரத்தின் காரணத்தால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

5. முதலாம் எவ்வி, நன்னன் மற்றும் அவனது படைத்தலைவன் மிஞிலி ஆகியோர் அகுதைக்கு, அவன் சக்கரப் படை வைத்திருந்ததின், ஆஅய்எயினனின் உடலை எடுத்து வந்து வேள்மகளிரிடம் ஒப்படைத்ததின் காரணங்களால் எதிராளிகள்.

6. பகைவர், தழும்பனுக்கு, அவனது மரங்களைப் பாழாக்கியதின் காரணமாக எதிராளிகள்.

7. நன்னனின் படைத்தலைவன் மிஞிலி, மற்றும் பகைவர் போன்றோர் ஆஅய்எயினனுக்கு, அவனது வீரத்தின், அஞ்சாமையின் காரணத்தால் எதிராளிகள்.

8.1. பிண்டன், பிண்டனது மகளிர், பகைவர் மற்றும் பகை மன்னர், நீராடச் சென்று மாங்கனி உண்ட பெண் மற்றும் அவளது சுற்றத்தார், கோசர், புனல் நாட்டவர் போன்றோர் முதலாம் நன்னனுக்கு, அவனது வீரத்தின், பெண் கொலை புரிந்ததின், தன்னுணர்வின், காவல் மரத்தை வெட்டி வஞ்சினம் உடைய கோசர் புகுந்ததின், சினத்தின் காரணங்களால் எதிராளிகள்.

8.2. பகைவர், அவனது ஏவலை ஏற்காத வீரர்கள், கொடைக்கடன் முடிக்காத பிற மன்னர்கள் போன்றோர் ஐந்தாம் நன்னனுக்கு, அவனது நாடு பிடிக்கும் ஆசையின், பகைவரது ஆரவாரத்தைப் பொறுத்துக் கொள்ளாமையின், பகைவரது இகழத்தக்க நிலையின், வீரத்தின், கொடைக் கடனை உணர்த்த வேண்டியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

9.1. பகைவர், அகுதை என்னும் மன்னன் போன்றோர் முதலாம் எவ்விக்கு, அவனது மார்பில் வேலால் தைத்த புண்கள் பல இருந்தும் கொல்லப்பட்டமையின், வீரத்தின், விழுப்புண் பட்டு போர்க்களத்தில் இறந்ததின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

9.2. நெடுமிடல் என்பவன் இரண்டாம் எவ்விக்கு, அவனது ஏவலைக் கேட்டு நடக்கவில்லை என்னும் காரணமாக எதிராளி.

9.3. அன்னி என்பவன் மூன்றாம் எவ்விக்கு, அவனது அறிவுரையை ஏற்றுக் கொள்ளாததின் காரணமாக எதிர்நிலையானான்.

10. நன்னன், பகைவர், அன்னிமிஞிலி, மோகூர் மன்னன் பழையன் போன்றோர் கோசருக்கு அவர்தம் தன்னுணர்வு மற்றும் வஞ்சினம், அஞ்சாமை, ஆற்றல், அன்னிமிஞிலியின் தந்தையின் கண்களைப் பிடுங்கியது, வஞ்சினம் போன்ற காரணங்களால் எதிராளிகள்.

11. கழுவுள் என்பவன், பதினான்கு வேளிர்க்கு, அவர்கள் ஒன்று கூடித் தாக்கிப் போரிட்டதின் காரணமாக எதிராளி.

12. பசும்பூண் பாண்டியனும் அவனது வீரர்களும் பெருஞ்சாத்தனுக்கு அவனது ஆண்மையின் காரணமாக எதிராளிகள்.

13.1. கணையன், ஆரியமல்லன், வெளியன் தித்தன் (சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளி) போன்றோர் முதலாம் பாணனுக்கு அவனது வல்லமை, அச்சம் காரணத்தால் எதிராளிகள்.

13.2. பகைவர், இரண்டாம் பாணன் எனப்படும் மன்னனுக்கு, அவன் பிறர் பொருளைக் கவர்ந்து வரவேண்டும் என்னும் காரணத்திற்காக எதிர்நிலைப் பாத்திரம்.

14.1. கொங்கர், அறுவர் கூட்டணியாகச் சேர்ந்த சேரமன்னனின் படைத்தலைவர்கள் நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை ஆகியோர் முதலாம் பழையனுக்கு, பிறருக்கு உதவல் வேண்டியதின், வீரத்தின் காரணங்களால் எதிராளிகள்.

14.2. அறுகை, சேரன் செங்குட்டுவன் போன்றோர், இரண்டாம் பழையன் எனப்படும் மோகூர் மன்னனுக்கு, அவனது வீரத்தின், காவல் மரமான வேப்ப மரத்தைக் காக்க இயலாமையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

14.3. மோரியர் எனப்படும் பகைவர், கிள்ளிவளவன் போன்றோர் மூன்றாம் பழையன்

எனப்படும் மோகூர் மன்னன் பழையனுக்கு, அவன் பகைவரின் போர்முனையை அழித்தமையின் எதிரியின் குதிரை, யானை போன்றவற்றைக் கைப்பற்றியதின் காரணங்களால் எதிராளிகள்.

15. கோசர்கள் அன்னிமிஞிலிக்கு, அவள் அக்கோசர்களைக் கொன்று பழிதீர்த்துக் கொண்டதன் காரணமாக எதிர்நிலையானார்கள்.

16. தித்தன் வெளியன் அவையிலிருந்த பாணன், பழையன் போன்றவர்கள் கட்டி என்பவனுக்கு, அவனது தன்னுணர்வின் கூட்டணியில் சேர்ந்து போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

17.1. சோழ மன்னனும் சோழனின் படைத்தலைவன் மத்தியும் முதலாம் எழினிக்கு, அவன் அவர்களது ஏவலைப் கேட்டு நடக்காத காரணத்தால் எதிர்நிலையானார்கள்.

17.2. பெருஞ்சேரல் இரும்பொறை, கூற்றம் போன்றோர் இரண்டாம் எழினி எனப்படும் அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினிக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

17.3. பாண்டியன் நெடுஞ்செழியன், (சேரன், சோழன், திதியன், எருமையூரின் தலைவன், இருங்கோ வேண்மான், பொருநன் ஆகியோருடன் எழுவர் கூட்டணியாக வந்த) மூன்றாம் எழினிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிராளி.

17.4. படையெடுப்பால் பாதிக்கப்பட்ட நாட்டு மக்கள், தன்னுடன் பகை கொண்டவர்கள் போன்றவர்கள் நான்காம் எழினி எனப்படும் பொகுட்டெழினிக்கு, அவனது வீரத்தின், கவர்ந்த நிரையை மீட்டல் காரணமாகவும் எதிராளிகள்.

18. பகை மன்னர், கொங்கர் போன்றவர்கள் ஆய்அண்டிரனுக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

19. இரவலர், அள்ளனுக்கு, அவனை நாடிவராத காரணத்தால் எதிராளியானார்கள்.

20.1. பகைவர், ஆரியர்கள், ஆநிரைக்குரியோர், ஓரி போன்றவர்கள் முதலாம்

மலையமான் திருமுடிக்காரிக்கு, இரவலர்களுக்குக் கொடை அளிக்க ஆநிரைகளைக் கவர்ந்ததின், வீரத்தின் காரணத்தால் எதிரியானார்கள்.

20.2. சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை, பிற மன்னர் மற்றும் பகைவர் போன்றவர்கள், இரண்டாம் மலையமான் திருமுடிக்காரிக்கு, அவனது உதவும் மனப்பான்மையின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

21. பகைவர், மூவேந்தராகிய சேர, சோழ, பாண்டியர், மற்ற மன்னர் போன்றவர்கள் பாரிக்கு, அவனது வீரம், தன்னுணர்வு, பொறாமை, ஆற்றல் காரணங்களால் எதிராளிகள்.

22. மூவேந்தரும் பாரியின் மகளிர்க்கு, பாரியை வஞ்சித்துக் கொன்று விட்டதன் காரணமாக எதிரியானார்கள்.

23. பாரியை எதிர்த்த மன்னர், பறம்பு நாட்டு மகளிர்க்கு, பகைவரின் குதிரைப் படையை அறிய வேண்டும் என்னும் காரணத்தினால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

24. பகைவர், விராஅன் எனப்படும் வயவனுக்கு, அவனது வேற்படை வல்லமை காரணமாக எதிராளி.

25. பகைவர், பிற அரசர்கள் போன்றோர் விச்சிக்கோனுக்கு, அவனது வீரத்தின், சினத்தின், விற்படை வல்லமையின் காரணங்களால் எதிரியானார்கள்.

26. மழவர் எனப்படும் மழநாட்டார், பகைவர் போன்றவர்கள் புல்லி என்னும் குறுநில மன்னனுக்கு, பகைவரது செல்வத்தைக் கவர்ந்து கொள்ளுதலின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

27. பெரியன், திதியன் போன்றோர் அன்னிக்கு, பகைமையின், காவல் மரத்தை வெட்டிச் சாய்த்தமையின் காரணங்களால் எதிராளியானார்கள்.

28. பகைவர், கடலன் வழுதிக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிரியானார்கள்.

29. பகைவர், சிறுகுடிகிழான் பண்ணனுக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிராளிகள்.

30. பகைவர், கோவலர் (இடையர்) போன்றவர்கள், வடுகர் குலத்தோன்றல் எருமைக்கு, பகைவர்தம் பொருளைக் கவர்ந்து வருதல், கோவலரின் ஆநிரையைக் கவர்ந்து வருதல் காரணங்களால் எதிராளியானார்கள்.

31. பகைவர், ஆதன் எழினிக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிராளிகள்.

32. இரவை என்னும் ஊரினர், பகை மன்னர், தொண்டைமான், குறும்பர், கோவலூர் மலாடர் மன்னன், (சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் போன்ற) ஏழ்மன்னர்கள் போன்றவர்கள், அதியமான் நெடுமான் அஞ்சிக்கு, அவனது அச்சத்தின், படை வலிமையின், மாற்றார் பொருளைக் கவருதலின், வீரத்தின், தன்னுணர்வின், போர் ஆற்றலின், பகைமையின், புகழ்மிக்கவன் என்னும் பொறாமையின் காரணங்களால் எதிராளிகள்.

33. சோழ மன்னனுக்குப் பகைவர்களாக இருந்தவர்கள், சோழிய ஏனாதி திருக்கண்ணனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிராளியானார்கள்.

34. பகைவர், ஏனாதி திருக்கிள்ளிக்கு அச்சத்தின் காரணமாக எதிராளியானார்கள்.

35. சேரர், கொடுமுடி என்னும் குறுநில மன்னனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிரியானார்கள்.

36. பகைவர், தொண்டையருக்கு, ஆநிரை கவர்ந்ததின் காரணமாக எதிர்நிலை ஆயினர்.

37. பகைவர், சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர் போன்றோர் ஓய்மான் நல்லியக்கோடனுக்கு, அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணங்களால் எதிரியானார்கள்.

38. பகைவர், பகை மன்னர் போன்றோர் தொண்டைமான் இளந்திரையனுக்கு,

அவனது வீரத்தின், தன்னுணர்வுமிக்கப் பகைவரது நாட்டில் பொருள் கவர்தல் காரணங்களால் எதிராளிகள்.

39. பகைவர், கண்ணன் மகன் எழினிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலை ஆயினர்.

40. வழிப்போக்கர், எயினர் மன்னனின் ஏவலர்கள் போன்றோர் எயினர் மன்னனுக்குப் பொருளின் ஆசை காரணமாக எதிர்நிலை ஆயினர்.

41. சீறூர் மன்னன் ஒருவன், பெருவேந்தனுக்குக் கோபம் காரணமாக எதிராளி.

42. பெண் கேட்டு வந்த மன்னர் பலர், பழங்குடிகள் பொருந்திய மன்னன் என்பவனுக்கு, பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்க இசையாததின் காரணமாக எதிரிகள்.

சங்க இலக்கிய நூற்களில் காணப்படும் குறுநில மன்னர்களில், 48 குறுநில மன்னர்களுக்கும், கொங்கர்கள், கோசர், பதினான்கு வேளிர், தொண்டையர் போன்ற குறுநிலப் பகுதியை ஆண்ட மன்னர்களுக்கும் பாரி மகளிர், பறம்பு நாட்டு மகளிர் போன்றவர்களுக்கும் எதிர்நிலைப் பாத்திரங்கள் இருந்துள்ளனர்.

மேற்குறிப்பிட்ட குறுநில மன்னர்களில் அதியமான் நெடுமான் அஞ்சிக்கு,

(1) அச்சம்
(2) படைவலிமை
(3) பொருள் கவர்தல்
(4) வீரம்
(5) தன்னுணர்வு
(6) போர் ஆற்றல்
(7) பகைமை
(8) புகழ்மிக்கவன் என்னும் பொறாமை

போன்ற முக்கிய காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இவற்றுள், அவனது வீரம் அதிகக் காரணமாக இருந்துள்ளது.



# அடிக்குறிப்புகள்

1. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 189,3,9.
   சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, பக். 135-137.
2. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 205.
3. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 37,38,39,205,206.
4. மேலது, பக். 4,6,36, 236.
5. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப.92.
6. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 35-37.
7. மேலது, பக். 125, 126.
8. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 137.
   சங்க இலக்கியம், பன்முக ஆய்வு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 186.
9. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 11, 16, 260.
10. சங்க இலக்கியம் (அகம்), டாக்டர் சரளா இராசகோபாலன், ப. 119.
11. சங்க இலக்கியம் (அகம்), டாக்டர் சரளா இராசகோபாலன், ப. 119.
12. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 14-17, 187.
13. புறம். 348.5.
14. மேலது, 227.
15. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 235.
16. நற்றிணை, 300.9-11.
17. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 235.
18. மேலது, பக். 190, 12, 167.
    புறம், 148, 181, 208.
19. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 101.
20. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 50, 129, 240, 43, 84, 75, 130, 240,
    அகம். 199.
21. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 241, 129, 130, 96.
22. மேலது, பக். 7, 11-13.
23. சங்க இலக்கியம் (அகம்), டாக்டர் சரளா இராசகோபாலன், பக். 122, 114.
24. சங்க இலக்கியம் (அகம்), டாக்டர் சரளா இராசகோபாலன், ப. 118.
25. சங்க இலக்கியம், பன்முக நோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 158.

சங்க இலக்கியம் (அகம்), டாக்டர் சரளா இராசகோபாலன், பக்.121, 123,124.

26. சங்க இலக்கியம் (அகம்), டாக்டர் சரளா இராசகோபாலன், பக். 119, 120.

தமிழர் வரலாறு, மொழி ஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணர், ப. 58.

27. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 185, 241.

28. சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 182.

29. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 13, 14, 195, 196.

30. புறம், 202, 234.

31. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 7, 13, 14.

குறுந்தொகை, 19.

32. சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 256.

33. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 32, 19, 21, 196.

34. மேலது, பக். 128, 129, 196, 96.

35. மேலது, பக். 207 - 209.

அகம். 90.

36. சங்க இலக்கியம், பன்முகநோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 159.

37. சங்க இலக்கியம், பன்முக நோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 124.

38. சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 27.

தமிழர் வரலாறு, மொழிஞாயிறு, ஞா. தேவநேயப்பாவாணர், ப. 58.

39. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 270-272.

40. மேலது, பக். 197, 33, 19, 21.

41. மேலது, பக். 251, 30, 31, 19, 21.

42. மேலது, பக். 251, 120, 121, 96, 97.

அகநானூறு, முதல் தொகுதி, 113, பக். 540, 544.

43. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 30, 245, 19, 21.

44. மேலது, பக். 245, 85, 75.

45. மேலது, பக். 246, 112, 96.

பத்துப்பாட்டு, இரண்டாம் பாகம், மதுரைக்காஞ்சி, வரி, 507-510, ப. 180.

சங்ககால தமிழக வரலாறு, தொகுதி-2, பக். 170-171.

46. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 91.

47. சங்க கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2,பக். 34,35,20,21.

48. மேலது, பக்.28,20,21.

49. ஔவையார் அன்று முதல் இன்று வரை, டாக்டர் தாயம்மாள் அறவாணன், ப. 111.
50. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 188.
    சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 43.
51. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 81-83, 75, 126.
52. மேலது, பக். 126, 127, 196, 96.
53. மேலது, பக். 181, 175.
    சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 173.
54. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 177.
55. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 43, 48-50, 191.
    சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 190.
56. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 105.
57. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 52, 43.
    அகநானூறு, மூன்றாம் தொகுதி, 325.7-9, பக். 80-84.
58. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 64, 257, 54
59. சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர் இரா. சந்திரசேகரன், பக். 110, 65.
    இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 110.
60. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ. தட்சிணாமூர்த்தி, ப. 237.
61. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 110-112, 258, 96.
62. சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 184.
    சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 251, 252, 58-63, 54.
63. தமிழக வரலாறு, அ.மு. பரமசிவானந்தம், ப. 133.
    சங்ககாலத் தமிழர் வாழ்வு, லெ.ப.கரு. இராமநாத செட்டியார், ப. 115.
    இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 108.
    சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 179.
64. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 252, 62, 63.
    சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 185.
65. ஔவையார் அன்று முதல் இன்று வரை, டாக்டர் தாயம்மாள் அறவாணன், ப. 53.
66. புறநானூறு, முதல் தொகுதி, 116.

சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.

67. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 268, 71, 54.

68. மேலது, பக். 267, 268, 86-88, 54,75.

69. குறுந்தொகை 328இல் விச்சியர் தலைவன் குறும்பூரில் வேந்தரொடு பொருத செய்தி பேசப்பட்டது.
இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 101.

70. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 253, 138, 96.
சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 183.

71. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 129, 189.
அகநானூறு, பக். 45, 126, 145.

72. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 102.

73. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 199, 114-116, 96.

74. மேலது, பக். 244, 108-110,96

75. மேலது, பக். 195, 127, 96.

76. மேலது, பக். 190, 160, 161, 140, 143.

77. மேலது, பக். 187, 188, 144, 145, 140, 143.
சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர் இரா. சந்திரசேகரன், பக்.62,63.
சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர் இரா. சந்திரசேகரன், ப 63.

78. நா.கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழி அகராதி, பதிப்பாசிரியர் எஸ். கௌமாரீஸ்வரி, உதவி ஆர். கார்த்திகாதேவி, 2003, ப. 1143.
கழகத் தமிழகராதி, கழகப் புலவர் குழுவினர், 1980, ப. 742.
சங்க இலக்கியச் செய்தி களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், 2003, ப. 225.

79. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப.116.

80. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 257, 154-156, 140, 143.

81. மேலது, பக். 154, 155, 140, 143,

82. மேலது, பக். 207, 158, 140, 143.
அகநானூறு, இரண்டாந் தொகுதி, 159, பக். 161, 162.

83. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 68.

84. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 135, 136, 173.

85. மேலது, பக். 239, 183, 182.
சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 182.

86. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 238, 182-184.
சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 181.

87. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 200.
அகநானூறு, இரண்டாந் தொகுதி, 197, வரி 5-8.

88. புறநானூறு, இரண்டாந் தொகுதி, 351, வரி 5-6.

89. கழகத் தமிழகராதி, ப. 204.

90. அகநானூறு, முதற்றொகுதி, 109, வரி 10-15.

91. புறநானூறு, இரண்டாந்தொகுதி, 308, வரி 4-7, பக். 183, 184.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 96, 97.

92. புறநானூறு, இரண்டாந் தொகுதி, 353.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 144, 140.



# 1.5. வீரர்

**1.5.0.** சங்க காலத்தில் தமிழ்நாட்டை ஆண்ட சேர சோழ பாண்டிய மன்னர்களேயன்றி, குறுநில மன்னர்களேயன்றி அவர்கள் தம் வீரர்கள் பலரும், தலைவன் என்ற பெயரிலும் வீரர் என்ற பெயரிலும் தத்தம் மன்னர்களது கட்டளையை நிறைவேற்றுவதற்காகவும், மாற்றார் கவர்ந்து சென்ற ஆநிரைகளை மீட்டு வருவதற்காகவும், மாற்றரசரின் வீரருடன் வீரத்தோடு போரிட வேண்டும் என்னும் காரணத்திற்காகவும், தம் வீரத்தாய்மார்களது வீர உணர்வு காரணமாகவும் தம்மை எதிர்த்த வீரர்களோடு போரிட்டதால் இவர்களுக்குப் பலர் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர் என்பது ஆய்வின் மூலம் அறியப்படுகிறது. இப்பகுதியில் இவ்வீரர்கள், சோழர், பாண்டியர், சேரர்கள், என்ற பகுப்புக்கு ஏற்றவாறு பிரிக்கப்பட்டு, கால நிலையைக் கருத்தில் கொண்டு வரிசைப்படுத்தப்பட்டுள்ளது.

காலநிலையை அறிய இயலாத ஏனைய வீரர்கள், தலைவன் என்றும் வீரர் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளவாறு பிரிக்கப்பட்டுள்ளனர். பெண் தர மறுத்துப் போரிட்ட வீரர்கள், ஆநிரைக்காகப் போரிட்ட வீரர்கள், வீரத்தாய்க்கு மக்களாய்ப் பிறந்து போரிட்ட வீரர்கள், பொதுவாகச் சொல்லப்படும் பிற வீரர்கள் என்ற தலைப்புகளிலும் ஆராயப்பட்டுள்ளன.

## 1.5.1. சோழர்களின் வீரர்கள்:

**1.5.1.0.** சங்க காலத்தில் தமிழ்நாட்டை ஆண்ட சோழ மன்னர்களேயன்றி அவர்கள்தம் வீரர்கள் பலரும் தம்மை எதிர்த்த வீரர்களோடு போரிட்டுள்ளனர் என்பது அறிய முடிகிறது. இவர்களில் மத்தி, வல்லார் கிழான் பண்ணன் ஆகியோர் பற்றிய செய்திகள் கிடைத்துள்ளன.

### 1.5.1.1. சோழமன்னரின் வீரன் மத்தி:

**1.5.1.1.0.** மத்தி என்பவன் பரதவர்கோமான். அஃதாவது பரதவர் குடியின் தலைவன். காவிரி ஆற்றங்கரையில் இருந்த கழாஅர் என்ற ஊரைச் சார்ந்தவன். சோழர் படைத்துணைவன். இவனது காலம் கி.மு. 275-250.[1]

**1.5.1.1.1.** சோழர் யானைகளைப் பிடிப்பதற்காக எழினி (முதலாம் எழினி) என்பவனை வரச் சொன்னார்கள். அவன் வரவில்லை. அதனால் கோபங்கொண்ட

சோழர், தம்முடைய படைத்துணைவனும் வீரனுமாகிய மத்தியை ஏவி அவனைப் பிடிக்கச் சொன்னார்கள். நெடுந்தூரத்திலிருந்த ஒருநாட்டில் எழினியை மத்தி கண்டுபிடித்தான். அவனைப் பிடித்து, தன் வீரத்தின் காரணமாக அவனது பல்லைப் பிடுங்கி வந்து வெண்மணி என்னும் ஊரில் சோழ மன்னரின் அரண்மனை வாசல் கதவில் பதித்தான்.[2] அதற்கு அடையாளமாக அவ்வூர் நீர்த்துறையில் (கடற்கரைத் துறையில்) கல் ஒன்றையும் நாட்டினான். எனவே, சோழ மன்னரின் வீரன் மத்திக்கு, முதலாம் எழினி எனப்படும் குறுநில மன்னன் எதிர்நிலையானான் (அகம். 211.11-15).

**1.5.1.1.2.** முதலாம் எழினி எனப்படும் குறுநில மன்னன், வீரன் மத்திக்கு, அவன் தன் அரசன் ஆணை காரணமாகப் பிடித்து வந்ததால் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளான்.

## 1.5.1.2. வல்லார் கிழான் பண்ணன்:

**1.5.1.2.0.** வல்லார் என்னும் ஊருக்குத் தலைவன் பண்ணன். இவன் தந்தை சிறுகுடிகிழான் பண்ணன். இவ்வல்லார் கிழானும் அவன் தந்தையும் வேந்தனுக்குப் படைத் துணையாகச் செல்லும் தலைவர்கள். வெற்றி பெற்ற வேந்தன் பரிசாகக் கொடுத்த ஊரே வல்லார் என்பர். இப்பண்ணன் சோழவேந்தன் ஒருவனுக்குப் படைத் துணையாகச் சென்றுள்ளான் என்பது அறிய முடிகிறது. இவனது காலம் கி.மு. 150-125.[3]

**1.5.1.2.1.** வல்லார் என்னும் ஊருக்குத் தலைவன் பண்ணன், தன் வீரத்தின் காரணமாக இடியேற்றைப் போன்ற தன் கால் நிழலில், பரிசிலரின் செல்வமே அல்லாமலும் மன்னரின் வெற்றியும் நீங்குமாறு நடுகல் ஆனவன் எனக் கூறப்பட்டுள்ளமையால் பண்ணன் என்னும் தலைவனுக்குப் பல மன்னர்கள் எதிர்நிலையாயினர் என்பது தெளிவாயிற்று (புறம்.265.1-9).

**1.5.1.2.2.** பகை மன்னர், வல்லார் கிழான் பண்ணனுக்கு, அவனது வீரத்தின் காரணமாக நடுகல் நாட்டப்பட்டிருப்பதால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 1.5.2. பாண்டியர்களின் வீரர்கள்:

**1.5.2.0.** சங்க காலத்தில் தமிழ்நாட்டை ஆண்ட பாண்டிய மன்னர்களேயன்றி அவர்கள் தம் வீரர்கள் பலரும் தம்மை எதிர்த்தவர்களோடு போரிட்டுள்ளனர். இவர்களில் வழுதியின் மறவர், செழியனின் மறவர் குறிப்பிடத்தக்கவர்.

### 1.5.2.1. வழுதியின் மறவர்:

**1.5.2.1.0.** வழுதி எனப்படுபவன், பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி என்றும் அழைக்கப்பட்டான். இவன் பசும்பூண் பாண்டியனுக்குப் பிறகு பாண்டிய நாட்டை, மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளான். இவனது காலமாகிய கி.மு. 275-250இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[4]

**1.5.2.1.1.** வழுதியின் வீரர், தம் வீரத்தின் காரணமாக ஆண்மை உடையவராய் அம்புகளைத் தவறாது விடுவர். அதனால் பகைவர் பலர் இறந்தனர். இறந்த அப்பகைவரைக் கற்குவியல் கொண்டு மூடுவர் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர்.

> *"...................பெரும்பெயர் வழுதி*
>
> *.................. .... ........*
>
> *செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்*
>
> *அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை"* (புறம்.3.13.20-21).

**1.5.2.1.2.** மறக்குடி மறவன் ஒருவன் தனியனாய்ச் சென்று, தனது வாள் வலிமையின் காரணமாகத் தடுப்பதற்கரிய போரில் பகைவரை மேற்சொல்லாத வண்ணம், ஏற்கனவே தான் கொன்று வீழ்த்திய களிற்றின் கொம்புகளுக்கிடையே தனது வாளை நிமிர்த்திக் கொண்டு போய்த் தடுத்தான். அதனால், தன்னைக் கண்டு அஞ்சி ஓடிய பகைவனது புறம் கண்டு நகைத்தான் என்றமையால், மறக்குடி வீரனுக்குப் பகைவன் எதிர்நிலையானான். இச்செய்தியை ஓரம்போகியார்,

> *"தமியன் வந்த மூதி லாளன்*
>
> *அருஞ்சமம் தாங்கி முன்னின்று எறிந்த*

***ஒருகை இரும்பிணைத்து எயிறு மிறையாகத்***

***திரிந்த வாய்வாள் திருத்தாத்***

***தனக்குஇரிந் தானைப் பெயர்புறம் நகுமே"*** (புறம். 284.4-8)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.2.1.3.** பகைவர், வழுதியின் மறவர்க்கு அவர்களது வீரத்தின், வாள் வலிமையின் காரணங்களால் எதிராளியாயினர்.

**<u>1.5.2.2. செழியனின் மறவர்:</u>**

**1.5.2.2.0.** செழியன் என்ற பாண்டிய மன்னன், நெடுஞ்செழியன், பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், முசிறிமுற்றிய நெடுஞ்செழியன் என்றெல்லாம் அழைக்கப்பட்டான். சங்ககாலப் பாண்டியரில் தலைசிறந்தவன் இவன். பாண்டியன் அறிவுடை நம்பியின் மகன். இவன் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்துள்ளான். இவனது காலமாகிய கி.மு. 175-150இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[5]

**1.5.2.2.1.** கூரிய அம்பையும் வில்லையும் உடைய பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் மறவர், பிறர் பொருளைக் கவர்ந்து கொள்ள வேண்டும் என்னும் காரணத்திற்காக, தம்மால் கவர்ந்து கொள்ளத்தக்க அளவுக்குப் பகைவரின் பொருள்களைக் கவர்ந்து கொண்டு சேர்ப்பர். எஞ்சியவற்றை ஏனைய மாற்றார் கவர்ந்து உணவாக்காதவாறு பகைவரின் விளைநிலங்கள் முற்றிலும் அழித்துவிடுவர் என்றமையால், பகைவரும் மாற்றாரும் எதிர்நிலையாயினர். இதனைக் கல்லாடனார்,

***"........................நின்***

***கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்,***

***கொள்வது கொண்டு, கொள்ளா மிச்சில்***

***கொள்பதம் ஒழிய வீசிய புலனும்"*** (புறம்.23.4-7)

என்னும் பாடல் வரிகள் மூலம் தெரிவித்துள்ளார்.

**1.5.2.2.2.** பகைவர், மாற்றார் போன்றவர்கள், செழியனின் மறவர்க்கு, பிறர் பொருள் கவர்ந்து வருதல், விளைநிலங்கள் அழித்தல் காரணங்களால் எதிரியானார்கள்.

**1.5.3. சேரர்களின் வீரர்கள்:**

**1.5.3.0.** சங்க காலத்தில் தமிழ்நாட்டை ஆண்ட சேரமன்னர்களேயன்றி அவர்கள்தம் வீரர்கள் பலரும் தம்மை எதிர்த்தவர்களோடு போரிட்டுள்ளனர். இவர்கள், காலநிலையைக் கருத்தில் கொண்டு வரிசைப்பட ஆராயப்பட்டு இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளது. இவர்கள் முறையே சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனின் வீரர், பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வீரர், பெருஞ்சேரல் இரும்பொறை வீரர், வானவன் மறவன் பிட்டன் ஆகியோராவர்.

**1.5.3.1. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனின் வீரர்:**

**1.5.3.1.0.** சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், நெடுஞ்சேரலாதன், குடவர்கோமான், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்றெல்லாம் அழைக்கப்பட்டவன். இவன் மாந்தை என்னும் கடற்கரை நகரைத் தலைநகராகக் கொண்டு குட்ட நாட்டை 58 ஆண்டுகள் ஆட்சி புரிந்தவன். இவனது காலமாகிய கி.மு. 250-225இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[6]

**1.5.3.1.1.** நெடுஞ்சேரலாதனுக்கும் பெருவிறற்கிள்ளிக்கும் நடைபெற்ற போரின்போது, இருதிறத்து வீரர்களும் ஒன்று சேர்ந்து போரிட்டதன் காரணமாக, தேர்கொண்டு வந்த வீரர்கள் எல்லாம் தாம் பிடித்த கேடயமே தம் கண்ணை மறைத்திட ஒரு சேர மடிந்தனர் என்றமையால் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனின் வீரர்க்கு, சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியின் வீரர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் பரணர்,

> ***"விறற்புகழ் மாண்ட புரவி எல்லாம்***
> ***மறத்தகை மைந்தரொடு ஆண்டுப்பட் டனவே***
> ***தேர்தர வந்த சான்றோர் எல்லாம்***
> ***தோல்கண் மறைப்ப ஒருங்கு மாய்ந்தனரே"*** (புறம். 63.3-6)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார் (சான்றோர் - அறப்போர் செய்யத் தகுதியான வீரர்).

**1.5.3.1.2.** சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியின் வீரர்கள், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனின் வீரர்க்கு, தேர்ப்படை கொண்டு போரிட்டதன் காரணமாக எதிராளியானார்கள்.

## 1.5.3.2. பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வீரர்:

**1.5.3.2.0.** பல்யானைச்செல்கெழுகுட்டுவன், வஞ்சி நகரைத் தலைநகராகக் கொண்டு பூழி நாட்டை 25 ஆண்டுகள் ஆண்டுள்ளான். இவனது காலமாகிய கி.மு. 250-225இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[7]

**1.5.3.2.1.** பல்யானைச் செல்கெழு குட்டுவனின் நலியாத கூற்றுவனை ஒத்த வீரர்கள், தம் அரசனுடன் சேர்ந்து சினம் கொண்டதன் காரணமாகச் சென்று போர் செய்த காலத்தில் பகைவரை வென்று அவரது நாட்டை அழித்துள்ளனர் என்றதால், பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை, பாலைக்கௌதமனார்,

> "..................... ***கூற்றத்து அன்னநின்***
>
> ***திருந்துதொழில் வயவர் சீறிட நாடே!***" (பதிற்.3-ஆம்பத்து.26.13-14)

என்னும் பாடல் வரிகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.5.3.2.2.** பகைவர், பல்யானைச்செல்கெழுகுட்டுவனின் வீரர்க்கு, அவர்தம் சினம், நாடு அழித்தல் காரணங்களால் எதிரியானார்கள்.

## 1.5.3.3. பெருஞ்சேரல் இரும்பொறை வீரர்:

**1.5.3.3.0.** பெருஞ்சேரல் இரும்பொறை, கொங்குக் கருவூரைத் தலைநகராகக் கொண்டு, சேரநாட்டையும் இவன் நாட்டுக்கு அண்மையிலிருந்த பூழிநாட்டையும் 17 ஆண்டுகள் ஆண்டவன். இவனது காலமாகிய கி.மு. 225-200இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[8]

**1.5.3.3.1.** பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர மன்னனின் வீரர், தம் அரசனை வணங்காத பகைவர் முன்னே இடக்கையில் வில்லும் வலக்கையில் அம்புமாய் அஞ்சாமல் நின்று, தம் வீரத்தின் காரணமாகத் திறைப் பொருள் வேண்டி, எம்அரசனுக்குத் திறைப்பொருள் செலுத்தி, அரசனின் செங்கோலின் கீழ்ப்பணிபவர்க்குத் தக்க பாதுகாப்பு கிடைக்கும் என்றதால், பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்தை அரிசில்கிழார்,

> "*ஒடிவுஇல் தெவ்வர் எதிர்நின்று உரைஇ*
> *இடுக திறையே புரவெதிர்ந் தோற்கென*
> *அம்புடை வலத்தர் உயர்ந்தோர் பரவ*" (பதிற்.எ.ப. 80.9-11)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.3.3.2.** பகைவர், பெருஞ்சேரல் இரும்பொறை வீரர்க்கு அவர்தம் அரசனை வணங்காமை, திறைப்பொருள் கொடுக்காத காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

### 1.5.3.4. வானவன் மறவன் பிட்டன்:

**1.5.3.4.0.** சேரமான் குட்டுவன் கோதை, கோதை மார்பனின் மகன். குட்ட நாட்டை ஆண்ட மிகப்பழங்காலத்தவன். இக்குட்டுவன் கோதையின் படைத்தலைவன் பிட்டன் என்றும் பிட்டங்கொற்றன் என்றும் அழைக்கப்பட்டான். இப்படைத்தலைவன் குதிரை மலைப்பகுதியை ஆண்டவன். இவன் வானவன் என்றும் சேரமான் குட்டுவன் கோதை என்றும் போற்றப்பட்ட மன்னனின் காலமாகிய கி.மு. 150-125இல் வாழ்ந்த மறவன்.[9]

**1.5.3.4.1.** வானவன் என்னும் சேர மன்னனின் படைத்தலைவன் பிட்டன். கள் விருப்புடைய இவன் பெரிய கையும், வில்லும் உடையவனாக விளங்கினமையால், பகை மன்னருடன் செய்யும் அரிய போரில் செலுத்தியவேல் பகைவர்க்குத் துன்பத்தை உண்டாக்கும் எனச் சொல்லப்பட்டிருப்பதால், வானவன் என்னும் சேரமன்னனின் படைத்தலைவன் பிட்டனுக்கு, பகை மன்னர் எதிர்நிலையாயினர் (அகம். 77.15-18).

**1.5.3.4.2.** பகைமன்னர், வானவன் மறவன் பிட்டங் கொற்றனுக்கு, பகைமையின் காரணமாக எதிராளியானார்கள்.

## 1.5.4.0. குறுநில மன்னரின் வீரர்கள்:

சங்க காலத்தில் தமிழ்நாட்டை ஆண்ட குறுநிலமன்னர்களேயன்றி அவர்கள்தம் வீரர்கள் பலரும் தம்மை எதிர்த்த வீரர்களோடும் பகைவர்களோடும் போரிட்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இவர்கள் முறையே அஞ்சியின் வீரர்கள், அதியமானின் வீரர்கள், எழினியின் வீரர்கள், மூன்றாம் திதியன் - அன்னி ஆகியோரின் வீரர்கள் போன்றவராவர்.

## 1.5.4.1. அஞ்சியின் வீரர்கள்:

**1.5.4.1.0.** அஞ்சி எனப்படுபவன் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய அதியமான நெடுமான் அஞ்சியின் முன்னோன். குதிரைமலைத் தலைவனாக ஆண்டவன். இவனது காலமாகக் கருதப்படும் கி.மு. 250-225இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[10]

**1.5.4.1.1.** அஞ்சியின் வீரர், மாற்றார் பொருளைக் கவர வேண்டும் என்னும் காரணத்திற்காக, முன்பு பல போர்களில் பகைவரை வருத்திய தம் மன்னனின் பகைவரது பசுக்களைப் போரிட்டு வென்று கவர்ந்து வருவர். அப்போரில் துடி என்னும் உடுக்கையை ஒலி எழும்படியாய் அடிப்பர் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இதனை பரணர்,

> **"நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி**
> **கடுமுனை அலைத்த கொடுவில் ஆடவர்**
> **ஆடுகொள் பூசலின் பாடுசிறந்து எறியும்**
> **பெருந்துடி....................** (அகம்.372.9-12)

என்னும் பாடல் வரிகளில் மொழிந்துள்ளார்.

**1.5.4.1.2.** பகைவர், அஞ்சியின் வீரர்க்கு, மாற்றார் பொருளைக் கவர்ந்து வருதல் காரணமாக எதிர்நிலையானார்கள்.

### 1.5.4.2. எழினியின் வீரர்கள்:

**1.5.4.2.0.** தலையாலங்கானப் போரில் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் எழுவர் கூட்டணியோடு வந்தபோது தோற்றவன். மூன்றாம் எழினி (எழினி-3) எனப்படும் இவன் யானைப்படையும் குதிரைப்படையும் வேற்படையும் உடையவனாக இருந்துள்ளான். இவன் அஞ்சியின் வழியில் வந்தவன். இவனது காலமாகிய கி.மு. 175-150இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[11]

**1.5.4.2.1.** குதிரைப் படையும், வேலும் கொண்ட எழினி என்னும் மன்னனின் வீரர்கள், மாற்றார் பொருளைக் கவர வேண்டும் என்னும் காரணத்திற்காக, அம்புகளைக் குறி தவறாது தொடுப்பர், கள்ளை உண்ட மகிழ்ச்சியினால் பகைவரின் போர்முனையை வென்று, காளைகளுடன் கூடிய மடிதவழ் ஆநிரையைக் கவர்ந்து கொண்டு வந்து தருவர்[12] என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைத் தாயங்கண்ணனார்,

> ***"சில்பரிக் குதிரை, பல்வேல் எழினி***
>
> ........................
>
> ***வினைவல் அம்பின் விழுத்தொடை மறவர்***
>
> ***தேம்பிழி நறுங்கள் மகிழின், முனை கடந்து***
>
> ***வீங்குமென் சுரைய ஏற்றினம் தரூஉம்"*** (அகம்.105.10.13-15)

என்னும் பாடல்வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.4.2.2.** பகைவர், எழினியின் வீரர்க்கு மாற்றார் பொருளைக் கவர்ந்து வருதல் காரணமாக எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

### 1.5.4.3. மூன்றாம் திதியன் - அன்னி - வீரர்கள்:

**1.5.4.3.0.** சோழ நாட்டில் குறுக்கை என்ற நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன் திதியன். இவன் மூன்றாம் திதியன் எனப்படுவான். இத்திதியனுடன் பகை கொண்டவன் அன்னி. அன்னி திதியனோடு போர் செய்து அவன் காவல் மரமான புன்னையை வெட்டினான். அதனால் கோபங்கொண்ட திதியன் அன்னியை அழித்து விட்டான்.

அன்னி ஓர் அரசன்; இவனே திதியனின் புன்னை மரத்தை வெட்டினான். எனவே, திதியனால் கொல்லப்பட்டவன். இந்தத் திதியன் - அன்னி இவர்களது காலமாகிய கி.மு. 175-150இல் இவர்களது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[13]

**1.5.4.3.1.** இவர்களது வீரர்கள், போரிடத்தகுதியுடைய போர் வீரர்கள்; போர் தொடங்குவதற்கு முன்னம், போரிடத் தகுதியில்லாதவரைப் போர் நிகழவிருக்கும் இடத்தினின்றும் அப்புறப்படுத்தி அதன் பிறகு போரிடலே போர் நெறியாகும் என்னும் காரணத்திற்காக, இளமைப் பருவம் உடையவரையும் முதியவரையும் வேறிடத்திற்குப் போகும்படி அனுப்பி விடுவர் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளமையால், போரிடத் தகுதியுடைய வீரர்க்கு, இளையோரும் முதியோரும் எதிர்நிலையாயினர்.

"***இளையரும் முதியரும் வேறுபுலம் படர***" (புறம். 254.1).

**1.5.4.3.2.** இளையோரும் முதியோரும், மூன்றாம் திதியன், அன்னி ஆகியோரின் வீரர்க்கு, போரிடத் தகுதியுடையவராக இல்லாததால் வேறிடத்திற்குச் செல்லல் வேண்டும் என அனுப்பியதன் காரணமாக எதிராளியானார்கள்.

**1.5.4.4. அதியமானின் வீரர்கள்:**

**1.5.4.4.0.** அதியமான் என்று சிறப்பித்துச் சொல்லப்படுபவன் அதியமான் நெடுமான் அஞ்சி ஆவான். இவன், அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினிக்குப் பின் அவனது வழிவந்தவனாக ஆண்டவன். எழுவரோடு போர் செய்து வென்றவன். ஆயுளை வளர்க்கும் நெல்லிக்கனியை ஔவைக்குத் தந்தவன். தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். இவனது காலமாகிய கி.மு. 150-125இல் இவனது வீரர்கள் வாழ்ந்துள்ளனர்.[14]

**1.5.4.4.1.** அதியமானின் வீரர்கள், தம் வீரத்தின் காரணமாகப் பகைவருடன் நடத்திய போரின் போது வாள்பாய்ந்ததால் உண்டான வடுப்பொருந்திய வலிமையைக் கண்ட பகைவர் மிகவும் அஞ்சியவராய்க் குருதிக் கறையுடன் கூடிய தம் அம்புகளைத் தூணிக்குள் இட்டனர் என்றமையால், பகைவர் எதிர்நிலையாயினர். இதனை ஔவையார்,

> "வான்வாய்த்த வடுப்பரந்தநின்
> மறமைந்தர் மைந்துகண்டவர்
> புண்படுகுருதி அம்புஒடுக்கவும்" (புறம். 98.12-14)

என்னும் பாடல் வரிகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

**1.5.4.4.2.** பகைவர், அதியமானின் (அதியமான் நெடுமான் அஞ்சியின்) வீரர்க்கு, அவர்தம் வீரம் காரணமாக அஞ்சியதால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 1.5.5. பெண் தர மறுத்துப் போரிட்ட வீரர்கள்:

**1.5.5.0.** சங்ககாலத்துப் பருவப்பெண்களின் தந்தை தமையர் போன்றவர்களும் தலைவன் எனச் சொல்லப்பட்டவரும் வீர மறவர்களாகத் திகழ்ந்துள்ளனர். இவர்களது காலம் இன்னதெனத் தெளிவாகத் தெரிந்திலது. ஆயினும் இவர்களைப் பற்றிப் பாடிய புலவர்களின் காலநிலையை அறிவதிலிருந்து இவர்கள் சங்க காலத்தில் வாழ்ந்த வீரமறவர்கள் என அறிய முடிகிறது. இவர்கள் முறையே தலைவன், வீரர் எனப்பாடலுக்கு ஏற்றவாறு ஆராயப்பட்டு இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளனர்.

### 1.5.5.1. தலைவன்:

**1.5.5.1.0.** சிக்கல் என்ற ஊரில் வாழ்ந்தான் ஒரு வேளாண் தலைவன். அவன் பெயர் பெருஞ்சிக்கல் கிழான். சிக்கல் என்ற ஊர் தஞ்சை மாட்டத்தில் உள்ளது. சிக்கல் என்ற ஊரில் வாழ்ந்ததால் பெருஞ்சிக்கல் கிழான் என்று இத்தலைவன் அழைக்கப்பட்டான். இவனது காலம் தெளிவாகத் தெரிந்திலது.[15]

**1.5.5.1.1.** பெருஞ்சிக்கல்கிழான் என்ற வேளாண் தலைவன், தன் மகளை மணந்து கொள்ள விரும்பி வந்த மன்னனுக்குப் பெண் தர மறுத்ததோடு வஞ்சினச் சொற்களைப் பேசினானே ஒழியப் பணிவைப் புலப்படுத்தும் சொற்களைச் சொல்லவில்லை. பெண் கேட்டு வந்த வேந்தனும் தன் கைவேலின் முனையால் நெற்றியின் வியர்வையைத் துடைத்து அஞ்சத்தக்க சொற்களைக் கூறுவானாயினன். இவ்வாறு மாறுபட்ட கருத்துக் கொண்ட கொள்கையுடையவராய் இருந்தமையால் இருவருக்கும் போர் உண்டாக ஏதுவாயிற்று என்பதால் பெருஞ்சிக்கல் கிழானுக்கு,

பெண் கேட்டு வந்த மன்னன் எதிர்நிலையானான். இச்செய்தியை மதுரை மருதனிள நாகனார்,

> **"நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்**
> **கடிய கூறும் வேந்தே தந்தையும்**
> **நெடிய அல்லது பணிந்துமொழி யலனே**
> **இஃதுஇவர் படிவம் .............."** (புறம். 349.1-4)

என்னும் பாடல் வரிகள் மூலம் மொழிந்துள்ளார்.

**1.5.5.1.2.** பெண்கேட்டு வந்த மன்னன் ஒருவன், பெருஞ்சிக்கல் கிழான் என்னும் வேளாண் தலைவனுக்கு, அவன் பெண் தர மறுத்து வஞ்சினச் சொற்கள் பேசியதின் இருவரும் மாறுபட்ட கருத்தும் கொள்கையும் உடையவராய் இருந்தமையின் காரணங்களால் எதிராளியானார்கள்.

**<u>1.5.5.2. வீரர்கள்:</u>**

**1.5.5.2.0.** சங்ககாலத்துப் பருவப் பெண்களின் தந்தை, தமையர், தன்னையர் எனப்பட்டவரும், ஊர்த்தலைவன் எனப்பட்டவரும் வீர மறவர்களாகத் திகழ்ந்துள்ளனர்.[16]

**1.5.5.2.1.** மருதநிலத்திற்குச் சொந்தக்காரர்கள் ஒரு பெண்ணின் தந்தையும் அவளது தமையரும். இவர்கள் தம் வீரத்தின் காரணமாகத் தம்மிடம் பெண் கேட்டு, பெண் பெறாமையால் மன்னர் பலர் எதிர்த்துப் போரிட்ட போது, அம்மன்னர்களைக் கொன்று குவித்த குவியல் வைக்கோல் போர் போலாகும்; தம் மகளைப் பெறாமையால் எதிர்த்த பகைவரது ஆண் யானைகள் வைக்கோலை மிதித்து ஒதுக்கும் எருதுகள் போலாயின.

இப்படி, நாள்தோறும் தம் வாளாண்மைக்கு ஏற்ப, வாள் உழவு செய்கின்ற சிறப்பை உடையவர் ஆயினர் என்றமையால் பெண்ணின் தந்தை, தமையர்க்கு மன்னரும் பகைவரும் எதிர்நிலையாயினர் (புறம்.342.11-15).

**1.5.5.2.2.** பெண்ணின் தந்தை, தக்கவர்க்கு மகளைத் தர வேண்டும் என்று

எண்ணினாலும், அவளின் தமையர் குடிமை, ஆண்மை முதலியவற்றால் பொருந்தாதவர்க்குத் தருவதில்லை என்று கூறி, மகளை வேண்டுபவர் தரும் செல்வத்தை விரும்பாதவராய்ப் போரையே விரும்பி, தம் மிக்க வீரத்தின் காரணமாகக் கழிகளால் பின்னிக் கட்டப்பட்ட கேடயத்தை எடுத்துப் புண்படுத்துகின்ற கூரிய வாளை ஏந்திப் போரிட்டனர்.

அதனால், கூட்டமாகச் சேர்ந்தவர் குருதிநாறும் புலால் நாற்றத்துடன், கழுவாத தலையை உடையவராய் வேலை ஏந்தும் இத்தகைய மறவர்கள் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளமையால் பெண்ணின் தந்தை, தமையர்க்குப் பெண் கேட்டு வந்த மன்னர் எதிர்நிலையாயினர் (புறம். 345.10-18).

**1.5.5.2.3.** மறக்குடியில் தோன்றிய ஒருவனின் மகளைப் பலர் மகட்கொடை வேண்டினர். அதனைத் தந்தையும் தமையனாரும் மறுத்தனர். பெண்ணின் தமையன் பெருங்கல்வி உடையவனாதலால் அடக்கத்தின் காரணமாகயானும் சிறிது கல்வியுடையேன் என்று கூறுகின்றான்.

இவளது தந்தை, தன் வீரத்தின் காரணமாக வேலை ஏந்திப் பகைவருடன் போரிடுவதில் வல்லவன். மகட்கேட்டு வந்தவருடன் போரிட்டுக் கெட்டவர் நீங்க, கெடாமல் உயிருடன் இருப்பவர்க்கு, அவரே சிறந்த மறவர் எனத் தெளிந்து அவர்களுடன் உரிய உறவாய் அன்பு காட்டுவான்.

பெண்ணின் நலமோ விரும்புபவர் இல்லாது அழியும் என்று தெரிவித்துள்ளமையால் பெண்ணுக்குரிய தந்தை, தமையனுக்குப் பெண் கேட்டு வந்தவர் எதிர்நிலையாயினர் (புறம்.346.3-7).

**1.5.5.2.4.** கொடைத்தன்மையுடைய தித்தனின் வெண்ணெல் வயல்கள் வேலியாய் உள்ளது செல்வ வளம் மிக்க உறையூர் பெண் கேட்டு வந்த மன்னன் தித்தனின் உறையூரைப் போல் புகழ் நிரம்பிய நல்ல கலங்கள் பலவற்றைக் கொடுக்கவும் பெருந்தகுதியடைய எண்ணிய பெண்ணின் தந்தை அவற்றைக் கொள்ளவில்லை.

பெண்ணோ விரிந்த கிளையில் கொத்துக் கொத்தாய் மலர்ந்துள்ள வேங்கை மரத்தைப் போல் கதிர்விட்டு ஒளி வீசும் சுணங்கு பரவிய அழகுடையவள் ஆனாள். பெண்ணின் தந்தையே அல்லாது அப்பெண்ணின் தமையரும் போர் வெறியுடன் விளங்கினர் என்பதால் பெண்ணின் தந்தை தமையர்க்குப் பெண் கேட்டு வந்த மன்னன் எதிர்நிலையானான். இக்கருத்தைப் பரணர்,

> *"மாவண் தித்தன் வெண்ணெல் வேலி*
> *உறந்தை அன்ன உரைசால் நன்கலம்*
> *கொடுப்பவும் கொளாஅ நெடுந்தகை யிவளே*
> *விரிசினைத் துணர்ந்த நாகிள வேங்கையின்*
> *கதிர்த்துஒளி திகழும் நுண்பல் சுணங்கின்*
> *மாக்கண் மலர்ந்த முலையள் தன்னையும்*
> *சிறுகோல் உளையும் புரவியொடு*
> *.......................... யாரே"* (புறம்.352.9-16)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.5.2.5.** பெண்ணின் தமையர் மறக்குடியில் தோன்றியவர். இக்குடியில் தோன்றிய பெண்ணை மன்னர் பலர் மணம் செய்து கொள்ள விரும்பினர். ஒலிக்கும் மேகம் போல், முழங்கும் முரசினையும் விரைந்து செல்லும் குதிரைகளையும் பெற்ற மன்னர் பலர் பெண் கேட்டு மறவனின் வாயிலில் சுற்றித் திரிந்த வண்ணம் இருந்தனர்.

பெண்ணின் தமையன்மாரோ போரிடுகின்ற பகைமைக்குக் காரணமான வன்மையை உடையராயினர். இளைய மகளோ, இத்தமையர் ஏற்கனவே போர் செய்து வெற்றி உண்டாக எடுத்த கூரிய வேலினது இலை போன்ற கண்ணை உடையவள். வளையல் உழல்கின்ற முன் கைகளை உடையவள். திருமண நலம் சுனிந்து அழகிய மார்பில் சுணங்கு தோன்றிப் பரவி நின்ற நிலையினள்.

இத்தகைய நிலையில், பெண்ணின் தமையரும் பெண் கேட்டு வந்த மன்னரும் போர் செய்வதன்றி அமைதி பெறமாட்டார் போல் தோன்றலாயினர்

என்றமையால், பெண்ணின் தமையர்க்குப் பெண்கேட்டு வந்த மன்னர் எதிர்நிலையாயினர் (புறம். 350.4-11).

**1.5.5.2.6.** பெண் கேட்டு வந்த மன்னன், காரிக்கண்ணனார் என்ற புலவரிடம் சொல்லி பெண்ணின் தந்தையிடம் மணம் பேசுமாறு கேட்டபோது, அப்பெண்ணைப் பற்றிக் காரிக்கண்ணனார் கூறுங்கால், பெண்ணின் தமையர் தம் வீரத்தின் காரணமாகப் போர்க்களத்தில் பகைவரைக் கொன்று அவரது குருதியை ஆறு போல் ஓடச் செய்து கூரிய வாளுடனே பஞ்சி நீக்கப்படாத புண்ணை உடையவராய்க் கண்டார் அஞ்சத்தக்க இயல்புடையவராய் உள்ளனர் என்றமையால் பெண்ணின் தமையர்க்குப் பெண் கேட்டு வந்த மன்னனும் மற்ற பகைவரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தியை, காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்,

> *"செருவாய் உழக்கிக் குருதி ஒட்டிக்*
> *கதுவாய் போகிய நுதிவாய் எஃகமொடு*
> *பஞ்சியும் களையாப் புண்ணர்*
> *அஞ்சுதகவு உடையர் இவள்தன்னை மாரே"* (புறம்.353.14-17)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.5.2.7.** வெற்றி முரசுடைய பிற மன்னர்க்கெல்லாம் கொடுப்பதில் வல்ல கொடைத் தன்மையுடையவன் எயினன். இவனுக்குரியது வாகை என்னும் அழகிய நகரம். இவ்வெயினனின் வாகை நகரத்தைப் போன்று பெண்மை நலமுடையவளை, அப்பெண்ணின் தந்தை, தன் மற உணர்வு காரணமாகப் பெண் கேட்டு வந்த மன்னர்க்கு மணம் செய்து தாராது போயின், அம்மன்னர் வறிதாகத் திரும்பிச் செல்ல மாட்டார். போர் உண்டாக ஏதுவாயினர் என்றமையால் பெண்ணின் தந்தைக்குப் பெண் கேட்டு வந்த மன்னர் எதிர்நிலையாயினர். இக்கருத்து, மதுரைப்படைமங்க மன்னியாரின்,

> *"வென்றுஎறி முரசின் வேந்தர் என்றும்*
> *வண்கை எயினன் வாகை அன்ன*

**இவன்நலம் தாராது அமைகுவர் அல்லர்**

**என்ஆ வதுகொல் ..............."** (புறம். 351.1-4)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.5.5.2.8.** ஊர்த்தலைவனாக விளங்கிய பெண்ணின் தந்தை, தன் வீரத்தின் காரணமாகத் தண்ணீர் போல் கள்ளும், குட்டுவனின் முசிறி போன்ற நன்மையில் உயர்ந்த பொருள்களும் கொண்டு வந்து பெண் கேட்பவர் கொடுத்தாலும், இவள், ஒப்பவரும் உயர்ந்தவரும் அல்லாதவரை மணந்து கொள்ள மாட்டாள் என்று பெண் தர மாட்டான்.

ஆயின், மகளை வேண்டி வந்தவர், பருந்துகள் இளைப்பாறும் புரிசையும் வீரர் பலர் நின்று காக்கும் அரிய வழிகளையும் உடைய ஊரில், அரணைக் கைப்பற்றுவதற்காகப் பல ஏணிகள் சாத்தப்பட்டு வருந்தும் நிலையில் கிடக்கும்.

இதனால், வீரமறவனாகிய தந்தையின் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள இயலாமல் தவித்த நிலை குறிப்பிடப்பட்டுள்ளமையால், ஊர்த்தலைவன் ஆகிய பெண்ணின் தந்தைக்குப் பெண் கேட்டு வந்தவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியைப் பரணர்,

***"புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்***

***முழங்குகடல் முழவின் முசிறி யன்ன***

***நலஞ்சால் விழுப்பொருள் பணிந்து வந்து கொடுப்பினும்***

***புரையர் அல்லர் வரையலள் இவள்எனத்***

***தந்தையும் கொடாஅன், ஆயின் வந்தோர்***

***வாய்ப்ப இறுத்த ஏணி ஆயிடை***

***வருந்தின்று கொல்லோ தானே - பருந்து உயிர்த்து***

***இடைமதில் சேக்கும் புரிசைப்***

***படைமயங்கு ஆரிடை நெடுநல் ஊரே"*** (புறம். 343.9-17)

என்னும் பாடல் வரிகளில் மொழிந்துள்ளார்.

**1.5.5.2.9.** பெண்ணின் தந்தை எனப்படும் தலைவன் ஒருவனின் மகளை

மணக்க எண்ணிய மன்னன் பெண் கேட்டான். அவள் தந்தை அதற்குச் சம்மதிக்காததால், வேலால், புண்பட்டு வடுஏற்பட்ட உடலுடனே மேலுலகம் செல்லுமாறு பெண்ணின் தந்தையோடு சண்டைக்குப் படைக்கலத்தைக் கையில் எடுத்துக் கொண்டான் என்று தெரிவிக்கப்பட்டுள்ளமையால் இருவரும் போருக்கு ஆயத்தமாயினர். எனவே, பெண்ணுக்குத் தந்தையான அத்தலைவனுக்கு மகள் கேட்டு வந்த மன்னன் எதிர்நிலையானான் (புறம். 341.10-16).

**1.5.5.2.10.** பெண் கேட்டு வந்த மன்னரும் பகைவரும் பெண் கேட்டு வந்த பிறரும் பெண்ணின் தந்தை, தமையர், தன்னையர் போன்ற வீரர்க்கு, அவர்களது வீரத்தின், குடிமை ஆண்மை முதலியவற்றால் பொருந்தாதவர்க்குப் பெண் தருவதில்லை என்னும் கருத்தால், போரில் சிறந்த மறவர்க்கு மட்டுமே பெண் தர வேண்டும் என்னும் காரணத்தால், போர் வெறி கொண்டதால், பகைமை, மற உணர்வு, பெண்தர மறுத்ததின் காரணங்களால் எதிராளியாயினர்.

## 1.5.6. ஆநிரைக்காகப் போரிட்ட வீரர்கள்:

**1.5.6.0.** சங்க காலத்தில் வாழ்ந்த வீரர்கள் மன்னருடன் போரிடதற்கு முன் அவர்களது ஆநிரையைக் கவர்ந்து வருவர். அவ்வாறு கவர்ந்து வந்த ஆநிரையைப் பகை மன்னரின் வீரர்கள் மீட்டுச் செல்வர். இப்படி, வீரர்கள் ஆநிரைக்காகப் போரிட்டு இருதிறத்து மன்னர்களுக்கும் போர் ஏற்படக் காரணமாய் இருந்துள்ளனர்.

இவர்களில் கரந்தை வீரர்கள் ஆநிரையை மீட்பதற்காக வெட்சி வீரர்களுடன் போரிட்டுள்ளனர். பல வீரர்க்குத் தலைவராய் நின்ற மறவர்கள் ஆநிரையைக் கவர்ந்து சென்ற பகைவருடனும் பகைவரது வீரர்களுடனும் போரிட்டு வெற்றி பெற்று ஆநிரைகளை மீட்டுள்ளனர். வெட்சி வீரரின் தலைவன் கரந்தை வீரரோடு போரிட்டு அவர்களைக் கொன்று அவர்தம் பசுக்களைக் கவர்ந்து வந்துள்ளான். இவர்கள் முறையே தலைவன், வீரர் எனப் பாடலுக்கு ஏற்றவாறு ஆராயப்பட்டு இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளனர்.

### 1.5.6.1. தலைவன்:

**1.5.6.1.0.** பாண்டிய நாட்டில் உள்ளது மல்வி நாடு. இம்மல்வியைத்

தலைநகராகக் கொண்டு ஆண்டவன் காரியாதி. காரியாதி தன்னிடம் வந்தவர்க்குத் தடையில்லாமல் வரவேற்பு அளித்து விருந்து உபசரிப்பவன். ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் காரியாதியைக் கண்டு பரிசில் பெற்றுச் சென்றுள்ளார். இக்காரியாதி மல்லி கிழான் காரியாதி என்றும் அழைக்கப்பெற்றுள்ளான். இவனது காலம் இன்னதெனத் தெளிவாக அறிந்திலது.[17]

**1.5.6.1.1.** காரியாதி என்பவன் கரந்தை வீரர்களின் தலைவன். ஒருமுறை வெட்சி வீரர்கள் வில் ஏந்தியவராய் வந்து பல பசுக்கூட்டங்களைக் கவர்ந்து போய்க் கைக் கொண்டனர்.

இதனை அறிந்த கரந்தை வீரர்களின் தலைவன் காரியாதி, தன் வீரத்தின் காரணமாகக் கரந்தைப் பூவை அறிவுடையார் சூட்டும் முறையில் சூட்ட வெட்சி வீரர்களோடு போரிட்டு, பசுக் கூட்டங்களைத் திரும்ப மீட்டு வந்து சேர்த்தான் என்பதன் வாயிலாக காரியாதி என்னும் தலைவனுக்கு வெட்சி சூடிய பகை வீரர்கள் எதிர்நிலையாயினர் (புறம். 261.11-16).

**1.5.6.1.2.** பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்ற வெட்சி வீரர்கள், காரியாதி என்னும் தலைவனுக்கு, அவனது பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்றதன் காரணமாக எதிரியாயினர்.

## 1.5.6.2. வீரர்கள்:

சங்க காலத்து மன்னர்கள் போர் தொடங்குவதற்கு முன்பு தம் வெட்சி வீரர்களை அனுப்பிப் பகைவரது பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வருவர். அவ்வாறு கவர்ந்து வரப்பட்ட பசுக்கூட்டங்களைத் கரந்தை வீரர்களை அனுப்பி வெட்சியாரோடு போரிட்டு மீட்டு வருவர். இதனால் இவர்கள் வீர மறவர்களாகத் திகழ்ந்துள்ளனர்.[18]

**1.5.6.2.1.** கரந்தை வீரர்கள், நெடுவேல் உடையவராய், ஆநிரையை மீட்பதற்காக வெட்சி வீரர்களுடன் போரிட்டு, வெட்சியாரை வென்று அவர்களை வீழ்த்தி, அவர்கள் கவர்ந்து கொண்டு போன ஆநிரையை மீட்டனர். பின்பு, அவ்வெட்சியாரால்

கொல்லப்பட்டனர். அவ்வாறு வெட்சியாரால் கொல்லப்பட்ட கரந்தை வீரர்களுக்கு, அவர்கள் வீழ்ந்த விடத்தில், கல் நாட்டி, அதில் அவ்வீரர்தம் பெருமையும் எழுதப்படும்.

பின்பு அக்கல்லிடத்து, மயிற்பீலி சூட்டித்துடியை முழக்கிக் கள்ளையும் ஆட்டுக்குட்டியையும் பலியாகத் தந்து வழிபடுவர் என்பதால் கரந்தை வீரர்க்கு, வெட்சி வீரர் எதிர்நிலையாயினர் (அகம். 35.4-9).

**1.5.6.2.2.** ஒரு வீரனைக் காணச் சென்ற பாணனுக்கு மற்றொரு பாணன் கூறுவதாக அமைந்த பகுதியில், ஒரு கரந்தை வீரன் தன் ஊர்ப் பசுக்கூட்டத்தைப் பகைவர்களாகிய வெட்சி வீரர்கள் தம் வீரத்தின் காரணமாக கவர்ந்து சென்றதை அறிந்தான். இதனால், வெட்சி வீரர்களோடு போரிட்டான். அப்போது வெட்சி வீரர்களால் எய்யப்பட்ட அம்பு வெள்ளத்தைத் தன் துடியே புணையாய்க் கொண்டு கடந்து சென்று பகைவரைக் கொன்றான் என்றமையால் கரந்தை வீரனுக்கு வெட்சி வீரர்கள் எதிர்நிலையாயினர் (புறம். 260.12-15).

**1.5.6.2.3.** வெட்சியார் நிரை கவர்ந்து சென்றதை அறிந்த அரசன், தண்ணுமையின் இனிய ஓசையை முழக்கித் தன் வீரரை அழைத்தான்.

அப்போது அவனது கரந்தை வீரருள் ஒருவன் தலைமையில் வீரர் சென்று போரிட்டனர். அச்சத்துடன் கூடிய அப்போர்க்களத்தில் போரிட்டவருள் ஒருவன் கோடரியால் வெட்டப்பட்ட மரத்தைப் போல் பகைவராகிய வெட்சியரால் வாளால் வெட்டப்பட்டு வீழ்ந்தான் என்றமையால் கரந்தை வீரருள் ஒருவனுக்கு வெட்சி வீரர் எதிர்நிலையாயினர் (புறம். 270.8-13).

**1.5.6.2.4.** வெட்சி வீரரின் தலைவன், தம் பசுக் கூட்டத்தைப் பகைவராகிய கரந்தை வீரர்கள் இடமிருந்து மீட்டு வர வேண்டும் என்னும் காரணத்திற்காக, காலையில் அப்பசுக் கூட்டம் செல்லும் இடத்தைப் பார்த்துத் தன் கையால் குறித்து மெல்ல எண்ணி, கவர்ந்து சென்ற கரந்தையாருடன் தம் வில்லாற்றலால் போரிட்டு அழித்து வென்று கொண்டு வந்தவன் என்றமையால், வெட்சி வீரரின் தலைவனுக்குக் கரந்தை வீரர்கள் எதிர்நிலையாயினர். இக்கருத்தை, பெயர்

குறிப்பிடப் பெறாத புலவர் ஒருவர்,

> *"...................... காலைப்*
> *புல்லார் இனநிரை செல்புறம் நோக்கிக்*
> *கையின் சுட்டிப் பையென எண்ணிச்*
> *சிலையின் மாற்றி யோனே .........."* (புறம். 257.7-10)

என்னும் பாடல் வரிகள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

**1.5.6.2.5.** ஒரு தலைவன், தன் ஊர் ஆநிரைகளைப் பகைவர் கவர்ந்து போயினர் என்பதைச் செவியுற்றான். தன் வீரத்தின் காரணமாகப் பல பசுக்கூட்டங்களைத் தன்னுடன் மீட்டு வந்தான். மீட்டு வரும்போது பகைவர் பலர் ஒன்றாய்க் கூடிப் போரிட்டனர்.

அப்போது தான் மட்டும் போர்க்களத்தினின்றும் நீங்காதவனாய்ப் பகைவரின் விற்கள் எய்த அம்புகள் எல்லாம் தன் உடலில் பாய்ந்து புகவும், அவரோடு எதிர்நின்று விலக்கி, இறுதியில் இறந்துபட்டு நடுகல் ஆனான் என்றமையால், அவ்வொரு தலைவனுக்குப் பகைவரது வீரர்கள் எதிர்நிலையாயினர். இதனை, பெயர் குறிப்பிடப் பெறாத புலவர் ஒருவர்,

> *"பல்லாத் திரள்நிறை பெயர்தரப் பெயர்தந்து*
> *கல்லா இளையர் நீங்க நீங்கான்*
> *வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்*
> *கொல்புனல் சிறையின் விலங்கியோன் கல்லே"* (புறம். 263.5-8)

என்னும் பாடல் வரிகளில் மொழிந்துள்ளார்.

**1.5.6.2.6.** நடப்பட்டு கல்லாக நின்ற ஒரு தலைவன், தன் வீரத்தின் காரணமாகப் பகைவர் கவர்ந்து சென்ற பசுக்கூட்டத்தையும் கன்றையும் அவரிடமிருந்து மீட்டுக் கொண்டு வந்து, தன்னுடன் போரிட்ட வீரரைத் துரத்தியடித்து, அதனால் புண்பட்டு இறந்துபட்ட பெருந்தகுதியுடையவன் என்றமையால், அத்தலைவனுக்குப் பகைவரது வீரர்கள் எதிர்நிலையாயினர். இச்செய்தியை உறையூர் இளம்பொன்வாணிகனார்,

*"..... நட்டனரே கல்லும் கன்றொடு*

*கறவை தந்து பகைவர் ஒட்டிய*

*நெடுந்தகை கழிந்தமை .........."* (புறம். 264.4-6)

என்னும் பாடல் வரிகளில் தெரிவித்துள்ளார்.

**1.5.6.2.7.** துடி அடிப்பவன், துடி அடித்துப் போர் தொடங்குவதைத் தெரிவித்தான். அப்போது, வெட்சி வீரர்களுக்குத் தலைவனுக்குக் குடிப்பதற்குக் கள் கொடுத்தனர். அத்தலைவனோ தன் வீரத்தின் காரணமாக, கள்ளை மறுத்து, வாள் வேண்டுமென்று கேட்டுப் பெற்று, கரந்தை வீரர்களுடன் மாறிச் சென்று போரிட்டு, அவர்தம் பசுக்களை கவர்ந்து, கரந்தை மறவரைக் கொன்று வெற்றியுடன் வாளேந்தி வந்தான் என்றமையால் வெட்சி வீரர்களின் தலைவனுக்கு, கரந்தை வீரர்கள் எதிர்நிலையாயினர். இதனை, ஔவையாரின்,

*" .............. துடியன் வந்தெனப்*

*பிழிமகிழ் வல்சி வேண்ட மற்றுஇது*

*கொள்ளாய் என்ப கள்ளின் வாழ்த்திக்*

*கரந்தை நீடிய அறிந்துமாறு செருவின்*

*பல்லான் இனநிரை தழீஇய வில்லோர்க்*

*கொடுஞ்சிறைக் குரூஉப் பருந்து ஆர்ப்பத்*

*தடிந்துமாறு பெயர்த்தது இக் கருங்கை வாளே!"*

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது (புறம். 269.6-12).

**1.5.6.2.8.** வெட்சி வீரர், கரந்தை வீரர்க்கு, வெட்சியார் கவர்ந்து சென்ற ஆநிரையை மீட்டல், வீரம் காரணங்களால் எதிராளியாக இருந்துள்ளனர். கரந்தை வீரர், வெட்சி வீரரின் தலைவனுக்கு, பசுக்கூட்டத்தை மீட்டு வருதல், வில்லாற்றல் ஆகியவற்றால் எதிராளியாக இருந்துள்ளனர். பகைவரது வீரர்கள், வீரன் எனப்படும் தலைவனுக்கு, வீரத்துடன் ஒன்று கூடிப் போரிட்டதன் காரணமாக எதிராளியாயினர். கரந்தை வீரர்கள், வெட்சி வீரர்களுக்குத் தலைவனுக்கு, அவனது வீரத்தின், பசுக்களைக் கவர்ந்து, கரந்தை மறவரைக் கொன்றதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**1.5.7. மறக்குடி மடந்தையர்க்கு மக்களாய்ப் பிறந்து போரிட்ட வீரர்கள்:**

**1.5.7.0.** சங்க காலத்தில் ஆடவரேயன்றிப் பெண்டிரும் வீரத்தில் சிறந்தவர்களாக மறஉணர்வு மிக்கவர்களாக வாழ்ந்துள்ளனர் என அறிய முடிகிறது. இவர்கள், தம்மன்னன் மாற்றரசனுடன் போரிட்ட சமயங்களில் தக்க பருவமும் போர்ப் பயிற்சியும் அடையப்பெறாத தம்மக்களை வீரமொழிகள் பகன்று போருக்கு அனுப்பியுள்ளனர்.[19]

**1.5.7.1.** ஒரு முதியவளின் மகன், அவள் பாலை உண்டு வளர்ந்தவனாய், சிறுவனாய் இருந்தபோதும், குடப்பாலில், சிலபிரைத்துளிகள் பட்டு அக்குடத்தில் உள்ள பால் முழுதும் கெட்டாற் போல பகைவர் படை முழுமையும் கலங்கிடச் செய்து, தன் வீரத்தின் காரணமாகப் பகைவர் படை கெடுவதற்குக் காரணமானான் என்றமையால் முதியவளின் வீரமகனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை மதுரைப்பூதன் இளநாகனார்,

> *"செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்*
> *மடப்பால் ஆய்மகள் வள்உகிர்த் தெறித்த*
> *குடப்பால் சில்லுறை போலப்*
> *படைக்குநோய் எல்லாம் தான்ஆ யினனே"* (புறம். 276. 3-6)

என்னும் பாடல் வரிகள் மூலம் மொழிந்துள்ளார்.

**1.5.7.2.** ஒரு வீரத்தாயின் மகன், தன் வீரத்தின் காரணமாகப் பகைவருடன் உண்டான போரில், எதிர்த்து வரும் படையைப் பிளந்து விலக்கித்தானும் தன் துணையுமாக நின்று போரிடற்கு இடமுண்டான போது அதனைக் குறுக்கிட்டுத் தடுத்து, படைக் கூட்டத்தின் நடுவில் உண்டான களத்தில், வெட்டுப்பட்டு உடல் வேறானான் என்பதால் அவ்வீரத்தாயின் மகனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர். இதனை ஔவையாரின்,

> *"வருபடை போழந்து வாய்ப்பட விலங்கி*
> *இடைப்படை அழுவத்துச் சிதைந்து வேறாகிய*
> *சிறப்புடை யாளன் மாண்பு ............"* (புறம். 295.4-6)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.5.7.3.** மறக்குடி மடந்தை ஒருத்தி, தன் துணிவு காரணமாகவும் நாட்டுப்பற்று காரணமாகவும், போர்க்கு எழுமாறு வீரரை அழைக்கும் பறையின் ஒலியைக் கேட்டு, வீரப்புகழில் விருப்பம் கொண்டு, அறிவுமயங்கி, தன் ஒரே மகனை அழைத்து, அவன் கையில் போர் செய்வதற்காக வேலைத் தந்து, வெள்ளாடை உடுத்து, குடுமியில் எண்ணெய் தடவிச் சீவி, போர்க்களம் நோக்கிச் செல்வாயாக! என்று சொல்லி அனுப்பினாள் என்பதால் போர் செய்வதற்குத் தகுதி இல்லாத அவளது இளஞ்சிறு மகனுக்கு, அம்மறக்குடி மடந்தை எதிர்நிலையானாள். இச்செய்தியை ஒக்கூர் மாசாத்தியார்,

> ***"...... செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி***
> ***வேல்கைப் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்***
> ***பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி***
> ***ஒருமகன் அல்லது இல்லோள்***
> ***செருமுக நோக்கிச் செல்கவன விடுமே"*** (புறம். 279.7-11)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.7.4.** பகைவர், முதியவளின் வீரமகன் ஒருவனுக்கு, அவனது வீரத்தின் காரணமாக எதிராளியாயினர். பகைவர், வீரத்தாயின் மகன் ஒருவனுக்குப் பகைமை, வீரம் காரணமாகவும் எதிராளியாயினர். மறக்குடி மடந்தையாகிய தாய் ஒருத்தி, இளஞ்சிறுமகன் ஒருவனுக்குத் துணிவு, நாட்டுப்பற்று, வீரப்புகழ்க் கொண்டவனாய்ப் போருக்கனுப்பியதன் காரணமாக எதிராளியானாள்.

### <u>1.5.8. பொதுவாகச் சொல்லப்படும் பிற வீரர்கள்:</u>

**1.5.8.0.** சங்க காலத்தில் வாழ்ந்த வீரர்கள் பலர் பெயர் குறிப்பிடப் பெறாததால், தலைவன் என்றும், வீரர் என்றும் சுட்டப்பட்டுள்ளனர். இவர்கள் பகைவருடன் போரிட்டதால் எதிர்நிலைப் பாத்திரங்கள் உடையவர்களாக இருந்துள்ளனர்.

இவர்கள், தம்மை போருக்கு முதலில் அனுப்பாத மன்னன், பகைவர், பெருவேந்தர், தம்மை எதிர்த்த வீரர்கள் போன்றவர்களை எதிர்நிலைப் பாத்திரங்களாகக் கொண்டுள்ளனர். இவர்கள் முறையே தலைவன், வீரர் எனப் பாடலுக்கு ஏற்றவாறு ஆராயப்பட்டு இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளனர்.

**1.5.8.1. தலைவன்:**

வீரர்கள் சிலர் தலைவன் எனச்சுட்டப்பட்டுள்ளனர். இவர்களது நாடு, தலைநகர் பற்றிக் குறிப்பிட்டுச் சொல்லப்படவில்லை.[20]

**1.5.8.1.1.** ஒரு தலைவன், மிக்க வீரத்தின் காரணமாகப் பிணங்களின் நடுவினில் நின்று போரிட்டான். ஆயினும் பகைவர் சினம் கொண்டு வீசிய வேலானது மார்பைத் துளைத்து ஊடுருவி உள்ளே போக, நிணம் தோய்ந்த கழலொடு நிலத்தில் விழுந்தான் என்றமையால், விழுந்தான் என்றமையால் அத்தலைவனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்தை, அரிசில்கிழாரின்

*"...............செம்மலுக் கோஒ*
*மாறுசெறு நெடுவேல் மார்புளம் போக*
*நிணம்பொதி கழலொடு நிலம் சேர்ந்தனனே"* (புறம். 285.10-12)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.5.8.1.2.** மாலை சூடிய தலைவன் ஒருவன், ஒருவரும் துணையாய் வந்து உதவி செய்யாத போதும் தன் வீர உணர்வு காரணமாகக் கண்கள் சினத்தால் சிவந்து புகை எழப்பார்த்துத் தன் ஒரு கேடயத்தைக் கொண்டே பகைவர் வீசிய படைக்கலங்களை எல்லாம் தடுத்து வென்ற வலிமையுடையவன் ஆனான் என்றமையால், அத்தலைவனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர். ஔவையார் இதனை,

*"...........மலர்த்தார் அண்ணற்கு,*
*ஒருவரும் இல்லை மாதோ செருவத்துச்*
*சிறப்புடைச் செங்கண் புகையவோர்*
*தோல்கொண்டு மறைக்கும் சால்புடை யோனே"* (புறம். 311.4-7)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.8.1.3.** தலைவன் ஒருவன், பரிசில் பெற வந்தவர்களுக்குப் பரிசில் கொடுத்துக் காப்பாற்ற வேண்டும் என்னும் காரணத்திற்காக, பல வழிகள்

பொருந்திய நாட்டையும், வலிமையும் உடையவனாயினும், கையில் பொருள் ஏதும் பெற்றில்லாதவன் ஆயினும், பொருளை விரும்பி அவனைக் காணச் செல்பவர் யானையும் தேரும் தரவேண்டும் என்று வேண்டினராயினும் பகைவரிடம் உள்ளவற்றைக் காட்டிப் பின்னர் அவர்களிடம் போரிட்டுப் பெற்று வந்து, அவற்றை இரவலர்க்குத் தருவதில் வல்லவன் என்றமையால் அவ்வொரு தலைவனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர். இதனை மாங்குடிகிழார்,

> ***"அத்தம் நண்ணிய நாடுகெழு பெருவிறல்***
> ***கைப்பொருள் யாதொன்றும் இலனே நச்சிக்***
> ***காணிய சென்ற இரவன் மாக்கள்***
> ***களிறொடு நெடுந்தேர் வேண்டினும் கடவன்"*** (புறம். 313.1-4)

என்னும் பாடல் வரிகளில் மொழிந்துள்ளனர்.

**1.5.8.1.4.** ஒரு தலைவன், தன் ஊரில் வாழும் புல்லியராகிய செல்வர் முன் தனக்கு வேண்டும் அளவைச் சொல்லி வரகைக் கடனாகக் கேட்டுப் பெற்றுக் கொள்கின்ற பெரும்புகழ் உடையவன். இத்தலைவன், தன் வீரத்தின் காரணமாகப் பெருவேந்தர் போரைக் குறித்து, எதிர்த்து வருவராயினும் அவரது பெரும்படையைத் தாங்கி வெற்றிபெறும் வல்லமை உடையவனான் என்றமையால் அத்தலைவனுக்குப் பெருவேந்தர் எதிர்நிலையாயினர். இதனை பெயர் குறிப்பிடப்பெறாத புலவர் ஒருவர்,

> ***"..................தன்னூர்ச்***
> ***சிறுபுல் லாளர் முகத்தள கூறி***
> ***வரகுகடன் இரக்கும் நெடுந்தகை***
> ***அரசவரின் தாங்கும் வல்லா னன்னே"*** (புறம். 327.5-8)

என்னும் பாடல் வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

**1.5.8.1.5.** ஒரு தலைவன், கொடைக்குணம் உடையவன்; பகைவர் படை நெருங்கிப் போரிட்டுத் தம் மன்னன் படையின் முன் படைகெட்டு அழியும்படி செய்கையில், உயர்ந்த வாளைக் கையிலெடுத்துத் தன் வீரத்தின் காரணமாக, தான் ஒருவன் மட்டுமே எதிர்நின்று, எதிர்த்து வரும் அந்தப் பகைவரின் பெரும்படை

தன்னைக் கடந்து மேலே செல்லாதவாறு, பெரிய கடலைத் தடுத்துத் தாங்கி நிற்கும் கரை போல, இடையில் நின்று தாக்கித் தடுப்பவன்[21] என்றமையால், அத்தலைவனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர். இச்செய்தியை மதுரைக் கணக்காயனார்,

> **"வேந்துடைத் தானை முனைகெட நெரிதர**
> **ஏந்துவாள் வலத்தன் ஒருவன் ஆகித்**
> **தன் இறந்து வாராமை விலக்கலின் பெருங்கடற்கு**
> **ஆழி அனையன் ......................**
> **.................... வன்மை யோனே"** (புறம்.330.1-4,7)

என்னும் பாடல் வரிகளில் தெரிவித்துள்ளார்.

**1.5.8.1.6.** பகைவர், பெருவேந்தர் போன்றோர் தலைவன் எனப்பட்ட வீரர்களுக்கு வீரத்தால், வீர உணர்வால், சினத்தால், இரவலர்களுக்குப் பரிசில் பெற்றுத் தர வேண்டும் என்றதால், பகைமையினால் எதிர்நிலைப்பாத்திரமாயினர்.

**1.5.8.2. வீரர்கள்:**

**1.5.8.2.0.** முற்கூறப்பட்ட பகுதிகளில் பிரித்துக் கூறப்பட்ட வீரர்களினின்று பொதுவாகச் சில வீரர்கள் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளனர் என்பதையும் அவர்கள் தம்மை எதிர்த்தவர்களோடு போரிட்டுள்ளனர் என்பதையும் இப்பகுதியில் ஆராய்ந்து தெரிவிக்கப்பட்டுள்ளது.[22]

**1.5.8.2.1.** ஒரு கரந்தை வீரன், தன்னுணர்வு காரணமாகத் தன்னைப் போருக்குச் செல்கவென முதலில் அனுப்பாத காரணத்தால், மன்னன் முன்பெல்லாம் எங்களுக்குக் கலங்கிய கள்ளையே கொடுப்பான். அவன் பெரும்பாலும் களிப்பில்லாத தெளிந்த கள்ளையே குடிப்பான். அத்தகைய மன்னன், என்னிடம் இப்போது அன்பில்லாதவன் ஆனான்.

அவன் என்னைப் பார்த்து, பகைவர்க்குரிய அரணைச் சூழ்ந்து வாயிதழைக் கடித்து, அதட்டி முற்படப் போருக்குச் செல்கவெனக் கூறாதவன் ஆயினன் என்றமையால் அக்கரந்தை வீரன் ஒருவனுக்கு, அவனைப் போருக்கு அனுப்பாத

மன்னன் எதிர்நிலையானான். இதனை ஆவியார் என்னும் புலவர்,

> **"எமக்கே கலங்கல் தருமே தானே**
> **தேறல் உண்ணும் மன்னே நன்றும்**
> **இன்னான் மன்ற வேந்தே இனியே**
> **நேரார் ஆரெயில் முற்றி**
> **வாய்மடித்த உரறிநீ முந்துஎன் னானே"** (புறம். 298)

என்னும் பாடல் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**1.5.8.2.2.** ஒரு வீரன், தன் வீரத்தின் காரணமாகத் தன்னைக் கொல்ல வந்த யானையின் நெற்றி மீது வேலைப் பாய்ச்சினான். பகைவர், வலக்கையில் வேல் கொண்டு யானைகளுடன் வந்தபோது, அவர்கள் எறிந்தவேல் தன்னுடலில் பாய்ந்தபோது, அதனைப் பிடுங்கி மடித்து அழித்தான். அத்துடன் பகைவரின் தலைவனைத் தோளால் பற்றித் தழுவி தன் உடல் வன்மையால் உயரமாகத் தூக்கிப் பின் நிலத்தில் அடித்துக் கொன்று, கொல்லப்பட்டவரின் உடலைக் கையில் எடுத்து நின்றான் என்றமையால், அவ்வீரனுக்குப் பகைவர் தலைவன் எதிர்நிலையானான். இச்செய்தியை உலோச்சனாரின்,

> **"................பெருந்தகை மறவன்**
> **மேல்வரும் களிற்றொடு வேல்துரந்து இனியே**
> **தன்னும் துரக்குவன் போலும் ஒன்னலர்**
> **எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்**
> **கையின் வாங்கித் தழீஇ**
> **மொய்ம்பின் ஊக்கி மெய்க்கொண்ட னனே"** (புறம். 274.2-7)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**1.5.8.2.3.** பகைவர் தன் நண்பனை வளைத்துப் போரிட்டுக் கொண்டிருப்பதை ஒரு வீரன் பார்த்தான். எனவே, நட்பு நிலை காரணமாகத் தன் நண்பனைக் காப்பாற்ற வேண்டும் என்னும் காரணத்திற்காக அவ்வீரன் பகைவரின் பின்னணிப் படையைப் பிளந்து கொண்டு உள்ளே சென்றபோது, பகைவர் தன்னைத் தடுக்க முற்பட்ட அளவில் அத்தடையை மீறினான்.

பின்னர், யானைகள் போல் கொல்லப்பட்டு விழுந்த வீரர்களின் குடல்கள் காலைத் தடுக்கவும், கன்றை விரும்பும் பசுவைப் போல் முன்னணிப் போரில் பகைவரை எதிர்த்து அவர்களால் வளைத்துக் கொள்ளப்பட்டிருந்த தன் நண்பனிடம் சென்று காப்பாற்றினான் என்றமையால் அவ்வீரனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர். இதனை ஒருஉத்தனார்,

> *"................. இவற்கே செற்றிய*
> *திணிநிலை அலறக் கூவை போழ்ந்துதன்*
> *வடிமாண் எஃகம் கடிமுகத்து ஏந்தி*
> *ஓம்புமின் ஓம்புமின் இவண்என ஓம்பாது*
> *தொடர்கொள் யானையின் குடர்கால் தட்பக்*
> *கன்றுஅமர் கறவை மான*
> *முன்சமத்து எதிர்ந்ததன் தோழற்கு வருமே"* (புறம். 275.3-9)

என்னும் பாடல் வரிகளில் மொழிந்துள்ளார்.

**1.5.8.2.4.** பகைவரால் வீசப்பட்ட வேல் மார்பில் தைத்த நிலையில் நிலவுலகில் செய்தற்கரிய கடமையைச் செய்த சான்றோன் எனப் புகழப்படும் வீரன் எங்கே இருக்கிறான் எனக் கேட்டதற்கு, எதிர்த்து வந்த மாற்றார் படையை எதிர்க்கக் கிளர்ச்சி கொண்டு எழும் மார்பைக் காட்டிப் போரிட்ட கடமையின் போது, பகைவர் எறிதலால் அம்பு முதலியவை பாய்ந்து தைத்ததால் உடல் காணாதபடி உயிர்விட்டனன் என்றமையால் சான்றோன் எனப் புகழப்படும் அவ்வீரனுக்குப் பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 282.1-8).

**1.5.8.2.5.** ஔவையார் ஒரு வீரனைப் பற்றிப் புகழ்ந்து சொல்லும் பொழுது, இவ்வீரனுக்குப் பாட்டன், மற்றொரு வீரனின் பாட்டனான மன்னனுக்குப் படைக்கலங்களைப் பகைவர் மீது எடுத்து வீசும் போரில், கண் இமைக்காமல் தச்சனால் ஆர்காலைச் சேர்த்துச் செய்யப்பட்ட வண்டிக்குடம் போல், பகைவர் வீசிய படைக் கலங்களைத் தான் ஏற்று நின்று இறந்தான்.

இவனும் வீரர் போர் செய்தலில் வல்லமை காரணமாக மழையைத் தடுக்கும்

பனை ஓலைக் குடைபோல் பகைவர் வீசும் படைக்கலம் தனக்குரியவர் மேல் பாயாமல் இடைநின்று தடுத்துக் காப்பாற்றுவான் என்று கூறினமையால், இவ்வீரனின் பாட்டனும் பெயரனான இவனும் பகைவரை எதிர்த்துப் போரிடுவதில் வல்லமை பெற்றவர் என்பதால், இவனது பாட்டனுக்கும் இவ்வீரனுக்கும் பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்து ஔவையாரின்,

> ***"நுந்தை தந்தைக்கு இவன்தந்தை தந்தை***
> ***எடுத்துஎறி ஞாட்பின் இமையான்; தச்சன்***
> ***அடுத்து எறி குறட்டின் நின்றுமாய்ந் தனனே***
> ***மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்***
> ***உறைப்புழி ஓலை போல***
> ***மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே"*** (புறம். 290.3-8)

என்னும் பாடல் வரிகளில் புலனாகிறது.

**1.5.8.2.6.** ஒரு வீரன், தன்னுணர்வு காரணமாகத் தன் தமையனை முன்னாளில் கொன்றவனைத் தேடினான். அதனைக் கூறுங்கால், குன்றிமணி உருளுதல் போல் சுழல்கின்ற கண்ணை உடையவனாய், முன்னாள் கொல்லப்பட்டவனின் தம்பி, பெரிய ஊரில் காய்ச்சிய கள்ளைப் பெறும் பொருட்டு வீட்டுக்குள் புகுந்து ஒரு கள் பாத்திரத்தைத் தேடுவது போல் தமையனைக் கொன்ற வீரனைத் தேடினான் என்றமையால், அவ்வீரனின் தம்பிக்கு மற்றொரு வீரன் எதிர்நிலையானான். இச்செய்தி அரிசில்கிழாரின்,

> ***"நெருநல் எல்லைநீ எறிந்தோன் தம்பி***
> ***அகல்பெய் குன்றியின் சுழலும் கண்ணன்***
> ***பேரூர் அட்ட கள்ளிற்கு***
> ***ஓர்இல் கோயின் தேருமால் நின்னே"*** (புறம். 300.3-6)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலனாகிறது.

**1.5.8.2.7.** முல்லை நில வீரர், தம் வீரத்தின் காரணமாக உள்ளம் பொருந்தாத பகைவரின் முன் நின்று அவரது மேற்செலவைக் குறுக்கிட்டுத் தடுத்து, விளங்கும்

உயர்ந்த கொம்பையுடைய யானைகளைக் கொன்று, அதன் பின்னர் அப்போரில் விழுப்புண்பட்டு இறப்பர். அவ்வாறு இறந்த அவர்க்கு நடுகல் நட்டு, அந்நடுகல்லைத் தெய்வமாக முல்லை நில மக்கள் வழிபடல் உண்டு என்றமையால் முல்லை நில வீரர்க்குப் பகைவர் எதிர்நிலையாயினர். இதனை மாங்குடி கிழார்,

> "ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
> ஒளிறுஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தெனக்
> கல்லே பரவின் .............." (புறம். 335-9-11)

என்னும் பாடல் வரிகளில் விளக்கியுள்ளார்.

**1.5.8.2.8.** அம்பு தொடுக்கும் வீரர், அம்பு தொடுக்கும் வல்லமை காரணமாகத் தம் வில்லிடைத் தொடுத்துவிட, அதனால் எதிர்நின்று உயிர்தந்து வீழ்ந்த வீரர் பொருட்டு நடப்பட்ட பெயரும் பீடும் எழுதப்பட்ட நடுகல் என்றமையால் அம்பு தொடுக்கும் வீரர்க்கு, வீழ்ந்த வீரர் எதிர்நிலையாயினர்.

> "விழுத்தொடை மறவர் வில்லிடைத் தொலைந்தோர்
> எழுத்துடை நடுகல் அன்ன ............." (ஐங்.352.1-2)

**1.5.8.2.9.**

(1) மன்னன் ஒருவன், கரந்தை வீரன் ஒருவனுக்கு, அவ்வீரனைப் போருக்கனுப்பாததால் எதிராளியானான்.

(2) பகைவர் தலைவன் ஒருவன் ஒரு வீரனுக்கு, வீரத்தின் காரணமாக எதிராளியானான்.

(3) பகைவர், நண்பனைக் காப்பாற்றச் சென்ற வீரன் ஒருவனுக்கு நட்பு நிலையால் எதிராளியானான்.

(4) பகைவர், சான்றோன் எனப் புகழப்படும் வீரன் ஒருவனுக்கு மாற்றாரின் படையை எதிர்த்துப் போரிட வேண்டும் என்பதால் எதிராளியாயினர்.

(5) பகைவர், ஒரு வீரனுக்கும் அவனது பாட்டனுக்கும் வீரப் போர் செய்வதில் வல்லமை உடையவர் என்ற காரணத்தால் எதிராளியானார்கள்.

(6) மற்றொரு வீரன், ஒரு வீரனின் தம்பிக்குத் தன்னுணர்வு காரணமாக எதிராளியானான்.

(7) பகைவர், முல்லை நில வீரர்க்கு, வீரம் காரணமாக எதிராளியாய் இருந்துள்ளனர்.

(8) வீழ்ந்த வீரர், அம்பு தொடுக்கும் வீரர்க்கு அம்பு தொடுக்கும் வல்லமை உடையவர் என்னும் காரணத்தால் எதிராளியாயினர்.

**1.5.9. முடிவுகள்:**

**1.5.9.0.** முதலாம் எழினி எனப்படும் குறுநில மன்னன், வீரன் மத்திக்கு, அவன் தன் அரசன் ஆணை காரணமாகப் பிடித்து வந்ததால் எதிர்நிலைப் பாத்திரம்.

**1.5.9.1.** பகை மன்னர், வல்லார் கிழான் பண்ணனுக்கு, அவனது வீரத்தின் காரணமாக நடுகல் நாட்டப்பட்டிருப்பதால் எதிர்நிலைப்பாத்திரம்.

**1.5.9.2.** பகைவர், வழுதியின் மறவர்க்கு, அவர்களது வீரத்தின், வாள் வலிமையின் காரணங்களால் எதிராளியாயினர்.

**1.5.9.3.** பகைவர், மாற்றார் போன்றவர்கள், செழியனின் மறவர்க்குப் பிறர் பொருள் கவர்ந்து வருதல், விளைநிலங்கள் அழித்தல் காரணங்களால் எதிரியானார்கள்.

**1.5.9.4.** சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியின் வீரர்கள், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனின் வீரர்க்குத் தேர்ப்படை கொண்டு போரிட்டதன் காரணமாக எதிராளியானார்கள்.

**1.5.9.5.** பகைவர், பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வீரர்க்கு, அவர்தம் சினம், நாடு அழித்தல் காரணங்களால் எதிரியானார்கள்.

**1.5.9.6.** பகைவர், பெருஞ்சேரல் இரும்பொறை வீரர்க்கு அவர்தம் அரசனை வணங்காமையால், திறைப் பொருள் செலுத்தாமையால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**1.5.9.7.** பகை மன்னர், வானவன் மறவன் பிட்டங் கொற்றனுக்குப் பகைமையின் காரணமாக எதிராளியாயினர்.

**1.5.9.8.** பகைவர், அஞ்சியின் வீரர்க்கு, மாற்றார் பொருளைக் கவர்ந்து வருதல் காரணமாக எதிர்நிலை.

**1.5.9.9.** பகைவர், எழினியின் வீரர்க்கு, மாற்றார் பொருளைக் கவர்ந்து வருதல் காரணமாக எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

**1.5.9.10.** இளையோரும், முதியோரும், மூன்றாம் திதியன், அன்னி ஆகியோரின் வீரர்க்குப் போரிடத் தகுதியுடையவராக இல்லாததால், வேறிடத்திற்குச் செல்லல் வேண்டும் என அனுப்பியதன் காரணமாக எதிராளியானார்கள்.

**1.5.9.11.** பகைவர், அதியமானின் (அதியமான் நெடுமான் அஞ்சியின்) வீரர்க்கு, அவர்தம் வீரம் காரணமாக அஞ்சியதால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**1.5.9.12.** பெண் கேட்டு வந்த மன்னன் ஒருவன், பெருஞ்சிக்கல்கிழான் என்னும் வேளான் தலைவனுக்கு, அவன் பெண் தர மறுத்து வஞ்சினச் சொற்கள் பேசியதால், இருவரும் மாறுபட்ட கருத்தும் கொள்கையும் உடையவராய் இருந்தமையால் எதிராளி.

**1.5.9.13.** பெண் கேட்டு வந்த மன்னரும் பகைவரும், பெண் கேட்டு வந்த பிறரும், பெண்ணின் தந்தை; தமையர்; தன்னையர் போன்ற வீரர்க்கு, அவர்களது வீரத்தின், குடிமை ஆண்மை முதலியவற்றால் பொருந்தாதவர்க்குப் பெண் தருவதில்லை என்னும் காரணமாகவும், போரில் சிறந்த மறவர்க்கு மட்டுமே பெண் தர வேண்டும் என்னும் காரணம் கருதியும், போர் வெறி கொண்டதின், பகைமை, மற உணர்வு, பெண் தர மறுத்ததின் காரணங்களால் எதிராளியாயினர்.

**1.5.9.14.** பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்ற வெட்சி வீரர்கள், காரியாதி என்னும் தலைவனுக்கு, அவனது பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்றதன் காரணமாக எதிரியாயினர்.

**1.5.9.15.** வெட்சி வீரர், கரந்தை வீரர்க்கு, வெட்சியார் கவர்ந்து சென்ற ஆநிரையை மீட்டல், வீரம் காரணமாக எதிராளியாக இருந்துள்ளனர்.

கரந்தை வீரர், வெட்சி வீரரின் தலைவனுக்குப் பசுக்கூட்டத்தை மீட்டு வருதல், வில்லாற்றல் காரணமாக எதிராளியாக இருந்துள்ளனர்.

பகைவரது வீரர்கள், வீரன் எனப்படும் தலைவனுக்கு, வீரத்துடன் ஒன்று கூடிப் போரிட்டதன் காரணமாக எதிராளியானார்கள்.

கரந்தை வீரர்கள், வெட்சி வீரர்களுக்குத் தலைவனுக்கு, அவனது வீரத்தின், பசுக்களைக் கவர்ந்து கரந்தை மறவரைக் கொன்றதன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**1.5.9.16.** பகைவர், முதியவளின் வீரமகன் ஒருவனுக்கு அவனது வீரத்தின் காரணமாக எதிராளியாயினர்.

பகைவர், வீரத்தாயின் மகன் ஒருவனுக்குப் பகைமை காரணமாகவும், வீரம் காரணமாகவும் எதிராளியாயினர்.

மறக்குடி மடந்தையாகிய தாய் ஒருத்தி, இளஞ்சிறுமகன் ஒருவனுக்குத் துணிவு, நாட்டுப்பற்று, வீரப்புகழ்க் கொண்டவளாய்ப் போருக்கனுப்பியதன் காரணங்களால் எதிராளியானாள்.

**1.5.9.17.** பகைவர், பெருவேந்தர் போன்றோர், தலைவன் எனப்பட்ட வீரர்களுக்கு, வீரம், வீர உணர்வு மற்றும் சினம், இரவலர்களுக்குப் பரிசில் பெற்றுத் தர வேண்டும் என்பதின், பகைமையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

**1.5.9.18.**

(1) மன்னன் ஒருவன், கரந்தை வீரன் ஒருவனுக்கு, அவ்வீரனைப் போருக்கனுப்பாத காரணத்தால் எதிராளி.

(2) பகைவர் தலைவன் ஒருவன், ஒரு வீரனுக்கு, வீரத்தின் காரணமாக எதிராளியானான்.

(3) பகைவர், நண்பனைக் காப்பாற்றச் சென்ற வீரன் ஒருவனுக்கு, நட்பு நிலை காரணமாக எதிராளியாயினர்.

(4) பகைவர், சான்றோன் எனப் புகழப்படும் வீரன் ஒருவனுக்கு, மாற்றாரின் படையை எதிர்த்துப் போரிட வேண்டும் என்னும் காரணத்தால் எதிராளியாயினர்.

(5) பகைவர், ஒரு வீரனுக்கும் அவனது பாட்டனுக்கும் வீரர் போர் செய்வதில் வல்லமை உடையவர் என்னும் காரணத்தால் எதிராளியானார்கள்.

(6) மற்றொரு வீரன், ஒரு வீரனின் தம்பிக்கு, தன்னுணர்வு காரணமாக எதிராளியானான்.

(7) பகைவர், முல்லை நில வீரர்க்கு, வீரம் காரணமாக எதிராளியாய் இருந்துள்ளனர்.

(8) வீழ்ந்த வீரர், அம்பு தொடுக்கும் வீரர்க்கு, அம்பு தொடுக்கும் வல்லமை உடையவர் என்னும் காரணத்தால் எதிராளியாயினர்.

வீரர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றி ஆராய்ந்த பொழுது, பத்து மன்னர்களின் வீரர்களுக்கும் பெயர் குறிப்பிடப் பெறாத மன்னர் சிலரது வீரர்களுக்கும் தலைவன், வீரர் எனக்குறிப்பிடப் பெற்ற வீரர்கள் சிலருக்கும் எதிர்நிலைப் பாத்திரங்கள் உள்ளன என அறிய முடிகிறது.

இவர்களில், பெண்ணின் தந்தை, தமையர், தன்னையர் எனப்பட்டவரும் ஊர்த்தலைவன் எனப்பட்டவருமான வீரர்களுக்கு,

(1) வீரம்

(2) குடிமை, ஆண்மை முதலியவற்றால் பொருந்தாதவர்க்குப் பெண் தருவதில்லை.

(3) போரில் சிறந்த மறவர்க்கு மட்டுமே பெண் தர வேண்டும்.

(4) போர் வெறி கொண்டமை

(5) பகைமை

(6) மற உணர்வு

(7) பெண் தர மறுத்தது,

போன்ற முக்கிய காரணங்களால், எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இவற்றுள், அவர்களது வீரம் அதிகக் காரணமாக இருந்துள்ளது.



# அடிக்குறிப்புகள்

1. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக்.256, 51, 43.
2. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ. தட்சிணாமூர்த்தி, ப.236
   இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப.91.
3. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 265, 166,140,144.
4. மேலது, பக். 53, 43.
   சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 179.
5. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 249, 101, 96.
   சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 163.
6. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக், 218, 54, 55.
   சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, ப. 112.
7. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
   சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 59.
   சங்ககால வரலாற்று ஆய்வுகள், தொகுதி-1, ப. 226
8. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.
   சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, ப. 80.
   சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-1, பக். 171, 178.
9. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 267,153,154,140,143.
   சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, பக். 96, 97.
10. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக் 72, 54.
11. மேலது, பக். 126, 127, 96.
12. சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், பக். 255, 256.
13. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 125, 126, 96.
14. மேலது, பக். 187, 188.
    சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, பக். 187, 188.
15. புறநானூறு, தொகுதி-2, 349, ப. 246.
16. மேலது, 342, 345, 346, 352, 350, 353, 351, 343, 341.
17. மேலது, 261, ப. 115.

18. அகநானூறு, தொகுதி-1, 35.

புறநானூறு, தொகுதி-2. 260, 270, 257, 263, 264, 269.

19. புறநானூறு, தொகுதி-2, 276, 295, 279.

20. மேலது, 285, 311, 313, 327, 330.

21. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 135.

22. புறநானூறு, தொகுதி-2, 298, 274, 275, 282, 290, 300, 335, 352



# 2. புலவரின் எதிர்நிலைப் பாத்திரங்கள்

## 2.1. ஆண்பாற் புலவர்கள்

| | | |
|---|---|---|
| 2.1.0. | முன்னுரை | |
| 2.1.1. | குடவாயில் கீரத்தனார் | கி.மு. 300-275 |
| 2.1.2. | துறையூர் ஓடைகிழார் | கி.மு. 275-250 |
| 2.1.3. | கபிலர் | கி.மு. 250-225 |
| 2.1.4. | பெருங்குன்றூர் கிழார் | |
| 2.1.4.1. | பெருங்குன்றூர் கிழார்-1 | கி.மு. 250-225 |
| 2.1.4.2. | பெருங்குன்றூர் கிழார்-2 | கி.மு. 200-175 |
| 2.1.5. | பரணர் | கி.மு. 250-225 |
| 2.1.6. | அரிசில் கிழார் | கி.மு. 225-200 |
| 2.1.7. | புல்லாற்றூர் எயிற்றியனார் | கி.மு. 225-200 |
| 2.1.8. | கருவூர் பெருஞ்சதுக்கத்துப் பூதனார் | கி.மு. 225-200 |
| 2.1.9. | பொத்தியார் | கி.மு. 225-200 |
| 2.1.10. | ஆலத்தூர் கிழார் | கி.மு. 200-175 |
| 2.1.11. | கோவூர் கிழார் | கி.மு. 200-175 |
| 2.1.12. | தாமப்பல் கண்ணனார் | கி.மு. 200-175 |
| 2.1.13. | ஆடுதுறை மாசாத்தனார் | கி.மு. 175-150 |
| 2.1.14. | பெருந்தலைச் சாத்தனார் | கி.மு. 150-125 |
| 2.1.15. | பெருஞ்சித்திரனார் | கி.மு. 150-125 |
| 2.1.16. | மாறோகத்து நப்பசலையார் | கி.மு. 150-125 |
| 2.1.17. | ஐயூர் முடவனார் | கி.மு. 150-125 |
| 2.1.18. | மதுரை மருதனிளநாகனார் | கி.மு. 150-125 |
| 2.1.19. | காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் | கி.மு. 150-125 |
| 2.1.20. | அண்டர் நடுங்கல்லினார் | |
| 2.1.21. | அண்டர் மகன் குறுவழுதியார் | |
| 2.1.22. | கண்ணம் புகுத்தாராயத்தனார் | |
| 2.1.23. | மதுரைப் படைமங்க மன்னியார் | |

## 2.2. <u>பெண்பாற்புலவர்கள்</u>

2.2.0. முன்னுரை

2.2.1. பெருங்கோப் பெண்டு கி.மு. 350-325

2.2.2. நக்கண்ணையார் கி.மு. 300-275

2.2.3. ஔவையார் கி.மு. 150-125

2.3. முடிவுரை

**2.0.** சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற ஆய்வுத் தலைப்பின் இரண்டாவது இயல் புலவரின் எதிர்நிலைப் பாத்திரங்கள். சங்ககால மன்னர்கள் சங்கம் அமைத்து, புலவர்களைக் கூட்டித் தமிழை வளர்த்தனர்.

மன்னர்களால் ஆதரிக்கப் பெற்ற தமிழ்ப்புலவர்கள், தமிழை வளர்த்த பெருமைக்குரியவர்கள். அரசன் தவறு செய்யும் போது இடித்துத் திருத்தும் சான்றோர்கள். மக்கள் நலமாக வாழ மன்னர்கள் எப்படி ஆட்சி செய்ய வேண்டும் என்று அறிவுரை கூறி மன்னர்களை நெறிப்படுத்தியவர்கள். தமிழின் சிறப்பை இன்றைய உலகிற்கு உணர்த்த வல்ல நல்ல பல இலக்கியங்கள் படைத்துத் தமிழின் தொன்மை கருதித் தமிழ் ஒரு செம்மொழி என்ற முத்திரையைப் பொறிக்கக் காரணமானவர்கள். அரசனாயினும் தகுதியறிந்து வழங்காத பொருளைப் பெற்றுச் செல்லாமல், விட்டுச் சென்றவர்கள். தாம் பெற்ற செல்வத்தை மற்றவர்க்கும் வழங்கி அதனால் மகிழ்ச்சி அடைந்தவர்கள்.

சங்க காலத்தில் வாழ்ந்த மன்னர்களுக்குள் போர் நிகழ்ந்த போது சந்து செய்து அமைதி காத்தவர்கள். புலவர்கள் பலர் வாழ்ந்த போதும், அவர்களுள் சிலருக்கு மட்டும் எதிர்நிலைப்பாத்திரங்களாகப் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்களை,

I ஆண்பாற் புலவர்கள்

II பெண்பாற் புலவர்கள்

என இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டு கால அடிப்படையைக் கருத்தில் கொண்டு வரிசைப்படுத்தித் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## 2.1. ஆண்பாற் புலவர்கள்:

**2.1.0.** புலவரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற இயலில் முதலாவதாக ஆண்பாற் புலவர்கள் எடுத்துக் கொள்ளப்பட்டு அவர்களில், இருபத்து மூன்று புலவர்களுக்கு உள்ள எதிர்நிலைப் பற்றி ஆராய்ந்து இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### 2.1.1. குடவாயில் கீரத்தனார்:

**2.1.1.0.** குடவாயில் சோழ நாட்டில் உள்ள ஊராகும். அவ்வூரில் வாழ்ந்த கீரத்தனார் என்ற புலவர், குடவாயில் கீரத்தனார் என ஊர்ப்பெயரோடு சேர்த்து

அழைக்கப்பட்டார். இவர் பெயர் குடவாயில் நல்லாதனார் என்றும் காணப்படுகிறது. இவரால் பாடப்பட்டவர் ஒல்லையூர் கிழார் மகன் பெருஞ்சாத்தன் மற்றும் வழுதி, அத்தி, எவ்வி, பெரும்பூட்சென்னி, பொறையன், கங்கன், கட்டி, கணையன், பழையன், நன்னன் ஆகியோர்.

தொண்டி, கொற்கை, உறையூர் என்பனவற்றையும் இவர் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 300-275.[1]

**2.1.1.1.** குடவாயில் கீரத்தனார், ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் (தம்மை ஆதரித்தவர்) இறந்த பின் குடவாயில் நோக்கிச் சென்றார்.

பெருஞ்சாத்தனது துயரத்தால் யாவரும் கலக்கமுற்று வருந்தியிருக்கும் போது, அவனது நாட்டில் முல்லைக்கொடி மட்டும் பூத்திருப்பது சரியாகுமா என்னும் காரணத்திற்காக, அம்முல்லை கேட்குந போலவும் (கேட்கும் தன்மை உடையது போலவும்) கிளக்குந போலவும் (கேட்பதற்குத் தக்க பதில் சொல்லும் தன்மை உடையது போலவும்) கருதிக் கொண்டு,

முல்லைக் கொடியே! பெருஞ்சாத்தான் இறந்த பின் வருத்தத்தால் உன்னை இளையோர் சூடார்; வளையல் அணிந்த இளைய மகளிர் பறித்துச் சூடமாட்டார்; அவ்வாறே தம்மைப் பாதுகாத்து வந்த பெருஞ்சாத்தனது துயரத்தால் பரிசில் பெறும் பாணர் முதலியவரும் பிறரும் தம்மை அலங்கரித்துக் கொள்ள மாட்டார்.

பெருஞ்சாத்தன் இறந்ததால் அவனது பகைவர் மகிழ்ச்சியால் பூப்பர். ஆனால், அவனது நாட்டில் நீ பூக்கலாமோ. பெருஞ்சாத்தன் இறந்த துயரத்தின் காரணமாக அவனை இழந்த பின் கொடியவனாய் வாழ்கின்றேன். நீயும் கொடியை உடையதாய் இருப்பதால் பூத்திருக்கின்றாயோ (கொடிய பகைவர் போல் மகிழ்ந்திருக்கின்றாயோ) என்று முல்லைக் கொடி அஃறிணையாக இருந்தும், தாம் கொண்ட துயரத்தால் அதனை உயர்திணையாகக் கருதிக் கொண்டு, முல்லைக் கொடியின் மகிழ்வுக் கேற்ற காரணத்தைக் கேட்டமையால் குடவாயில் கீரத்தனாருக்கு, பகைவரும், முல்லைக் கொடியும் எதிர்நிலையாயினர்.

"வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை

முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே" (புறம். 242.5-6)

**2.1.1.2.** பகைவர், முல்லைக் கொடி போன்றோர், குடவாயில் கீரத்தனாருக்கு, பெருஞ்சாத்தன் இறந்த மகிழ்ச்சியினால் பூத்ததன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**2.1.2. துறையூர் ஓடைகிழார்:**

**2.1.2.0.** துறையூர் என்பது ஓர் ஊர். அஃது காவிரிக்கரையில் உள்ளது. அவ்வூரில் வாழ்ந்த ஓடைகிழார், ஆய்அண்டிரன் (ஆய்வள்ளல்) என்பவனைப் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 275-250.[2]

**2.1.2.1.** துறையூர் ஓடைகிழார், தன் வறுமை நிலையைப் பரிசில் தருபவனாகிய ஆய்அண்டிரனிடம் எடுத்துக் கூறி, பெரும்பொருள் பரிசாகப் பெற்று வரவேண்டும் என்னும் காரணத்திற்காக, ஆய்அண்டிரனாகிய மன்னனே! நின்னிடம் பொருள் பெற்றுச் செல்லுங்கால், எம் வறுமைத் துன்பத்தின் இயல்பை அறியாதவராய், நின் னகப்பொருள் தருவாயாக! என்று கூறி என் நிலை தளறுமாறு புன்மையான ஆறலை கள்வர் மரங்கள் செறிந்துள்ள குளிர்ந்த மலையில் வாழும் குரங்குகளைப் போலப் பறித்துக் கொள்வர் என்று கூறியமையால், துறையூர் ஓடைகிழாருக்கு ஆறலை கள்வர் எதிர்நிலையாயினர் (புறம். 136.6-13).

**2.1.2.2.** துறையூர் ஓடைகிழாரின் பரிசில் பொருளைப் பறித்ததால் ஆறலை கள்வர்கள் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**2.1.3. கபிலர்:**

**2.1.3.0.** கபிலர் பாரியின் நண்பர். அந்தண குலத்தவர். பாரி மாய்ந்த பின்பு அவனுடைய மகளிரை அழைத்துச் சென்று மணந்து கொள்ளுமாறு விச்சிக்கோன், இருங்கோவேள் என்பவர்களை வேண்டினார். அவர்கள் மறுத்துவிட்டதால் அம்மகளிரைப் பார்ப்பாரிடத்துப் படுத்துத் தம் கடனை நிறைவேற்றியவர்.

குறிஞ்சித் திணையைப் பாடுவதில் வல்லவர். ஐங்குறுநூற்றில் குறிஞ்சித்

திணையில் அமைந்த நூறு பாடலைப் பாடியவர் இவரே. பதிற்றுப்பத்தில் ஏழாம் பத்தில் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடிப் பெரும் பரிசிலைப் பெற்றவர். பத்துப்பாட்டுள் ஒன்றான குறிஞ்சிப்பாட்டும், பதினெண்கீழ்க்கணக்குள் ஒன்றான இன்னா நாற்பதும் இவரால் பாடப்பட்டவை.

இவர், சேரமான் கடுங்கோ வாழியாதன், வேள்பாரி, அகுதை, மலையமான் திருமுடிக்காரி, வையாவிக் கோப்பெரும்பேகன், விச்சிக்கோன், இருங்கோவேள் ஆகியோரைப் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 250-225.[3]

இவர், பறம்பு நாட்டைப் பெறும் விதம் பற்றிச் சேர, சோழ, பாண்டிய மூவேந்தர், கண்ணகியை ஏற்று அருள வேண்டுமென்று வையாவிக் கோப்பெரும்பேகன் ஆகியோர்க்கு அறிவுறுத்தியுள்ளார்.

**2.1.3.1.** பாரியின் மகளிரைத் திருமணம் செய்ய இயலாத சேர, சோழ, பாண்டியர், பாரியின் பறம்பு நாட்டையாவது கைப்பற்றி விடலாம் என்று ஒன்று சேர்ந்து போரிட வந்த போது கபிலர், பறம்பு நாட்டை எவ்வாறு பெற முடியும் என்பதைச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, மன்னரே! நீங்கள் மூவரும் ஒன்று சேர்ந்து போரிட்டாலும் பாரியின் பறம்பு நாட்டைப் பெற இயலாது. முந்நூறு ஊர்களை உடைய பறம்பு நாட்டை, முன்னொரு காலத்தில் பாரியைப் போற்றிப் புகழ்ந்து பாடி வந்த பரிசிலர் பெற்றுச் சென்றதைப் போல நீங்களும் பரிசில் பெறுவார் போல் பாடி வந்தீர்களாயின் எங்கள் பாரியையும் பறம்பு நாட்டையும் கொள்ள முடியும்! என்று கபிலர் எடுத்துக் கூறினமையால் சேர சோழ பாண்டியர் மூவேந்தரும் எதிர்நிலையாயினர் (புறம். 109.1-3,13-18, 110).

**2.1.3.2.** வையாவிக் கோப்பெரும் பேகன், தன் மனைவியைத் துறந்து நல்லூர்ப் பரத்தையிடம் புற ஒழுக்கம் உடையவனாக இருந்தபொழுது, கபிலர், கண்ணகியை அவனுடன் சேர்க்க வேண்டும் என்னும் காரணத்திற்காகவும் பேகனைத் திருத்த வேண்டும் என்பதற்காகவும், பேகனே! என் சுற்றம் நேற்றுச் சுரத்தில் நடந்து பசி மிகக் கொண்டதன் காரணமாக நின் ஊரின் புறத்தே உள்ள மன்றில் வந்து தோன்றி நின்னையும் நின்மலையையும் பாடினோம்.

அப்போது, துன்பத்தை மிகுவிக்கின்ற கண்ணீரை நிறுத்த மாட்டாதவளாக, அக்கண்ணீர் அவளது முலையை நனைக்க மிகவும் விம்மி, குழல் இரங்கி ஒலிப்பது போல ஒருத்தி அழுதாள். அவள் உன் மனைவி கண்ணகி. நின்னால் அருளத்தக்கவள்[4] என்று கபிலர் கண்ணகியைப் பேகன் ஏற்று அவள் கண்ணீரைத் துடைக்க வேண்டுமென்று பாணன் கூற்றாக அறிவுறுத்தியமையால், வையாவிக் கோப்பெரும் பேகன் எதிர்நிலையானான் (புறம். 143.6-15).

**2.1.3.3.** சேர, சோழ, பாண்டிய மூவேந்தர், வையாவிக் கோப்பெரும் பேகன் ஆகியோர் கபிலருக்கு, பாரியை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றுவிடலாம் என்று ஒன்று சேர்ந்து வந்ததன், பேகனைத் திருத்திக் கண்ணகியை அவனுடன் ஒன்று சேர்க்க வேண்டும் என்று அறிவுறுத்தியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 2.1.4. பெருங்குன்றூர் கிழார்:

**2.1.4.0.** சங்க காலத்தில் பெருங்குன்றூர் கிழார் என்னும் பெயரில் இரண்டு புலவர்கள் வாழ்ந்துள்ளார்கள் என்பதை அறிய முடிகிறது. கிழார் என்ற சொல் வேளாரைக் குறிப்பது. எனவே, பெயரோடு சேர்த்துச் சொல்லப்பட்டது. பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர்களை முறையே பெருங்குன்றூர் கிழார்-I, பெருங்குன்றூர் கிழார்-II எனக் காலநிலையைக் கணக்கில் கொண்டு ஆராய்ச்சியாளர் குறிப்பிடுவர்.

### 2.1.4.1. பெருங்குன்றூர் கிழார்-I:

**2.1.4.1.0.** முதலாம் பெருங்குன்றூர் கிழார் வையாவிக் கோப்பெரும் பேகனைப் பாடியுள்ளார். இவரது பாடல்கள் புறநானூற்றிலும் அகநானூற்றிலும் காணப்படுகின்றன. இவரது காலம் கி.மு. 250-225.[5]

**2.1.4.1.1.** முதலாம் பெருங்குன்றூர் கிழார், கபிலர், பரணர், அரிசில்கிழார் ஆகியோரைப் போல, வையாவிக் கோப்பெரும் பேகனை அறிவுரை கூறித் திருத்த வேண்டும் என்னும் காரணத்திற்காக அவனிடம் சென்று பாடினார்.

பேகனோ பரிசில் தர முற்பட்டான். அதனை ஏற்றுக் கொள்ளாத பெருங்குன்றூர் கிழார், நேற்று மழைத்துளி விழும் ஓசையைத் தனியாகக் கேட்டு ஒரு பக்கத்தில் தனித்து நின்றாள் ஓர் அரிவை. வரிகள் பரவிய குளிர்ந்த கண்களையும் மாநிறத்தையும் உடையவள் அவள் கண்ணகி. அந்த மகளின் நெய் பூசப்படாத கரியமை போன்ற மயிரை, நீலமணிபோல விளங்கித் தோன்றச் செய்து நல்ல மலரைச் சூடும்படிச் செய்ய இன்று, என்னுடன் அவள் இருக்கும் இடத்திற்கு வருதல் வேண்டும். அதுவே, யாம் வேண்டும் பரிசில், என்று தன்னுடன் பேகன் வந்து பிரிந்து துயரடைந்திருக்கும் கண்ணகியை ஏற்றுக் கொள்ள வேண்டி அறிவுறுத்தியமையால், பேகன் எதிர்நிலையானான் (புறம். 147.3-9).

**2.1.4.1.2.** முதலாம் பெருங்குன்றூர் கிழார் அறிவுரை கூறியமையால் வையாவிக் கோப்பெரும்பேகன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

### 2.1.4.2. பெருங்குன்றூர் கிழார்-II:

**2.1.4.2.0.** இரண்டாம் பெருங்குன்றூர் கிழார் பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்தினைப் பாடியவர். ஒன்பதாம் பத்தில், குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை மன்னனைப் பாடி முப்பத்தி இரண்டாயிரம் காணம் பொன் பரிசு பெற்றவர். இவரே, உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியையும் புகழ்ந்து பாடி அவரால் ஆதரிக்கப்பட்டவர். இவரது பாடல்கள் புறநானூற்றிலும் பதிற்றுப்பத்திலும் காணப்படுகின்றன. இவரது காலம் கி.மு. 200-175.[6]

**2.1.4.2.1.** பெருங்குன்றூர் கிழார், சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை தனக்குப் பரிசில் தராது காலம் நீட்டித்தப் பொழுது, தன்னை இழிவுபடுத்தியதாகக் கருதி, மன்னனின் செயல் அறச்செயல் அன்று என்பதை எடுத்துக் கூறல் வேண்டும் என்னும் காரணத்திற்காக, மன்னா! உம்மைப் போன்றவரும் அருளின்றிப் பரிசில் தராது போயின், எம்போன்றவர் உலகத்தில் பிறக்க மாட்டார். கற்புடைய என் மனைவி இறவாது இருந்தால் எம்மை நினைக்காது இருக்க மாட்டாள். என் கணவர் இறந்துவிட்டானோ, அப்படியாயின் என் உயிரும் கெடுக எனத் துன்பத்துடன் வாழ்வாள். எனவே, மனைவியின் துக்கம் நீங்க வேண்டி, இப்போதே உன்னிடம் விடைபெற்றுக் கொண்டேன்.

உன்னால் சினம் கொள்ளப்பட்ட பகைவரின் அரண், தன்னைக் காப்பவரால் கைவிடப்பட்டு அழியும். அது போல நானும் துன்புற்றுச் செயலற்று வறுமை முந்துற மனம் கலங்கிச் செல்கின்றேன் என்று சேரமான் தன்னைச் சினந்து பரிசில் தராதது அறம் அன்று என்பதை விளக்கி, அறிவுறுத்தியமையால், சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை எதிர்நிலைப் பாத்திரமானான் (புறம். 210.211).

**2.1.4.2.2.** சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை, இரண்டாம் பெருங்குன்றூர் கிழாருக்குப் பரிசில் கொடுக்காததன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 2.1.5. பரணர்:

**2.1.5.0.** சங்ககாலப் புலவருள் சிறப்பாகப் பேசப்படும் புலவர் பரணர். கபிலருடன் நட்புடையவர் ஆதலால் கபிலபரணர் என்று அழைக்கப்பட்டவர். இவர் சைவ சமயத்தவர்.

பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தை இவர் சேரன் செங்குட்டுவன் மீது பாடினார். இவர், சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி, சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேல்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி, வையாவிக் கோப்பெரும்பேகன், சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், அதியமான் அஞ்சி (அதியமான் நெடுமான் அஞ்சியின் முன்னோன், அஞ்சி என்றும் அழைக்கப்படுவான்) ஆகியோரைப் பாடியுள்ளார்.

இவர் பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்து தவிர, புறநானூற்றில் பதின்மூன்றும், நற்றிணையில் பன்னிரண்டும், குறுந்தொகையில் பதினேழும் அகநானூற்றில் முப்பத்து நான்கும், திருவள்ளுவமாலையில் ஒன்றும் எனப் பல பாடல்களைப் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 250-225.[7]

**2.1.5.1.** வையாவிக் கோப்பெரும் பேகன் தன் மனைவியைத் துறந்து நல்லூர்ப் பரத்தையிடம் புற ஒழுக்கம் உடையவனாக இருந்தபொழுது, பரணர் கண்ணகியை அவனுடன் சேர்க்க வேண்டும் என்னும் காரணத்திற்காகவும், பேகனைத் திருத்த வேண்டும் என்பதற்காகவும், பேகனே! முன்பு நின்கானத்தைப் பாடினோம். அப்போது இளையவள் ஒருத்தி எம்முன் நின்று அழுதாள். யாம் அவளைத் தொழுது வணங்கி,

நீ என் பேகனுக்கு உறவோ என வினவினோம். அவள் தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, யாம் பேகனுக்கு உறவல்லேம், அவன் என்போன்ற ஒருத்தியின் அழகில் ஈடுபட்டு நாள்தோறும் நல்லூருக்குச் சென்று வருகின்றான் என்று பலரும் உரைப்பர் என்று சொன்னாள்.

எனவே பேகனே! நீ அருள் செய்யாது போனால், அவள் இறந்துபடுவாள். அதனால் உனக்குப் பழி ஏற்படும் என்று சொல்ல வந்தவர், அருள் செய்யாது இருப்பது கொடிதே![8] என்று பரணர், பேகனால் கைவிடப்பட்ட கண்ணகியைப் பேகன் ஏற்று அவள் கண்ணீரைத் துடைக்க வேண்டுமென்று, பாணன் கூற்றாக அறிவுறுத்தியமையால், பரணருக்கு வையாவிக் கோப்பெரும்பேகன் எதிர்நிலையானான் (புறம். 144,1,8-14, 145).

**2.1.5.2.** தலைவன் எனப்படும் ஒரு சிறந்த வீரனின் மகளைத் திருமணம் செய்து கொள்ள மன்னன் ஒருவன் பெண் கேட்டபோது, அத்தலைவன் பெண் தர மறுத்ததால் அத்தலைவனுடன் மன்னன் போரிட முற்பட்டான்.

இதனை அறிந்த பரணர், அவ்விருவரது போரால் அவர்கள் போர் செய்யும் ஊர் பேரழகை இழக்கும் என்று கருதி அவர்கள் போரைத் தவிர்க்க வேண்டும் என்னும் காரணத்திற்காக வருந்திய பரணர், நன்செய் ஊரான மருதநிலத்தூர், யானைகள் தமக்குள் போர் செய்தால் கலங்கிச் சேறாகும் நீர்நிலை போல், இருவரும் செய்யும் போரால் தன் பேரழகை இழக்கும் போலும்! அதனால், ஊர்மக்களுக்கு இன்னல் ஏற்படுமே என்று அவர்களது போரைத் தவிர்க்க முயன்றதால், பரணர்க்குத் தலைவன் எனப்படும் வீரனும், பெண்ணை மணக்கக் கேட்ட மன்னனும் எதிர்நிலையாயினர் (புறம். 341.6-19, 343).

**2.1.5.3.** ஓர் ஊர்த்தலைவன் எனப்படும் வீரனின் மகளைப் பலர் மணம் செய்து கொள்ளப் பெண் கேட்டு வந்தபோது, ஏற்படும் போரால் அவ்வூர்க்கு உண்டாகக் கூடிய துன்பத்தை எடுத்துக்கூறி, அவர்கள் போரிடலைத் தடுக்க வேண்டும் என்னும் காரணத்திற்காகப் பரணர், இவள், ஒப்பவரும் உயர்ந்த வரும் அல்லாதவரை மணந்து கொள்ள மாட்டாள் என்று மொழிந்து தந்தையும் அளிக்க மாட்டான் என்றார்.

மேலும், மகளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று வந்தவர்க்குப் பெரிய ஊரின் அரணைக் கைப்பற்ற வேண்டும் என்னும் சினத்தை உண்டாக்கியதால், பெண்ணின் தந்தையோடு போரிட்டு வெல்ல அரண் மீது சார்த்தி வைக்கப் பெற்ற ஏணிகள், அரண் மீது ஏற முடியாததால் வருந்திக் கிடந்தன, என்று போரால் ஊர்க்கு உண்டாகக் கூடிய துன்பத்தைப் பெண்ணின் தந்தைக்கும் பெண் கேட்டு வந்தவர்க்கும் எடுத்துரைத்தமையால் பரணர்க்குப் பெண்ணின் தந்தையும், பெண் கேட்டு வந்தவரும் எதிர்நிலையாயினர் (புறம். 343.9-17).

**2.1.5.4.** தழும்பன் என்பானது, ஊணூரில் தலைவி ஒருத்தி இருந்தாள். அவளைப் பெண்கேட்டுப் பலர் வந்தபோது, பெண்ணைப் பெற்ற தந்தை மகள் மறுத்தல் காரணமாகப் போர் நிகழ்ந்து ஊர்க்குக் கேடு உண்டாகிவிடுமே என்னும் காரணத்தால், போரைத் தவிர்க்க முயன்ற பரணர், இவ்வூர்க்குளத்தில் பூக்கும் குவளை மலர்போலும் கண்களையுடைய தலைவியாகிய இம்மகளைத் தாய் பெறாதிருக்கக் கூடாதா. இவர்களது நீர்த்துறையில் உள்ள மரங்கள் தோறும் பெண் கேட்டு வந்தவர் யானைகளைக் கட்ட, அம்மரங்கள் சாய்ந்து வேர் வெளியே தெரியப் பெற்றுப் பெரிதும் வருந்துகின்றன. இவளால் போர் ஏற்பட்டுப் பாழாகும் நிலை ஏற்பட்டது. எனவே, இவள் தாய் இவளைப் பெறாதிருந்தால் பகைவரால் இவ்வூர் பாழாகும் நிலையும் இல்லாமல் போயிருக்கும் என்று போர் ஏற்படக் காரணமான பெண்ணின் தாயை மனம் நொந்து கூறுவதால், பெண்ணின் தாய் எதிர்நிலையானாள்.

> *"வாய்மொழித் தழும்பன் ஊணூர் அன்ன*
> *குவளை உண்கண் இவளைத் தாயே*
> *ஈனா ளாயினள் ஆயின் ஆனாது*
> *நிழல்தொறும் நெடுந்தேர் நிற்ப வயின்தொறும்*
> *செந்நுதல் யானை பிணிப்ப*
> *வருந்தின மன்எம் பெருந்துறை மரனே"* (புறம். 348.5-10)

**2.1.5.5.** வையாவிக் கோப்பெரும் பேகன், தலைவன் எனப்படும் வீரனும் அவனிடம் பெண் கேட்டு வந்த மன்னன் ஒருவனும், பெண்ணின் தந்தையும்

அவனிடம் பெண் கேட்டு வந்தவரும், பெண்ணின் தாய் போன்றவரும் பரணர்க்கு அவர் கூறிய அறிவுரையின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள் ஆனார்கள்.

**2.1.6. அரிசில்கிழார்:**

**2.1.6.0.** இவர் அரிசில் என்ற ஊரினர். வேளாண்குடியைச் சார்ந்தவர். ஆதலால், அரிசில்கிழார் என அழைக்கப் பெற்றார். இந்த அரிசில் என்ற ஊர் அரிசிலாற்றங்கரையில் உள்ளது என்பர். இவருக்குச் சமகாலப் புலவர் பொன்முடியார்.

இவர், சேர மன்னன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையைப் பாடியுள்ளார். அதற்காக, பெருஞ்சேரலிரும்பொறை தனது நாட்டையும் ஒன்பது நூறாயிரம் காணம் பொன்னையும் இவர்க்குப் பரிசிலாய்த் தர, அவ்வமயம் நாட்டைத் தாம் ஏற்றுக் கொள்ளாமல் அவ்வரசனையே ஏற்று ஆளும்படி வேண்டியவர். பேகன் என்பவன், தன் மனைவியைத் துறந்தானாக அவனுக்கு அறிவு கூறி, அவளை ஏற்றுக் கொள்ளுமாறு பாடியவர். அதியமான் தகடூரில் இரும்பொறையுடன் பொருது வீழ்ந்தபோது, அவனது பிரிவு ஆற்றாது வருந்தியவர்.

தகடூர் யாத்திரை என்னும் நூலில் இவரால் பாடப்பட்ட பாடல்கள் உள்ளன என்பது நச்சினார்க்கினியரின் தொல்காப்பிய உரையினால் தெரிய வருகின்றது. கிழார் என்றால் உரியவர் என்று பொருள். இவரது காலம் கி.மு. 225-200.[9]

**2.1.6.1.** அரிசில்கிழார், பேகன் கண்ணகியைத் துறந்து புறத்தொழுக்கம் பூண்டிருக்கும் தன்மையை அறிந்து அவனிடம் சென்று அவன் நாட்டைப் புகழ்ந்து பாடினார். அப்போது பேகன் அரிசில்கிழாருக்குப் பரிசில் தந்தான். அதனை ஏற்றுக் கொள்ள மறுத்த அரிசில்கிழார், பேகன் கண்ணகியை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்னும் காரணத்திற்காக, யாம் வேண்டும் பரிசில் இதுவன்று. நீ அருள் செய்யாததால் கண்டவர் இரங்க மெலிந்து, மிக்க துன்பத்தால் வருந்தும் உன் திருந்திய அணிகலன் அணிந்த அரிவையின் தழைத்த மயில் பீலியை ஒன்றாய்க் குவித்தாற் போன்ற கூந்தலில் மணம் கமழும் பூச்சூட அருள வேண்டும்.

அஃதாவது, தேரில் சென்று நின் மனைவியின் துன்பத்தைப் போக்குதல் வேண்டும்! இதுவே யான் வேண்டுவது என்று வையாவிக் கோப்பெரும்பேகனைத்

திருத்தும் நோக்கில் அறிவுறுத்தியதால் அரிசில் கிழாருக்கு வையாவிக் கோப்பெரும்பேகன் எதிர்நிலையானான் (புறம். 146.4-11).

**2.1.6.2.** தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அதியமான் எழினி, போரிட்டுப் போர்க்களத்தில் இறந்தபோது, கூற்றுவன் அவன் உயிர்பறித்துக் கொண்டதன் காரணமாக, எழினி போர்க்களத்தில் வீழ்ந்ததால் உறவினர் வருந்தினர். அவனை இழந்து வருந்திய உலகத்தவர் துன்பத்தைவிட மிக்க இழப்பை அடைந்தாய் கூற்றமே!

நீ எழினியின் உயிரையே உண்டாய். அதன் மூலம் நீ உனக்கே கேடு சூழ்ந்து கொண்டாய். நீ எழினியின் உயிரைக் கொள்ளாதிருந்தால் அவன் நீ உண்ணுமாறு உனக்குப் பல உயிர்களையும் அளித்திருப்பான். இதனால் நீ பசி நீங்கப் பெற்று நாளும் மகிழ்ந்திருப்பாய்! என்று அதியமான் எழினியின் உயிரைப் பறித்துக் கொண்ட கூற்றத்தை அரிசில்கிழார் நொந்து கொண்டதால், அரிசில்கிழாருக்குக் கூற்றுவன் எதிர்நிலையானான் (புறம். 230.4-16).

**2.1.6.3.** ஒரு தலைவன் எனப்படும் வீரனின் மகளை மணம் செய்து கொள்ள எண்ணிய ஒருவன், அதுபற்றிப் புலவர் அரிசில்கிழாரிடம் கேட்டபோது, பெண்ணின் தந்தையும் தமையரும் எத்தகைய வீரம் உடையவர் என்பதை எடுத்துச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, மருதநிலத்தூரின் தலைவனான இவளுடைய தந்தையும் உடன்பிறந்தவர்வளும் பெண் கேட்டு வந்த மன்னர் பலருடன் போரிட்டதால், இறந்தவரின் பிணக்குவியல் உயர்ந்த வைக்கோல் போராகவும், அம்மன்னரின் ஆண் யானைகள், வைக்கோலை மிதித்து ஒதுக்கப்படும் எருதுகளாகவும் ஒதுக்கப்பட்டன. தலைவனின் வாட்போரின் சிறப்பு இத்தகையது.

இப்படி, இவளது தந்தையிடம் பெண் கேட்டு வந்தவர் இவளைப் பெறாமல், பொருது தோற்றோடினர். இவளுடைய உடன்பிறந்தார் போரில் பகைவர் பலரைக் கொன்று குவித்தனர். இதனை நீ உணர்ந்து செய்ய வேண்டியதைச் செய்க! என்பதை அரிசில்கிழார் எடுத்துக் கூறியதால், அரிசில்கிழாருக்குப் பெண் கேட்டு அச்சுறுத்துவதாக வந்தவன் எதிர்நிலையானான் (புறம். 342.11-15).

**2.1.6.4.** வையாவிக் கோப்பெரும்பேகன், கூற்றுவன், பெண் கேட்டு ஒருதலைவனை அச்சுறுத்துவதாக வந்த ஒருவன் ஆகியோர் அரிசில்கிழாருக்கு அவரின் அறிவுரையின், கூற்றத்தை நொந்து கொண்டதின், பெண்ணின் தந்தையின் வீரத்தை வெளிப்படுத்தியதின் காரணங்களால் எதிராளியானார்கள்.

## 2.1.7. புல்லாற்றூர் எயிற்றியனார்:

**2.1.7.0.** புல்லாற்றூர் எயிற்றியனார் எனப்படும் இவர், கோப்பெருஞ்சோழன், தன் மைந்தருடன் போரிட முனைந்தபோது அறிவுரை கூறித் தடுத்தவர். இவரது காலம் கி.மு. 225-200.[10]

**2.1.7.1.** கோப்பெருஞ்சோழன், தன் மக்கள்மேல் போருக்கு எழுந்தபோது, புல்லாற்றூர் எயிற்றியனார் அம்மன்னனுக்கு அறிவுரை கூறித் திருத்த வேண்டும் என்னும் காரணத்திற்காக, கோப்பெருஞ்சோழனே! உன்னுடன் போர் செய்ய வந்த இருவரையும் எண்ணிப் பார்த்தால், நின் பகைமன்னரான சேர பாண்டியர் அல்லர். நின்னுடன் பகையாய் மாறுபட்டு எழுந்த நின் மக்களை எண்ணிப் பார்த்தால், நீயும் அவர்க்குப் பகைவனும் அல்லை!

நீ, இவ்வுலகில் புகழடைந்து தேவர் உலகு சென்றால் நின் அரசாட்சியுரிமை நின்னுடன் போரிட வந்த நின் மக்கள் இருவர்க்கே உரியது.

நின்னுடன் போரிட வந்த நின் மக்கள் உனக்குத் தோற்றுப் போனால், நின் அரசுரிமைச் செல்வம் யாருக்குத் தருவாய். நீ உன் மக்களிடம் தோற்றுப் போனால் பகைவர் மகிழ்ச்சியடைவர். உலகில் பழியை அடைவாய்! எனவே போரிடலை ஒழிப்பாயாக![11] என்று புல்லாற்றூர் எயிற்றியனார் கோப்பெருஞ்சோழனுக்கு அறிவுரை கூறி இடித்துத் திருத்தி அவன் தன் மக்களுடன் போரிட இருந்ததை தடுத்துக் காத்தமையால் புல்லாற்றூர் எயிற்றியனார்க்குக் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலையானான் (புறம். 213.3-19).

**2.1.7.2.** புல்லாற்றூர் எயிற்றியனார் அறிவுரை கூறியதால் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 2.1.8. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார்:

**2.1.8.0.** கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார் பேசும் ஆற்றல் இழந்த நிலையில் வடக்கிருந்த கோப்பெருஞ் சோழனைப் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 225-200.[12]

**2.1.8.1.** கோப்பெருஞ்சோழன், தன் நண்பர்களுடன் வடக்கிருந்த நிலையில், பேசும் ஆற்றல் இழந்திருந்தான். அங்கு இதனைக் கண்டு பேச வந்த பெருஞ்சதுக்கத்துப் பூதனார், மற்றவரைப் போல் தாமும் முன்னமே வடக்கிருக்கத் துணியாமை கருதிப் பேசவில்லையோ என எண்ணியவராக, கோப்பெருஞ்சோழன் மீது கொண்ட இரக்கத்தின் காரணமாக, உயிர்போம் நிலையில் இருக்கின்ற அரசனே! உன் கருத்துக்கேற்ப உன்னுடன் வடக்கிருந்தவர் பலராவர். அத்தகைய நின் நண்பர்களுடன் நானும் சேர்ந்து உன்னுடன் வடக்கிருக்க வரவில்லையே என்னும் காரணம் கருதி என்னுடன் புலந்து பேசாமல் இருக்கின்றாயே! என்று மன்னனோடு பேச முடியாமல் போய்விட்ட வெறுப்பினால் கூறியதால், பெருஞ்சதுக்கத்துப் பூதனார்க்கு, கோப்பெருஞ்சோழன் எதிர்நிலையானான்.

> ***"உள்ளாற்றுக் கவலைப் புள்ளி நீழல்***
> ***முழூஉ வள்ளூரம் உணக்கும் மள்ள***
> ***புலவுதி மாதோ நீயே***
> ***பலரால் அத்தைநின் குறிஇருந் தோரே"*** (புறம். 219)

**2.1.8.2.** கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார் மன உணர்வினால் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 2.1.9. பொத்தியார்:

**2.1.9.0.** இவர் கோப்பெருஞ்சோழனின் நண்பர். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த போது தாமும் வடக்கிருக்க முனைந்தவர். பொத்தியாரின் மனைவி குழந்தை பெற்ற பிறகு வடக்கிருக்க வருமாறு கோப்பெருஞ்சோழன் கூற, அவ்வாறே தன் மனைவி குழந்தை பெற்ற பிறகு கோப்பெருஞ்சோழனுடன் சென்று வடக்கிருந்து உயிர்நீத்தவர். இவரால் பாடப்பட்டவர் கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் என்பவராவர். இவரது காலம் கி.மு. 225-200.[13]

**2.1.9.1.** பொத்தியார், வடக்கிருந்த கோப்பெருஞ்சோழனின் பண்பு நலன்களை எண்ணிப் பார்த்து, அவனது நடுகல்லைப் பார்த்து, அவனது உயிரைக் கவர்ந்து கொண்ட கூற்றுவன் மீது பொங்கிய சினத்தின் காரணமாக, கோப்பெருஞ்சோழன் கூத்தர்க்கும் பாடுநர்க்கும் வாரி வழங்கி செங்கோல் செலுத்தியவன். அத்தகைய தன்மைகளை உடையவன் என்று எண்ணிப் பாராது கூற்றம் அவனது உயிரைக் கொண்டு சென்றது.

அவனது இழப்பால் துன்புற்ற சான்றோரே! சுற்றத்தவரே! தமிழ்கூறு நல்லுலகம் பெருந்துயரம் கொள்ளச் சோழன் புகழ்மாலை சூடிநடுகல் ஆயினன். அவனது உயிரைக் கவர்ந்து கொண்ட கூற்றுவனை நாமெல்லாம் கூடி வையலாம் வாருங்கள்! என்று பொத்தியார் கூற்றுவனை வைய அழைத்ததால் பொத்தியார்க்குக் கூற்றுவன் எதிர்நிலையானான் (புறம். 221.7-13).

**2.1.9.2.** பொத்தியார், கோப்பெருஞ்சோழனுடன் வடக்கிருந்து உயிர்விடச் சென்றபோது, கோப்பெருஞ்சோழன் பிள்ளை பெறாதவர் வடக்கிருக்கலாகாது எனக்கருதி, பொத்தியாரின் மனைவி குழந்தை பெற்ற பின் வருமாறு கூறியதன் காரணமாக, அணிகலன்களால் சிறந்து நின் நிழலை விட்டு எப்போதும் நீங்காத நின் மனைவிக்கு மைந்தன் பிறந்தபின் வா எனக் கூறி என்னை வடக்கிருக்கும் இவ்விடத்தினின்றும் போக்கிய அன்பற்ற மன்னனே! என் மனைவி தற்போது குழந்தை பெற்றிருக்கிறாள். அதனால் நான் வடக்கிருக்க வந்தேன். உனக்கு நட்புடையவன் என்பதால் நான் வடக்கிருப்பதற்குரிய இடம் யாது என்று பொத்தியார் கேட்ட நிகழ்வில், பிள்ளை பெறாதவர் வடக்கிருக்கலாகாது எனத் தடுத்தமையாலும் கோப்பெருஞ்சோழனைப் பொத்தியார் அன்பிலான் எனக் கூறியமையாலும் பொத்தியார்க்குக் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலையானான் (புறம். 222).

**2.1.9.3.** கூற்றுவன், கோப்பெருஞ்சோழன் போன்றோர் பொத்தியார்க்கு, அவரது சினம், பிள்ளை பெறாதவர் வடக்கிருக்கத் தகுதியற்றவர் எனத் தடுத்ததன் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**2.1.10. ஆலத்தூர் கிழார்:**

**2.1.10.0.** இவரது இயற்பெயர் இன்னது என அறிய இயலவில்லை. ஆலத்தூர் என்பது சோழநாட்டில் உள்ள ஊர். ஊர்ப்பெயரோடு சேர்த்து ஆலத்தூர் கிழார் என்றே அழைக்கப்படுகிறார். இவர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், சோழன் நலங்கிள்ளி ஆகியோரைப் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 200-175.[14]

**2.1.10.1.** ஆலத்தூர் கிழார், கருவூரை முற்றுகையிட்டிருந்த கிள்ளிவளவனைப் பார்த்து, அவனைப் போரிடச் செல்லாமல் சமாதானம் செய்ய வேண்டும் என்னும் காரணத்திற்காக, மன்னா! நின் வீரர் பகைமன்னரின் காவல் மரங்களை வெட்டுகின்றனர். இவ்வோசை பகை மன்னன் காதில் விழுகிறது. அதைக் கேட்டும் அவன் நின்னை எதிர்க்கவில்லை. அத்தகையவனோடு நீ போரிடுகின்றாய் என்பது நாணத்தக்கது.

ஆதலால், இனிப் போரிடுவாயோ விடுவாயோ அறியேன். இதனால் உனக்குப் புகழ் உண்டாகாது என்பதை அறிவாயாக![15] என்று, தன்னை எதிர்த்துப் போரிட வராத பகை மன்னனோடு போரிடச் செல்வது வெட்கப்படத்தக்கது என்பதோடு அதனால் புகழும் உண்டாகாது என்பதால் போரிடச் செல்வதைத் தவிர்க்க வேண்டும் என்று அறிவுரை கூறித் திருத்த முயற்சித்தமையால், ஆலத்தூர் கிழாருக்குக் கிள்ளிவளவன் எதிர்நிலையானான்.

*" ................. காவுதொறும்*
*கடிமரம் தடியும் ஓசை தன்ஊர்*
*நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப*
*ஆங்குஇனி திருந்த வேந்தனொடு ஈங்குநின்*
*சிலைத்தார் முரசம் கறங்க,*
*மலைத்தனை என்பது நாணுத்தகவு உடைத்தே!"* (புறம்.36,8-13)

**2.1.10.2.** ஆலத்தூர் கிழார் அறிவுரை காரணமாகக் கிள்ளிவளவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

**2.1.11. கோவூர் கிழார்:**

**2.1.11.0.** கோவூர் என்பது ஓர் ஊர். செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளது. இப்புலவர் சோழன் நலங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன், சிறுகுடிகிழான் மகன் பண்ணன் ஆகியோரைப் புகழ்ந்து பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 200-175.[16]

**2.1.11.1.** நெடுங்கிள்ளிக்குரிய ஆவூரை நலங்கிள்ளி முற்றுகையிட்டிருந்தான். நெடுங்கிள்ளியோ நலங்கிள்ளியுடன் போர் செய்யாமல் அரணை அடைத்துக் கொண்டு உள்ளே இருந்தான்.

அப்போது, கோவூர் கிழார் போந்து மக்கள் நலன் கருதி, நெடுங்கிள்ளியே! பால் இல்லாமல் குழந்தைகள் அழுகின்றன. மகளிர் பூ இல்லாத வறிய கூந்தலை முடித்துக் கொள்கின்றனர். குடிமக்கள் நீர் இல்லாத தங்கள் வீடுகளினின்றும் வருந்திக் கூப்பிடுகின்றனர். இவற்றுக்கெல்லாம் நாணாது இங்கு நீ இனிதாக இருப்பது மிகவும் கொடியதாகும்.

நீ! உண்மையாய் அறம் உடையவனானால் உன் குலத்தில் பிறந்து உன்னை முற்றுகையிட்டுள்ள நலங்கிள்ளியின் முன்வந்து அரணைத் திறப்பாயாக! வீரம் உடையவனானால் போரிட்டு வென்று விரைவாகத் திறப்பாயாக! இந்தப் பெரிய மதிலுள் ஒரு பக்கத்தில் ஒதுங்கி இருப்பது வெட்கப்படத்தக்கது[17] என்று அறிவுரை கூறினார் (புறம். 44).

**2.1.11.2.** நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் பகைத்துப் போரிட முனைந்த போது, மன்னர்களே! பகைத்து நிற்கும் உங்களுள் ஒருவனும் பனைமாலை அணிந்த சேரனும் அல்லன். வேம்பு மாலை அணிந்த பாண்டியனும் அல்லன்.

உங்கள் இருவரது மாலையும் ஆத்தியால் ஆனது. நீங்கள் இருவரும் சோழரே! உமக்குள் எவர் தோற்பினும் தோற்பது உம் சோழர் குடியே! போர் செய்யும் நீவிர் இருவரும் வெற்றி பெறுதல் என்பது உலக இயற்கையன்று. அதனால் உங்கள் செய்கை உம்குடியின் பெருமைக்குரிய செயல் ஆகாது.

உம்மைப் போன்ற தேர் மன்னர்க்கு, உம்பகை உடல் பூரிக்கச் செய்யும் மகிழ்ச்சியை அளிப்பதாகும். ஆதலால், நீங்கள் இப்போரைத் தவிர்த்தல் வேண்டும்[18] என்று அறிவுரை கூறி கோவூர் கிழார் அமைதிப்படுத்தினார். எனவே, கோவூர்கிழாருக்கு நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (புறம். 44.6-15,45).

**2.1.11.3.** சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மலையமான் மக்களை யானைக் காலில் இட்டுக் கொல்ல முற்பட்டபோது, அக்குழந்தைகளுக்கு எவ்விதத் துன்பமும் இல்லாமல் காப்பாற்ற வேண்டும் என்னும் காரணத்திற்காகக் கோவூர் கிழார், இச்சிறுவர்கள் அருளாளரின் மரபிலே வந்தவர்கள். பச்சிளங்குழந்தைகள்! இவர்கள் இங்குக் கூடிய கூட்டத்தைக் கண்டு அஞ்சி வருத்தம் அடைந்துள்ளனர்.

கிள்ளி வளவனே! சிபிச்சக்கரவர்த்தியின் மரபில் வந்த நீ, நான் இப்போது உனக்குக் கூறியதைப் கேட்டாயானால், நீ விரும்பியதைச் செய்வாயாக என்று அறிவுரை கூறி இடித்துத் திருத்தி கிள்ளிவளவன் கொலை செய்வதினின்றும் குழந்தைகளைக் காப்பாற்றினார்[19] என்றமையால் கோவூர் கிழார்க்குச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் எதிர்நிலையானான்.

> ***"களிறுகண்டு அழூஉம் அழாஅல் மறந்த***
> ***புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி***
> ***விருந்திற் புன்கண்நோ வுடையர்***
> ***கேட்டனை யாயின்நீ வேட்டது செய்ம்மே"*** (புறம்.46.5-8)

**2.1.11.4.** நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் பகைமை உண்டாகி இருந்த சமயத்தில் புலவர் இளந்தத்தன் நலங்கிள்ளியை நாடிச் சென்றார். அதன் பிறகு இளந்தத்தன் நெடுங்கிள்ளியிடம் சென்றார்.

இதனை அறிந்த நெடுங்கிள்ளி, நலங்கிள்ளியிடம் போய் வந்த புலவர் இளந்தத்தனை, நலங்கிள்ளியின் ஒற்றன் எனக் கருதி கொல்ல முற்பட்டபோது, இளந்தத்தன் என்னும் புலவரைக் காப்பாற்ற வேண்டும் என்னும் காரணத்திற்காகக்

கோவூர் கிழார், நெடுங்கிள்ளியை நோக்கி அறிவுரை கூறினார்.

கொடைத்தன்மை உடையவரை நாடிச் சென்று, கடப்பதற்கரிய பல வழிகளைக் கடந்து, தம் திருந்தாத நாவால், பாடிப் பெறும் பரிசிலால் மகிழ்வர்; தம் சுற்றத்தவரை உண்பிப்பர். பிற்காலத்துக்கு வேண்டுமே என்று பாதுகாவாமல் தாமும் உண்டு முகம் மலர்ந்து மற்றவர்க்கும் தருவர். தம்மைப் போற்றும் புரவலர் தரும் பரிசிலால் வாழும் வாழ்க்கை அவருடையது.

இத்தகைய வாழ்க்கை, கல்வி முகத்தால் தம்மை எதிர்த்தவர் நாணம் கொள்ளும்படி அவர்களை வென்று பெருமிதத்துடன் தலைநிமிர்ந்து இனிதாய் நடப்பதே! மற்றவர்க்குச் செய்யும் கொடுமையை அறியாதது.

அதுவன்றி உயர்ந்த புகழுடைய உலகத்தை ஆளும் சிறப்புடைய உம்மைப் போன்ற பெருமையையும் உடையது. எனவே, புலவர் வாழ்வில் பிறர்க்குத் தீமை உண்டாவதில்லை என்பதைக் கூறி இடித்துத் திருத்தி இளந்தத்தன் என்ற புலவரை நெடுங்கிள்ளி கொல்வதினின்றும் கோவூர் கிழார் காத்தமையால்[20] கோவூர் கிழாருக்கு நெடுங்கிள்ளி என்னும் சோழ மன்னன் எதிர்நிலையானான் (புறம். 47.1-11).

**2.1.11.5.** கோவூர் கிழாரின் அறிவுரை காரணமாக நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

### 2.1.12. தாமப்பல்கண்ணனார்:

**2.1.12.0.** இவர் பார்ப்பனர். இவர், தேர்வண்கிள்ளி எனப்படும் சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தான் என்பவனைப் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 200-175.[21]

**2.1.12.1.** தாமப்பல்கண்ணனார் என்ற புலவரோடு சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தான் சூதாடும்போது, புலவர் சூதாட்டக்காய் ஒன்றை மறைப்பதைக் கண்டு, மற்றொரு சூத்தாட்டக்காயால் புலவரை அடித்து விட்டான்.

கோபங்கொண்ட புலவர், நீ சோழனுக்குப் பிறந்தவன் தானா என்னும் பொருள்பட, உன் பிறப்பில் ஐயம் கொள்கிறேன் என்று கேட்டார். மாவளத்தான் அதற்காக நாணித் தலை குனிந்தான் என்றமையால், தாமப்பல் கண்ணனார்க்கு மாவளத்தான் எதிர்நிலையானான்.

> **"தேர்வண் கிள்ளி தம்பி வார்கோல்**
> **கொடுமற மறவர் பெரும கடுமான்**
> **கைவண் தோன்றல் ஐயம் உடையேன்"** (புறம். 43.10-12)

**2.1.12.2.** தாமப்பல் கண்ணனார் அறிவுரை கூறியதால் மாவளத்தான் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 2.1.13. ஆடுதுறை மாசாத்தனார்:

**2.1.13.0.** இவர் சோழநாட்டு ஆவடுதுறை என்ற ஊரைச் சேர்ந்தவர். ஆவடுதுறை என்பது ஆடுதுறை என வழக்காயிற்று. ஆவடுதுறை என்பது கோயிலின் பெயர். அந்த ஊரின் பண்டைய பெயர் சாத்தனூர் என்பதாகும். கோயிலின் பெயரும் ஊர்ப்பெயரும் சேர்ந்து ஆடுதுறை மாசாத்தனார் எனப் புலவர்க்குப் பெயராயிற்று. இப்புலவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இறந்து போன சமயத்தில் அவனது பிரிவாற்றாது பாடியவர். இவரது காலம் கி.மு. 175-150.[22]

**2.1.13.1.** ஆடுதுறை மாசாத்தனார், வேண்டிய உணவைத் தந்து காப்பாற்றிய தொழிலைச் செய்தவன் கிள்ளிவளவன் என்பதையும் உணராமல் கூற்றுவன் அவனது உயிரைக் கொண்டு சென்றது முறையாகாது என்னும் காரணத்திற்காக, கூற்றுவனே! வாட்போரில் பல வீரர்கள் மடிய எதிர்நின்று கொன்று நாள்தோறும் உன் பசி நீங்கும் படிச் செய்தவன் கிள்ளிவளவன். கொலைத் தொழிலுக்கு உன்னைப் போன்றவன். பொன்னணியும் மாலையும் சூடிய இத்தகைய வளவனை நீ இன்று உயிர்கொண்டாய். ஆதலால் கூற்றுவனே! இனி உன் பசியைத் தீர்ப்பவர் யார். உனக்கு வேண்டிய உணவைத் தந்து உன் தொழிலை எளிதாக ஆக்கி வந்த கிள்ளிவளவனை நன்றி மறந்து கொல்வது முறையாகாது![23] எனக் கூற்றுவனைச்

சாடியமையால் ஆடுதுறை மாசாத்தனார்க்குக் கூற்றுவன் எதிர்நிலையானான் (புறம். 227.6-11).

**2.1.13.2.** ஆடுதுறை மாசாத்தனார்க்குக் கூற்றுவன் நன்றி மறந்தமை காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானான்.

**2.1.14. பெருந்தலைச் சாத்தனார்:**

**2.1.14.0.** பெருந்தலைச் சாத்தனார் என்னும் இப்புலவரால் பாடப்பட்டவர்கள் இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோ, குமணன், இளங்குமணன், கடிய நெடுவேட்டுவன், மூவன் என்பவராவர். இதனால் இவர்கள் பெருந்தலைச் சாத்தனாருக்குச் சம காலத்தவர் என்பது விளங்கும். இளங்கண்டீரக்கோவும் இளவிச்சிக்கோவும் சேர்ந்திருந்தபோது, இளங்கண்டீரக்கோவை மட்டும் தழுவிக் கொண்டு, இளவிச்சிக்கோவைத் தழுவாமைக்குத் தக்க காரணத்தையும் கூறியுள்ளார்.

குமணன் காட்டில் இருந்தபோது அவனைக் கண்டு பாடி, அவன் வாள் தர, அதனைப் பெற்று வந்து தம்பியிடம் தந்து அவன் தம்பி, தனமயன் குமணன் மீது கொண்டிருந்த மாறுபட்டைத் தீர்த்தவர். இவரது காலம் கி.மு. 150-125.[24]

**2.1.14.1.** பெருந்தலைச் சாத்தனார், ஒருமுறை இளவிச்சிக்கோவும், இளங்கண்டீரக்கோவும் ஒன்றாய் இருந்த இடத்திற்குச் சென்று, இளங்கண்டீரக்கோவை மட்டும் தழுவிக் கொண்டு, இளவிச்சிக்கோவைத் தழுவிக் கொள்ளவில்லை.

இளவிச்சிக்கோ, தன்னைப் பெருந்தலைச் சாத்தனார் தழுவிக் கொள்ளாததற்குக் காரணம் யாது எனக் கேட்ட போது அதனை விளக்கிச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக பெருந்தலைச் சாத்தனார், பெண்டிரும் தம்மிடம் வந்த இரவலர்க்குத் தம்மால் இயன்ற பெண் யானையைப் பரிசிலாய்த் தரும் நாட்டுக்குரியவன். கொடுப்பதில் புகழ் பெற்றவன் இளங்கண்டீரக்கோ. எனவே, இளங்கண்டீரக்கோவைத் தழுவிக் கொண்டேன் என்றான்.

இளவிச்சிக்கோவாகிய நீயோ, நன்னன் என்பவனின் முன்னோர் மரபில் வந்தவனாதலால் நீயும் தழுவிக் கொள்வதற்குப் பொருத்தமானவனே! ஆனாலும் நீ பெண் கொலை புரிந்த நன்னன் மரபில் வந்தவனாதலால், உன் நாடு கொடைத்தன்மை இன்றிப் புலவர்க்கு அடைத்த கதவுடைத்து. அக்காரணத்தால், மேகம் தவழும் பக்க மலையில் மணம் கமழும் நிலையில் சிறந்து விளங்கும் நின் மலைநாட்டை எம்போன்ற புலவர் பாடாது விலக்கினர். எனவே, உன்னை நான் தழுவிக் கொள்ளவில்லை[25] என்று தான் இளவிச்சிக்கோவைத் தழுவிக் கொள்ளாததற்குக் காரணம் சொல்லித் தழுவிக் கொள்ள மறுத்ததால், பெருந்தலைச் சாத்தனாருக்கு இளவிச்சிக்கோ எதிர்நிலையானான் (புறம். 151.5-12).

**2.1.14.2.** பெருந்தலைச் சாத்தனார் குமணனைக் கண்டு பரிசில் பெற எண்ணி முதிரமலைக்கு வந்தபோது அங்குக் குமணன் ஆளவில்லை. இளங்குமணன் நாட்டைக் கவர்ந்து ஆண்டு வந்தான். அத்துடன் குமணனைக் கொல்லவும் எண்ணி, தன் தமையன் குமணனது தலையைக் கொணர்வார்க்குப் பெரும் பொருள் அளிப்பதாகத் தெரிவித்திருந்தான்.

இதனை அறிந்த பெருந்தலைச் சாத்தனார் அவர்களது பகையைப் போக்கி, அவ்விருவருக்குள் ஒற்றுமையை உண்டாக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, நேராகக் காட்டிற்குச் சென்று குமணனைக் கண்டு தன் வறுமையை எடுத்துக் கூறினார்.

குமணனோ தன் தலையைக் கொய்து கொண்டு போகுமாறு, தன் வாளைத் தந்தான். அவ்வாளைப் பெற்றுக் கொண்ட பெருந்தலைச் சாத்தனார், நேராக இளங்குமணனிடம் சென்று, யான் உன் தமையன் குமணனைக் காட்டில் கண்டு பாடியபோது, அவன் நாடிழந்த துன்பத்தை விட, எனக்குப் பொருள் தர இயலாதத் துன்பத்தைப் பெரிதாக எண்ணி, தன் தலையைக் கொய்து கொள்ளுமாறு வாளைத் தந்தான். அதனைப் பெற்றுக்கொண்டு மிக்க மகிழ்ச்சியுடன் இங்கு வந்தேன் காண்க! என்றார்.

பின்னர், இவ்வுலகில் நிலைபெற விரும்பியவர் புகழை நிலைநிறுத்திச்

சென்றனர். மற்றவர், இரந்தவர்க்கு வேண்டியன தராது, இவ்வுலகில் எவ்விதத் தொடர்பும் இன்றி மறைந்தனர், என்று இளங்குமணனுக்கு அறிவுரை கூறினமையால், பெருந்தலைச் சாத்தனார்க்கு இளங்குமணன் எதிர்நிலையானான் (புறம். 165.1-5).

**2.1.14.3.** பெருந்தலைச் சாத்தனார், மூவன் என்னும் மன்னனிடம் பரிசில் பெற்று வரச் சென்றபோது, மூவன் உடனே பரிசில் தராது காலம் நீட்டித்தான். எனவே, மூவன் தன்னை இழிவுபடுத்தியதாகக் கருதி, பலவகைப் பழங்களை விரும்பி, மலையின் உச்சிக்குப் பறந்து ஒலி செய்து சென்று, அங்குப் பழமுடைய மரம் பழுத்து மாறிவிடவும், ஏமாந்து வருந்தித் திரும்பும் பறவைகளைப் போல், நான் நின்னிடம் பரிசில் பெற விரும்பி வந்து உன் புகழைப் பாடும் பரிசிலனாகிய நான், வெறுங்கையுடன் திரும்பிச் செல்வேனோ!

வாட்போரில் வல்ல நீ ஒன்றை எனக்குத் தராது போனாலும் வருத்தம் அடையேன். கொடைத் தன்மை இல்லாதவரை முன்னமே அறிந்து கொள்ளாமல் அவரிடம் போய்ப் பரிசில் பெற எண்ணிப் பாடிப் பரிசின்றிச் செல்லுதல் புலவரது புலமைக்கு இழுக்காகும்.

அதுவேயன்றிப் புலவரை இகழ்ந்த செல்வரை மற்றப் புலவர் பாடாது போகக் கூடும் என்பதால், யான் பரிசில் பெறாது செல்வதை நின்னுடன் நெருங்கியவரே அல்லாது மற்றவர் அறிய வேண்டா என்று பெருந்தலைச் சாத்தனார் மூவன் பரிசில் தராது காலம் நீட்டித்தது, தன்னை இகழ்ந்ததாகக் கருதித் தம் போன்ற புலவர் தம் சிறப்பை எடுத்துக்கூறி இடித்துரைத்தமையால், பெருந்தலைச் சாத்தனார்க்கு மூவன் என்னும் மன்னன் எதிர்நிலையானான் (புறம். 209.7-13.19).

**2.1.14.4.** இளவிச்சிக்கோ, இளங்குமணன், மூவன் என்னும் மன்னன் போன்றோர் பெருந்தலைச் சாத்தனார்க்கு, தழுவ மறுத்தமை, அறிவுரை, பரிசில் தராது காலம் நீட்டித்தமை காரணங்களால் எதிராளியாயினர்.

**2.1.15. பெருஞ்சித்திரனார்:**

**2.1.15.0.** பெருஞ்சித்திரனார் பாடலில் கடையெழு வள்ளல்கள் பாராட்டப்பட்டுள்ளனர். இவரால் பாடப் பெற்றவர் குமணன், இளவெளிமான், அதியமான் நெடுமான் அஞ்சி, வெளிமான் போன்றவராவர்.

குமணன் தன் நாட்டிலிருந்து ஆட்சி புரிந்தபோது அவனைப் பாடிப் பரிசு பெற்றவர் பெருஞ்சித்திரனார்.

அதியமான் நெடுமான் அஞ்சி இவரைக் காணாமலே பரிசு கொடுத்தனுப்ப அதை வாங்க மறுத்து, நான் வாணிகப் பரிசிலன் அல்லன் என்று கூறிச் சென்றவர். பெருந்தலைச் சாத்தனாரின் சமகாலத்தவர். இவரது காலம் கி.மு. 150-125.[26]

**2.1.15.1.** பெருஞ்சித்திரனார், பரிசில் வேண்டி இளவெளிமானிடம் சென்றார். இளவெளிமானோ பெருஞ்சித்திரனாரின் தகுதியறிந்து பரிசு தாராமல் சிறிது பொருள் கொடுத்தான். அதனை ஏற்றுக் கொள்ளாத பெருஞ்சித்திரனார் சிறிது பொருள் கொடுத்துத் தன்னை இழிவுபடுத்திய இளவெளிமானை வெட்கமடையச் செய்ய வேண்டும் என்னும் காரணத்திற்காக குமணனிடம் சென்று யானையைப் பரிசிலாகப் பெற்று வந்து, இளவெளிமானே! எம் போன்றவர்க்கு வேண்டுவனவற்றைத் தந்து பாதுகாப்பவர் நீ ஒருவன் மட்டுமே என்றும் உன்னைத் தவிர வேறு ஒருவர் இல்லை என்றும் எண்ண வேண்டா.

இன்னமும், வரிசை அறிந்து தாராது உன்னைப் போன்றவர் தோன்றிய பின்பும் இரவலரைக் காப்பவர் பலர் உள்ளனர். உன் ஊரில் உள்ள காவல் மரம் வருந்தும்படி கொணர்ந்து யாம் கட்டியுள்ள பெரிய யானை, இப்போது யாம் பெற்று வந்த பரிசிலாகும். இதை நீ அறிதல் வேண்டும். யான் இனிச் செல்வேன்[27] என்றார்.

சிறிது பொருள் தந்து தன்னை இழிவுபடுத்திய காரணத்திற்காக, பெரிய யானையைப் பரிசிலாகப் பெற்று வந்து இளவெளிமான் வெட்கமடையுமாறு செய்தமையால், பெருஞ்சித்திரனார்க்கு இளவெளிமான் எதிர்நிலையானான் (புறம். 162).

**2.1.15.1.** பெருஞ்சித்திரனார், பரிசு பெற்று வரவேண்டும் என்னும் காரணத்திற்காக இளவெளிமானை நாடிச் சென்றார். இளவெளிமானோ வருக என்று எதிர்கொண்டு அழைத்து முகமலர்ச்சியுடன் பரிசு தாராததால் அவன் பரிசிலை விரும்பாதவராகி, தம் நெஞ்சத்திற்குக் கூறுங்கால், எம் நெஞ்சமே! விருப்பம் இல்லாது முகமாற்றம் அடைந்து அளிக்கும் பரிசிலை முயற்சியுடையவர் விரும்பமாட்டார்.[28]

இளவெளிமானே, உன்னைத் தவிர எம்மை ஆதரிப்பவர் பலர் உள்ளனர். உள்ளே நன்கு கனியாத கனிக்கு ஆசைப்பட்டு வருந்துபவர் எவரும் இலர். நெஞ்சமே! உள்ளம் ஊக்கம் குன்றாது யாளி போல் எழுந்து இனி வேறிடம் பரிசு பெறச் செல்வோம்! என்று மனம் கனிந்து பரிசில் தராத இளவெளிமானின் பரிசில் ஈயாப் புன்மையை எடுத்துரைத்தமையால் பெருஞ்சித்திரனார்க்கு இளவெளிமான் எதிர்நிலையானான் (புறம். 207).

**2.1.15.2.** இளவெளிமான் சிறிது பொருள் கொடுத்துத் தன்னை இழிவுபடுத்திய காரணத்திற்காக, நெஞ்சே! வெளிமான் இறந்ததால் அவன் தம்பி இளவெளிமானைக் கண்டு வரச் சென்றேன். அவனோ சிறிது பொருள் கொடுத்துத் தன்னை இழிவுபடுத்தினான். களிற்றை வீழ்த்த எண்ணிய புலி, எலியைப் பார்த்து உணவு கொள்ள வீழ்த்தாது.

எனவே, விரைந்து சென்று, மிகுதியான பெரும் பரிசிலைக் கொண்டு வருவதற்காகத் தெளிவு கொள்; வேறு இடம் போய்ப் பெரும் பரிசிலைப் பெறலாம்![29] என்று கடிந்து கொண்டவராகப் பெருஞ்சித்திரனார் தன் மனத்திற்குக் கூறியதால் பெருஞ்சித்திரனார்க்கு இளவெளிமான் எதிர்நிலையானான் (புறம். 237.16-20).

**2.1.15.3.** பெருஞ்சித்திரனார், அதியமான் நெடுமான் அஞ்சி தன்னைக் காணாமலேயே இப்பொருளைப் பெற்றுச் செல்க, என்று தன் தகுதியை அறிந்து பொருள் தராதபோது, தன்னை இழிவுபடுத்தியதாகக் கருதி, தம் வரிசையறிந்து பரிசில் தர வேண்டும் என்னும் காரணத்திற்காக, பகைவரால் தடுப்பதற்கரிய அதியமான் நெடுமான் அஞ்சி என்னை அழைத்துக் காணாமலேயே தந்த

இப்பொருளைப் பெற்றுச் செல்வதற்கு ஊதியம் ஒன்றையே எண்ணும் பரிசிலன் அல்லேன். பரிசிலரது கல்வி முதலிய தகுதியானவை அறிந்து விரும்பிக் கொடுத்து விட்டால், தினை போல் சிறிய பொருளாயினும் அது சிறந்ததாகும்[30] என்று தம் வரிசை அறிந்து பரிசில் தராத அதியமான் தந்த பரிசிலை ஏற்க மறுத்துக் கூறியதால், பெருஞ்சித்திரனார்க்கு அதியமான் நெடுமான் அஞ்சி எதிர்நிலையானான் (புறம். 208. 5-9).

**2.1.15.4.** இளவெளிமான், அதியமான் நெடுமான் அஞ்சி போன்றோர் பெருஞ்சித்திரனார்க்குச் சிறிது பொருள் கொடுத்தும், மனம் கனிந்து ஈயாமலும், இழிவுபடுத்தியதன், தகுதி அறிந்து பொருள் தராது இழிவுபடுத்தியதன் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**2.1.16. மாறோகத்து நப்பசலையார்:**

**2.1.16.0.** மாறோக்கம் என்பது ஊர்ப்பெயர். இவ்வூர் பாண்டி நாட்டுக் கொற்கையைச் சூழ்ந்த பகுதி. இது மாறோகம் என்றும் வழங்கும். நப்பசலையார் என்பது இவரது இயற்பெயர். எனவே, ஊர்ப்பெயரோடு சேர்த்து மாறோகத்து நப்பசலையார் என்று அழைக்கப்பட்டார். இவரால் பாடப்பட்டவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மலையமான் திருமுடிக்காரி, சோழிய ஏனாதி திருக்கண்ணன் போன்றோராவர். இவரது காலம் கி.மு. 150-125.[31]

**2.1.16.1.** மாறோகத்து நப்பசலையார், கிள்ளிவளவனின் உயிரைப் கொண்டு சென்ற கூற்றுவன் கிள்ளிவளவனது கொடைச்சிறப்பின் காரணமாகவே கொண்டு சென்றிருக்க வேண்டும் என்பதைக் கூறுங்கால், நெருங்கிய போரில் எதிர்நின்று வெல்லும் படையையும், திண்ணிய தேரையும், பொன்னால் ஆன மாலையையும் உடைய கிள்ளிவளவனது உயிரைக் கொண்டு சென்ற கூற்றுவன், பாடுவோரைப் போல் தோன்றி நின்று கையால் தொழுது வாழ்த்தி யாசித்து உயிர்கொண்டு சென்றிருக்க வேண்டும். அஃதாவது கிள்ளிவளவன் தன் கொடைச் சிறப்பால் உயிரைக் கொடுக்க, கூற்றுவன் அவன் உயிரைக் கொண்டு சென்றிருக்க வேண்டும்.

அவ்வாறு இன்றித் தன் உள்ளத்தில் பகைமை கொண்டாயினும்,

சினங்கொண்டாயினும், கையொடு மெய் தீண்டியாயினும் வீரம்மிக்க கிள்ளிவளவனை எதிர்த்துப் போரிட்டு அவனது உயிரைக் கொண்டிருக்க இயலாது அக்கூற்றுவன் என்று கிள்ளிவளவனின் வீரத்திற்குக் கூற்றுவன் இணையாக மாட்டான் என்று தெரிவித்துள்ளமையால் மாறோகத்து நப்பசலையார்க்குக் கூற்றுவன் எதிர்நிலையானான் (புறம். 226).

**2.1.16.2.** கூற்றுவன் வீரமின்மை காரணமாக மாறோகத்து நப்பசலையார்க்கு எதிர்நிலையானான்.

## 2.1.17. ஐயூர் முடவனார்:

**2.1.17.0.** ஐயூர் முடவனார் என்னும் இவர் பெயர் ஐயூர் கிழவனார் எனவும் வழங்கும். சில பிரதிகளில் உறையூர் முடவனார் என்ற பெயர் காணப்படுவதால், இவர் முடவராய் இருந்தார் என்றும் கூறுவர். இவரால் பாடப்பட்டவர் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், தாமான் தோன்றிக்கோன் போன்றவராவார். இவரது காலம் கி.மு. 150-125.[32]

**2.1.17.1.** ஐயூர் முடவனார், வளவனின் புகழ் நிலவுலகம் முழுமையும் பரவி வானளாவ உயர்ந்திருந்ததால், அவன் இறந்தபோது நிலவுலகம் முழுமையும் புகழ் பரவிய அவன் உடலுக்கு ஏற்ற பெரிய தாழியை அடக்கம் செய்யச் செய்து தருதல் குயவனுக்கு ஆகாத செயல் என்பதனை விளக்கிச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, பரந்த சுடரை உடைய கதிரவன், வானத்தில் பரவியதைப் போல், தொலைவில் விளங்கும் தலைமைச் சிறப்புடைய செம்பியர் மரபினன் கிள்ளிவளவன் யானைப் படை உடையவன்.

அப்படிப்பட்ட கிள்ளிவளவன் தற்போது, வானுலகு அடைந்தான். எனவே, நிலவுலகம் முழுமையும் வானளாவ உயர்ந்து நிற்கும் புகழையுடைய கிள்ளிவளவனை மூடி அடக்கம் செய்ய நிலமே சக்கரமாகவும் மேரு மலையையே மண் உருண்டையாகவும் கொண்டு பெரிய தாழியைச் செய்ய வேண்டியிருக்கும்.

அப்படிப்பட்ட தாழியைச் செய்ய குயவனாகிய உன்னால் முடியுமோ என்றால்

அது முடியாது[33] என்று யாவர் உடலையும் அடக்கம் செய்ய தாழியைச் செய்யும் குயவனால், கிள்ளிவளவனின் உடலை அடக்கம் செய்வதற்கேற்ற தாழியை மட்டும் செய்ய இயலாது என்று குயவனின் இயலாமையை எடுத்துக் கூறியதால், ஐயூர் முடவனார்க்குக் குயவன் எதிர்நிலையானான் (புறம். 228.8-15).

**2.1.17.2.** ஐயூர் முடவனார் அறிவுரை காரணமாக உடலை அடக்கம் செய்யத் தாழியைச் செய்யும் குயவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 2.1.18. மதுரை மருதனிளநாகனார்:

**2.1.18.0.** மதுரை மருதனிளநாகனார் சங்கப் புலவருள் சிறந்தவர். நாகன் எனவும் இளநாகன் எனவும் புலவர் பலர் இருந்தனர். அவரினின்று வேறுபடுத்திக் கூற மதுரை மருதனிளநாகனார் எனப் பெற்றார். மருதனார் என்பது இவரது தந்தையார். இப்புலவர் மருதத்திணை பாடுவதில் சிறந்தவர்.

இவரால் பாடப்பட்டவர் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, நாஞ்சில் வள்ளுவன், பிட்டங்கொற்றன், சிறுகுடிவாணன், கழுவுள், கோசர், மழவர் ஆகியோர்.

மதுரை, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், ஊணூர், சாய்க்கானம், செல்லூர், நியமம், முனைப்பாகம், காழூர் போன்ற ஊர்கள் இவரால் பாடப்பட்டுள்ளன. இவர் செய்யுட்கள் நயம் பயப்பவை. கலித்தொகை, நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு, அகநானூறு போன்றவற்றில் இவரது பாடல்கள் உள்ளன. இவரது காலம் கி.மு. 150-125.[34]

**2.1.18.1.** பெருஞ்சிக்கல் கிழானின் மகள், பெண்மை நலங்கனிந்து விளங்கியபோது, அவளை மணக்க விரும்பிய ஒரு மன்னன் பெண் கேட்டு வந்தான்.

பெண்ணின் தந்தை, பெண் கேட்டு வந்த மன்னன் மணத்திற்கு வேண்டும் தன்மையுள் குறையுடையவனாக இருப்பதை அறிந்து மகள் தர மறுத்தபோது போர் நிகழ இருந்தது.

இதனை அறிந்த மருதனிள நாகனார், அவ்வூர்க்குத் துன்பம் நேர்ந்துவிடக் கூடாது என்னும் காரணத்திற்காக, பெண் கேட்டு வந்த மன்னன் வேலின் முனையால் நெற்றிவியர்வையைத் துடைத்தவாறு பிறர் அஞ்சும் சொற்களைக் கூறுகின்றவனாய் விளங்குகின்றான். அவனுக்குப் பெண் தர மறுத்த தந்தையும் வஞ்சினச் சொற்களையே பேசுகின்றான். பணிவைப் புலப்படுத்தும் சொற்களைச் சொல்லவில்லை.

இதையெல்லாம் ஆராய்ந்து பார்க்கும் போது, மரத்தைக் கடையும் போது அதில் தோன்றும் தீ அம்மரத்தையே அழித்து விடுவது போல் கூரிய பற்களையும் குளிர்ந்த கண்களையும் உனடய அழகிய பெண்ணே அவள் தோன்றிய ஊர்க்கு வருத்தத்னத உண்டாக்கும் போர் ஏற்படக் காரணமாகிவிட்டாள் என்பதைத் தவிர வேறு இல்னல என்று போர் செய்ய முற்பட்ட பெருஞ்சிக்கல் கிழான், பெண் கேட்டு வந்த மன்னன் ஆகியோரையும் அப்பெண்ணையும் வெறுத்துப் பேசி போரால் ஊர் அழியாவண்ணம் காக்க முயன்ற மருதனிள நாகனார்க்கு, பெருஞ்சிக்கல் கிழானும், அவன் மகளும், பெண் கேட்டு வந்த மன்னனும் எதிர்நினலயாயினர் (புறம். 349).

**2.1.18.2.** பெருஞ்சிக்கல் கிழான், அவன் மகள், பெண் கேட்டு வந்த மன்னன் போன்றோர் மதுரை மருதனிள நாகனார்க்கு, போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்துவிடக் கூடாது என அறிவுரை கூறியதன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானார்கள்.

## 2.1.19. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்:

**2.1.19.0.** இவர் வணிகர். திருமால் அடியவர். இவரால் பாடப்பட்டவர் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் வெள்ளி அம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பிட்டங்கொற்றன் போன்றோராவர். இவரது காலம் 150-125.[35]

**2.1.19.1.** மறக்குடி மகள் ஒருத்தியின் அழகில் மயங்கிய மன்னன் ஒருவன் அவளை மணந்து கொள்ள ஆசைப்பட்டு புலவர் காரிக்கண்ணனாரைத் தன் பொருட்டு அப்பெண்ணின் தந்தையிடம் மணம் பேசி வருமாறு வேண்டிய பொழுது,

அப்பெண்ணை மணந்து கொள்வது இயலாது என்பதைச் சொல்லும் காரணமாகக் காரிக்கண்ணனார், போர்க்களத்தில் பகைவரைக் கொன்று அவரது குருதியை ஆறு போல் ஓடச் செய்தவர்; வாய் மடிந்து வடுப்பட்ட கூர்மையான வாயுடைய வாளுடனே பஞ்சி நீக்கப்படாத புண்ணை உடையவர்; கண்டார் அஞ்சத்தக்க இயல்புடையவர் இவளுடைய தமையர். முன்னாளில் இம்மகளை வேண்டி வந்த மன்னரின் நிலை இத்தகையது என்றால், பழைய குடிகள் பொருந்திய மன்னனின் மகளை மணம் பேசி வருமாறு கேட்கும் உன்நிலை யாதாகுமோ என்று மறக்குடி மகளைக் கேட்டால் போர் நிகழுமாதலால் அப்பெண்ணைத் திருமணம் செய்ய இயலாது என்பதைக் காரிக்கண்ணனார் குறிப்பால் உணர்த்தியதால், காரிக்கண்ணனார்க்குப் பெண் கேட்டு வந்த மன்னன் எதிர்நிலையானான் (புறம். 353. 11-17).

**2.1.19.2.** காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாரைத் திருமணம் பேசி வருமாறு கூறியதன் காரணமாகப் பெண் கேட்டு வந்த மன்னன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 2.1.20. அண்டர்நடுங்கல்லினார்:

**2.1.20.0.** அண்டர்நடுங்கல்லினார், அடை நெடுங்கல்லியார் எனவும் அண்டர் நடுங்கல்லினார் எனவும் அழைக்கப்பெறுவார். இவர் யாரைப் பாடினார் என்பது அறிய இயலவில்லை. இவரது காலமும் யாதெனை அறிய இயலவில்லை.[36]

**2.1.20.1.** தலைவன் எனப்படும் ஒரு வீரனின் மகளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று மன்னர் பலரும் பெண் கேட்டு வந்தபோது, பெண்ணின் தந்தையும் தமையரும் தக்கவர்க்கு அவளைத் தர வேண்டுமென்று எண்ணி, பெண் கேட்டு வந்த மன்னர்க்கு மறுத்தபோது, அம்மன்னர்களோடு போரிடத் தயாராயிருந்த தந்தை, தமையரால் ஏற்படும் போரைத் தவிர்த்து அவ்வூரைத் துன்பத்தினின்றும் காப்பாற்ற வேண்டும் என்னும் காரணத்திற்காக அண்டர்நடுங்கல்லினார்,

கண்டார்க்கு மயக்கத்தை உண்டாக்கும் பெண்ணை விரும்பி வந்தவர் இரங்கத்தக்கவர். இவளுடைய தமையர் குடிமை ஆண்மை முதலியவற்றால்

பொருந்தாதவர்க்குத் தருவதில்லை என்று கூறி, மகளை வேண்டுபவர் கொண்டு வந்து தரும் செல்வத்தை விரும்பாதவராய்ப் போரையே விரும்பிக் கழிகளால் பின்னிக் கட்டப்பட்ட கேடயத்தை எடுத்துப் புண்படுத்துகின்ற கூரிய வாளை ஏந்திக் கூட்டமாகக் குருதிநாறும் புலால் நாற்றத்துடன் கழுவாத தலையை உடையவராகப் போருக்கு நிற்கின்றனர். இவர்களோடு பெண் கேட்டு வந்த மன்னரும் போரிடலால் வயல் சூழ்ந்த நல்ல ஊர் இனி என்ன துன்பம் அடையுமோ என்று புலவர், பெண் கேட்டு வந்தவரின் பெருமையையும், பெண் தர மறுத்த தமையரின் தறுகண்மையையும், போர் நிகழின் உண்டாகும் தீமையையும் எடுத்துக் கூறியதால், அண்டர்நடுங்கல்லினார்க்குப் பெண்ணின் தந்தை தமையரும், அவரிடம் பெண் கேட்டு வந்த மன்னரும் ஆகிய இருதிறத்தவரும் எதிர்நிலையாயினர் (புறம்.345.10-20).

**2.1.20.2.** அண்டர்நடுங்கல்லினார், போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்து விடக்கூடாது என அறிவுரை கூறியதன் காரணமாகப் பெண் கேட்டு வந்த மன்னரும், பெண்ணின் தந்தை தமையரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**2.1.21. அண்டர் மகன் குறுவழுதியார்:**

**2.1.21.0.** இவர் அண்டர் நடுங்கல்லினார் மகன் எனக் கருத இடமுண்டு. குறுவழுதி என்ற இவரது பெயரால் இவர் பாண்டிய மரபினர் எனப் புலப்படுகின்றது. அல்லது இவர் பாண்டிய வேந்தரின் கீழ்ப் பணிசெய்தவராகக் கருதப்படுகின்றார்.

பாண்டிய மன்னர் பெருவழுதி என அழைக்கப் பெறுவர். எனவே, அவர் மரபினராதலின் இவர் குறுவழுதி என்று அழைக்கப் பெற்றார் போலும். இவர் இயற்றியதாகப் புறநானூற்றில் ஒரு பாடலும், குறுந்தொகையுள் ஒரு பாடலும் உள்ளன. இவரால் பாடப்பட்டவன் யார் எனத் தெரியவில்லை. இவரது காலமும் யாதென அறிய இயலவில்லை.[37]

**2.1.21.1.** மறக்குடியில் தோன்றிய ஒருவனின் மகளைப் பலர் மகட்கொடை வேண்டி வந்தனர். அவ்வாறு, மகட்கொடை வேண்டி வந்தவர்க்கு அவளது தந்தையும், தமையனாரும் மறுத்தபோது, போர் உண்டாகி ஊர் அழிந்துவிடுமே

என்னும் காரணத்தால், அண்டர் நடுங்கல்லினார்க்கு மகனாகத் தோன்றிய குறுவழுதியார், போரைத் தவிர்ப்பதற்காக,

பெண்ணின் தமையனோ பெருங்கல்வி கற்றிருந்தும் சிறிது கல்வியுடையேன் என்று அடக்கமாகக் கூறத்தக்கவன்.

தந்தையோ, வேல் ஏந்திப் பெண் கேட்டு வந்தவர்களாகிய பகைவருடன் போரிட்டுக் கெட்டவர் நீங்க, கெடாமல் உயிருடன் இருப்பவர்க்கு உரிய உறவாய் அன்பு காட்டுபவன்.

இவ்வாறு, தந்தை தமையர் பெண் கேட்டு வந்தவரிடமெல்லாம் போரிடலால், பெண்ணுக்குத் திருமணம் நிகழாமல் அவளது நலன் முற்றும் அழியும்.

அத்துடன், போரிடலால் பெண்ணுடையான் ஊர் முற்றும் பாழிடமாகி விடும். அதனால் பலர்க்கும் துன்பமுண்டாகும் என்று அவளது தந்தை, தமையனாருக்கும், பெண் கேட்டு வந்தவர்க்கும் நிகழவிருந்த போரைக் குறுவழுதியார் எடுத்துச் சொல்லி, தீமை தரும் போரைத் தவிர்க்க முயன்றதால் குறுவழுதியார்க்குப் பெண்ணின் தந்தை தமையரும், பெண் கேட்டு வந்தவர் ஆகிய இருதிறத்தவரும் எதிர்நிலையாயினர் (புறம். 346.3-7).

**2.1.21.2.** அண்டர் மகன் குறுவழுதியார், போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்து விடக்கூடாது என அறிவுரை கூறியதன் காரணமாகப் பெண்ணின் தந்தை தமையரும் பெண் கேட்டு வந்தவரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

### 2.1.22. கண்ணம்புகுத்தாராயத்தனார்:

**2.1.22.0.** இவர் மதுரை மேலைக் கடைக்கண்ணம்புகுத்தாராயத்தனார் என்றும் அழைக்கப்படுவார். தென் பாண்டிய நாட்டில் உள்ள ஓர் ஊரின் பெயர் மேலைக்கடையம். கடையம் என்பது அம் குறைந்து கடை என நின்றது. இக்கடையைச் சார்ந்தவர் மதுரையில் தங்கியிருந்ததால் மதுரை மேலைக் கடையத்தார் என வழங்கப் பெற்றனர்.

போரில் கண்ணீர் சொரிந்து நின்றவரைக் கண்ணம் புகுத்தார் (கண் அம்பு உகுத்தார்) என இவர் பாடினார். இவரே கண்ணம்புகுத்தாராயத்தனார் என அழைக்கப் பெற்றார். இவரது காலம் இன்னதென்று அறிய இயலவில்லை.[38]

**2.1.22.1.** மறக்குடியில் தோன்றிய ஒருத்தியை மணம் செய்து கொள்ள மன்னர் பலர் விரும்பி வந்தபோது, அம்மன்னர் தம் எண்ணத்தை ஏற்றுக் கொள்ளாத அப்பெண்ணின் தமையர் மறுத்த போது, போர் உண்டானால் அவ்வூர் அழிந்து விடுமே என்னும் காரணத்திற்காகக் கண்ணம்புகுத்தாராயத்தனார், தமையரின் வாயிலில் மேகம் போல் முழங்கும் முரகம் விரைந்து செல் குதிரையும் உடைய மன்னர்கள் எப்போதும் கற்றித்திரிந்த வண்ணம் உள்ளனர்.

பகைவருடன் போரிடுகின்ற வன்மையுடைய தமையன்மார், வேல் கண்களையும் வளையல் உழலும் கைகளையும் உடைய இளையவளின் அழகிய மார்பில் சுணங்கு தோன்றிப் பரந்த நிலையில், அவளை மறுத்தால் போர் செய்தவன்றி அமைதி பெறமாட்டார் போல் தோன்றுகின்றனர்.

எனவே, பகைவர் போரிட்ட அழிவால், தூர்ந்த அகழியையும் வடுப்பட்ட மதிலையும் உடைய இப்பழைய ஊர் இனியும் போர் ஏற்பட்டால் என்னாகுமோ எனக்கவலையுற்ற கண்ணம் புகுத்தாராயத்தனார் போரைத் தவிர்க்க அறிவுறுத்தியதால் கண்ணம்புகுத்தாராயத்தனார்க்குப் பெண்ணின் தமையரும் பெண் கேட்டு வந்த மன்னரும் எதிர்நிலையாயினர் (புறம். 350).

**2.1.22.2.** கண்ணம்புகுத்தாராயத்தனார், போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்துவிடக் கூடாது என அறிவுரை கூறியதன் காரணமாகப் பெண்ணின் தமையரும் பெண் கேட்டு வந்த மன்னரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**2.1.23. மதுரைப்படைமங்க மன்னியார்:**

**2.1.23.0.** ஒருகால் நிகழ்ந்த போரில், படைத்தலைவன் ஒருவன், தான் ஏந்திய படை முழுவதும் கெட்ட பின்பும் பகைவருடன் போரிட்டுப் புகழ் நிறுவினான். அவனைப் படைமங்க மன்னினான் என்று சிறப்பித்துப் பாடியதால் இப்புலவரைப் படைமங்க மன்னியார் என்று அழைத்தனர்.

இவரது இயற்பெயர் தெரியவில்லை. இவர், வாகை என்ற ஊரில் வாழ்ந்த எயினன் என்பவனால் ஆதரிக்கப் பெற்றவர். இவரது காலம் அறிய இயலவில்லை.[39]

**2.1.23.1.** மறக்குடியில் தோன்றிய மகள் ஒருத்தி, மணப் பருவம் எய்தி கனிந்து நின்றபோது, மணந்து கொள்ளப் பல மன்னர் வந்து கேட்டனர். பெண்ணின் தந்தை மகள் தர மறுத்தமையால், போர் உண்டானதைக் கண்டு, அப்போரால் உண்டாகும் கேட்டைச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, மதுரைப்படைமங்க மன்னியார்,

மன்னர்க்குக் கொடைத் தன்மையுடைய எயினன் என்பவனுக்குரிய வாகை நகரத்தைப் போன்ற இவளது பெண்மை அழகைத் தந்தை மணம் செய்து தாராது போயின் பெண் கேட்டு வந்த மன்னர் வறிதாகத் திரும்பிச் செல்லமாட்டார்.

மீனை மேய்ந்த செவ்வரி நாரைகள் மருதமரக் கிளைகளில் தங்குவதை வெறுத்தால், காஞ்சி மரத்தில் உறக்கம் கொள்ளும் வளமான நன்செய் வயல் சூழ்ந்த ஊர், இனிப்போர் உண்டாவதன் காரணமாக என்னாகுமோ தெரியவில்லையே! என்று போர் உண்டானால் ஏற்படும் கேட்டை எண்ணிப் போர் நிகழாவண்ணம் தடுக்கும் முயற்சியாக மதுரைப் படைமங்க மன்னியார், வருந்தி எழுத்துரைத்தமையால் மதுரைப் படைமங்க மன்னியார்க்குப் பெண்ணின் தந்தையும் பெண் கேட்டு வந்த மன்னரும் எதிர்நிலையாயினர் (புறம்.351.5-12).

**2.1.23.2.** மதுரைப் படைமங்க மன்னியார், போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்து விடக்கூடாது என அறிவுரை கூறியதன் காரணமாகப் பெண்ணின் தந்தையும் பெண் கேட்டு வந்த மன்னரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 2.2. பெண்பாற் புலவர்கள்:

**2.2.0.** சங்க காலத்தில் அஞ்சியத்தை மகள் நாகையார், ஒக்கூர் மாசாத்தியார், ஔவையார், நக்கண்ணையார், நல்வெள்ளியார், போந்தைப் பசலையார், வெள்ளி வீதியார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினி, தாயங்கண்ணியார், நெட்டிமையார், பாரி மகளிர், பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு, பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார், பேய்மகள் இளவெயினி போன்ற பெண்பாற் புலவர்கள் வாழ்ந்துள்ளமை அறியலாகிறது.

இவர்களுள், பெருங்கோப்பெண்டு, நக்கண்ணையார், ஔவையார் போன்ற பெண்பாற் புலவர்களுக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள் இருந்துள்ளமை ஆராயப்பட்டுத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## 2.2.1. பெருங்கோப்பெண்டு:

**2.2.1.0.** பூதப்பாண்டியனின் மனைவிக்குப் பெருங்கோப்பெண்டு என்பது பெயர். பாண்டிய நாட்டின் வடஎல்லை ஒல்லையூர் நாடு என்பது. அந்த ஒல்லையூர் நாட்டைச் சோழர் கைப்பற்றி ஆண்ட போது பூதப்பாண்டியன் சோழருடன் போரிட்டு வெற்றி பெற்றான். ஆதலால், அவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் எனப் பெயர் பெற்றான். தந்த என்பது வென்ற என்ற பொருள்படும்.

இத்தகு சிறப்புடைய பூதப்பாண்டியன் இறந்தபொழுது, அவன் மனைவி பெருங்கோப்பெண்டு தன் கணவனுடன் தீப்புக முனைந்தாள். இப்பெருங்கோப்பெண்டு அரசியலை அறிந்தவள். மறமாண்பும் உடையவளாகத் திகழ்ந்தாள். இவரது காலம் கி.மு. 350-325.[40]

**2.2.1.1.** பெருங்கோப்பெண்டு, ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் எனப்படும் தன் கணவன் இறந்த பிறகு, தன் கணவனுடன் தீப்புகா வண்ணம் தடுத்தனர் அரசியல் சுற்றத்தவரான சான்றோர்.

அத்துடன் அரசன் இல்லாத குறை நீங்க, அரசை ஏற்று நடத்திட வேண்டும் என்று கேட்டுக் கொண்ட போது, அவர்தம் கூற்றை ஏற்காமலும் கைம்மை நோன்பு மேற்கொள்ளாமலும் கணவனுடன் தீப்புக முயன்றதன் காரணமாக, தன்னைத் தடுத்த சான்றோர்களிடம் சினங் கொண்டவளாக, பல குணங்களால் நிறைந்தவரே! கணவன் இறந்தபின் நீயும் உடன் இறக்க என்று சொல்லாமல், தீப்புகுதலைக் கைவிடுக என்று சொல்லித் தடுக்கும் ஆராய்ச்சி மனப்பான்மை உடைய பல சான்றோரே!

எம் தோளைச் சாரும் கணவன் இறந்ததன் காரணமாக உண்டான அவலத்தால் தாமரை மலர்ந்துள்ள பொய்கையும் தீயும் ஒரே தன்மையுடையனவாக எமக்குத் தோன்றுகின்றது என்று தன்னைத் தீயில் புகாவண்ணம் தடுத்த

சான்றோர்களிடம் சினங்கொண்டு கூறியமையால், பெருங்கோப்பெண்டுக்குச் சான்றோர் எதிர்நிலையாயினர்.

> "*பல்சான் றீரே பல்சான் றீரே*
> *செல்கெனச் செல்லாது ஒழிகென விலக்கும்*
> *பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே*
> ......................." (புறம். 246.1-3).

**2.2.1.2.** பெருங்கோப்பெண்டை, தீயில் புகத் தடை செய்ததன் காரணமாகச் சான்றோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 2.2.2. நக்கண்ணையார்:

**2.2.2.0.** இவர் பெண்பாற் புலவர். பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் எனவும் இவர் அழைக்கப் பெறுவார். வணிக மரபைச் சேர்ந்தவர். உறையூர், வீரைவேண்மான் வெளியன் தித்தனது மகன் போர்வைக் கோபெருநற்கிள்ளி, ஆமூர் மல்லனைப் போரில் வென்றதால் அவன் மீது காதல் கொண்டு, அவன் கிட்டப் பெறாமையால் வருந்தியவர்.

இவர் சோழர் மரபினன் அழிசியினது ஆர்க்காட்டைச் சிறப்பிக்கிறார். இவருடைய பாடல்கள் நற்றிணையில் இரண்டும் புறநானூற்றில் மூன்றும் அகநானூற்றில் ஒன்றும் உள்ளன. இவரது காலம் கி.மு. 300-275.[41]

**2.2.2.1.** நக்கண்ணையார், சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளியின்பால் கொண்ட காதலைத் தன் தாய் அறிந்து கொண்டால் தாய் கடிந்து கொள்வாள் என்னும் காரணத்திற்காக, கால்களில் அணிந்த வீரக்கழலையும் மைபோன்ற தாடியும் உடைய மன்னன்பால் கொண்ட காதலால் என் வளைகள் கழலுகின்றன. இதனைத் தாய் அறிந்து வினவுவாள் என்பதால், தாய்க்கு யான் அஞ்சுவேன்! எனக் கூறியமையால் நக்கண்ணையார் என்னும் பெண்பாற் புலவர்க்கு அவளது தாய் எதிர்நிலையானாள்.

*"அடிபுனை தொடுகழல் மையணல் காளைக்குஎன்*
*தொடிகழித் திடுவல்யான் யாய்அஞ் சுவலே"* (புறம்.83.1-2)

**2.2.2.2.** நக்கண்ணையார், சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி என்னும் மன்னன் பால் கொண்ட காதலால், அரண்மனையில் இருக்கும் அம்மன்னனைக் கட்டித்தழுவிக் கூட வேண்டும் என்னும் ஆவல் காரணமாகத் திருமணம் செய்வதற்கு முன்பாகவே ஆசைப்படுகின்றார். ஆயினும் பகையைக் கொல்லும் மன்னனின் தோளைத் தழுவுதற்கு அவையில் உள்ளாரை இடையூறாக எண்ணி, இச்செயலால் அவையில் உள்ளார் இகழ்வரே என நாணம் கொண்டு கூடாமையால், கோப்பெருநற்கிள்ளியின் அவையிலிருந்தோர் எதிர்நிலையாயினர்.

*"அடுதோள் முயங்கல் அவைநா ணுவலே"* (புறம். 83.3).

**2.2.2.3.** நக்கண்ணையார், சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி என்னும் மன்னன் மீது கொண்ட காதல் காரணமாக ஊர்மக்கள், தன் கூற்றுப்படியோ தன் தாய் கூற்றுப்படியோ நில்லாது மயங்கும் நிலை கண்டபோது, இவ்வூரானது அச்சமும் நாணமும் ஏற்பட்டு வருந்தும் என் கூற்றிலும் நில்லாது, என் காதலை அறிந்து அவனுடன் கூட்ட எண்ணாத தாய் கூற்றிலும் நில்லாது இருவர் கூற்றிலும் மாறி மாறி நின்று மயங்குகின்ற தன்மையால், என்னைப் போல மயக்கத்தையுடைய இவ்வூர் மிக்க நடுக்கத்தை அடைவதாகுக. அஃதாவது, ஊர் மக்கள் மிக்க நடுக்கத்தை அடைவாராக எனக் கடிந்துரைப்பதால், ஊர் மக்கள் எதிர்நிலையாயினர்.

*"என்போற் பெருவிதுப் புறுக என்றும்*
*ஒருபால் படாஅது ஆகி*
*இருபாற் பட்டஇம் மையல் ஊரே"* (புறம். 83.4-6).

**2.2.2.4.** நக்கண்ணையார், சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளி என்னும் மன்னன் பால் கொண்ட காதல் காரணமாகவும் அவனைக் கூடப் பெறாததன் காரணமாகவும் பொன் போன்ற பசலை நோய் உற்ற நிலையைக் கூறுங்கால், என் தலைவன் தன் நாட்டை இழந்து வறியவனாய்ப் புல்லிய உணவை உண்டவனாக இருந்தும் (நீர்கூட்டிச் சமைக்கப்பட்ட உணவு-கஞ்சி) பகைவர்களாகிய ஆமூர்

மல்லன் போன்றோரை வென்றதால் பெருந்தோளை உடையவனாக உள்ளான்.

யான் அவனது சிறைப்புறத்து இருந்தும், அவன் என் பொன்போன்ற பசலையைப் போக்கமாட்டாமையால், யான் அவனோடு கூடப் பெறாமல் உள்ளேன் என்று தன் காதல் மிகுதியைத் தெரிவித்துள்ளமையால், அவளது காதலுக்கு அருளாத சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி எதிர்நிலையானான்.

***"என்ஐ புற்கை யுண்டும் பெருந்தோ ளன்னே***
***யாமே புறஞ்சிறை இருந்நும் பொன்னன் னம்மே"***

(புறம். 84.1-2) (பொன்+அன்ன+அம்மே)

**2.2.2.5.** நக்கண்ணையாரின் தாய், கோப்பெருநற்கிள்ளியின் அவையில் இருந்தோர், ஊர்மக்கள், சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளி போன்றோர் நக்கண்ணையாருக்கு, கோப்பெருநற்கிள்ளியின் பால் கொண்ட காதலைத் தாய் அறிந்தால் கடிந்து கொள்வாள் என்பதாலும், காதல் கொண்ட மன்னனைக் கட்டித் தழுவினால் அவையிலுள்ளோர் இகழ்வரே என்னும் நாணத்தாலும், மன்னன் மீது கொண்ட காதலால் தன்னைப் போல் ஊர் மக்களும் மயங்கி நடுக்கம் கொள்ள வேண்டுமென்று கடிந்து கொண்டதாலும், காதல் அறிந்து பசலையைப் போக்க வராத மன்னனோடு கூடப் பெறாமல் உள்ளதாலும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**2.2.3. ஔவையார்:**

**2.2.3.0.** சங்ககாலப் பெண்பாற் புலவருள் ஒருவர். உண்டாரை நெடிது காலம் வாழச் செய்யும் திறன்படைத்த நெல்லிக் கனியை அதியமான் அளிக்கப் பெற்று, உண்ட சிறப்புடையவர். இவர், அதியமான் நெடுமான் அஞ்சி, தொண்டைமான், அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினி, நாஞ்சில் வள்ளுவன், சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகியோரைப் பாடியுள்ளார். இவரது காலம் கி.மு. 150-125.[42]

**2.2.3.1.** அதியமான் பகைவருடன் போர் செய்யும் எண்ணத்துடன் இருந்த சமயத்தில், அதியமானின் பகைவரும் வீரமே பொருளாகக் கொண்டு செருக்கி வந்தனர்.

அப்போது ஔவையார், பெருவீரமுடைய அதியமானோடு போர் ஏற்படாமல் தடுக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, பகைவர்களே! எதிர்த்துப் போரிடும் ஆற்றல் உடையவன் எமக்குள்ளும் ஒருவன் உள்ளான். அவன் ஒரு நாளைக்கு எட்டுத் தேர்களைச் செய்யும் தச்சன், ஒருமாத காலம் அரிதில் முயன்று திண்மையாகச் செய்த தேர்ச்சக்கரத்தைப் போன்ற பெருவிரைவும் திட்டமும் உடையவன். ஆகவே, அவனுடன் பகை கொண்டு போர் செய்யப் போர்க்களம் புகுதலைக் கைவிடுங்கள்! எனத் தெரிவித்துள்ளமையால், அதியமானின் பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 87).

**2.2.3.1.1.** பகைவரே! அதியமான் உயர்ந்த வலிவும் விளங்கிய நீண்ட வேலையும் உடையவன். அணிபூண்ட அழகிய மார்பையும் களவேள்வி முதலான விழாச்சிறந்த நல்ல போரைச் செய்யும் முழவு போன்ற தோளையும் உடையவன். நீங்கள் அதியமானைக் காண்பதற்கு முன்னம் கூழைப்படையும் தார்ப்படையும் கொண்டு, போர் செய்வோம் என்பது கூடாது. நீங்கள் அதியமானைக் கண்டால் போர் செய்வதற்கே அஞ்சுவீர் என்று ஔவையார் தெரிவித்துள்ளமையால், ஔவையார்க்கு அதியமானின் பகைவர் எதிர்நிலையாயினர்.

> "***யாவிர் ஆயினும் கூழை தார்கொண்டு***
> ***யாம்பொருதும் என்றல் ஓம்புமின் - ஓங்குதிறல்***
> ***ஒளிறுஇலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்***
> ***கதிர்விடு நுண்பூண் அம்பகட்டு மார்பின்***
> ***விழவுமேம் பட்ட நற்போர்***
> ***முழவுத்தோள் என்னையைக் காணா ஊங்கே"*** (புறம். 88)

**2.2.3.1.2.** அதியமானின் நாட்டில் என்னிடம் போர் செய்பவர் உள்ளனரோ, என்று கேட்ட பகை மன்னனுக்கு, அதியமானின் நாட்டில் போர் செய்ய எண்ணுவாயானால், அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிர்க்கும் பாம்பு போன்ற இளைய வலிமை மிக்க வீரர் பலர் உள்ளனர். அத்துடன், மன்றில் முழவினது கண்ணில் காற்றால் உண்டாக்கப்பட்ட ஒலியைக் கேட்பின், அதனைப் போர்ப்பறை என்று மகிழும் எம்மன்னனும் உள்ளான். எனவே, பகைவரே, அதியமானை எதிர்த்துப் போரிட்டு

வெற்றி பெற முடியாது எனப் பகைவரை இடித்துத் திருத்திப் போர் நிகழாவண்ணம் தடுக்க முயன்றதால், ஔவையார்க்கு அதியமானின் பகைவரும் பகை மன்னனும் எதிர்நிலையாயினர் (புறம். 89).

**2.2.3.2.** அதியமானுக்கும் தொண்டைமானுக்கும் நிகழவிருந்த போரைத் தவிர்க்க வேண்டும் என்னும் காரணத்திற்காகத் தொண்டைமானிடம் ஔவையார் தூது சென்றார். அப்போது தொண்டைமான் தன் படைக்கலக் கொட்டிலை ஔவையார்க்குக் காட்டிப் பெருமை அடைந்தான்.

ஆனால், ஔவையாரோ, தொண்டைமானின் படைக்கலங்கள் மயில் பீலி சூட்டப்பட்டும், மாலை அணியப்பட்டும் திரண்ட வலிய காம்பு அழகுபடச் செய்யப்பட்டும், நெய்பூசப்பட்டும் காவலையுடைய அகன்ற கோயிலில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன என்பதைப் பார்த்த அளவில், தொண்டமான் யாருடனும் போரிடச் செல்லாமல் புதிய படைக்கலங்கள் தேயாமலும் அழுக்குச் சேராமலும் இருக்குமாறு பார்த்துக் கொண்டிருப்பதால், தொண்டைமான் சிறந்த மன்னன் ஆகான்[43] என்று வஞ்சப் புகழ்ச்சியில், புகழ்வது போலப் பழித்துப் பேசியுள்ளதால் ஔவையார்க்குத் தொண்டைமான் எதிர்நிலையானான் (புறம். 95).

**2.2.3.3.** அதியமானின் பகைவர், அதியமானுக்குத் திறை செலுத்தாமல் இருந்ததால், அத்தகைய மன்னர்க்கு அறிவுறுத்த வேண்டும் என்னும் காரணத்திற்காக ஔவையார், உங்களின் பழைய ஊர் உங்கட்கு உரியதாக இருக்க வேண்டுமானால் அதியமானுக்குத் திறை செலுத்திவிட வேண்டும். அவ்வாறின்றித் திறை செலுத்த மறுத்தால் அதற்கு வெல்லும் போரை உடைய அவன், உடன்பட மாட்டான் என்பதை யான் கூறியும் நீங்கள் கேட்காவிட்டால், உமக்கு உரிமையுடைய மகளிரின் தோள்களைப் பிரிந்து நீர் வாழ்வது ஆச்சரியப்படத்தக்கதன்று. எனவே, அதியமானுடன் போர் செய்யத் தொடங்குதவற்கு முன் இதை நினைத்துப் பாருங்கள்! என்று அறிவுறுத்தியமையால் ஔவையார்க்கு அதியமானின் பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 97.18-25).

**2.2.3.4.** அதியமானை இளையவன் என்று எண்ணிப் பகைவர் போரிட

வந்தபோது, அப்பகைவர்க்கு அறிவுறுத்த வேண்டும் என்னும் காரணத்திற்காக ஔவையார், பகை வீரர்களாகிய உங்களுக்கு அறிவிப்பது யாதெனில், ஊரில் உள்ள இளஞ்சிறுவர் விளையாடுவதால், கலங்கும் கால் அளவே உள்ள குறைந்த நீருள், யானையைக் கொன்று வீழ்த்தும் முதலையைப் போன்ற பெருவன்மை உடையவன் எம் தலைவன்.

அவன் பகைவராகிய உங்களை வீழ்த்தப் பல வீரச்செயல்களை நுட்பமாய் ஆராய்ந்து செய்யும் வினைத்திட்பமும் மனவலிமையும் பெற்றவன். எனவே, எம் தலைவன் அதியமான் இளையவன் என எண்ணி மதியாதிருப்பின் உங்களுக்கு வெற்றி ஏற்படாது. அவனிடமிருந்து உயிர் தப்ப உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று அறிவுறுத்தியமையால் ஔவையார்க்கு, அதியமானின் பகைவர் எதிர்நிலையாயினர் (புறம். 104).

**2.2.3.5.** அதியமானுடன் பகைத்துக் கொண்ட மன்னன் தொண்டைமான், திறை செலுத்தாத பகைவர், அதியமானுடன் போரிட வந்த பகைவர் போன்றோர் ஔவையார்க்கு, போர் ஏற்படாவண்ணம் தடுக்க அறிவுரை கூறியதாலும், வஞ்சப் புகழ்ச்சி காரணமாகவும் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

## 2.3. முடிவுகள்:

1. பகைவர், முல்லைக் கொடி போன்றோர், குடவாயில் கீரத்தனாருக்கு, பெருஞ்சாத்தன் இறந்த மகிழ்ச்சியினால் பூத்ததன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரம்.

2. துறையூர் ஓடைகிழாரின் பரிசில் பொருளைப் பறித்ததால் ஆறலை கள்வர்கள் எதிர்நிலைப் பாத்திரம்.

3. சேர, சோழ, பாண்டிய மூவேந்தர், வையாவிக் கோப்பெரும் பேகன் ஆகியோர் கபிலருக்கு, பாரியை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றுவிடலாம் என்று ஒன்று சேர்ந்து வந்ததன், பேகனைத் திருத்திக் கண்ணகியை அவனுடன் ஒன்று சேர்க்க வேண்டும் என்று அறிவுறுத்தியதன் காரணங்களால் புல்லாற்றூர் எயிற்றினார், ஆலத்தூர் கிழார், கோவூர் கிழார், தாமப்பல் கண்ணனார் எதிர்நிலைப்பாத்திரங்கள்.

4.1. முதலாம் பெருங்குன்றூர் கிழார் அறிவுரை கூறியமையால் வையாவிக் கோப்பெரும்பேகன், கோப்பெருஞ்சோழன், கிள்ளிவளவன், நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன், மாவளத்தான் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

4.2. சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறை, இரண்டாம் பெருங்குன்றூர் கிழாருக்குப் பரிசில் கொடுக்காததன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரம்.

5. வையாவிக் கோப்பெரும் பேகன், தலைவன் எனப்படும் வீரனும் அவனிடம் பெண் கேட்டு வந்த மன்னன் ஒருவனும், பெண்ணின் தந்தையும் அவனிடம் பெண் கேட்டு வந்தவரும், பெண்ணின் தாய் போன்றவரும் பரணர்க்கு, அவர் கூறிய அறிவுரையின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

6. வையாவிக் கோப்பெரும்பேகன், கூற்றுவன், பெண் கேட்டு ஒருதலைவனை அச்சுறுத்துவதாக வந்த ஒருவன் ஆகியோர் அரிசில்கிழாருக்கு, அவரின் அறிவுரையின், கூற்றத்தை நொந்து கொண்டதின், பெண்ணின் தந்தையின் வீரத்தை வெளிப்படுத்தியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

7. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார் மன உணர்வினால் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலைப் பாத்திரம்.

8. கூற்றுவன், கோப்பெருஞ்சோழன் போன்றோர் பொத்தியார்க்கு, அவரது சினம், பிள்ளை பெறாதவர் வடக்கிருக்கத் தகுதியற்றவர் எனத் தடுத்ததன் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

9. ஆடுதுறை மாசாத்தனார்க்குக் கூற்றுவன் நன்றி மறந்தமை காரணமாக எதிர்நிலைப் பாத்திரம்.

10. இளவிச்சிக்கோ, இளங்குமணன், மூவன் என்னும் மன்னன் போன்றோர் பெருந்தலைச் சாத்தனார்க்கு, தழுவ மறுத்தமை, அறிவுரை, பரிசில் தராது காலம் நீட்டித்தமை காரணங்களால் எதிராளிகள்.

11. இளவெளிமான், அதியமான் நெடுமான் அஞ்சி போன்றோர் பெருஞ்சித்திரனார்க்குச் சிறிது பொருள் கொடுத்தும் மனம் கனிந்து ஈயாமலும் இழிவுபடுத்தியதன், தகுதி அறிந்து பொருள் தராது இழிவுபடுத்தியதன் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

12. கூற்றுவன், வீரமின்மை காரணமாக மாறோகத்து நப்பசலையார்க்கு எதிர்நிலைப் பாத்திரம்.

13. ஐயூர் முடவனார் அறிவுரை காரணமாக உடலை அடக்கம் செய்யத் தாழியைச் செய்யும் குயவன் எதிர்நிலைப் பாத்திரம்.

14. பெருஞ்சிக்கல் கிழான், அவன் மகள், பெண் கேட்டு வந்த மன்னன் போன்றோர் மதுரை மருதனிள நாகனார்க்கு, போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்துவிடக் கூடாது என அறிவுரை கூறியதன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

15. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனாரைத் திருமணம் பேசி வருமாறு கூறியதன் காரணமாகப் பெண் கேட்டு வந்த மன்னன் எதிர்நிலைப் பாத்திரம்.

16. அண்டர்நடுங்கல்லினார், அண்டர் மகன் குறுவழுதியார், கண்ணம்புகுத்தாராயத்தனார், மதுரை படைமங்கமன்னியார் ஆகியோர் போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்து விடக்கூடாது என அறிவுரை கூறியதன் காரணமாகப் பெண் கேட்டு வந்த மன்னரும், பெண்ணின் தந்தை தமையரும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

17. பெருங்கோப்பெண்டை, தீயில் புகத் தடை செய்ததன் காரணமாகச் சான்றோர் எதிர்நிலைப் பாத்திரம்.

18. நக்கண்ணையாரின் தாய், கோப்பெருநற்கிள்ளியின் அவையில் இருந்தோர், ஊர்மக்கள், சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளி போன்றோர் நக்கண்ணையாருக்கு, கோப்பெருநற்கிள்ளியின் பால் கொண்ட காதலைத் தாய்

அறிந்தால் கடிந்து கொள்வாள் என்பதாலும், காதல் கொண்ட மன்னனைக் கட்டித் தழுவினால் அவையிலுள்ளோர் இகழ்வரே என்னும் நாணத்தாலும், மன்னன் மீது கொண்ட காதலால் தன்னைப் போல் ஊர் மக்களும் மயங்கி நடுக்கம் கொள்ள வேண்டுமென்று கடிந்து கொண்டதாலும், காதல் அறிந்து பசலையைப் போக்க வராத மன்னனோடு கூடப் பெறாமல் உள்ளதன் காரணத்தாலும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

19. அதியமானுடன் பகைத்துக் கொண்ட மன்னன், தொண்டைமான், திறை செலுத்தாத பகைவர், அதியமானுடன் போரிட வந்த பகைவர் போன்றோர் ஔவையார்க்கு, போர் ஏற்படாவண்ணம் தடுக்க அறிவுரை கூறியதாலும், வஞ்சப் புகழ்ச்சியாலும் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

மேற்கண்டவாறு புலவர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றி ஆராய்ந்த பொழுது, ஔவையார் என்னும் பெண்பாற் புலவர்க்கு,

(1) அதியமானுடன் பகைவர் போரிடலைத் தடுக்க வேண்டும்.

(2) அதியமானின் வீரத்தை எடுத்துச் சொல்ல வேண்டும்.

(3) பகைவரை இடித்துத் திருத்திப் போர் ஏற்படாவண்ணம் செய்தல் வேண்டும்.

(4) தொண்டைமானிடம் தூது சென்று அவனை வஞ்சப் புகழ்ச்சியில் புகழ்வது போலப் பழித்துப் பேச வேண்டும்.

(5) அதியமானுக்குத் திரை செலுத்தாத மன்னருக்கு அறிவுறுத்த வேண்டும்.

(6) அதியமானை இளையவன் என்று எண்ணிப் பகைவர் போரிட வந்தபோது அவர்க்கு அறிவுறுத்த வேண்டும் போன்ற முக்கிய காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

இவற்றுள், ஔவையாரின் அறிவுரை அதிகக் காரணமாக இருந்துள்ளது.



## அடிக்குறிப்புகள்

1. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 33,34,20,21.
   புறநானூறு, தொகுதி-2, 242, பக். 81,82.
   அகநானூறு, தொகுதி-1, பாடியவர் வரலாறு, ப. 24.
2. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 379.
   மேலது, தொகுதி-1, 136, ப. 262.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, (ஆஅய்அண்டிரன் காலம்), ப. 43.
3. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 371.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
4. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 106.
5. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 383.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
6. அகநானூறு, தொகுதி-1, பாடியவர் வரலாறு, பக். 34, 35.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப.90.
7. அகநானூறு, தொகுதி-1, பாடியவர் வரலாறு, பக். 30,31.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 54.
8. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப.99.
9. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, பக். 364, 365.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.
10. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 382.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.
11. சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 161.
   சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், ப. 400.
   தமிழிலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன், ப. 44.
12. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 372.
   மேலது, 219, ப. 42.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.
13. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 384.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.
14. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 365, 366.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 90.

15. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 129.
16. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 376.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 90.
17. சங்க இலக்கியம், பன்முக ஆய்வு, முனைவர் இரா. சந்திரசேகரன், பக்.102,103.
இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 125.
18. சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர் இரா. சந்திரசேகரன், ப.161.
தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன், ப. 44.
இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, பக். 125, 126.
19. சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர் இரா. சந்திரசேரகன், ப. 161.
இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 126.
தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன், ப. 44.
சங்க காலத்தமிழர் வாழ்வு, லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார், ப. 114.
20. புதிய நோக்கில் தமிழ்இலக்கிய வரலாறு, தமிழண்ணல், ப. 163.
தமிழ்இலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன், ப. 44.
21. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 379.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 90.
22. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 365.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 96, 97.
23. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப.130.
24. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, பக். 383, 384.
சங்க கால மன்னர்களின் காலநில்லை, தொகுதி-2, பக். 140,144.
25. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை. பக். 133, 134.
26. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 383.
சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 147, 140, 144.
27. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ. தட்சிணாமூர்த்தி, ப.276.
சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், பக். 291, 292.
28. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 134.
29. புறம். 237.
30. சங்க இலக்கியம், பன்முகப் பார்வை, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 63.
இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 134.
சங்ககாலம், டாக்டர் கு. முத்துராசன், பக். 291, 292.
சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ.தட்சிணாமூர்த்தி, ப.276.

31. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 387.
    சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 140, 144.
32. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 369.
    சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 96, 97.
33. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 128.
34. அகநானூறு, தொகுதி-1, பாடியவர் வரலாறு, பக். 43, 44.
    சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 140, 144.
35. அகநானூறு, தொகுதி-1, பாடியவர் வரலாறு, ப. 23.
    புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 374.
    சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 140, 144.
36. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 364.
37. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 364.
    அகநானூறு, தொகுதி-1, பாடியவர் வரலாறு, ப. 7.
38. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 385.
    புறநானூறு, தொகுதி-2, 350, ப. 247.
39. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 386.
    புறநானூறு, தொகுதி-2, 351, ப. 248, 249.
40. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 4-6, 254.
    மேலது, தொகுதி,1, பக். 64, 65.
    சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, பக். 184, 185.
    புறநானூறு, தொகுதி-2, 246, 247, பக். 87-91.
41. அகநானூறு, தொகுதி-1, பாடியவர் வரலாறு, பக். 27, 28.
    சங்க்கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 20, 21.
42. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 370.
    சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 140, 144.
43. சங்க இலக்கியம், பன்முக ஆய்வு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 100.
    இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு.பிள்ளை, ப. 116.
    தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன், ப. 44.



# 3. தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள்

3.0. முன்னுரை

3.1. அகக்கூறு - புலவர் கூற்று

3.1.0. முன்னுரை

3.1.1. புலவர் கபிலர் குறிப்பிடும் பாணன் கூற்று - வையாவிக் கோப்பெரும்பேகன்

3.1.2. புலவர் பரணர் கூற்று

3.1.3. புலவர் தொண்டைமான் இளந்திரையன் கூற்று

3.1.4. புலவர் ஓரம்போகியார் கூற்று

3.1.5. புலவர் கொற்றனார் கூற்று

3.1.6. புலவர் நல்லந்துவனார் கூற்று

3.1.7. புலவர் சீத்தலைச் சாத்தனார் கூற்று

3.1.8. பெயர் குறிப்பிடப் பெறாத புலவர் ஒருவர் குறிப்பிடும் தலைவன் கூற்று

3.2. புறக்கூறு - புலவர் கூற்று

3.2.0. முன்னுரை

3.2.1. புலவர் பேயனார் கூற்று

3.2.2. புலவர் மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனாரின் கூற்று

3.3. முடிவுரை

**3.0.** சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்னும் ஆய்வின் மூன்றாம் இயல் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்களாகும். இவ்வியலை (1) அகக்கூறு (2) புறக்கூறு என்று பகுத்து ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

அகக்கூறு என்னும் பகுதியில் தலைவனின் கூற்றுகள் தலைவன் வாயிலாகவும் புலவர் வாயிலாகவும் பாணன் வாயிலாகவும், புறக்கூறு என்னும் பகுதியில் தலைவனின் கூற்றுகள் புலவர் வாயிலாகவும் கருத்துகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

## 3.1. அகக்கூறு - புலவர் கூற்று:

**3.1.0.** அகம் என்பதற்கு உள்ளம் என்றும், கூறு என்பதற்கு கூறுங்கூற்று என்றும், கூற்று என்பதற்கு வார்த்தை என்றும் பொருள் தெரிவிக்கப்பட்டுள்ளது.[1]

அகப்பொருளாவது ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தம்முள் துய்க்கும் இன்பத்தைப் பற்றிக் கூறுவதாம். அது புறத்தார்க்குக் கூற இயலாததாய் அகத்தாலேயே உணர்ந்து அனுபவிக்கக் கூடியது. ஆதலின் அகம் எனப்பட்டது, அகம், அகப்பொருள் என்பது பற்றிச் சொல்லப்பட்டுள்ளது.[2]

மக்கள் ஒழுகலாறுகளைக் கூறும் அகன் ஐந்திணைப் பாடல்களில் இயற்பெயர் சுட்டி, ஒருவரும் தம் பெயரைக் கொள்ளப் பெறார்.[3]

இவ்வாறு பெயர் சுட்டிக் கூறப் பெறாத அகப்பொருள் பற்றிய ஐந்திணைப் பாடல்களில் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றி, எந்தெந்த நோக்கில், யார் யார் என்னென்ன காரணங்களுக்காக எதிர்நிலையானார்கள் என்பதை புலவர் கூற்று என்னும் இப்பகுதியில் ஆராய்ந்து தெரிவிக்கப்பட்டுள்ளது.

### 3.1.1. வையாவிக் கோப்பெரும்பேகன்:

**3.1.1.0.** இவன் ஆவியர் குடியில் பிறந்தவன். ஆவியர் கோவே என்றும் ஆவியர் பெருமகன் என்றும் புலவர்களால் அழைக்கப்பட்டவன். பேகன், பழநிமலை

என்றும் ஆவிநன்குடி என்றும் வழங்கும் பொதினி மலைப்பகுதியைச் சுதந்திரமாக ஆண்டவன். சிறந்த வள்ளல். ஒரு சமயம் குளிரில் மயில் ஒன்று நடுங்குவதைக் கண்டு, தான் போர்த்தியிருந்த உயர்தர போர்வையைக் கொடை மடம் காரணமாக மயிலுக்குப் போர்த்தியவன்.

மயிலுக்குப் பேகனின் உள்ளம் இளகியதைப் போல, மயில் போன்ற ஒரு பெண்ணுக்கும் இளகியவன். இவனது காலம் கி.மு. 250-225.[4]

**3.1.1.1.** வையாவிக் கோப்பெரும்பேகன், தன் மனைவி கண்ணகியைத் துறந்து பரத்தையிடம் புறஒழுக்கம் உடையவனாக இருந்தான். அதனால் வருந்திப் பிரிவாற்றாமல் தனித்திருந்த கண்ணகியின் பிரிவாற்றாமையைப் போக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, சிறிய ஊரின் புறத்தே உள்ள மன்றில் வந்து தோன்றி நின்னையும் நின்மலையையும் பாடினோம். அப்போது, இன்னாததாக வடியும் கண்ணீரை நிறுத்தமாட்டாதவளாக, ஒருத்தி அழுதாள். அவள் நின்னால் அருளத்தக்கவள், என்று கபிலர் வையாவிக் கோப்பெரும்பேகனிடம் அவனைத் திருத்த எண்ணிப் பாணன் கூற்றாகக் கூறியுள்ளமையால், வையாவிக் கோப்பெரும் பேகனுக்குக் கண்ணகி எதிர்நிலையானாள் (புறம். 143.10-15; 144-147).

**3.1.1.2.** வையாவிக் கோப்பெரும் பேகனுக்கு, பரத்தை பிரிவு காரணமாக அவனது மனைவி கண்ணகி எதிர்நிலைப் பாத்திரமானாள்.

**3.1.2.0.** புலவர் பரணர் சில பாடல்களில் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.1.2.1.** தலைவி பிரிவாற்றாமையால் இருந்த பொழுது, தலைவனோடு வாழ்ந்த பரத்தை, தலைவிக்கு வேண்டியவர்கள் கேட்டுக் கொள்ளும்படி தலைவனை இழிவுபடுத்தல் காரணமாக, விறலி மனமொத்து ஏற்றுக் கொள்ளுமாறு (உடம்படும்படி) சொல்கின்றாள்.

பெரிய நகத்தையுடைய மழைக்காலக் கொக்கின் கூம்பு நிலைபோல (நீண்ட அலகினைப் போல) ஆழமானது குளம். அக்குளத்தில் ஆம்பல் பூக்கும். அத்தகைய தண்ணிய துறையை உடைய தலைவன், பூமணம் கமழும் என் கூந்தலைப் பற்றி இழுத்தான். மடியில் உட்கார வைத்து என்கை வளையல்களைக் கழற்றி விளையாடினான். அப்போது உண்டான பூசலை, இப்போது சினங்கொண்ட முகத்தோடு யான் சென்று, சினங்காட்டாமல் உன் மனைவிக்கு உரைப்பேன் என்று சொன்னேன்.

அதுகேட்ட தலைவன் நடுங்கினான். அந்நடுக்கம், வேற்று நாட்டுக் கூத்தர் வந்து பரிசில் பெற விரும்பி முழக்கும் மத்தளத்தின் மண்வைத்த பக்கம் அதிர்வது போல இருந்தது. அவ்வாறு தலைவன் நடுங்கும் துன்பநிலையை யான் நினைக்குந்தோறும் நகுவேன் என்று பரத்தை, தலைவியிடம் சொல்வேன் என்றதும் தலைவன் நடுங்கிய நிலையைப் பரணர் கூறியுள்ளதால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள் (நற்.100.1-7,9-12).

**3.1.2.2.** பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்கு வாயில் நேர்ந்த தோழி, தலைவனை இழிவுபடுத்தல் காரணமாக அவனை நெருங்கிச் சொல்கின்றாள்.

இகழத் தக்கவனே, எம் குடிலில் இருந்து பொறாதபடி, மணமிக்க இருட்கூந்தலில் ஆடி, உருளும் இயந்திரம் போல எம்முன் அடிக்கடி வருதலாகிய அழகினைப் பெற்றுள்ளாய்.

உன்னை வயப்படுத்திக் கொள்ளத் தெரியாத இத்தலைவியைக் காட்டிலும் நீ என் மீது பெரிதும் அருள் காட்டினாய். எனினும், பிண்டன் முதலான பகைவரைப் போரிலே தோற்று ஓடச் செய்து, அவரின் மகளிர் கூந்தலால் செய்யப்பட்ட கயிற்றால் அப்பகைவரின் களிற்றைப் பிணிக்கும் ஏந்துவேல் நன்னன் செய்கையினும் உன் செய்கை கொடியதே. ஆதலால் உன் வலிய தகுதிப் பாட்டை மறந்து விடுகின்றேன் என்று தோழி கூறிய கூற்றில் தலைவனை வயப்படுத்திக் கொள்ளத் தெரியாத பெரிய தோள்களை உடையவள் தலைவி என்று புலவர் பரணர் தெரிவித்துள்ளமையால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள்.

பிண்டன் முதலான பகைவரைப் போரிலே தோற்று ஓடச் செய்து, அவரின் மகளிர் கூந்தலால் செய்யப்பட்ட கயிற்றால் பகைவரின் யானையைப் பிணிக்கும் நன்னனின் செய்கையைக் காட்டிலும் உன் செய்கை கொடியதாய் இருக்கின்றது என்றமையால், தலைவியோடு வாழத்தக்க தகுதிப்பாடில்லாதவன் தலைவன் என்று வெறுத்துக் கூறியதால் தலைவனுக்குத் தோழியும் எதிர்நிலையானாள் (நற். 270).

**3.1.2.3.** தலைவன், இரவுக்குறியின் கண் வந்து சிறைப்புறத்தில் இருந்தான். அதனை அறிந்த தோழி, தலைவியின் பிரிவாற்றாமை காரணம் கருதி, தலைவியைத் திருமணம் செய்து கொள்ளுதலே சிறந்தது என்று தலைவனுக்குப் புலப்படுத்துவதாகப் புலவர் பரணரால் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ஒருநாள் விருந்தினனாய்த் தலைவன் வந்தான். அதுகண்ட தலைவியின் தாய் பலநாளும் தூங்காமல் இருந்தாள்.

இப்படித் தலைவியின் தாய், காவல் செய்து தூங்காமல் கவனித்துக் கொண்டிருப்பதால் அத்தகையவள் நீங்குதல் இல்லாத நரகத்தின்கண் சென்று துன்புறுவாளாக, என்று தோழி தலைவனுக்குக் கூறியதால், தலைவனுக்குத் தலைவியின் தாய் எதிர்நிலைப் பாத்திரமானாள்.

> "............................
> ***வரையா நிரையத்துச் செலீஇயரோ, அன்னை***
> ***ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தென***
> ***பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே***" (குறுந்.292.6-8)

**3.1.2.4.** தலைவனுக்கு, தலைவி, தலைவியின் தோழி, தலைவியின் தாய் போன்றோர் தலைவனின் காதல் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

**3.1.3.0.** புலவர் தொண்டைமான் இளந்திரையன் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரம் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.1.3.1.** பொருள் தேடச் சென்ற தலைவன், குறித்த பருவத்தில் திரும்பி வர எத்தனித்தான். பிரிவாற்றாமை தன்னை வருத்தியதன் காரணமாக, தலைவியை விட்டுப் பிரிந்தபோது நிகழ்ந்த நிகழ்ச்சியைத் தன் மனத்தில் மீளவும் நினைத்து வருந்தியவனாகத் தன் தேர்ப்பாகனிடம் கூறியதாகப் புலவர் தொண்டைமான் இளந்திரையன் புலப்படுத்தியுள்ளார்.

பெரிய கடலில் மணல் மேட்டில் நண்டு ஓடிற்று. அப்போது அதனைத் துரத்த முடியாதவளாகித் தலைவி களைப்புற்றாள்.

அப்போது தலைவியிடம் வருத்தத்தோடு சென்று, பொருள் தேடப் போக வேண்டும் என்ற உட்கருத்தை வெளியிட்டவுடன் அவள் மறுமொழி கூற முடியாதவளாகி ஞாழல் மரத்தின் பூங்கொத்தையும் இளந்தளிரையும் கையால் தடவி உதிர்த்தாள். அறிவுமயக்கமுற்றவளாகி மடப்பநிலையோடு இருந்ததை நீ அறிவாயாக. நீ விரைவாகத் தேரைச் செலுத்துக என்று தலைவன் தேர்ப்பாகனிடம் கூறியபோது, தலைவியின் நிலை கண்டு தாங்க முடியாதவனாகி வருந்திய சமயத்தில், தலைவி பொருள் தேடச் செல்லும் தலைவன் பொருட்டு பிரிவாற்ற முடியாதென அறிவு மயக்கமுற்றமையால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலைப் பாத்திரமானாள் (நற். 106).

**3.1.3.2.** தலைவனுக்கு, தலைவி அறிவுமயக்கமுற்றமையால் எதிர்நிலைப் பாத்திரமானாள்.

**3.1.4.0.** புலவர் ஓரம்போகியார் பாடல்களில் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.1.4.1.** பரத்தையிடமிருந்து பிரிந்து வந்த தலைவனைப் பார்த்துத் தலைவி, பரத்தையிடமிருந்து வருகின்றீரா என்று வினவிய போது அவன் பரத்தையர் யாரையும் யான் அறியேன் என்றான்.

அப்போது தலைவனை இழிவுபடுத்தல் காரணமாகத் தலைவி சொல்வதாகப் புலவர் ஓரம்போகியார் தெரிவித்துள்ளார்.

ஓர் இளைய மகள் மருத நிலத்தவனான் மார்பில் துயின்று எழுந்து வண்டுகள் பாய்ந்த மராமரத்தின் அவிழ்ந்த பூங்கொத்துக்கள், மணக்கும் கூந்தல் அசையும் இயல்போடு அசைந்து வர, ஆடை அசைய, செறிந்த வளையல்கள் ஒலிக்க்க் கைவீசி, மலர்போன்ற மையுண்ட கண்களால் உலாவிப் பார்த்து தெருவில் சென்றனள். அம்மடந்தை வாழ்க என்றபோது தலைவனைத் தலைவி பழித்தல் காரணமாகக் கூறினாள். இதனால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள்.

அவள் நுண்ணிய பலவாகிய தேமல் அழகு செய்யப் பெற்றவள். விளங்கிய அணிகளை உடையவள். பழைய வருத்தம் தங்கிய இரு தோள்களையும், துவண்ட மாலையையும் உடைய அவள், கொடிபோல் முயக்கமில்லாது இன்று தெருவில் சென்றனள் என்ற போது தலைவன் பிரிவால் பரத்தை அடைந்த துன்பத்தைக் கூறியதால் தலைவனுக்குப் பரத்தை எதிர்நிலையானாள் (நற். 20).

**3.1.4.2.** தலைவன் பரத்தையை விட்டுப் பிரிந்து வந்தபோது தலைவி சினக்குறிப்புடன் காணப்பட்டாள். எனவே, தலைவனை இழிவுப்படுத்திப் பேச வேண்டும் என்னும் காரணத்திற்காக தோழி வாயில் மறுத்துச் சொல்வதாகப் புலவர் ஓரம்போகியார் புலப்படுத்தியுள்ளார்.

பலரும் உன்னைப் பழித்தலால் நீ நாணி மிகப் பெரிதுற்ற துன்பத்தோடு வந்தாய். உன் வருகை கண்டு உவப்பேன், எனினும் நீ இங்கு வந்து மனையில் சோம்பலாகத் தூங்கும் துயில் மற்றொரு நாளும் உன்னால் கூடும்.

ஆதலால், பரத்தையை நேற்றுப் புணர்ந்து, அவள் புதுநலம் நுகர்ந்து, இன்று பாணம் தரும் புதுப்பரத்தையின் மெல்லிய தோளைச் சேர்வாயாக! உன் பரத்தமைச் சிறக்க என்று பரத்தையரோடு சுற்றித் திரிந்து வந்த தலைவனைக் கண்டு பலவாறு இழித்துப்பேசி, தோழி வாயில் மறுத்ததால் தலைவனுக்குத் தோழி எதிர்நிலையானாள் (நற். 360).

**3.1.4.3.** தலைவன், தனது இல்லத்துக்குச் செல்வதை பரத்தை தடுத்தாள். ஆனாலும் பின் அவளது குறிப்பின்படி உலகியல்பு குறித்து, தலைவியோடு சேர்ந்து வாழலே சிறப்பு என்பதன்படி, தலைவன் தனதில்லம் வந்தான்.

அவ்வாறு வந்ததை அறிந்த தோழி, தலைவனை இழிவுபடுத்த வேண்டும் என்னும் காரணத்திற்காகத் தலைவனது செய்கை தனக்கு நாணத்தைத் தருவதாகக் கருதிப் புலந்ததாகப் புலவர் ஓரம்போகியார் தெரிவித்துள்ளார்.

நின் மார்பை விரும்பிய நல்ல நெற்றியையுடைய பரத்தையானவள் விரும்பிச் செய்த குறிப்புடனே, இங்கு வருவதை விட்டு, வாராது அப்பரத்தையின் மனையிலேயே தங்குதல் நினக்கே அன்றி எமக்கும் நல்லதாகும் என்று தலைவனிடம் தோழி புலந்து கூறியமையால் தலைவனுக்குத் தோழி எதிர்நிலையானாள். இச்செய்தியை, மருதம்பாடிய ஓரம்போகியார்,

> **"நினக்கே அன்று அஃதுவமக்கு மாரினிதே**
> **நின்மார்பு நயந்த நன்னுதல் அரிவை**
> **வேண்டிய குறிப்பினை ஆகி**
> **ஈண்டு நீயருளாது, ஆண்டுறை தல்லே"** (ஐங். 46)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**3.1.4.4.** பரத்தை நிமித்தமாகச் சென்ற தலைவனுக்கு, தலைவி, பரத்தை, தலைவியின் தோழி போன்றோர் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

**3.1.5.0.** புலவர் கொற்றனார் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரம் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.1.5.1.** பரத்தையிடமிருந்து பிரிந்து வந்த தலைவனைப் பார்த்துத் தலைவி, பரத்தையிடமிருந்து வருகின்றீரா என்று வினவிய போது, அவன் பரத்தையர் யாரையும் யான் அறியேன் என்றான்.

அப்போது, தலைவனை இழிவுபடுத்தல் காரணமாகத் தலைவியின் கேள்விக்குப் பதில் தோழி சொல்வதாகப் புலவர் கொற்றனார் வெளிப்படுத்தியுள்ளார்.

பாணன் கையிலிருக்கும் சீறியாழ் இம்என ஒலிக்கும், அத்தகைய தெருவில் எதிர்பார்த்து உன் மார்பைத் தமது இடமாக்கிக் கொண்டனர் பரத்தையர். அவர் ஆசையால் இன்புற்று, பின் நீ பிரிந்தபோது வெய்யதாகக் கண்ணீர் வடித்தனர் என்று தலைவன் பிரிவால் பரத்தையர் வருந்தினர் எனத் தோழி கூறியமையால், தலைவனுக்குப் பரத்தையர் எதிர்நிலையாயினர்.

கடலில் பெருங்காற்று வீசியதால் கப்பல் கவிழ்ந்து அதில் இருந்த பயணிகள் கடலில் வீழ்ந்து கலங்கினர். அப்போது கப்பல் உடைந்து துண்டான ஒரு சிறிய மரப்பலகையை வீழ்ந்த பலரும் தாவிப் பிடித்துத் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஒவ்வொருவரும் தனித்தனியாக அப்பலகையை இழுப்பது போலப் பரத்தையர் ஒவ்வொருவரும் தலைவனாகிய உன்னை இழுக்க இழுக்க, உன் செறிந்த துன்பத்தின் நிலையை யான் கண்டேன். கண்டு யான் என்ன செய்ய வல்லேன் என்று தோழி கூறியமையால் தலைவனுக்குத் தோழி எதிர்நிலையானாள்.

தலைவனை ஒவ்வொரு பரத்தையரும் தம் பக்கம் வர இழுத்தனர் என்றமையால் தலைவனுக்குப் பரத்தையர் எதிர்நிலையாயினர் (நற். 30).

**3.1.5.2.** பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, பரத்தையர், தோழி ஆகியோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**3.1.6.0.** புலவர் நல்லந்துவனார் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரம் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.1.6.1.** பிரிந்து சென்ற தலைவன், தன் உரை தவறாதபடி குறிப்பிட்ட பருவத்தில் திரும்பி வந்து சிறைப்புறமாக இருந்தான். அதனைத் தலைவிக்குச் சொல்வாள் போல, தலைவியின் பிரிவு ஆற்றாமை காரணமாகத் தோழி சொல்வதாகப் புலவர் நல்லந்துவனார் புலப்படுத்தியுள்ளார்.

அலை பொருந்திய கடலில் விளையும் அமுதம் என்னும் உப்பு, மழைநீரை ஏற்றுக் கரைந்து அழிதல் போல நீ உருகித் தேய்தல் கண்டு யான் அஞ்சுகிறேன் என்று கூறிய தோழியின் கூற்றில், தலைவன் பிரிவால் தலைவி உருகித் தேய்ந்தமை சொல்லப்பட்டிருப்பதால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள்.

மலைநாட்டுக்குரிய தலைவன் தமக்குச் செய்த கொடுமையை நினைந்து அவன் மலை அழுகிறது. பழங்கள் பழுத்து முதிர்ந்துள்ள அவர் மலை நல்ல பண்புகளைப் பெரிதும் கொண்டிருப்பதால் பொறுத்துக் கொள்ள முடியாமல் தன் கண்ணீரை அருவியாக விட்டு அழுகின்றதைப் பார் என்று தெரிவித்திருப்பதிலிருந்து தலைவன் செய்த கொடுமையை நினைந்து இயற்கை அருவியாக விழும் அவன் மலையே அழுகிறது. ஆனால், தலைவன் மட்டும் இரக்கம் கொண்டு வந்து அருள் செய்தானில்லை. நல்ல பண்புகள் உடையவளாகிய உன் பிரிவாற்றாமையைத் தீர்த்தானில்லை என்றமையால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள்.

இவ்வாறு, தலைவியின் பிரிவாற்றாமைக்குத் தலைவன் இரக்கம் காட்டாமலிருக்கின்றான் என்று தோழியும் வெறுத்துக் கூறுவதால் தலைவனுக்குத் தோழியும் எதிர்நிலையானாள் (நற். 88).

**3.1.6.2.** பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, தலைவி, தோழி ஆகியோர் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

**3.1.7.0.** புலவர் சீத்தலைச் சாத்தனார் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரம் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.1.7.1.** தலைவன், தலைவியைக் காணாமல் பிரிவாற்றாது வருந்தியதன் காரணமாகப் பாணனைத் தலைவி இல்லத்திற்கு அனுப்பினான்.

தலைவியின் இல்லம் நாடி இவ்வாறு வந்த பாணனிடம் தோழி, தலைவன் இங்கு வரவேண்டா என்று கூறி வாயில் மறுத்த காரணத்தைக் கூறுவதாகப் புலவர்

சீத்தலைச் சாத்தனார் புலப்படுத்தியுள்ளார்.

எம் தலைவி பேதை. கொழுமீன் உண்ணும் வளமான இல்லத்தில் வாழ்பவள். அவள் உடன்பிறந்தார் தம் மீன்பிடி தொழிலல்லது பிற கல்லாதவர். ஆனாலும் கடுஞ்சினம் உடையவர்.

எனினும், அவள் தான் பெறாத, கோரையாலே செய்து தன் மகவு எனப் பாராட்டும் பாவையை எடுத்துக் கொண்டு, வண்டல் புழுதியிலே சிற்றில் செய்து சிறு சோறு அட்டுப் பெண்கள் விளையாடும் விளையாட்டிற்காக, ஆயம் என்று சொல்லப்படும் தாய், தோழி முதலிய மகளிர் கூட்டத்தோடு சென்று விடுவாள்.

அந்த மெல்லிய நெய்தல் நிலத்தலைவனாகிய கடற்கரைச் சேர்ப்பன் இல்லாமலும் கானலிலே விளையாடச் செல்வோம் என்று சொல்லுவாள்.

உப்பங்கழியில் இரை தேடும் நாரை, ஈரமுள்ள தன் முதுகை இறகால் எறியும்போது வெளிப்படும் நீர்த்துளிகளுக்குக் குளிர்ந்து நடுங்கும் எம்பாக்கத்துத் தலைவன் வரின் யாது பயன். ஒன்றுமில்லை. ஆகவே, தலைவன் வரவேண்டுவது இல்லை, என்று தலைவன் இன்றியே கானலிலே விளையாடச் செல்வோம் என்று தலைவியே கூறிவிட்டதாலும், நாரை இறகால் எறியும் நீர்த்துளிகளுக்கே தலைவன் நடுங்கும் தன்மை உடையவனாக இருப்பதாலும், தலைவன் வரவேண்டாமென்று பாணனிடம் தோழி வாயில் மறுத்துக் கூறியமையாலும் தலைவனுக்குத் தலைவியும் தோழியும் எதிர்நிலையாயினர் (நற். 127).

**3.1.7.2.** பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, தலைவி, தோழி ஆகியோர் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

**3.1.8.0.** நற்றிணை எட்டாம் பாடலில் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரம் பற்றியச் செய்தி உள்ளது.

**3.1.8.1.** தலைவனும் தலைவியும் முதன்முதலில் சந்தித்தனர். இயற்கையாக நிகழ்ந்த இந்தச் சந்திப்பு இருவர்க்கும் இன்பம் அளிக்கிறது. இந்த இயற்கைப் புணர்ச்சியின் இறுதியில் தலைவி தன்னைப் பெற்ற நற்றாய், செவிலித்தாய் ஆகியோரோடு சேர்ந்து கொள்கிறாள்.

இன்பமளித்து மகிழ்வித்த தலைவி தன்னை விட்டுப் பிரிந்துபோய் விட்டாளே என்று வருத்தம் கொண்ட தலைவன், தன் பிரிவு ஆற்றாமை காரணமாகத் தெரிவிப்பதாகப் புலவர் புலப்படுத்தியுள்ளார்.

தலைவி நிலையாகத் துன்புறுத்தும்படியான, செவ்வரி பரந்த, செழித்த குளிர்ந்த கண்களை உடையவள். பல பூக்களால் தொடுக்கப்பட்ட தழையுடை அணிந்த அல்குல் உடையவள். அழகிய நீலமணி போன்ற மேனியுடையவள். இவற்றையும் மடப்பத்தையும் உடைய இப்பெண் பிரிந்து சென்றதால் என்னைத் துயரம் அடையும்படி செய்தாள்.

இவளது பிரிவு எனக்குத் துயரமாக இருந்தாலும் கூடிப் பிரிந்ததால் உண்டான இன்பத் துயரமாக இருக்கிறது. எனவே யார் மகள் இவள், என்று தலைவன் கேட்கும் பொழுது, தலைவனின் துயரத்திற்குக் காரணம் தலைவி என்பதால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள் (நற்.8.1-6).

**3.1.8.2.** தலைவன் பிரிதலினால் தலைவி எதிர்நிலைப் பாத்திரமானாள்.

**<u>3.2. புறக்கூற்று - புலவர் கூற்று:</u>**

**3.2.0.** புறம் என்பதற்குப் புறஞ்சொல், வெளிப்புறம், புறப்பொருள் என்று பொருள் தெரிவிக்கப்பட்டுள்ளது.[5]

புறப்பொருளாவது, புறத்தார்க்குக் கூறக்கூடியதாய் அமைந்த அறம், பொருள் ஆகியவை பற்றிக் கூறுவதாகும்.[6]

**3.2.1.0.** புலவர் பேயனார் பாடல்களில், தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.2.1.1.** தலைவன் போருக்குச் சென்றிருந்தான். தலைவியோ பிரிவு ஆற்றாமை காரணமாக வருந்திக் கொண்டிருக்கின்றாள்.

தலைவியின் பிரிவு ஆற்றாமையைக் கண்டு தானும் வருந்தியவனாக, அவளது பிரிவு ஆற்றாமையைப் போக்க வேண்டி பாணன், தலைவனிடம் தான் தூதாகச் சென்று அழைத்துக் கொண்டு வருவேன் எனத் தலைவியிடம் கூறியபொழுது, பாணன் கேட்பத் தலைவி கூறியதாகப் புலவர் பேயனார் புலப்படுத்தியுள்ளார்.

சினம் கொண்டு வந்த பகைவர் தம்மைக் காத்துக் கோடற்குச் செய்த அரண்கள் பலவற்றையும் அழித்த போர்ச் செயல் வல்ல தானையுடன் விரைவாகச் செல்லும் குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்தி வழிகள் பலவற்றைக் கடந்து தொலைவில் சென்ற தலைவரைக் குற்றம் இல்லாத ஒளியுடைய நெற்றி விளங்கும் வண்ணம் அழைத்து வருவேன் என்று பாணன் கூறுகின்றான். ஆதலால், தோழி, அவனுடைய அறிவு நன்றாய் இருந்தது என்று தலைவி கூறினமையால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள் (ஐங். 474).

**3.2.1.2.** தலைவி பிரிவாற்றாமையால் வருந்திக் கொண்டிருப்பதை அறிந்த பாணன் அவளது பிரிவாற்றாமையைப் போக்க வேண்டும் என்னும் காரணத்திற்காகவும், தலைவியைக் காணத் தலைவன் விரைந்து வாராமையால் அவனை இழிவுபடுத்திப் பேச வேண்டும் என்னும் காரணத்திற்காகவும் தலைவன் இருக்கும் பாசறைக்குச் சென்ற பாணன் கண்டு கூறியதாகப் புலவர் பேயனார் தெரிவித்துள்ளார்.

தலைவனையே விரும்பி இருக்கும் காதலியானவள் இல்லத்தில் பிரிவை ஆற்றாது புலம்பி, குளிர்ந்த மலர்போலும் கண்கள் அழுது சொரிந்த கண்ணீரை

உடையவளாய் இருக்கின்றாள். இதனை யானும் பிறர் கூறக் கேட்டும் நீ விரைவாக மீளுதலைக் கருதாமல் இருந்தாய். ஆதலால், நினக்கு யாம் பாணரும் ஆகோம், எமக்கு நீயும் தலைவனும் ஆகாய் என்று இயம்பினான்.

தலைவன் போருக்குச் சென்றவன் பிரிவாற்றாமல் அழுது கொண்டிருக்கும் தலைவியின் கண்ணீரை மாற்ற விரைவாக மீளுதலைக் கருதாமல் இருந்தான் என்பதால் தலைவனுக்குத் தலைவி எதிர்நிலையானாள்.

தலைவியின் துயரைப் போக்கத் தலைவன் விரைந்து வாராமை கண்டு காதலிக்கு அருள் செய்யாதவன் என்பதால், நினக்கு யாம் பாணரும் ஆகோம் என்றும், எமக்கு நீயும் தலைவனும் ஆகாய், என்றும் தலைவனைப் பழித்துப் பேசியதால் தலைவனுக்குப் பாணன் எதிர்நிலையானான் (ஐங். 480).

**3.2.1.3.** குறிப்பிட்ட நேரத்தில் தலைவன் வராததால் தலைவனுக்கு, தலைவி, பாணன் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

**3.2.2.0.** புலவர் மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரம் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

**3.2.2.1.** தலைவன் ஒருவன் ஒருத்தியின் அழகை அனுபவித்துவிட்டுப் பின்பு, தான் அவளை அறிய மாட்டேன் என்று கூறினான். அப்படிப்பட்டவனை இழிவுபடுத்த வேண்டும் என்னும் காரணத்திற்காக, அறங்கூறு அவையத்தார் செய்த செயலாகப் புலவர் மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனாரால் புலப்படுத்தப்பட்டுள்ளது.

மிகச் சிறப்புடையது கள்ளூர் என்ற ஊர். இவ்வூரில் அறநெறி நில்லாத ஒருவன் அழகிய நெற்றியையுடைய இளையவள் ஒருத்தியின் நலத்தைக் கவர்ந்து கொண்டான். பின் அவளை தான் அறியேன் என்று கொடிய சூளுரைத்தான். அதன் மெய்ம்மையை, அவர்களின் களவு ஒழுக்கத்தை உணர்ந்த சான்றாவாரை வினவி உண்மையை உணர்ந்தனர்.

ஆனதால், அறங்கூறு அவையத்தார் அதை விசாரித்து அவனது ஏமாற்று வேலையை அறிந்து அதற்குத் தண்டனையாய் அவனை மரத்தின் கிளையில் பிணித்தனர். சுண்ணாம்பு நீற்றை அவன் தலையில் பெய்தனர். அதைப் பார்த்தவர் அது தக்க தண்டனையே என்று மகிழ்ந்து ஆரவாரம் செய்தனர்.

தலைவன் அறநெறி நில்லாமையால் அவனுக்குத் தண்டனை வழங்கி இழிவுபடுத்தினர் அவையத்தார் என்பதால், தலைவனுக்கு அறங்கூறு அவையத்தார் எதிர்நிலையாயினர்.

தலைவன் உற்ற தண்டனையைப் பார்த்தவர் அது தக்க தண்டனையே என்று மகிழ்ந்து ஆரவாரம் செய்தமையால் தலைவனுக்குத் தலைவனைப் பார்த்தவரும் எதிர்நிலையாயினர்.

தலைவன், தலைவியின் அழகை அனுபவித்து விட்டுப் பின்பு அவளை அறியமாட்டேன் என்று ஏமாற்று வேலை செய்தமையால், தலைவனுக்குத் தலைவியும் எதிர்நிலைப் பாத்திரமானாள் (அகம். 256.15-21).

**3.2.2.2.** அறநெறி நில்லாத தலைவன் ஒருவனுக்கு, அறங்கூறு அவையத்தார், தலைவன் உற்ற தண்டனையைப் பார்த்தவர், தலைவிபோன்றோர் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

## <u>3.3. முடிவுகள்:</u>

**3.3.0.** புலவர் கூற்றிலிருந்து பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, மனைவி, தலைவி, தோழி, தலைவியின் தாய், பரத்தையர், பாணன், மனைவி, அறங்கூறு அவையத்தார் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரங்களாக இருந்துள்ளனர்.

இதனுள், தலைவன் பரத்தை நிமித்தமாகப் பிரிந்து சென்றதனால்,

(1) தலைவனைத் திருத்தி தலைவியோடு வாழச்செய்ய வேண்டும்.

(2) பரத்தை,தலைவன் தன்னுடன் சேர்ந்தது பற்றித் தலைவியிடம் சொல்ல முற்படுதல்.

(3) தலைவனை வயப்படுத்திக் கொள்ளத் தெரியாதவளாகத் தலைவி இருத்தல்.

(4) தலைவியோடு வாழத் தகுதிப்பாடில்லாதவனாகத் தலைவன் இருத்தல்.

(5) தலைவனது பரத்தைமையைத் தலைவி பழித்தல்.

(6) தலைவன் பிரிவால் பரத்தை தான் அடைந்த துன்பத்தைக் கூறுதல்,

(7) பரத்தையோடு சுற்றித் திரிந்த தலைவனைத் தோழி வாயில் மறுத்தல்,

(8) பரத்தையை விட்டு உலகியல்பு கருதித் தலைவன் தலைவியிடம் வந்தபோது தோழி புலந்து கூறுதல்.

(9) தலைவன் பிரிவால் பரத்தையர் வருந்துதல்,

(10) தலைவியின் பிரிவாற்றாமைக்குத் தலைவன் இரக்கம் காட்டாததால் தோழி வெறுத்துக் கூறுதல்.

(11) தலைவன் வரவேண்டா என்று பாணனிடம் தோழி வாயில் மறுத்துக் கூறுதல்.

போன்ற முக்கியச் சூழலில் தலைவனுக்கு அதிக எதிர்நிலைப் பாத்திரங்கள் உள்ளன.



# அடிக்குறிப்புகள்

1. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தன், பக். 69, 138.
2. நம்பியகப் பொருள், தெளிவுரை, வித்துவான் எம்.நாராயண வேலுப்பிள்ளை, ப. 7. இளம்பூரணர், அகப் பொருளாவது போக நுகர்ச்சியாகலான், அதனாலாய பயன்தானே அறிதலின் அகம் என்றார் (தொல். பொருள். இளம்பூரணம். ப.3). சங்க இலக்கியம் (அகம்), டாக்டர் சரளா. இராசகோபாலன், ப.12.
3. தொல்காப்பியம், தெளிவுரை, ச.வே. சுப்பிரமணியன், பக். 374. 375, நூற்.1000.
4. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 69-71, 54.
5. சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், புலவர் த. கோவேந்தமன், ப. 210.
6. நம்பியகப்பொருள், தெளிவுரை, வித்துவான் எம்.நாராயண வேலுப்பிள்ளை, ப. 7.



# 4. தலைவியின் எதிர்நிலைப் பாத்திரங்கள்

4.1. **போர்க்காரணமாக:**

4.1.1. போர் நிமித்தம்

4.1.1.1. புலவர் வன்பரணர் கூற்று

4.2. **பிற காரணங்களாக:**

4.2.1. தொழில் நிமித்தம்

4.2.1.1. புலவர் பெருஞ்சித்திரனாரின் மனைவி

4.2.1.2. புலவர் பெருந்தலைச் சாத்தனாரின் மனைவி

4.2.1.3. புலவர் இளந்திரையனார் கூற்று

4.2.1.4. புலவர் மாறன் வழுதி கூற்று

4.2.1.5. புலவர் உக்கிரப் பெருவழுதி கூற்று

4.2.1.6. பாடினார் இன்னார் எனத் தெரியாத புலவர் கூற்று

4.2.2. **பரத்தை நிமித்தம்**

4.2.2.1. புலவர் பரணர் கூற்று

4.2.2.2. புலவர் ஓரம்போகியார் கூற்று

4.2.2.3. புலவர் அஞ்சில் அஞ்சியார் கூற்று

4.2.2.4. இல்லத் தலைவியர் - கபிலர் கூற்று

4.2.2.5. பேகனின் காதலி

4.2.2.5.1. வையாவிக் கோப்பெரும்பேகன்

4.2.3. **பிரிவு நிமித்தம்**

4.2.3.1. புலவர் நக்கண்ணையார் கூற்று

4.2.3.2. புலவர் முதுகூற்றனார் கூற்று

4.2.3.3. புலவர் உலோச்சனார் கூற்று

4.2.3.4. புலவர் வெண்பூதியார் கூற்று

4.2.3.5. நெய்தல் நிலத்தலைவி - புலவர் உலோச்சனார் கூற்று

4.2.3.6. கண்ணகி - பரணர் கூற்று

4.3. முடிவுரை

**4.0.** தலைவியின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்னும் நான்காம் இயலில் தலைவிக்கு, போர்நிமித்தம், தொழில் நிமித்தம்,பரத்தை நிமித்தம், பிரிவு நிமித்தம் ஆகிய நான்கு காரணங்களுக்காக எதிர்நிலைப் பாத்திரங்கள் இருந்துள்ளன என்பதை வகைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளது.

போர்க்காரணமாக, பிற காரணங்களாக என இரண்டாகப் பகுக்கப்பட்டு இவை ஆய்வு செய்யப்பட்டு தெரிவிக்கப்பட்டுள்ளன.

## 4.1. போர்க்காரணமாக:

### 4.1.1. போர்நிமித்தம்:

நிமித்தம் என்பதற்கு அடையாளம், காரணம், பொருட்டு, சகுனம் எனப் பொருள் சொல்லப்பட்டுள்ளது.[1]

**4.1.1.0.** தலைவியை விட்டுப் பிரிந்து போரின் காரணமாகப் போர்க்களத்தில் சென்று தலைவன் போரிடல் போர் நிமித்தம் என்று சொல்லப்படும்.[2] அப்போது தலைவி பிரிவாற்றாது கலங்கி இருத்தலும் போரிடச் சென்ற தலைவன் பற்றி அறிந்து தன் மனக்குமுறலை வெளிப்படுத்துதலும் நிகழும்.

**4.1.1.1.** ஒரு வீரன் போரிட்டுப் போர்க்களத்தில் இறந்தபோது, அவனைத் தேடிக் கொண்டு வந்த அவன் மனைவி தன் பிரிவாற்றாமையின் காரணமாக, இறந்து கிடந்த கணவனைக் கண்டு கண்ணீர் சொரிந்து கூறுவதாகப் புலவர் வன்பரணர் புலப்படுத்தியுள்ளார்.

இறப்பைக் குறித்து புலம்பத் தொடங்கினால் அக்குரலைக் கேட்டுப் புலிவந்து உடலை எடுத்துச் சென்றுவிடும். உன்னை இறக்குமாறு தாக்கிய அறமற்ற கூற்று, என்னைப் போல் துன்பத்தை அடைவதாகுக, என்று தன் கணவன் இறக்குமாறு தாக்கிய கூற்றுவனை அறமற்றவன் என்றமையால், அப்போர் வீரனின் மனைவிக்குக் கூற்றுவன் எதிர்நிலையானான்.

"ஐயோ, எனின்யான் புலிஅஞ் சுவலே
அணைத்தனன் கொளினே அகன்மார்பு எடுக்கவல்லேன்
என்போல் பெருவிதிர்ப்பு உறுக நின்னை
இன்னாது உற்ற அறனில் கூற்றே" (புறம். 255.1-4)

**4.1.1.2.** போர்வீரன் ஒருவன் இறந்த பிரிவாற்றாமை காரணமாக அவன் மனைவிக்குக் கூற்றுவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 4.2. பிற காரணங்களாக:

**4.2.0.** தலைவிக்குரிய எதிர்நிலைப் பாத்திரங்கள் போர்க் காரணமாக அன்றி தொழில் நிமித்தம், பரத்தை நிமித்தம், பிரிவு நிமித்தம் காரணங்களுக்காகவும் இருந்துள்ளன என்பதை இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.

### 4.2.1. தொழில் நிமித்தம்:

**4.2.1.0.** தலைவன் பகைவருடன் போரிடச் செல்லுங்கால் பெண்டிரோடு போவதில்லை. அத்துடன் தலைவன் போர்க்களத்தில் வினையில் ஈடுபட்டிருக்கும்போது தலைவி பற்றிப் பேசமாட்டான். வெற்றி பெற்ற போது மட்டுமே தலைவி பற்றி நினைப்பான்.

பொருள் வயிற் பிரிதலும் நிலத்தலை மக்களுக்கு உரித்து. பொருள் ஈட்டச் செல்லும் இப்பிரிவும், பகைவருடன் போரிடச் செல்லும் ஓர் ஆண்டிற்கு உட்பட்டே அமையும் எனத் தொல்காப்பியம் தெரிவிப்பதிலிருந்து போரிடச் செல்லுதலன்றிப் பொருள் வயிற்பிரிதலும் தொழில் நிமித்தமாதலின் தலைவிக்கு இக்காலங்களில் எதிர்நிலையானமை பற்றி அறிய முடிகிறது.

#### 4.2.1.1. புலவர் பெருஞ்சித்திரனாரின் மனைவி:

**4.2.1.1.0.** புலவர் பெருஞ்சித்திரனார் குமணன், இளவெளிமான், அதியமான் நெடுமான் அஞ்சி, வெளிமான் போன்ற மன்னர்களைப் பற்றிப் பாடியுள்ளார். எனவே, புலவர் பெருஞ்சித்திரனாரின் மனைவி வாழ்ந்த காலம் கி.மு. 150-125 என அறிய முடிகிறது.[3]

புலவர் பெருஞ்சித்திரனார், தம் மனைவி பசியால் அழும் குழந்தையைத் தேற்றிய சமயத்தில், புலவர் விரைந்து சென்று குமண வள்ளலைக் கண்டு பரிசில் பெற்று வாராமையால்[4] அவரை வெறுத்து இகழ வேண்டும் என்னும் காரணத்திற்காக, பாத்திரங்களைத் திறந்து பார்த்தும் வெறுமையாய் இருந்ததால் அழத்தொடங்கிய மகனைப் பார்த்துப் புலி வருகிறது என்று அச்சுறுத்தியும் அம்புலியைக் காட்டியும் அழுகை நிற்காமையால் கூறியுள்ளதைப் புலப்படுத்தியுள்ளார்.

உன் தந்தை இன்னும் வரக்காணோம். வந்தால் அவரை வெறுத்து இகழ்வோம். அவர் வரும்போது உன் முகத்தை எப்படி வைத்துக் கொள்வாய் சொல், என்று கூறியமையால் புலவர்தம் மனைவிக்குப் பெருஞ்சித்திரனார் எதிர்நிலைப் பாத்திரமானார்.

> "*உள்ளில் வருங்கலம் திறந்து அழக்கண்டு*
> *மறப்புலி உரைத்தும் மதியங் காட்டியும்*
> *நொந்தனன் ஆகி நுந்தையை உள்ளிப்*
> *பொடிந்தநின் செவ்வி காட்டெனப் பலவும்*" (புறம்.160.21-24)

**4.2.1.1.1.** புலவர் பெருஞ்சித்திரனார், தம் மனைவிக்குப் பரிசில் பெற்றுவரத் தாமதமாகியதால் எதிர்நிலைப் பாத்திரமானார்.

### 4.2.1.2. புலவர் பெருந்தலைச் சாத்தனாரின் மனைவி:

**4.2.1.2.0.** புலவர் பெருந்தலைச் சாத்தனார் இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோ, குமணன், இளங்குமணன், கடிய நெடுவேட்டுவன், மூவன் ஆகியோரைப் புகழ்ந்து பாடியுள்ளமையால் அவர்களுடன் சமகாலத்தில் வாழ்ந்தவர் எனப்புலப்படுகிறது. எனவே, இங்குக் குறிப்பிடப் பெற்ற மன்னர்களின் காலமாகிய கி.மு. 150-125 பெருந்தலைச் சாத்தனார்க்கும் அவர்தம் மனைவிக்கும் உரிய காலமாகும் என அறிய முடிகிறது.[5]

புலவர் பெருந்தலைச் சாத்தனார், தம் வறுமை நிலையால் தன் மனைவியும் குழந்தையும் உற்ற துன்பத்தை எடுத்துச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காகக் குமணனிடம் சென்று கூறியதாகப் குறிப்பிட்டுள்ளார்.[6]

உடலை மெலியச் செய்யும் இந்தப் பசியால் என் மனைவியின் உடல் மெலிந்து பால்சுரக்காது போயிற்று. பால் சுரக்காததால் மார்பின்துளை அடைபட்டு விட்டது. குழந்தை பாலைக் குடிக்க முனைந்து பால் இல்லாத காரணத்தால் தாயின் முகத்தைப் பார்த்து அழுதது. அக்குழந்தையின் முகத்தைப் பார்த்து, நீரால் நிறைந்த ஈரமான இமைகளையுடைய கண்ணை உடையவளானாள் என் மனைவி, என்று சொன்ன போது, தாய்ப்பாலும் கொடுக்க இயலாத அளவுக்குத் தன் மனைவியை வறுமையின் கொடுமையில் சிக்க வைப்பதற்குக் காரணமானவர் பெருந்தலைச் சாத்தனார் என்பதால், தம் மனைவிக்குப் பெருந்தலைச் சாத்தனார் எதிர்நிலைப் பாத்திரமானார் (புறம். 164.2-7).

**4.2.1.2.1.** புலவர் பெருந்தலைச் சாத்தனார் தம் மனைவிக்கு வறுமை காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானார்.

**4.2.1.3.** பிரிந்து சென்ற தலைவன் குறிப்பிட்ட பருவத்தில் திரும்பி வந்து சிறைப்புறமாக இருந்தான். அவ்வாறு தலைவன் சிறைப்புறமாக இருந்தபோது, தலைவி தன் பிரிவு ஆற்றாமை காரணமாகத் தோழிக்குச் சொல்வதாகப் புலவர் இளந்திரையனார் புலப்படுத்தியுள்ளார்.

காமத்தைப் பற்றிச் சொல்வது ஆண்மகனுக்குப் பொருந்தும். ஆனால், பெண்மை தடுக்க, நுண்ணிதாகக் காமநோயைத் தாங்கிக் கொண்டிருக்கின்றேன்.

கைத்திறமையுடைய பொற்கொல்லன் அழகு பெறக் கழுவாத - செப்பமிடாத- பசிய முத்துப் போன்றது என் பெண்மை. தன் மார்பால் வருந்துகின்ற பெண்களைப் பற்றி அறிந்து கொள்ள முடியாத மனிதன் என்ன மனிதன் என்று தன் பிரிவாற்றாமையைப் போக்க வாராத தலைவனைத் தலைவி வெறுத்துப் பேசுவதால் தலைவிக்குத் தலைவன் எதிர்நிலையானான் (நற்.94).

**4.2.1.4.** குறித்த பருவத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்ற தலைவன், அக்குறித்த பருவம் வந்தும் வாராமையால் அது கண்டு பிரிவாற்றாமையின் காரணமாகத் தலைவி தோழியிடம் சொல்லியதாகப் புலவர் மாறன் வழுதி புலப்படுத்தியுள்ளார்.

பெரிய குழிப்புண் மார்பில் உண்டாகி ஆறாது இருக்கும் போது, அதில் வேலையும் எறிந்து வருவது போல, பிரிவால் வருந்தும் என்னை விட்டுப் பிரியாமல் அருகில் இருந்து யான் வருந்தக் கூவும் குயில் கொடியது. அக்குயிலைக் காட்டிலும் தெளிந்த நீரோடும் யாறு மிகக் கொடியது. இளவேனில் காலம் வந்ததைக் கூவுவதாலும், யாறு காட்சியாலும் நினைவூட்டும் அவ்விரண்டைக் காட்டிலும் கொடியவள் ஒருத்தி உள்ளாள்.

அவள், அழகிய பஞ்சி போன்ற மெல்லிய மேற்பகுதியைக் கொண்ட இதழ்களுடைய பசிய குருக்கத்தி மலரோடு, பித்திகை கலந்த மலர்களை வாங்கிக் கொள்ளீரோ என்று கூவி அவற்றை வண்டுகள் சூழ்கின்ற வட்டிலில் இட்டு வைத்து கைக்கொண்டு திரியும் சோலைவாழ் உழவரின் ஒப்பற்ற இளமகளே என்று தலைவி பிரிவாற்றாமையால் வாடியிருந்த பொழுது, மகிழ்ச்சியாகப் பூவிற்றுக் கொண்டிருந்த ஒருத்தியைக் கண்டமையால் தலைவிக்குப் பூவிற்பவள் எதிர்நிலைப் பாத்திரமானாள் (நற். 97).

**4.2.1.5.** குறித்த பருவத்தில் திரும்பி வருதவதாகச் சொல்லிச் சென்ற தலைவன், பருவம் வந்தும் தலைவன் வாராமை கண்ட தலைவி, தனது பிரிவாற்றாமையின் காரணமாகத் தோழிக்குச் சொல்லியதாகப் புலவர் உக்கிரப்பெருவழுதி புலப்படுத்தியுள்ளார்.

எம் தந்தையின் பாதுகாப்பான இல்லத்தில் உறங்காமல் காவல் காக்கும் காவலர் அயர்ந்திருக்கும் நேரம் பார்த்து, தலைவன் இரவில் வருவது கொடியது, என்று தலைவன் வரவுக்குக் காவலர் இடையூறாக இருப்பதை அறிந்து வருந்திக் கூறியதால் தலைவிக்குக் காவலர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

"எந்தை ஓம்பும் கடியுடை வியல்நகர்த்
துஞ்சாக் காவலர் இதழ்பதம் நோக்கி
இரவின் வரூஉம் அதனினும் கொடிதே"                    (நற். 98. 8-10)

**4.2.1.6.** தலைவன், தலைவியை வேண்டித் தோழியிடம் குறை நேர்ந்த போது, தலைவனை இழிவுபடுத்திப் புறஞ்செல்லுமாறு செய்தல் வேண்டும் என்னும் காரணத்திற்காகத் தோழி சொல்லியதாகப் பாடியுள்ளார் புலவர்.

இவளோ, பெருங்கடலுள் சென்று மீன் வேட்டையாடும் பரதவர் மகள். நீயோ, கடைகள் நிறைந்த மூதூரில் வாழும் தேருக்குரிய செல்வந்தரின் அன்பு மகன் ஆவாய்.

சுறாமீன் துண்டங்களை உலர்த்துங்கால் பறவைகளை ஓட்டும் பரதவர் மகளாகிய எம் தலைவிக்கு, உம்மால் யாது பயன்.

யாம் புலால் நாறுவோம் ஆதலால், நீ அகன்று நில். கடல் விளை பொருள்களால் வாழும் எம் சிறிய வாழ்க்கை உம்மோடு பொருத்தமுடையதன்று. எம் பரதவரில் செல்வந்தர்களும் உள்ளனர் என்று தோழி, தலைவனைப் பார்த்துக் கூறியமையால் பரதவர் மகளாகிய தலைவிக்கும் தோழிக்கும் தலைவன் எதிர்நிலையானான் (நற். 45).

### 4.2.2. பரத்தை நிமித்தம்:

**4.2.2.0.** தலைவன், தலைவிக்குப் பூப்புத் தோன்றிய பன்னிரண்டு நாட்களும் அவளைப் பிரிந்து தங்குதல் இல்லை; அதே போல் பரத்தையிடம் பிரிந்து சென்ற காலத்தும் அவளைப் பிரிந்து தங்குதல் இல்லை.

பரத்தையர் பிரிதல் நானிலத்தார்க்கும் உரியது. அதற்கு நிலத்திரிபு இல்லை என்று கூறுவர் அறிவுடையோர்,[7] எனத் தொல்காப்பியம் தெரிவிப்பதிலிருந்து பரத்தை நிமித்தமாகத் தலைவன் பிரிந்து சென்ற காரணமாகவும், பிரிந்தவன்

மீண்டும் வந்தபோது அவனை இகழ்ந்தமை காரணமாகவும் தலைவிக்கு எதிர்நிலையானமை பற்றி ஆராய்ந்து இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

**4.2.2.1.** பரத்தை ஒழுக்கம் மேற்கொண்டிருந்த தலைவன், அவளை விட்டுப் பிரிந்து தலைவியிடம் வந்தபோது, தலைவியானவள் தனக்குப் பிரிவினால் உண்டான துன்பத்தைக் கொடுத்தவனாகக் கருதியதால், தலைவனின் இழிவு பற்றி எடுத்துச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, தலைவி ஊடல் மறுத்துச் சொல்லியதாகப் புலவர் பரணர் புலப்படுத்தியுள்ளார்.[8]

எருமை, கழுநீர் மலரைத் தின்று, தாமரை மலரை வெறுத்து, கையில் தடியையுடைய வீரரைப் போல நடந்து, பக்கத்தில் குன்றாய்ச் சேர்ந்த வெண்மணலில் உறங்கும் ஊரனே!

நீ இப்போது மிகவும் காதல் உள்ளவன் போல நெருங்குகின்றாய். போர் எழப் பகைவர்களைத் தொலைத்துச் சிறந்து விளங்கிய வேற்படையாளன் வயவன் (விராஅன்) என்பவனுக்குரிய நீர்வளம் மிக்க இருப்பையூர் போன்ற என் தழைத்த பல் கூந்தல் அழகு பெறப் புனைந்த அரும்பு மலர்ந்த பூமாலை வாடும்படி செய்த பகைவன் நீ.

யான், உன் செய்கையை மறந்து விடவில்லை. ஆதலால், என்னைத் தொடாதே என்பது போல் தலைவி கூறினாள்.

எருமை தாமரை மலரை வெறுத்து, கழுநீர் மலரைத் தின்றதுபோல் தலைவன் இல்லறத்தலைவியாகிய தன்னை வெறுத்து, பரத்தை ஒழுக்கம் விருப்பமாகக் கொண்டு பின் அதனை விட்டுத் தன்னிடமே வரும் செயலை இழிவுபடுத்திக் கூற வேண்டிய நிலையில் அத்தலைவிக்குத் தலைவன் எதிர்நிலையானான் (நற். 60).

**4.2.2.2.** தலைவன் பரத்தையிடம் சென்றிருந்து திரும்பி வந்த போது,

அத்தலைவனுடன் ஊடல் கொண்ட தலைவி, அத்தலைவனது செயலை இழிவுபடுத்த வேண்டும் என்னும் காரணத்திற்காகச் சொல்லியதாகப் புலவர் ஓரம்போகியார் புலப்படுத்தியுள்ளார்.[9]

பெருமானே, பொய்கையில் வாழும் நீர்நாய் வாளைமீனை இரையாகப் பெறும் ஊரனே! நின்னைக் கூடி முயங்காதபோது எம் அழகு முற்றும் கெடுவதானாலும், பிறரைக் கூடித் தழுவிய நின் மார்பை யாம் கூடமாட்டோம் என்று தலைவனை இழிவுபடுத்தி, ஊடல் கொண்டமையால் தலைவிக்குத் தலைவன் எதிர்நிலைப் பாத்திரமானான் (ஐங். 63).

**4.2.2.3.** தலைவியைப் பிரிந்து பரத்தை ஒழுக்கம் கொண்டிருந்த தலைவன் பொருட்டாக, வாயில் வேண்டி பாணன் வந்தபோது, தலைவனை இழிவுபடுத்த வேண்டுமானால் பரத்தையின் சேட்டைகளைச் சொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காகத் தோழி தலைவிக்குச் சொல்லியதாகப் புலவர் அஞ்சில் அஞ்சியார் புலப்படுத்தியுள்ளார்.

கூத்தாட்டம் மிக்க பழைய ஊரில் செல்வர் மிகுதியாக உள்ளமையால், வண்ணாத்தி இரவில் தோய்த்து, கஞ்சியிலிட்டுப் உலர்த்திய ஆடையையும் பொன்னரி மாலையையும் மார்பில் அணிந்து யாவும் அசைய வந்தாள் ஒரு பெண்.

ஊசலில் ஓடிச் சென்று ஏறினாள். அப்போது, அவள் தம் ஆயம் ஆட்ட ஆடாளாய் அழுது நீங்கினாள். அழகிய கூந்தலை உடைய அவள் பெண் தன்மையில் குறைவானவள்.

வளையல் அணிந்த அவள் இளைய பரத்தையாவாள். எனவே, இவ்வேந்துடைய அவை, ஊசல் ஆட்டத்தை வருத்தத்தோடு செய்யாது.

நன்மையில்லாத மாக்களோடு உறவு கொண்டு பலனில்லை. எனவே, பாணனே போய் வருவாயாக என்று பரத்தையைப் பற்றிச் சொல்லி, இத்தகைய

பரத்தையுடன் சேர்ந்து வாழும் தலைவன் பொருட்டாக வாயில் வேண்டி வந்தது தகாதது என்று கூறியமையால், தலைவிக்குப் பரத்தை எதிர்நிலையானாள் (நற்.90.3-12).

**4.2.2.4.** பரத்தையிடமிருந்து தலைவன் பிரிந்து சென்றபின், பரத்தை தெருவிற் சென்றாள். அப்பரத்தை மீண்டும் தம் கணவன்மார்களை இழுத்துச் சென்று விடுவாளோ என்று எண்ணி, பரத்தையின் இழி செயலுக்குத் தலைவனை மீண்டும் விட்டு விடக்கூடாது என்னும் காரணத்திற்காக இல்லத்தலைவியர் தத்தம் கொழுநரைக் காத்துக் கொண்டமை பற்றிப் பரத்தை தனக்கு வேண்டிய தோழியர் கேட்பச் சொல்லியதாகக் கபிலர் புலப்படுத்தியுள்ளார்.

ஊரிலே திருவிழா முடிந்து, முழவு ஒலிப்பதும் ஒழிந்தது. பரத்தை ஒருத்தி அசையும் அல்குலில் தழையுடை அணிந்து தெருவில் சென்றாள்.

அப்போது, அவ்வூரில், வல்வில் ஓரியைக் கொன்று திருமுடிக்காரி புகுந்தபோது, பகைவர் தெருவில் பேரிரைச்சல் ஏற்பட்டதுபோல ஒலி உண்டாயிற்று.

அது கொண்டு, இல்லத்துப் பெண்கள் (இல்லத்தலைவியர்) காவல் செறியச் செய்து, பரத்தையின் இழிதகைமைக்குத் தலைவனை விட்டுவிடக்கூடாது என்று தம் கணவன்மார்களைப் பாதுகாத்துக் கொண்டமையால் இல்லத்தலைவியர்க்குப் பரத்தை எதிர்நிலையானாள் (நற். 320).

**4.2.2.5.** வையாவிக் கோப்பெரும்பேகனின் வரலாறு பற்றித் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்னும் தலைப்பில் அகக்கூறு என்னும் பகுதியில் 3.1.1.0.இல் சுட்டப்பட்டுள்ளது. பேகனின் காதலி எனப்படும் பரத்தை இவனது காலமாகிய கி.மு. 250-225இல் வாழ்ந்திருக்கின்றாள். இவளது ஊர் நல்லூர்.

இவள், வையாவிக் கோப்பெரும் பேகன் தன் மனைவி கண்ணகியை விட்டுப் பிரிந்து தன்னுடன் வந்தபோது, அப்பேகனின் காதலியாக வாழ்ந்துள்ளாள்.

மயிலுக்குப் பேகனின் உள்ளம் இளகியதுபோல மயில் போன்ற ஒரு பெண்ணுக்கும் அவன் மனம் இளகிவிட்டது. தேர் ஏறி அவளிடம் அடிக்கடிச் செல்லலானான்.

தன் கணவன் பிரிந்து போய் மற்றொரு பெண்ணிடம் தொடர்பு வைத்திருந்ததைப் பேகனின் மனைவி கண்ணகி, பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகிய புலவர்களிடம் சொல்லி அழுதாள்.

எனவே, அப்புலவர்கள் பேகனின் புதுக்காதலியின் வீட்டிற்குச் சென்று பேகனைக் கண்டு, கண்ணகியிடம் திரும்புமாறு கேட்டுக் கொண்டனர் என்பதால் பேகனின் காதலிக்கு, பேகன் மனைவி கண்ணகி, புலவர்கள், பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார், ஊர் மக்கள் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்[10] (புறம். 143-147 பாடல்கள்).

## 4.2.3. பிரிவு நிமித்தம்:

**4.2.3.0.** தலைவன், தலைவியைத் தன்னுடன் உடன்கொண்டு செல்லுதலும், சுற்றத்தினர் வந்து பிரித்த வழி, பிரிவிற்காகக் கலங்குதலும் சில வேளைகளில் உண்டு எனக் கூறுவர்.

இத்தகைய பிரிவு கற்றல், போர், தூது இவை காரணமாக நிகழும். கற்றல் பிரிவும், தூதுசெல் பிரிவும் சமுதாயத்தில் உயர்ந்தவர்களான் அமைவது.

கடல்வழிப் பயணம் செல்லும்போது பெண்டிரை அழைத்துச் செல்வது இல்லை. பிரிவின்போது முன்பு நிகழ்ந்ததைப் பின்பு நினைத்தற்குக் காரணங்களும் அமையும். கல்விக்காகப் பிரியும் பிரிவு மூன்று ஆண்டுகளுக்கு மேல் கடவாது; அரசனுக்காகப் பகைவயிற் பிரிவும், தூதுப் பிரிவும், பொருள் ஈட்டச் செல்லும் பிரிவும் ஓர் ஆண்டிற்கு உட்பட்டே அமையும்.

மக்கள் அல்லாத தேவரது பூசை, விழா முதலாயின முல்லை முதலாகச்

சொல்லப் பெற்ற எல்லா நிலங்களிலும் மக்கள் தப்பிய வழி தப்பாது நிறுத்தல் வேண்டி காவற் பிரிவும், செய்யப் பெற்ற பொருளை ஆக்குதற்காகப் பொருள்வயிற் பிரிவும் உளதாம்.

காவற் பிரிவு அரசியலாளர், தலைமக்கள், நில மக்கள், அடியோர், வினைவலர் என நால்வர்க்கும் உரித்து. பொருள் வயின் பிரிதல் நிலத்தலைமக்களுக்கு உரியது எனத் தொல்காப்பியம் பிரிவு நிமித்தம் பற்றித் தெரிவித்துள்ளது.[11] எனவே, பிரிவு நிமித்தமாகத் தலைவிக்கு எதிர்நிலையானமை பற்றி ஆராய்ந்து இப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

**4.2.3.1.** தலைவன், தலைவியோடு பேசி அளவளாவித் திரும்பிச் செல்லுங்கால், தலைவியைத் திருமணம் செய்து கொள்ளாமல் சென்றால், தலைவி பிரிவாற்றாமையின் காரணமாக உயிர் வாழமாட்டாள் என்று தோழி சொல்லியதாகப் புலவர் நக்கண்ணையார், நெடிய தேரைப் பாகன் செலுத்த, ஊர் திரும்பும் நினைப்போடு புறப்படுவாயானால், தலைவி திரும்பி வரும் எல்லையாகிய சிலநாள்கள் கூட வாழமாட்டாள். எனவே, அதனை அறிந்து செல்வாயாக, என்று குறிப்பிடுகிறார். தலைவனிடம் தோழி இவ்வாறு தெரிவித்தமையால் தலைவிக்குத் தலைவன் எதிர்நிலையானான் (நற். 19.5-9).

**4.2.3.2.** தலைவன் பிரிந்து சென்றபோது, தலைவி தன் பிரிவு ஆற்றாமையின் காரணமாகக் கூறியதைத் தோழி எடுத்துச் சொல்லியதாகப் புலவர் முதுகூற்றனார், என் கையைக் கொண்டு தன் கண்ணை ஒற்றியும், தன் கையைக் கொண்டு என் நல்ல நெற்றியைத் தடவியும், தாய்போல இனிய சொற்களைக் கூறியும் தலைவர் களவுக் காலத்தில் தலையளி செய்தார் என்று பாடியுள்ளார்.

இப்போது அவர் கள்வர் போலக் கொடியவராய் உள்ளார். மலைச்சிகரத்தால் உயர்ந்த மலைக்கு உரிமையுடைய மலைகிழவோனே அக்கொடியவர் ஆவார் என்று களவுக் காலத்தில் தலையளி செய்து, தற்போது பிரிந்து சென்றுவிட்டதால் கள்வன் என்றும், கொடியவர் என்றும், தலைவன் தோழியால் சொல்லப்பட்டிருப்பதால் தலைவிக்குத் தலைவன் எதிர்நிலையானான் (நற். 28, 1-4,8-9).

**4.2.3.3.** தலைவி, தலைவன் பிரிந்தமையால், பிரிவிடை ஆற்றாளாகித் துன்புற்றிருந்ததன் காரணமாகத் தோழி தூது விடக்கருதிய போது, தலைவி வருந்திச் சொல்லியதாகப் புலவர் உலோச்சனார், "தோழி! காதலர் எப்படிப் பட்டவராக இருந்தாலும் இனி அவருடைய நினைவை ஒழிக! யாம் இப்படி வருந்துமாறு தம்மைத் துறந்த அவருடைய நட்பு என்ன வேண்டிக் கிடக்கிறது.

மலை வாழ் குறவர், அறியாமல் அறுத்துவிட்ட சந்தனமரம் வறண்டு உலர்ந்து சோர்ந்து அழிந்தாற்போல என் அறிவும் உள்ளமும் அவரிடம் சென்றுவிட்டன தோழி! இனி அவர் இங்கு வந்தாலும் என் நோய்க்கு மருந்து ஆகார். அதனால், காதலர் வாராது அங்கேயே இருப்பாராக. இங்கே காதலும் நினைவும் வருத்த துன்புற்றிருக்கும் நிலையைக் காணாது ஒழிவாராக", என்று குறிப்பிட்டுள்ளார்.

தலைவன் வாராமையும் பிரிவாற்றாமையும் வருந்த உண்டான வெறுப்பால், காதலர் வாராதொழிவாராக என்று தெரிவித்தமையால், தலைவிக்குத் தலைவன் எதிர்நிலைப் பாத்திரமானான் (நற். 64.1-3, 8-13).

**4.2.3.4.** தலைவன், தலைவியைத் திருமணம் செய்து கொள்ளாமல் நெடுநாள் கழித்ததால், அத்தலைவனது பிரிவு ஆற்றாமை காரணமாக வருந்திய தலைவி தோழிக்குச் சொல்லியதாகப் புலவர் வெண்பூதியார் புலப்படுத்தியுள்ளார்.

தோழி! யான் இவ்விடத்தில் உள்ளேன். என் பெண்மை நலனோ என்னிடத்திலிருந்து நீங்கி வருத்தத்தோடு கடற்கரைச் சோலையிடத்து உள்ளது. தலைவனோ தனது ஊரினிடத்து உள்ளான்.

எம்மிடையே உள்ள மறைமுக நட்பானது பலரறியும் பழிமொழியாகி ஊர் பொதுவிடத்தாயிற்று என்று தன் நலன் உண்ட நெய்தல் நிலத் தலைவன், களவு பிறரால் அறியப்பட்ட இடத்தும் திருமணம் செய்து கொள்வதற்கான முயற்சியைச் செய்தானல்லன் எனத் தலைவி வருந்தியதால், தலைவிக்குத் தலைவன் எதிர்நிலையானான் (குறுந். 97).

**4.2.3.5.** திருமணம் செய்வதை இடைநிறுத்திப் பொருளுக்காகத் தலைவன் பிரிந்து சென்றபோது, தலைவியின் பிரிவு ஆற்றாமை காரணமாகத் தோழி வற்புறுத்தியபோது, தலைவி தோழிக்குச் சொல்லியதாகப் புலவர் உலோச்சனார் பாடியுள்ளார்.

தோழி! தாழைத்துறையும் பக்கத்தில் பனைமரங்களும் வளர்ந்திருக்கும் ஆராவாரமிக்க ஊரில், மீன் வேட்டையும் வலை வளமும் மழை பொழிவும் சிறப்பாக உள்ளதாகப் பரதவர் கூறுகின்றனர்.

கள் உண்போர் மகிழ ஆரவாரமிக்க புதுவருவாயை உடையதெனினும் தேர்மிக்க நெய்தல் நிலத் தலைவன் பிரியின் பொலிவிழந்தாற் போலக் காணப்பட்டு வருத்தம் தருகின்றது என்று, தலைவன் இல்லாத தன் வருத்தத்தைத் தலைவி வெளிப்படுத்தியதால் நெய்தல் நிலத் தலைவிக்கு, வருத்தத்தை உண்டாக்குபவனாக விளங்கும் தலைவன் எதிர்நிலையானான் (நற். 38).

**4.2.3.6.** கண்ணகி வையாவிக் கோப்பெரும் பேகனின் மனைவி. இவர்களது வரலாறு பற்றித் தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்னும் தலைப்பில் அகக்கூறு என்னும் பகுதியில் 3.1.1.0.இல் சுட்டடப்பட்டுள்ளது. வையாவிக் கோப்பெரும் பேகன் எனப்படும் இவரது மனைவி கண்ணகி, புலவர்களை அனுப்பி தன் கணவனுக்கு அறிவுரை கூறச் செய்தவள். பேகன் வாழ்ந்த காலமாகிய கி.மு. 250-225 கண்ணகியின் காலமாகும்.

இவள், பரணர் மூலம் தன் கணவன் வையாவிக் கோப்பெரும் பேகன் திருந்துமாறு முயற்சி செய்துள்ளாள்.

பேகனைத் திருத்தும் நோக்கில், பரணர் என்னும் புலவர், பேகனே! முன்பு நின் கானத்தைப் பாடினோம். அப்போது இளையவள் ஒருத்தி எம்முன் நின்று அழுதாள். அவள் பெயர் கண்ணகி. யாம் அவளைத் தொழுது, நீ என் பேகனுக்கு உறவோ, என வினவினோம்.

அவள், தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு சினத்தின் காரணமாக, யாம் பேகனுக்கு உறவல்லேம். அவன் என் போன்ற ஒருத்தியின் அழகில் ஈடுபட்டு நாள்தோறும் அவள் ஊர்க்குச் சென்று வருகின்றான் எனப் பலரும் உரைப்பர் என்று சொன்னாள்.

இதிலிருந்து கண்ணகி பேகனுக்கு மனைவியாய் இருந்தும், பேகன் பிரிந்து வேறொருத்தியிடம் போனான் என்ற சினத்தின் காரணமாக மனைவியல்லள், என்னும் பொருள்பட, உறவல்லேம், என்று கூறியதால் கண்ணகிக்கு வையாவிக் கோப்பெரும் பேகனும் அவனது பரத்தையும் எதிர்நிலையாயினர்.

> "***யாம்தன் தொழுதனம் வினவக் காந்தள்***
> ***முகைபுரை விரலின் கண்ணீர் துடையா***
> ***யாம்அவன் கிளைஞரேம் அல்லேம்*** ....." (புறம்.144.8-10).

## <u>4.3. முடிவுகள்:</u>

1. புலவர் வன்பரணர் கூற்றில், போர் வீரன் ஒருவன் இறந்த பிரிவாற்றாமை காரணமாக அவன் மனைவிக்குக் கூற்றுவன் எதிர்நிலைப் பாத்திரம்.
2. புலவர் பெருஞ்சித்திரனார் தம் மனைவிக்கு, பரிசில் பெற்று வரத் தாமதமாகியதால் எதிர்நிலைப் பாத்திரம்.
3. புலவர் பெருந்தலைச் சாத்தனார் தம் மனைவிக்கு, வறுமை காரணமாக எதிர்நிலைப் பாத்திரம்.
4. தலைவன் தலைவிக்கு அவளது காமநோய் காரணமாக எதிர்நிலைப் பாத்திரம்.
5. பிரிவாற்றாது வருந்தி இருந்த தலைவிக்கு மகிழ்ச்சி காரணமாகப் பூவிற்றுக் கொண்டிருந்த ஒருத்தி எதிர்நிலைப் பாத்திரம்.
6. தலைவன் வரவுக்குக் காவலர் இடையூறாக இருந்ததன் காரணமாகத் தலைவிக்குக் காவலர் எதிர்நிலைப் பாத்திரம்.
7. பரதவர் மகளாகிய தலைவிக்கும் அவளது தோழிக்கும் பயன்படாதிருந்ததன் காரணமாகத் தலைவன் எதிர்நிலைப் பாத்திரம்.

8. பரத்தை நிமித்தமாகத் தலைவன் பிரிந்து சென்றதால் தலைவிக்குப் பரத்தை எதிர்நிலைப் பாத்திரமானாள்.

9. பேகனின் காதலி வீட்டிற்குச் சென்று பேகனைக் கண்டு கண்ணகியிடம் திரும்புமாறு கேட்டுக் கொண்டதால் அவனது காதலிக்குப் பேகன் மனைவி கண்ணகி, புலவர்கள் பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார், ஊர்மக்கள் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

10. புலவர்கள் நக்கண்ணையார், முதுகூற்றனார், உலோச்சனார், வெண்பூதியார் போன்றோர் கூற்றிலிருந்து, பிரிவு நிமித்தம் காரணமாகத் தலைவிக்குத் தலைவன் எதிர்நிலைப் பாத்திரம்.

11. பிரிவு நிமித்தம் காரணமாகவும் சினம் காரணமாகவும் கண்ணகிக்கு, வையாவிக் கோப்பெரும் பேகனும் அவனது பரத்தையும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

12. பேகனின் காதலி வீட்டிற்குச் சென்று பேகனுக்கு அறிவுரை கூறியதன் காரணமாகப் பேகனின் காதலிக்கு அதிக எதிர்நிலைப் பாத்திரங்கள்.



# அடிக்குறிப்புகள்

1. கழகத் தமிழ் அகராதி, கழகப் புலவர் குழுவினர், ப. 606.
2. தொல்காப்பியம், தெளிவுரை, முனைவர் ச.வே. சுப்பிரமணியன், பக். 454, 455.
3. சங்சு கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 147-151.
4. தொல்காப்பியம், தெளிவுரை, முனைவர் ச.வே. சுப்பிரமணியன், பக். 364, 365, 458, 459.
5. சங்க கால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 148, 152, 161, 162,165.
6. தொல்காப்பியம், தெளிவுரை, முனைவர் ச.வே. சுப்பிரமணியன், பக். 412, 413.
7. தொல்காப்பியம், தெளிவுரை, முனைவர் ச.வே. சுப்பிரமணியன், நூற். 1133, 1170, பக். 458, 459, 472, 473.
8. தொல்காப்பியம், தெளிவுரை, முனைவர், ச.வே. சுப்பிரமணியன், பக்.438,439.
9. தொல்காப்பியம், தெளிவுரை, முனைவர் ச.வே. சுப்பிரமணியன், பக். 472,473.
10. தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர் மு. வரதராசன், ப. 44.
11. இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 106.
12. தொல்காப்பியம், தெளிவுரை, முனைவர் ச.வே. சுப்பிரமணியன், நூற். 961, 971, 972, 980, 989, 1134-1136, 974, 975, 979.



# 5. பிற கூறுகளில் எதிர்நிலைப் பாத்திரங்கள்

**5.0.** ஐந்தாம் இயலில் முதன் நான்கு இயல்களிலும் கூறப்படாத சங்க இலக்கியங்களில் காணப்படும் எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றியச் செய்திகள் வகைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளன. அவை பத்திநிலையில், நட்பு நிலையில், உறவு நிலையில், சான்றோர்கள் நிலையில் எனச் சிந்திக்கப்பட்டுள்ளன.

## 5.1. பத்திநிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள்:

**5.1.0.** இப்பகுதியில் கடவுள் நிலையில் கூறப்பட்டுள்ள கருத்துகளை வகைப்படுத்தி, முருகப்பெருமான், முருகப்பெருமானின் கூளிச் சுற்றம், வள்ளிநாச்சி, வள்ளியின் தோழியர், தேவரின் குரு - வியாழன், திருமால், பரசுராமன், இரணியன், இராமன் - சீதை, கருடன், ஆதிசேடன், ஐவர் பாண்டவர், வீமன், சிவபெருமான், கௌதம முனிவன் ஆகியோருக்கான எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றி ஆராயப்பட்டுள்ளன. புராணச் செய்திகளுக்குக் காலவரையறை வகைப்படுத்த முடியாது என்பதால் அந்த நோக்கில் ஆய்வு செய்யப்படவில்லை.

### 5.1.1. முருகப் பெருமான்:

**5.1.1.0.** கந்த புராணத்தை இயற்றியவர் காஞ்சிபுரத்தில் குமரக்கோட்டத்து அருச்சகராயிருந்த காளத்தியப்ப சிவாசாரியாருடைய குமாரர் கச்சியப்ப சிவாசாரியார். இவர் முருகப் பெருமானின் பெருமைகளைக் கந்தபுராணத்தில் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். முருகன் என்ற இறைவன் வடநாட்டில் கார்த்திகேயன் என்று அழைக்கப்படுகிறது. முருகன் தமிழ்த்தெய்வம்; தந்தைக்கு உபதேசம் செய்தவன்; பிரணவத்திற்குப் பொருள் கேட்டு பிரமனைச் சிறையில் அடைத்தவன்.

முருகப் பெருமான் வேலன், கந்தன், சுப்பிரமணியன், கார்த்திகேயன், சரவணபவன், குமரன், சண்முகன், தாரகாரி, கிரௌஞ்சபேதனன், சக்திதரன், தேவசேனாபதி, சேனாபதி, கஜவாகனன், மயில்வாகனன், சேனானி, பிரம்மசாஸ்தா, பாலசுவாமி, சிகி (மயில்) வாகனன், வள்ளி கல்யாணசுந்தரன், அக்கினி ஜாதன், சாரபேயன், குகன், பிரம்மசாமி, தேசிகன், காங்கேயன் எனப்பல பெயர்களால் அழைக்கப்படுகிறான்.

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம்,

குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகிய ஆறுபடைவீடுகள் முருகப் பெருமானுக்குரியவை.

சிவபெருமான் ஆறு திருமுகங்களோடு காட்சி கொடுத்த போது, அவரது ஆறு நெற்றிக் கண்களிலிருந்தும் தோன்றிய ஒளிக்கற்றைகளின் அருளால், தாமரை மலர்மீது வீற்றிருக்கும் நிலையில் தோன்றிய ஆறு குழந்தைகளைக் கார்த்திகைப் பெண்கள் அறுவரும் பால் கொடுத்து வளர்க்க, பார்வதிதேவி ஆறு குழந்தைகளையும் ஒன்று சேர்த்து, மார்பில் இறுகக் கட்டியணைத்து உச்சிமோந்துபோது, இரண்டு கால்கள், ஆறுமுகங்கள், பன்னிரண்டு தோள்களும் உடையவராகக் காட்சியளித்தவர் முருகப் பெருமான்.

சிவபெருமானுக்கிருந்த ஆறுமுகங்களே முருகனுக்கும் முகங்களாக அமைய,
1 2 3 4 5 6       14 2 6 3 2
சிவபெருமான் எனத் தாரகப் பிரம்மமாயிருந்த ஆறு எழுத்தும் சரவணபவ எனத்தாரக மந்திரமாயிற்று. சிவபெருமானின் சக்தியே முருகன் ஆவான்.

முருகப்பெருமான் தன்னை வணங்கியவருக்குச் செல்வம், வீடு, ஞானம் முதலியவற்றைக் கொடுக்கும் தன்மை உடையவர். தேவசேனைக்கு சேனாதிபதியாக விளங்கியவர். வேற்படையால் சூரபதுமன் தம்பி தாரகாசுரனை அழித்தவர். மாமரமாய் உருக்கொண்ட சூரபதுமனின் மார்பை முருகப்பெருமானின் வேலாயுதம் இரண்டு கூறுகளாகப் பிளந்தது.

சூரபதுமனின் வெற்றியால் நான்முகன், திருமால் முதலிய தேவர்களே முருகப் பெருமானை வணங்கித் துதித்துள்ளனர்.

திருமாலின் புத்திரி அமுதவல்லியே வானுலகத்தை அடைந்து ஐராவதம் என்னும் தெய்வ யானையால் தேவேந்திரனிடத்துச் சேர்ந்து, தேவேந்திரனுக்கும் இந்திராணிக்கும் மகளாகப் பிறந்து தெய்வயானை என்ற பெயரில் வளர்ந்து வந்தபோது, முருகப் பெருமான் தெய்வயானையை மணந்துள்ளார். இத்திருமணத்தின் போது பிரம்மதேவனே முருகப் பெருமானுக்கு மங்கலநாண் எடுத்துக் கொடுத்துள்ளார்.

அதே போல், திருமாலின் மற்றொரு புத்திரி சுந்தரி என்பவளே அக்னிப் பிரவேசம் செய்து, தன்னுடம்பை விடுத்துச் சூட்சும சரீரத்துடனே மேல்பாடி ஊரையடுத்த ஒரு மலையில் தவஞ்செய்து கொண்டிருந்தாள். அவ்விடத்தில், முன்னமே பெருந்தவம் புரிந்து கொண்டிருந்த சிவமுனி என்பார், அழகிய பெண்மான் ஒன்று தன்முன் வர, அதனைக் கண்டு காதல் கொண்டு கண்ணினால் நோக்கிய பொழுது, அந்தப் பெண்மான் கருவுற்றது.

சுந்தரி அந்தக் கருப்பத்தில் புகுந்து கருவுயிர்க்குங் காலத்தில் அந்தப் பெண்மானினால் வள்ளிக்கிழங்கு அகழ்ந்தெடுத்த பள்ளத்தில் மானிடப் பெண் வடிவத்தில் கருவுயிர்க்கப்பட்டுப் பிறந்தாள். வள்ளி என்று அழைக்கப்பட்டாள். இந்த வள்ளி வேடர் தலைவன் நம்பிராசன், அவனது மனைவி எயிற்றி என்பவரால் வளர்க்கப்பட்டு வந்தபோது, முருகப்பெருமான் வள்ளியை மணந்துள்ளார்.

வள்ளியை மணக்க முருகப்பெருமான், தன் வடிவமாகிய ஆறுமுகத்தை விடுத்துச் சாதாரண மனித வடிவத்தை, அதுவும் வேட்டுவ வடிவம் கொண்டவர். வேடன் வடிவிலிருந்து முருகன், தினைப்புனத்தில் வள்ளியோடு உரையாடிக் கொண்டிருந்தபோது, நம்பிராசன் அங்கு வருவதைப் பார்த்து ஒரு வேங்கை மரமானான்.

வேட்டுவர் தலைவன் தன் கூட்டத்தோடு வருவதைக் கண்டு, வள்ளியின் வேண்டுதலால் முருகப் பெருமான் கிழச்சைவத் துறவி வேடம் பூண்டவர்.

கடைச் சங்கத்தில் 49 புலவர்களுக்குத் தலைமை பொறுப்பேற்றிருந்த நக்கீரர், திருப்பரங்குன்றம் சென்று முருகப்பெருமானை வணங்கித் திரும்பிய பொழுது, கற்கிமுகி என்ற பூதத்திடம் சிக்கி, பூதம் உண்ணவிருந்த பொழுது, நக்கீரர், திருமுருகாற்றுப்படையைப் பாடியதால் முருகப்பெருமான் நக்கீரர் முன் தோன்றி கற்கிமுகி பூதத்தைக் கொன்று நக்கீரரையும் அவருடனிருந்த 999 பேரையும் காப்பாற்றிய பெருமை உடையவர்.

முருகப்பெருமான், தமிழரின் குறிஞ்சிக் கடவுள். குன்றுதோறாடும் குமரன். சரவணப் பொய்கையில் குழந்தையாக விருந்து கார்த்திகைப் பெண்கள் அறுவராலும்

பாலூட்டி வளர்க்கப்பெற்றது, கடல் நடுவே சூர்மாவாகிய அவுணனை வேலாற் கொன்றருளியது, வானோர் தலைவனாகிய இந்திரன் மகள் தெய்வயானையையும் குறமகள் வள்ளிநாச்சியாரையும் திருமணம் கொண்டருளியது முதலிய முருகப்பெருமானைப் பற்றிய புராணச் செய்திகள் சங்கச் செய்யுட்களில் இடம்பெற்றுள்ளன.[1]

இப்படிப்பட்ட முருகப்பெருமான், சூரபன்மன், சூரபன்மனின் சுற்றம், சூரபன்மனுக்குக் காவல் செய்து வந்த அவுணர், அசுரர்கள், இந்திரன், கூற்றுவன் போன்றவர்களை அவர்களோடு நடைபெற்ற போர்க்களங்களில் வெற்றி பெற்றுள்ளான்.

**5.1.1.1.** மக்கள் வடிவமும் விலங்கின் வடிவமும் ஆகிய அவுணராகிய அசுரர்க்குத் தலைவன் சூரபன்மன். இச்சூரபன்மன் முருகனுக்கு அஞ்சிக் கடலினுள் புகுந்து அங்கே மாமரமாய் நின்றான்.

மாமரம் அவுணரின் வடிவமாதலால், தம்முடன் எதிர்த்தவர் வலிமையில் பாதி தம்முடன் சேரத்தக்கதொரு மந்திரம் உடையது என்பர்.

முருகப்பெருமான் அவுணராய் நின்ற மாமரத்தை வேரோடு வெட்டி வீழ்த்த வேண்டும் என்னும் காரணத்திற்காக மாமரமாய் நின்ற சூரபன்மனை வெட்டி வீழ்த்திய புகழ்மிக்க வேலையுடையவன் ஆனான்[2] என்றமையால் மாமரமாய் நின்ற சூரபன்மன் எதிர்நிலையானான் (திருமுரு.57-61, பரி.19.101-103, பதிற்.11.3-6).

**5.1.1.2.** முருகப் பெருமான், மக்களுக்குத் தீவினையைச் செய்து வரும் அசுரர்களுக்கெல்லாம் தலைவனாகிய சூரபன்மாவைக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, செங்காந்தளின் குளிர்ந்த மாலையைச் சூடிய திருமுடியை உடையவனாக நிலவுலகம் முழுவதும் சூழ்ந்த பரந்த கடலுக்குள் சென்று தலைவனாகிய சூரபன்மாவைக் கொன்ற வேலையுடையவன்[3] என்று நக்கீரர் கூறியுள்ளமையால் சூரபன்மன் எதிர்நிலையானான் (திருமுரு. 43-46, பெரும். 455-461, பரி.18.1-4).

**5.1.1.3.** சூரபன்மனையும் அவனது குலத்தையும் முற்றிலும் இல்லையாகும்படி கொன்றழிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, முருகன் தன் வலிமையினால் கொன்றழித்தமையால், மதவலி என்னும் பெயரையுடையவன்; போர்ச்செயல் மிக்க தலைவன் என்று சொல்லப்பட்டமையால் மதவலி என்னும் பெயரையுடைய முருகனுக்குச் சூரபன்மனும் அவனது சுற்றமும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

இச்செய்தியை நக்கீரர்,

> **"சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி**
> **போர்மிகு பொருந குரிசில் .........."** (திருமுரு.275-276)

எனவும், வெறிபாடிய காமக்கண்ணியார்,

> **"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை**
> **நெடுவேள் .................."** (அகம். 22.5-6)

எனவும், பாலைக் கௌதமனார்,

> **"முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்**
> **உரும்பில் கூற்றத்து .........."** (பதிற்.26.12-13)

எனவும், மதுரை மருதன் இளநாகன்,

> **"சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்**
> ***சினம்மிகு முருகன்* .............."** (அகம். 59.10-11) எனவும்

குறிப்பிட்டுள்ளனர்.

**5.1.1.4.** அசுரர்கள் மக்களுக்குத் தீவினையைச் செய்து திரியும் இயல்புடையவராய்த் திரிந்தமையால் முருகப்பெருமான், அவர்களைக் கொன்றழித்து மக்களைக் காக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, தன் ஆறு முகங்களுள் ஒன்றான ஐந்தாவது முகத்தால் அசுரர்களைக் கொன்று பேய்கட்கு விருந்தூட்டினார் என்றமையால் அசுரர்கள் எதிர்நிலையாயினர்.

இதனை நக்கீரர்,

> **"................... ஒருமுகம்**
> **செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்**
> **கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே"** (திருமுரு.98-100)

எனவும், புலவர் திப்புப்தோளார்,

> *"செங்களம் படக்கொன்று அவுனர்த் தேய்த்த*
> *செங்கோல் அம்பின், செங்கோட்டு யானை*
> *கழல்தொடி, சேஎய் குன்றம் .........."* (குறுந்.1.1-3 குறிஞ்சி)

எனவும் புலப்படுத்தியுள்ளார்கள்.

**5.1.1.5.** முருகன் தீவினை செய்துவந்த சூரபன்மனையும், அவனது இனமான அவுணர்களையும் அழிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, மிக உயர்ந்த பிணிமுகம் என்னும் யானை மீது ஏறிச் செலுத்தி, பரந்த பெரிய குளிர்ந்த கடலில் உள்ள பாறைகள் தூளாகும்படி சென்று, தீயின் கொழுந்து ஒலிக்குமாறு திரித்து விட்டெறியப்பட்டு, பிறரைத் துன்புறுத்தும் இயல்புடைய அரசாக விளங்கும் சூரபன்மனான மாமரத்தினது வேரை அறுத்தான்.

இதனால், வெற்றியுடைமையினால், புண்ணிய மக்கள், பாவ மக்கள் என இருவகைப் பெயர்களுள் வைத்துப் புண்ணிய மக்கள் என்ற ஒருவகையால் பெயரைப் பெற்ற உயிர்களைக் கொன்று தின்னும், தீவினைக்கு அஞ்சாதவரும் கொல்லப்படும் தன்மையுடையவரும் மாயத்தில் வல்லவருமான அவுணரின் குலம் அழியுமாறு போர் செய்தான். அவர்களை அழித்தான் என்றமையால் மாமரமாய் நின்ற சூரபன்மனும் அவுணர்களும் எதிர்நிலையாயினர்.

இச்செய்தியைக் கடுவன் இளவெயினனார்,

> *"பாய்இரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு*
> *சேய்உயர் பிணிமுகம் ஊர்ந்து அமர்உழக்கி*
> *தீஅழல் துவைப்பத் திரிய விட்டெறிந்து*
> *நோயுடை நுடங்கு சூர்மா முதல்தடிந்து*
> *வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய*
> *கொன்றுஉணல் அஞ்சாக் கொடுவினைக் கொல்தகை*
> *மாய அவுணர் மருங்குஅறத் தபுத்தவேல்"* (பரி.5.1-7)

என்னும் பாடல் வரிகள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

**5.1.1.6.** முனிவர் மனைவியர் எழுவருள் அருந்ததி தவிர, ஏனைய ஆறு கார்த்திகை மகளிர் சூல் கொண்டு பெற்ற போது, தேவர் தலைவன் இந்திரன், உமையின் வயிற்றில் உண்டான முருகப்பெருமானது சூல் அழியக் காரணமாயின தன்மையால், மிக்க பகைமை காரணமாக அம்முனிவர்க்குத்தான் கருவைத் தந்ததையும் மீறித் தீயைக் சுக்கும் தன் வச்சிரப்படையினால் வெட்டினான். அப்போது முருகப்பெருமான் ஆறு வெவ்வேறான துண்டுகள் ஆனபோது ஆறு வடிவமாய்ப்பின் ஓர் வடிவம் கொண்டு ஆறுமுகனாகி அப்போதே அந்த இந்திரனை வென்று உயர்ந்த வெற்றியை உடைய முருகப்பெருமான்,[4] என்றமையால் முருகப் பெருமானுக்கு இந்திரன் எதிர்நிலையானான். இச்செய்தி கடுவன் இளவெயினனாரின்,

> *"பெரும்பெயர் முருக நிற்பயந்த ஞான்றே*
> *அரிவுஅமர் சிறப்பின் அமரர் செல்வன்*
> *எரிஉமிழ் வச்சிரம் கொண்டுஇகந்து வந்துஎறிந்தென*
> *அறுவேறு துணியும் அறுவர் ஆகி*
> *ஒருவனை வாழி ஓங்குவிறல் சேஎய்"* (பரி. 5.50-54)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.1.7.** உலக உயிர்களைக் கொல்லும் கூற்றுவனையும் விஞ்சிய ஆற்றலுடையவன் முருகப்பெருமான் என்னும் காரணத்தால், கூற்றுவனின் பெரிதான ஆணையையும் இகழும் ஆற்றல் வாய்ந்தவன் முருகப்பெருமான் என்று கூறப்பட்டதிலிருந்து முருகப் பெருமானுக்குக் கூற்றுவன் எதிர்நிலைப் பாத்திரமானான். இதனை நல்லந்துவனார்,

> *"எருமை இருந்தோட்டி எள்ளீயும் காளை"* (பரி.8.86)

என்னும் பாடல் வரிமூலம் புலப்படுத்தியுள்ளார். (தோட்டி - ஆணை, எள்ளீயும் - இகழும், காளை - முருகப்பெருமான்).

**5.1.1.8.** அவுணராய் நின்ற மாமரத்தை வெட்டி வீழ்த்த வேண்டும் என்னும் காரணத்திற்காகவும், அசுரர் தலைவன் சூரபன்மனைக் கொல்ல வேண்டியும்,

சூரபன்மனையும் அவனது குலத்தையும் கொன்றழிக்க வேண்டியும், மக்களுக்குத் தீமை செய்து வந்த அசுரர்களைக் கொல்ல வேண்டியும், இந்திரன் முருகப்பெருமானது சூல் அழியக் காரணமானதாலும், கூற்றுவனது ஆணையை இகழ்தல் வேண்டும் என்னும் காரணத்திற்காகவும் முருகப்பெருமானுக்கு, சூரபன்மன், அவனது சுற்றம், அசுரர்கள், அவுணர்கள், இந்திரன், கூற்றுவன் போன்றவர்கள் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 5.1.2.முருகப் பெருமானின் கூளிச்சுற்றம்:

**5.1.2.0.** முருகப் பெருமானின் கூளிச்சுற்றம் என்பது முருகப் பெருமானுடன் சூரன்பன்மனைக் கொல்லச் சென்ற படைவீரர் கூட்டம் அல்லது தொகுதி என்று சொல்லப்படும்.[5]

இந்த வகையில் முருகப்பெருமான், பரசு, வஜ்ராயுதம், சூலம், சக்தி, ஆயுதக்கத்தி, கேடயம், சக்ராயுதம், தண்டம், முசலம், வில், அதிகொடூரம் வாய்ந்த பாணங்கள், எரிவளையங்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு ரதத்திலேறிப் போருக்குப் புறப்பட்டபோது, அவரோடு இலட்சத்தொன்பது வீரர்களும் இரண்டாயிரம் வாகுனி எண்ணிக்கையுள்ள பூதவீரர்களும் புறப்பட்டுச் சென்று போரிட்டு வெற்றியைத் தேடித் தந்தார்கள் என்பர்.[6]

**5.1.2.1.** முருகப் பெருமானைப் பகைத்துக் கொண்ட சூரபன்மனைக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, முருகப் பெருமானின் கூளிச்சுற்றம், கார் காலத்தில் மலரும் கடம்ப மரத்தின் பச்சிலை கலந்து தொடுத்த மாலையைச் சூடிய சூரன்பன்மனைக் கொன்றது என்றமையால், முருகப் பெருமானின் கூளிச்சுற்றத்திற்குச் சூரபன்மன் எதிர்நிலையானான். இச்செய்தியைக் கல்லாடனார்,

> ***"கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்***
> ***சூர்நவை முருகன் சுற்றத்து அன்னநின்***
> ***கூர்நல் அம்பின் கொடுவில் கூளியர்"*** (புறம். 23.3-5)

என்னும் பாடல் வரிகள் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார்.

**5.1.2.2.** முருகப் பெருமானைப் பகைத்துக் கொண்டதால் கூளிச் சுற்றத்திற்குச் சூரபன்மன் எதிர்நிலையானான்.

**5.1.3. வள்ளிநாச்சி:**

**5.1.3.0.** திருமாலின் புத்திரி, சுந்தரி என்பவள். இவள் அக்னிப் பிரவேசம் செய்து, தன்னுடம்பை விடுத்துச் சூட்சும சரீரத்துடனே மேல்பாடி ஊரையடுத்த ஒரு மலையில் தவஞ்செய்து கொண்டிருந்தாள். அவ்விடத்தில் முன்னமே பெருந்தவம் புரிந்து கொண்டிருந்த சிவமுனி என்பார், அழகிய பெண்மான் ஒன்று தன்முன் வர, அதனைக் கண்டு காதல் கொண்டு கண்ணினால் நோக்கிய பொழுது, அந்தப் பெண்மான் கருவுற்றது.

சுந்தரி அந்தக் கருப்பத்தில் புகுந்து, கருவுயிர்க்குங் காலத்தில் அந்தப் பெண்மானினால் வள்ளிக்கிழங்கு அகழ்ந்தெடுத்த பள்ளத்தில் மானிடப் பெண் வடிவத்தில் கருவுயிர்க்கப்பட்டுப் பிறந்தாள். வள்ளிக்கிழங்கு அகழ்ந்த பள்ளத்தில் பிறந்ததால் வள்ளி என்று அழைக்கப்பட்டாள். இந்த வள்ளி வேடர் தலைவன் நம்பிராசன், எயிற்றி என்பவரால் வளர்க்கப்பட்டு முருகனுக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டவள். [7]

இவள், தேவசேனையுடனும் முருகப்பெருமானுடனும் எதிர்த்தபோது வெற்றி பெற்றுள்ளாள்.

**5.1.3.1.** வள்ளிநாச்சியும் தேவசேனையும் முருகப்பெருமான் ஒருவனையே திருமணம் செய்து கொண்டமையால் சக்களத்தி சண்டை அடிக்கடி ஏற்பட்டது.[8] முருகப்பெருமான் வள்ளிநாச்சியார் காரணமாக உண்டான புலவியால், தேவசேனை கோபங்கொண்டு, முருகப்பெருமானை விட்டு நீங்கினாள். முருகப்பெருமான் அதனை அறிந்து தேவசேனையை நெருங்கித் தன் தலையில் அணிந்த மாலை அவள் அடியில் படும்படி வணங்கினார். அதனால் தேவசேனை சினம் தணிந்தாள். ஊடலும் தீர்ந்தது.

அச்செய்தியை வள்ளியம்மை அறிந்தாள். முருகன் தேவசேனையை வணங்கியதை எண்ணிச் சினம் கொண்டாள். இனி அவளிடம் செல்லாதே என்று

முருகனுக்குச் சொன்னாள். முருகப்பெருமானின் கைகளைக் கட்டி மாலையால் புடைத்தாள். இதனால், வள்ளியம்மைக்கு தேவசேனையும் முருகப் பெருமானும் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்திக் குறும்பூதனாரின்,

> "இகலின் இகந்தாளை அவ்வேள் தலைக்கண்ணி
> திருந்து அடிதோயத் திறைகொடுப் பானை
> வருந்தல் எனஅவற்கு மார்பு அளிப்பானை
> குறுகல் என்றுஒள்ளிழை கோதை கோலாக,
> இறுகிறுக யாத்துப் புடைப்ப ............" (பரி.9.36-40)

என்றும் பாடல்வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.3.2.** தேவசேனையை வணங்கிய முருகப்பெருமானின் கைகளைக் கட்டி மாலையால் புடைத்ததால், வள்ளிநாச்சிக்கு தேவசேனையும் முருகப்பெருமானும் எதிர்நிலையாயினர்.

## 5.1.4. வள்ளியின் தோழியர்:

**5.1.4.0.** வள்ளி தினைப்புனம் காத்தபோது உடனிருந்தவர்கள் வள்ளியின் தோழியர். முருகப்பெருமான் வந்து வள்ளியைக் காணாது வாடிய பொழுது, முருகப்பெருமானிடம் வள்ளியை அழைத்து வந்தவர்கள் இவர்களே.[9] இவர்கள் தேவசேனையின் தோழியருடன் நடந்த போரில் வெற்றி பெற்றுள்ளனர்.

**5.1.4.1.** வள்ளியம்மை, முருகப்பெருமான் தேவசேனையிடம் செல்லக்கூடாது என்று சொல்லி முருகப்பெருமானின் கைகளைக் கட்டி மாலையால் புடைத்ததன் காரணமாக, இவற்றைக் கண்ட தேவசேனையின் தோழியர், வள்ளியின் தோழியரைப் பகைத்தனர். ஒருவரது மாலை மற்றவர் மாலையுடன் சிக்கியது. தம் மார்பில் உள்ள கச்சினைக் கொண்டு அடித்தனர். கோதையையும் பந்தையும் வீசிக் கொண்டனர். மெல்லிய இடையை உடையவராய் அவர்கள் போரிட்டனர்.

அதைக் கண்டு வள்ளியின் பாங்கியரான மயில் இயலையுடைய மகளிர் (வள்ளியின் தோழியர்) மதம்பட்ட ஆண் யானையின் தன்மையை ஒத்தவர்

குதிரைகள் போல் நடந்து வந்தனர். தேர்ப்படை போன்று வடகயிற்றைப் பற்றி வந்தனர். அம்பை எய்ய வில்லை வளைத்தனர். வாளை ஏந்தி நின்றனர். தோள்வளையான சக்கரத்தைச் சுழற்றினர்.[10]

இத்தகைய வள்ளியின் தோழியரின் நிலையை அறிந்த இந்திரசேனையின் தோழியர் (தேவசேனையின் தோழியர்) அஞ்சி, முருகனைக் கூடிச் சூழ்ந்து கொண்டு, சுனை நீருக்குள் மறைந்து நீராடினர். அந்தச் சுனையின் வண்டுபோல் நின்று முரன்றனர். மயிலாய் நின்று ஆடினர். குயிலாய்க் கூவினர். பலவகையாய்த் துன்பம் அடைந்தனர்.

குறிஞ்சி நிலத்து மக்களாகிய குறவர் பெற்ற மகளிர் (வள்ளியின் தோழியர்) போரை விளைத்தனர். அதனால், வள்ளியின் தோழியரே வெற்றி பெற்றனர். எனவே, திருப்பரங்குன்றம் வெற்றி வேலையுடைய முருகப்பெருமானுக்குப் பெரிதும் பொருத்தம் உடையதாயிற்று என்று தெரிவிக்கப்பட்டதில் இருந்து வள்ளியின் தோழியருக்குத் தேவசேனையின் தோழியர் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (பரி.9.45-69).

**5.1.4.2.** தேவசேனையின் தோழியர் சண்டையிட்டதன் காரணமாக வள்ளியின் தோழியருக்கு எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 5.1.5.தேவரின் குரு-வியாழன்:

**5.1.5.0.** தேவர்களை அடக்கி ஆட்சி செய்து வந்தவன் சூரபதுமன். இவனது தம்பி தாரகாசுரன். சூரபதுமனின் தங்கை அஜமுகி. சூரபதுமனின் மனைவி பதுமகோமளைக்குப் பானுகோபன் என்றொரு மகன் பிறந்தான். அவனுக்கு இளையோரும் மூவர் பிறந்தனர்.

தாரகாரசுரனுக்கும் அவன் மனைவி கவுரிக்கும் ஆண் மக்கள் பிறந்தார்கள். மாயைக்கும் காசியபருக்கும் ஆயிரம் முகங்களும் இரண்டாயிரம் கைகளுமாகப் பிறந்தவனே சிங்கமுகாசுரன்.

எமன் மகள் விபுதை சிங்கமுகனைத் திருமணம் செய்து ஆண் மக்களைப்

பெற்றாள். இவர்கள் அனைவரும் சூரபதுமனின் கட்டளையால் தேவர்களை அடக்கி ஆண்டனர். அஜமுகியின் தோழி துன்முகி. அஜமுகி துருவாச முனிவருடன் கூடி, வில்லவன், வாதாபி என்ற இரு பிள்ளைகளைப் பெற்றுக் கொண்டாள். இவர்களது அட்டூழியங்களால், அகத்திய முனிவர் வில்லவன், வாதாபி போன்றவர்களை அழித்தார்.

அசுரர்கள் தேவலோகத்திற்குத் தீமூட்டினர். இந்திரன் மகன் சயந்தனைச் சிறையிலடைத்தனர். அப்போது தேவரின் குரு வியாழபகவான், சிவன் உமையை மணந்து அதனால் பிறந்த முருகப்பெருமானிடம், சயந்தன் முதலியவர்களைச் சிறையிலிருந்து விடுதலை செய்து, தேவர்களுக்கு அவரவர் பதவியைத் தர வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.[11]

இவர், அசுரரின் குரு வெள்ளியோடு எதிர்த்துப் போரிட்டுள்ளனர் என்பது தெரிய வருகிறது.

**5.1.5.1.** இரண்டு மாறுபட்ட நெறிகளையும் தேவர், அசுரர் நூல்படி, தழுவிக்கொண்டு இவ்வுலகத்தவர் பின்பற்றி வாழ்ந்து வருகிறார்கள் என்பதை விளக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக,

தேவரின் குரு - வியாழன் கள்உண்ணல் கூடாது என்பார்
அசுரரின் குரு - வெள்ளி கள் உண்ணலாம் என்பார்.

இப்படி, இவ்விருவரும் மாறுபட்ட நெறிகளையுடையவர். ஆதலால் தேவரும் அசுரரும், தேவரின் குரு வியாழனும் அசுரரின் குரு வெள்ளியும் மாறுபட்டமையால், தேவரின் குரு வியாழனுக்கு, அசுரரின் குரு வெள்ளி என்பார் எதிர்நிலைப் பாத்திரமானார். இதனை மருதனிள நாகனார்,

*"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவைஎடுத்து*
*அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்*
*திறம்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது"* (கலி. 99.1-3)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**5.1.5.2.** தேவ அசுர நெறிகளை உலகமக்கள் பின்பற்றி வாழ்கிறார்கள் என்பதை விளக்க வேண்டும் என்னும் காரணத்திற்சுாக, தேவரின் குரு வியாழனும், அசுரரின் குரு வெள்ளியும் மாறுபட்டமையால் தேவரின் குரு வியாழனுக்கு அசுரரின் குரு வெள்ளி எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 5.1.6. திருமால்:

**5.1.6.0.** திருமால் முப்பெருந்தெய்வங்களில் காத்தல் தொழிலைச் செய்பவர். முருகப் பெருமான் ஆறு குழந்தைகளாகத் தாமரை மலரில் பிறந்தபோது, திருமால் ஆறு நட்சத்திர தேவிகளாகிய கார்த்திகைப் பெண்கள் அறுவரை வரவழைத்து அக்குழந்தைகளுக்குத் தாய்ப்பால் புகட்டச் செய்தவர்.

அவுணர்கள் பாற்கடலைக் கலக்கியபோது, உண்டான துன்பத்தால் நிலமகளும் திருமகளும் அஞ்சித் திருமாலைக் கட்டித் தழுவியபோது அவுணர்களுடன் போரிட்டு அவர்களை விரட்டியவர்.

கஜேந்திராழ்வான், ஆதிமூலமே என்றழைத்தபோது முதலையழியக் கொன்று கஜேந்திராழ்வானைத் துன்பத்தினின்றும் காத்தவர்.[12]

திருமால் படைத்தற் கடவுளாகிய நான்முகனுக்கும் (திருமாலின் திருவுந்திச் சுழியில் தோன்றியவன் பிரம்மன்) காமவேளாகிய மன்மதனுக்கும் தந்தையாகப் போற்றப் பெற்றவர்.

பாற்கடலில் அரவணையிற் பள்ளி கொண்டருளியது, தனது உந்தித் தாமரையில் நான்முகனைத் தோற்றுவித்தது, பாற்கடலைக் கடைந்து வானோர்க்கு அமிழ்தம் அருளியது, மாவலியிடம் குறளனாகச் சென்று மூவடி மண் வேண்டி நெடியோனாக நிமிர்ந்தருளியது, இராமனாக அவதரித்துக் குரங்குப் படைகொண்டு இராவணனை வெல்லுதற்குக் கோடிக்கரையில் துணைவர்களுடன் அமர்ந்து சூழ்ச்சி செய்தது, கண்ணனாகவும் பலதேவனாகவும் அவதரித்து ஆயர்பாடியில் அருள்விளையாடல்கள் புரிந்தது முதலிய திருமாலைப் பற்றிய புராணச் செய்திகள் சங்கச் செய்யுட்களில் இடம் பெற்றுள்ளன.

திருமால் முழுமுதற் கடவுள். மதுரையை அடுத்த திருமாலிருங்குன்றம், காஞ்சி நகரைச் சார்ந்த திருவெஃகா ஆகிய இருதிருமால் தலங்கள் பரிபாடலிலும் பெரும்பாணாற்றுப் படையிலும் சுட்டப்படுகின்றன.

சங்க நூல்களில் திருமால், மால், மாயோன், நெடியோன் எனத் தமிழ்ப் பெயர்களாலேயே குறிக்கப்பெறுகிறான்.

சங்க நூல்களில் திருமாலுக்குரிய தேவியாகத் திருமகள் மட்டுமே சுட்டப்பெறுகிறாள். திருமாலுக்கு மற்றொரு தேவியாகக் கருதப்படும் இராதை சங்க இலக்கியத்தில் இடம்பெற வில்லை.

பாற்கடலில் திருமால் படுத்திருந்த பொழுது வாசுதேவன், சங்கருடணன், அரத்யும்நன், அநிருத்தன் என்னும் பெயர்களைத் தாங்கியுள்ளான். இப்பெயர்கள் முறையே செங்கட்காரி, கருங்கண்வெள்ளை, பச்சை, பைங்கண்மால் எனத் தமிழில் கடுவன் இளவெயினனார் குறிப்பிட்டுள்ளார்.

திருமால் எடுத்த பிறப்புகள் (அவதாரங்கள்) மீன், ஆமை, பன்றி, குறளன், பரசுராமன், இராமன், பலராமன், கிருட்டிணன், கல்கி ஆகிய பத்தனுள் பன்றி, ஆளரி, பலராமன், கிருட்டிணன் ஆகிய பிறப்புகள் பற்றிப் பரிபாடல் தெரிவிக்கிறது. பிரகலாதன் பிருங்கலாதன் என்று குறிக்கப்படுகிறான்.

திருமால் திருவோணத்தில் தோன்றியவன் என்பது மரபு. பொலம்பூவாடை, சங்கு, சக்கரம் போன்றவை அணிந்தவன் திருமால்.[13]

இவர், பாம்பு போன்ற கொடியவர், இரணியன் முதலியோர், மாவலி என்னும் அசுரன், கேசி என்னும் அசுரன், அவுணர், இரணியன், கம்சனால் அனுப்பப்பட்ட மல்லர்களாகிய வீரர்கள், சினந்து வந்த பகைவர், ஞாயிற்றை எடுத்துக் கொண்டு போய் மறைத்த அசுரர், கம்சன் முதலிய பகைவர் போன்றவர்களோடு நடந்த போரில் வெற்றி பெற்றுள்ளார்.

**5.1.6.1.** பாம்பு போன்ற கொடியவரைக் கொல்ல வேண்டும் என்னும்

காரணத்திற்காகவும், அவ்வாறு கொல்லும் தன்மை உடையவன் திருமால் என்பதை உணர்த்த வேண்டும் என்னும் காரணத்திற்காகவும், நஞ்சுப் பற்களையும் நெருப்பு என்னும்படி நெட்டுயிர்ப்புக் கொள்ளும் கண்டவர்க்கு அச்சத்தை உண்டாக்கும் பாம்புகள் மாளும்படி அடிக்கின்ற வளைந்த இறகையுடைய கருடனை அணிந்த கொடியை உடையவன் திருமால் என்பது சொல்லப்பட்டமையால் திருமாலுக்குப் பாம்பு போன்ற கொடியவர் எதிர்நிலையாயினர். இதனை நக்கீரரின்,

> *"கடுவொடு ஒடுங்கிய தூம்புடை வால்எயிற்று*
> *அழல்என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்*
> *பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்*
> *புள்அணி நீள்கொடிச் செல்வனும் ........"* (திருமுரு.148-151)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.6.2.** திருமால், தனக்கு எதிரியாக விளங்கிய இரணியனைக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, பிரகலாதன் வருந்தா வண்ணம் அவன் நெஞ்சில் பொருந்தினார். இரணியனின் மலைபோன்ற மார்பில் பகை, வலிமை கெடச் சென்றார். அப்போது துன்பத்தைப் புலப்படுத்தும் கொடுமைகளுடன் இரணியனின் முரசு இடிபோல் முழங்கியது.

அவ்வாறு முழங்க, திருமால் தூணினின்று வெளிப்பட்டார். வெளிப்பட்டபோது தூணின் பிளவைப் போன்ற உடல் துண்டுகள் பலவகையாய்க் கிடக்க, அவனது உடலைப் பிளந்த நகத்தையுடையவனாய்த் திகழ்ந்தார் திருமால் என்றமையால் திருமாலுக்கு இரணியன் எதிர்நிலைப் பாத்திரமானான். இச்செய்தியை, கடுவன் இளவெயினனாரின்,

> *"..................... நீ இகழா*
> *நன்றா நட்ட அவன்நன் மார்பு முயங்கி*
> *ஒன்றா நட்டவன் உறுவரை மார்பின்*
> *படிமதம் சாம்ப ஒதுங்கி*
> *இன்னல் இன்னரொடு இடிமுரசு இயம்ப*

***வெடிபடா ஒடிதூண் தடியொடு***

***தடிதடிபல படவகிர் வாய்த்த உகிரினை*"** (பரி.கடவுள் வாழ்த்து.4.15-21)

என்னும் பாடல் வரிகள் வாயிலாக அறியலாகிறது.

**5.1.6.3.** திருமால், இரணியன் முதலியோரை அழித்துக் கொன்றும் கடலினின்றும் கோட்டால் (கோவர்த்தன மலையால்) மக்களாகிய உலகத்தைக் காத்தவர் என்பதை விளக்க வேண்டும் என்னும் காரணத்திற்காகப் பெறுதற்கு அரிய பழம்புகழ் பொருந்திய துறக்கத்தைப் போன்று இன்பம் நல்கும் பெரிய இனிய நீர்த்துறையில் இளவேனில் இன்பத்தை அனுபவிப்பாருடன் தங்கி இளைப்பாறுங்கள்.

பின் அத்திரு வெஃகா அணையில் அரிய ஆற்றலையுடைய திருமாலை வாழ்த்தி யாழை இயக்கிப்பாடி அவ்விடம் விட்டுச் செல்லுங்கள் என்று ஒரு பாணன் மற்றொரு பாணனுக்கு ஆற்றுப்படுத்தியதாகச் சொல்லப்பட்டதில் திருமால் அருந்திறல் கடவுள் எனச் சொல்லப்பட்டதால் திருமாலுக்கு இரணியன் முதலியோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இதனை, கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

"***பெறற்குஅருந் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்***

***பொய்யா மரபின் பூமலி பெருந்துறைச்***

***செவ்வி கொள்பவரோடு அசைஇ அவ்வயின்***

***அருந்திறற் கடவுள் வாழ்த்தி சிறிதுநும்***

***கருங்கோட்டு இன்இயம் இயக்கினிர் கழிமின்*"** (பெரும். 388-392)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**5.1.6.4.** பலருக்கும் தீவினை செய்து வந்த மாவலி சக்கரவர்த்தியைக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காகத் திருமால், வாமன அவதாரம் எடுத்துச் சென்று மாவலி என்னும் அசுரனிடம் மூவடி மண் வேண்டும் எனக் கேட்டான்.

மாவலி அங்ஙனமே அளிக்க இசைந்து நீர்வார்த்து அளித்த போது, அந்நீர் திருமால் கையில் விழுந்தபோது, திருமால் பெருவடிவு கொண்டு எழுந்து உயர்ந்து இவ்வுலகத்தை ஓரடியால் அளந்து கொண்டான்.

மூன்றாவது அடிவைப்பதற்கு இடமில்லாமையால், மாவலியின் தலையில் வைக்க அவன் அழிந்தான் என்பது வரலாறு.[14]

முல்லைப்பாட்டில், இப்படித் திருமால் மாவலி நீர்வார்த்த போது, பெருவடிவு கொண்டு அவனை அழித்தது பற்றி எடுத்துக் கூறியுள்ளமையால், திருமாலுக்கு மாவலி என்னும் சக்கரவர்த்தி எதிர்நிலைப் பாத்திரமானான். இதனை, காவிரிப்பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார்,

> *"நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு*
> *வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை*
> *நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்*
> *பாடுஇமிழ் பனிக்கடல் பருகி ......"* (முல். 1-4)

என்னும் பாடல்வரிகள் மூலம் தெரிவித்துள்ளார்.

**5.1.6.5.** தீவினை செய்து வந்த கேசி என்னும் அசுரனைக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, கூந்தலையுடைய குதிரைபோன்று வடிவு கொண்டு வந்து, மக்களுக்கும் பிறர்க்கும் தீவினை செய்து வந்த கேசி என்னும் அசுரனின் எரியும் தீயை அடக்கி, அவனைக் கொன்றவன் திருமால் என்றமையால் திருமாலுக்குக் கேசி என்னும் அசுரன் எதிர்நிலையானான். இக்கருத்து, கடுவன் இளஎயினனாரின்,

> *"கூந்தல் என்னும் பெயரொடு கூந்தல்*
> *எரிசினம் கொன்றோய் .........."* (பரி.கடவுள்வாழ்த்து-3. 31-32)

என்னும் பாடல் வரிகளால் புலனாகிறது.

**5.1.6.6.** திருமால் தீவினை செய்து வந்த அவுணரைக் கொன்றழிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, தம் அறியாமை காரணமாகத் தன்னுடன் போர் செய்வோம் என்று துணிந்து எண்ணி வந்த அவுணரின் வலிமை கெடும்படி வென்றவன் என்றமையால், திருமாலுக்கு அவுணர்கள் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தி,

"*பொருவேம் என்றவர் மதம்தபக் கடந்து*

*செருமேம் பட்ட செயிர்தீர் அண்ணல்*" (பரி.கடவுள்வாழ்த்து.1.29-30)

எனவும், கீரந்தையாரால்,

"*ஒடியா உள்ளமொடு உருத்துஒருங்கு உடன்இயைந்து*

*இடிஎதிர் கழறும் கால்உறழ்பு எழுந்தவர்*

*கொடிஅறுபு இறுபு செவிசெவிடு படுபு*

*முடிகள் அதிர படிநிலை தளர*

*நனிமுரல் வளைமுடி அழிபு இழிபு*

*தலைஇறுபு தாரொடு புரள*

*நிலைதொலைபு வேர்தூர் மடல்*

*குருகு பறியா நீள்இரும் பனைமிசைப்*

*பலபதி னாயிரம் குலைதரை உதிர்வபோல்*

*நில்லாது ஒருமுறை கொய்பு கூடி*

*ஒருங்கு உருண்டு பிளந்து நெரிந்து உருள்பு சிதறுபு*

*அளறு சொரிபு நிலம்சோர*

*சேரார் இன்உயிர் செகுக்கும்*

*போர்அடு குரிசில் நீஏந்திய படையே*" (பரி.கடவுள்வாழ்த்து,2.40-49)

எனவும் வெளிப்படுத்தியுள்ளார்.

**5.1.6.7.** கம்சனால் அனுப்பப்பட்ட மல்லர்களாகிய வீரர்கள் பிறர்க்குப் பல துன்பங்களைச் செய்து வந்ததன் காரணமாக, அம்மல்லரின் மறத்தைத் திருமால் அழித்தார்[15] என்றமையால் திருமாலுக்கு, கம்சனால் அனுப்பப்பட்ட மல்லர்களாகிய வீரர்கள் எதிர்நிலையாயினர். இச்செய்திக் கபிலரின்,

"*மல்லரை மறம்சாய்த்த மால்போல் ....*" (கலி.52.5)

என்னும் பாடல் வரி மூலம் தெளிவாகிறது.

**5.1.6.8.** திருமால், தன் பகைவர் எல்லாரும் சேர வந்து சினந்து தன்னை எதிர்த்ததன் காரணமாக, அப்பகைவர் ஓடும்படியாக அவர் ஏறிவந்த யானையின் நெற்றியில் திருமால் அனுப்பிய சக்கரம் சென்று அழுந்திக் கொன்றது என்றமையால்,

திருமாலுக்கு அவருடன் சினந்து வந்த பகைவர் எதிர்நிலையாயினர். இக்கருத்து நல்லந்துவனாரின்,

> "................ *மலர்த்தண்தார் அகலத்தோன்*
>
> *ஒல்லாதார் உடன்று ஓட, உருத்துடஉடன் எறிதலின்*
>
> *கொல்யானை அணிநுதல் அழுத்திய ஆழி* ......" (கலி.134.1-3)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலனாகிறது.

**5.1.6.9.** மற்றவரை வருத்தும் அச்சம் பொருந்திய அசுரர், ஞாயிற்றை எடுத்துக் கொண்டு போய் மறைத்தமையால், இருளானது உலகத்தாரின் கண்களை மறைத்தது.

எனவே, உலக மக்களுக்கு ஏற்பட்ட இத்தகைய துன்பத்தை நீக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, தொலைவில் விளங்கக் கூடிய ஞாயிற்றைக் காணாததால் உலகத்தின் நோய் கொண்ட துன்பம் நீங்குமாறு, மிகுந்தவன்மையுடைய மைபோன்ற கரியநிறம் கொண்ட மேனியனான திருமால், அந்த ஞாயிற்றைக் கொண்டு வந்து இந்த உலகத்தின் இருள் நீங்குவதற்காக வானத்தில் நிறுத்தினான் என்றமையால், திருமாலுக்கு ஞாயிற்றை எடுத்துக் கொண்டு போய் மறைத்த அசுரர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தி மாறோகத்து நப்பசலையாரின்,

> "*அணங்குடை அவுணர் கணம்கொண்டு ஒளித்தெனச்*
>
> *சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது*
>
> *இருள்கண் கெடுத்த பருதி ஞாலத்து*
>
> *இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்*
>
> *அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு*" (புறம்.174.1-5)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.6.10.** தன் மீது குதிரைகளை விட்டுத் துன்புறுத்தியதன் காரணமாக, அக்குதிரைகளின் வாயைப் பிளந்து போட்டு அதற்குக் காரணமான கம்சன் முதலிய பகைவரை வதைத்துக் கொன்றான் கண்ணன் என்றமையால், கண்ணனுக்குக் கம்சன் முதலிய பகைவர் எதிர்நிலையாயினர். இதனை, சோழன் நல்லுருத்திரன்,

"மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்பகுத்து இட்டு, புடைத்த ஞான்று, இன்னன்கொல்
மாயோன் என்று ...................... (கலி.103.53-55)

என்னும் பாடல் வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**5.1.6.11.** கொடியவரைக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்தாலும், எதிரியைக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்தாலும், உலக மக்களைக் காத்தவர் என்பதை விளக்க வேண்டியும், மாவலி சக்கரவர்த்தியைக் கொல்ல வேண்டியும், தீவினை செய்பவரை அழிக்க வேண்டியும், பிறர்க்குப் பல துன்பங்களைச் செய்து வந்த மல்லர்களைக் கொல்ல வேண்டியும், சினத்துடன் வந்து எதிர்த்த பகைவரைக் கொல்ல வேண்டியும், பிறர்க்குத் துன்பம் செய்தவரைக் கொல்ல வேண்டியும், பாம்பு போன்ற கொடியவர், இரணியன் முதலியோர், மாவலி என்னும் அசுர சக்கரவர்த்தி, கேசி என்னும் அசுரன், அவுணர்கள், கம்சனால் அனுப்பப்பட்ட மல்லர் எனப்படும் வீரர்கள், பகைவர், ஞாயிற்றை மறைத்த அசுரர், குதிரைகளை விட்டுத் துன்புறுத்திய கம்சன் போன்றவர்கள் திருமாலுக்கு எதிரிகளாயினர்.

## 5.1.7. பரசுராமன்:

**5.1.7.0.** ரேணுகாம்பாள், சமதக்கினி முனிவர் ஆகியோர்க்கு மகனாகப் பிறந்தவன் பரசுராமன். இவன் மணம் வீசுகின்ற திருத்துழாய் மாலை அணிந்தவன். வீடுமனுக்குக் குருவாக விளங்கியவன். வேண்டியவர்க்கெல்லாம் வேண்டிய வரத்தைத் தருபவன். மழுவாயுதத்தால் அரச குலம் அழியுமாறு போர் செய்தவன்[16] இப்பரசுராமனை வணங்கிக் கட்டமைந்த வில் முதலிய பயிற்சிகளைக் கன்னன் கற்றுள்ளான்.[17]

நிலவுலகம் முழுமையும் வென்று காசிபனுக்குக் கருணையோடு தானம் செய்தவன். தசரதனைக் கொல்லாமல் அபயம் அளித்து உயிரைக் காத்தவன். குற்றமற்ற தவப்பயன் முழுவதையும் தசரதனின் மகன் இராமனுக்குக் கொடுத்தவன். கார்த்தவீரியார்ச்சுனனின் ஆயிரம் தோள்களையும் வெட்டி வீழ்த்தியவன்.[18]

**5.1.7.1.** இவன், செல்லூரில் வேள்வித் தீமூட்டி தவம் செய்தபொழுது,

தவத்திற்கு இடையூறு செய்த மன்னர் பரம்பரையினரை செல்லூரில் நடந்த போரில் போரிட்டு அழித்துள்ளான். இச்செய்தி மதுரை மருதனிள நாகனாரின்,

> "கெடாஅத் தீயின் உருகெழு செல்லூர்
> கடாஅ யானைக் குழூஉச்சமம் ததைய
> மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்" (அகம்.220.3-5)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.7.2.** வேள்வித்தீ மூட்டி தவம் செய்தமைக்கு இடையூறாக இருந்து வந்தனர் என்னும் காரணத்தால் பரசுராமனுக்கு மன்னர் பரம்பரையினர் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

## 5.1.8.இரணியன்:

**5.1.8.0.** சூரபதுமனுக்கும் அவன் மனைவி பதுமகோமளைக்கும் மகனாகப் பிறந்தவன் இரணியன். தன் தந்தையும் தாய் பதுமகோமளையும் முருகப் பெருமானால் அழிக்கப்பட்டபோது, கதறிப் புலம்பியவன். அசுரகுருவான சுக்கிராச்சாரியாரின் (வெள்ளி) துணையோடு தன்னுடைய பெற்றோருக்குச் செய்ய வேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்து முடித்தவன். பிறகு சகல சௌபாக்கியங்களும் நிலையற்றவை என்று மனத்தில் கொண்டு, மோட்சமார்க்கத்தை நாடிச் சிவபெருமானைக் குறித்துத்தவம் செய்தவன்.[19]

இரணியன் மகன் பிரகலாதன் தன்னைப் புகழந்து பேசாமல் திருமாலைப் புகழ்ந்து பேசிய காரணத்திற்காக, தன் மகன் பிரகலாதனுக்குப் பலவித துன்பங்களைச் செய்தவன்.[20]

**5.1.8.1.** இரணியன், தன் மகன் பிரகலாதன் தன்னைப் புகழ்ந்து பேசாமல், திருமாலைப் புகழ்ந்து பேசுகின்றானே என்ற காரணத்திற்காக, மிக்க சினம் கொண்டான். அச்சினத்தீயால் புகைந்த நெஞ்சோடும் உலர்ந்த சாந்துடனும் பல வகையான துன்பங்களைப் பிரகலாதனுக்குச் செய்தான். அதனால் வருந்திய பிரகலாதன், இரணியன் தன் தந்தையாதலால் அவனை இகழவில்லை. இப்படிப் பிரகலாதன் தன் தந்தையை இகழாத போதும், அவனுக்கு அவன் தந்தை துன்பங்கள்

பல செய்தமையால், இரணியனுக்கு அவனது மகன் பிரகலாதன் எதிர்நிலைப் பாத்திரமானான். இதனை, கடுவன் இளஎயினனார்,

> *"...................... நிற்புகழ*
> *புகைந்த நெஞ்சின் புலர்ந்த சாந்தின்*
> *பிருங்க லாதன் பலபல பிணிபட*
> *வலந்துழி மலர்ந்த நோய்கூர் கூம்பிய நடுக்கத்து*
> *அலர்ந்த புகழோன் தாதை ஆகலின்*
> *இகழ்வோன் இகழா நெஞ்சினனாக ......."*

(பரி. கடவுள் வாழ்த்து. 4. 10-15)

என்னும் பாடல்வரிகள் மூலம் புலப்படுத்தியுள்ளார்.

**5.1.8.2.** தன்னைப் புகழ்ந்து பேசாமல் திருமாலைப் புகழ்ந்து பேசியமைக்காகப் பல்வேறு துன்பங்களைச் செய்த இரணியனுக்கு அவனது மகன் பிரகலாதன் எதிராளியானான்.

### 5.1.9. இராமன், சீதை:

**5.1.9.0.** தமிழில் தோன்றிய தொன்மைக் காப்பியமாகிய இராமாயணத்தின் கதை தலைமை மாந்தர்கள் இராமனும் சீதையும் ஆவார்கள்.

அயோத்தியில் தசரத மன்னனுக்கும் கௌசல்யா தேவிக்கும் மகனாகப் பிறந்தவன் இராமன். மிதிலை மன்னன் சனகனின் மகள் சீதை. இராமனும் சீதையும் கண்ணொடு கண்இணை கவ்வியதால் காதல் கொண்டு திருமணம் செய்தவர்கள்.[21] மந்தரையின் சூழ்ச்சியால், இருவரும் பதினான்கு ஆண்டுகள் காட்டுக்குச் சென்றவர்கள். சீதை இராவணனால் சிறை பிடிக்கப்பட்டவள். இராமன் சிறை பிடித்துச் செல்லப்பட்ட சீதையை மீட்க இராவணனோடு போரிட்டு அவனைக் கொன்று சிறை மீட்டவன்.

**5.1.9.1.** சீதையைக் கவர்ந்து செல்ல வேண்டும் என்னும் காரணத்தினால் கடிய அழித்தல் தொழிலையுடைய இராமனுடன் வந்த சீதையை, மிக்க வன்மையுடைய அரக்கனான இராவணன் கவர்ந்து கொண்டு போனான்[22] என்றமையால்

இராமனுக்கும் சீதைக்கும் இராவணன் எதிர்நிலைப் பாத்திரமானான். இக்கருத்து, ஊன்பொதி பசுங்குடையாரின்,

"*கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை*
*வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை*" (புறம். 378.17-18)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.9.2.** *சீதையைக் கவர்ந்து சென்ற காரணத்தால் இராமன், சீதை ஆகிய இருவருக்கும் இராவணன் எதிர்நிலைப் பாத்திரமானான்.*

**5.1.10. கருடன்:**

**5.1.10.0.** திருமாலின் வாகனம் கருடன். இக்கருடன் காசிபருக்கு விநதையிடம் பிறந்தவன். இந்திரன் செய்த வேள்விக்கு வாலகில்யர் வர, அருகிருந்த பசுவின் குளம்படியிலிருந்த பள்ளநீர் அந்த வாலகில்யரை அமிழ்த்திற்று. இதைக் கண்ட இந்திரன் சிரித்தான்.

வாலகில்யர் இந்திரனது கருவம் பங்கமடையும்படி ஒருவன் உண்டாகவென்று வேள்வி செய்து அவிசொரிந்தனர். இதனால் கருடன் காசிபரிடம் பிறந்து பசியால் வருந்தியபோது, தாய் சொற்படி வடகிழக்குச் சமுத்திரத்திருந்த வேடர்களை விழுங்கி, வேடனாயிருந்த பிராமணனையும் அவன் மனைவியையும் நீக்கிச் சுக்கிரன் அல்லது பிரபாவசு என்னும் பெயர் கொண்ட ஆமையையும் சுப்பிரதீபகன் அல்லது நதிபன் என்னும் பெயர் கொண்ட யானையையும் பூமியில் வையாது இமயமலையில் வைத்துண்டவன். பாற்கடல் கடைந்த காலத்து விஷ்ணு மூர்த்தியின் ஏவலால், மந்திரமலையை ஏந்தினவன்.[23]

**5.1.10.1.** கருடன், கந்துரு என்பவளிடம் அடிமையாய்ச் சிக்கிக் கொண்ட, தன்தாய் விநதை என்பவளை மீட்டுத் துன்பத்தினின்றும் காக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, அமிழ்தத்தைப் பெற்றுக் காத்து நின்ற அழகுடைய அணிகலன்களை அணிந்த தேவர்களுடன் போரிட்டு அவர்களைப் போரில் அஞ்சி ஓடுமாறு செய்துவிட்டு, அத்தேவர்களிடமிருந்து கவர்ந்து வரப்பட்ட அமிழ்தத்தால் தன்னை ஈன்ற தாயைத் துன்பத்தினின்றும் விடுவித்தவன் கருடன்.

அத்தகைய கருடனை ஊர்தியாகக் கொண்டிருப்பதோடு, மிக உயர்ந்த கொடியில் கருடச் சேவலையும் உடையவனாக இருப்பவன் திருமால் என்று கூறியுள்ளவற்றில் கருடன் தேவர்களுடன் போரிட்டதால் கருடனுக்குத் தேவர்கள் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இதனை, கடுவன் இளஎயினனாரின்,

> *"ஏவர்வயங்கு பூண்அமரரை வெளவிய அமிழ்தின்*
> *பயந்தோன் இடுக்கண் களைந்த புள்ளினை*
> *பயந்தோன் இடுக்கண் களைந்த புள்ளின்*
> *நிவந்து ஓங்கு உயர்கொடிச் சேவலோய்"* (பரி.கடவுள் வாழ்த்து.3.15-18)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.10.2.** திருமாலின் விருப்பப்படி ஆதிசேடனைத் தன் வாயில் பற்றிக் கொல்ல வேண்டும் என்னும் காரணத்திற்காக, நிலம் முழுவதையும் தாங்கும் வல்லமை கொண்ட ஆயிரமாகக் கிளர்ந்த தலைகளையுடைய ஆதிசேடன் என்பவனைத் தன் வாயில் பற்றிக் கொண்டு திருமாலைக் காத்தவன் கருடன். அக்கருடனைத் தனக்கு ஊர்தியாகக் கொண்டு சிவந்த கண்களை உடையவனாக விளங்குபவன் திருமால் என்றமையால், கருடனுக்கு ஆதிசேடன் எதிர்நிலையானான். இக்கருத்து,

> *"ஆயிர அணர்தலை அரவுவாய்க் கொண்ட*
> *சேவல் ஊர்தியும் செங்கண் மாஅல் . . . ."*
>
> (பரி.கடவுள் வாழ்த்து. 3.59-60)

எனக் கடுவன் இளஎயினனாரால் புலப்படுத்தப்பட்டுள்ளது.

**5.1.10.3.** தேவர்களிடமிருந்து தன் தாயை மீட்க வேண்டிப் போரிட்டமையாலும், திருமாலைக் காக்க ஆதிசேடனைத் தன் வாயில் பற்றிக் கொண்ட காரணத்தாலும் கருடனுக்குத் தேவர்களும் ஆதிசேடனும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

### 5.1.11. ஆதிசேடன்:

**5.1.11.0.** படத்தோடு விளங்கும் பல தலைகளை உடையவன் ஆதிசேடன். இவன் எப்பொழுதும் பூமா தேவியை சுமந்து கொண்டிருப்பவன்.

மந்தரகிரியைப் பெயர்த்துத் தேவர்க்கு உதவினவன். ஒரு காலத்தில், வாயுத் தேவனிடம் தன் பலம் அதிகம் என்று மாறு கொள்ளத் தேவர்யுத்தஞ் செய்தல் தகாது என்றனர். ஆதிசேடன், நாமிருவரும் (வாயு, ஆதிசேடன்) மேருவுக்கருகில் செல்வோமெனச் சென்று, தேவர் சொற்படி ஆதிசேடன், நான் மேருவின் சிகரத்தைக் கவித்துக் கொள்கிறேன், நீ அச்சிகரத்தைப் பெயர்த்து விடுகெனச் சபதங் கொண்டனர்.

வாயு, தன் முழுவலியாலும் முயன்றுங் கூடாதது கண்டு தேவர், ஆதிசேடனைச் சிறிது தலை தூக்க வஞ்சிக்க, வாயு அச்சமயத்தில் மலையின் சிகரத்தைக் கவர்ந்து கடலிலிட்டனன். அதுவே இலங்கை தீவென்பர்.[24]

**5.1.11.1.** மேருமலையைப் பெயர்ப்பேன் என்று மிக்கு வந்து வீசிய காற்றுத் தேவனின் மேம்பட்ட வலிமை எல்லாம் தம்மைக் கடந்து அந்த மந்தரமலையில் புகாதபடி, அந்த மேருமலையைக் காக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, அக்காற்றுக்கு எதிராகவும், அம்மலையைச் சுற்றிக் கொண்டு காத்தவர் அந்த ஆதிசேடனாரே ஆவார் என்று தெரிவித்துள்ளமையால் ஆதி சேடனார்க்குக் காற்றுத் தேவன் எதிர்நிலையானான். இச்செய்தி முதற்பாடல் இயற்றியோரால்,

"***மிகாஅ மறலிய மேவலி எல்லாம்***
***புகாஅ எதிர்பூண் டோரும் தாம்***" (பரி. திரட்டு.1.72-73)

எனப் புலப்படுத்தப்பட்டுள்ளது.

**5.1.11.2.** மேருமலையைக் காக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக அம்மலையைச் சுற்றிக் கொண்ட ஆதிசேடனார்க்கு அம்மலையைப் பெயர்க்க வந்த காற்றுத்தேவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 5.1.12. ஐவர் பாண்டவர்:

**5.1.12.0.** பாண்டு மன்னனுக்கும் குந்திக்கும் பிறந்த ஐவர் பஞ்ச பாண்டவர் எனப்பட்டனர். அவர்களுள் யமனின் அருளால் தருமபுத்திரன் என்பவன், ஒன்பதாகச் சொல்லப்படும் கிரகங்களும் நன்மையை அளிக்கக்கூடிய இடங்களில் இருக்குமாறு பிறந்தவன். தருமபுத்திரனுக்கு யுதிட்டிரன் என்ற பெயரும் உண்டு.

வாயுத்தேவன் அருளால் இரண்டாவதாகப் பிறந்தவன் வீமன். இந்திரனின் அருளால், பங்குனி உத்திரத்தில் விசயன் பிறந்தான். அசுவினி தேவர்களின் அருளால், நகுல சகாதேவர்கள் பிறந்தார்கள்.[25]

பாண்டவர் ஐவரையும் அவர்தம் நாட்டையும் துரியோதனன் முதலான நூற்றுவரும் கவர்ந்து கொண்டதால் இருதிறத்தாரும் பொருகளத்தில் போரிட்டுள்ளனர். அப்போது இருபடைக்கும் சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் வரையாது உணவு வழங்கியுள்ளான்.

**5.1.12.1.** ஐவர் பாண்டவர், துரியோதனன் தம்மீது கொண்ட பகையின் காரணமாகப் பல இன்னல்களைச் செய்து துன்புறுத்தியதால் அதனைப் பொறுத்துக் கொள்ளாதவராக, பிறைச் சந்திரனை அணிந்தது போல் காட்சியளிக்கும் அந்திக் காலம். அவ்வந்திக் கால சிவந்த வானத்தில் உலவிடும் மேகங்களைப் போன்ற வெண்மையான கொம்பையுடைய கரிய யானையின் பிணங்களைக் குருதி இழுத்துச் செல்லுமாறு துரியோதனன் முதலியோர் போர்க்களத்தில் இறந்துபோகுமாறு பெரியபோரை வென்று ஆரவாரம் செய்தவர் தேரையுடைய ஐவர் பாண்டவர்[27] என்றமையால் ஐவர் பாண்டவர்க்குத் துரியோதனன் போன்றோர் எதிர்நிலையாயினர். இச்செய்தி, கடியலூர் உருத்திரங்கண்ணனாரின்,

> *"அவ்வாய், வளர்பிறைச் சூடிச் செவ்வாய்*
> *அந்தி வானத்து ஆடுமழை கடுப்ப*
> *வெண்கோட்டு இரும்பிணம் குருதி ஈர்ப்ப*
> *ஈர்ஐம் பதின்மரும் பொருதுகளத்து அவியப்*
> *பேர்அமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர்*
> *ஆராச் செருவின் ஐவர் போல"* (பெரும்.412-417)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.12.2.** வடமொழிப் பெயரான பகன் எனப்படும் ஆதித்தனின் முகமுடைய திருதராட்டிரரின் மூத்தமகன் துரியோதனன் என்பவனது சூழ்ச்சியின் காரணமாக, ஐவர் என்று சொல்லப்படும் உலகத்தவர் புகழும் தர்மபுத்திரர் முதலியவர் உள்ளே

இருக்க, னகயாலே புனையப்பட்ட அரக்குமாளினகயை வினரய நெருப்புச் சூழ்ந்தது. அப்போது புகைத் தீயை உடைய அந்த அரக்கினால் ஆன இல்லத்தை, அந்த வீமன் அழித்துத் தன் உள்ளத்துப் பொருந்திய சுற்றத்துடனே தப்பிப் பிழைத்தான்[28] என்று தெரிவித்துள்ளமையால், ஐவர் தருமபுத்திரர்க்கும் துரியோதனன் எதிர்நிலைப் பாத்திரமானான். இதனைக் கபிலர்,

> *"வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற*
> *முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்*
> *ஐவர்என்று உலகுஏத்தும் அரசர்கள்அகத்தரா*
> *கையுனை அரக்கு இல்லைக் கதழ்வரி சூழ்ந்தாங்கு*
> *களிதிகழ் கடாஅடுத்த கடுங்களிறு அகத்தவா*
> *முளிகழை உயர்மலை முற்றிய முழங்குஅழல்*
> *ஒள்உரு அரக்குஇல்லை வளிமகன் உடைத்துத்தன்*
> *உள்ளத்துக் கிளைகளொடு உயப்போகுவான்"* (கலி.25.1-8)

என்னும் பாடல் வரிகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

**5.1.12.3.** பாண்டவர் ஐவரிடமிருந்தும் நாட்டைப் பிடுங்கிக் கொண்ட காரணத்திற்காக, பாண்டவர்க்கும் துரியோதனன் முதலான நூறுபேர்க்கும் போர் ஏற்பட்டது. அப்போரில் பாண்டவர் ஐவருடனே சினந்து, பொன்னால் ஆன தும்பைமாலை சூடிய துரியோதனன் முதலான நூறுபேரும் போரிட்டுப் போர்க்களத்தில் இறந்தனர்[29] என்றமையால், பாண்டவர் ஐவருக்கும் துரியோதனன் முதலான நூறுபேரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இக்கருத்து, முரஞ்சியூர் முடிநாகனாரின்,

> *"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ*
> *நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை*
> *ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து ஒழிய"* (புறம்.2.13-15)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.12.4.** துரியோதனன் முதலியவர், தொழுப்போரை விரும்பி மேலே

சென்றதன் காரணமாக, அத்துரியோதனன் முதலியவர் இறக்குமாறு வலிய வில்லையுடைய தருமன் முதலியவர் கொன்ற போர்க்களம் என்றமையால், தருமன் முதலியவர் ஐவருக்கும் துரியோதனன் முதலிய நூற்றுவரும் எதிர்நிலையாயினர். இதனைச் சோழன் நல்லுருத்திரன்,

> **"................. கோள்சாற்று பவரோடு**
> **புரிபுமேல் சென்ற நூற்றுவர் மடங்க**
> **வரிபுனை வல்வில் ஐவர் அட்ட**
> **பொருகளம் போலும், தொழூஉ ........"** (கலி. 104.56-59).

என்னும் பாடல் வரிகள் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

**5.1.12.5.** தமக்குத் துன்பம் செய்த துரியோதனன் முதலியோரைக் கொல்லப் போரிட்டமையாலும், தர்மபுத்திரர் முதலியோர் உள்ளே இருக்க அரக்கு மாளிகை தீப்பற்றி எரியக் காரணமானதாலும், தமக்குரிய நாட்டைப் பிடுங்கிக் கொண்ட காரணத்தால் போரிட்டதாலும் ஐவர் பாண்டவர்க்குத் துரியோதனன் முதலியோரும் துரியோதனனுடன் பிறந்த நூறுபேரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 5.1.13. வீமன்:

**5.1.13.0.** பாண்டு மன்னனுக்கும் குந்திக்கும் பிறந்த ஐவருள் வாயுத்தேவன் அருளால் பிறந்த இரண்டாவது மகன் வீமன். அரக்கு மாளிகை தீப்பற்றி எரிந்தபோது, அதனுள் சிக்கித் தவித்த தான், தன் மற்ற சகோதரர்களையும் துன்பத்தினின்றும் காப்பாற்றியவன்.[30]

**5.1.13.1.** பாஞ்சாலியின் ஆடையைப் பற்றி இழுத்து, அவமானப் படுத்தியவன் துரியோதனன் என்னும் காரணத்திற்காகவும், பாஞ்சாலி, தன் சபதம் முடிந்து கூந்தலை முடிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காகவும், மறம் பொருந்திய நூற்றுவர் தலைவனான துரியோதனனது தொடையில் உள்ள உயிரைப் போக்கியவன் வீமன் என்றமையால், வீமனுக்குத் துரியோதனன் எதிர்நிலைப் பாத்திரமானான். இச்செய்திக் கபிலரின்,

"மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்

குறங்கு அறுத்திடு வான்போல் ..........." (கலி. 52.2-3)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.13.2.** பாஞ்சாலியின் ஆடையைப் பற்றி இழுத்து அவமானப்படுத்தியதாலும் பாஞ்சாலியின் சபதத்தை முடிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காகவும் துரியோதனனைக் கொன்றமையால் வீமனுக்குத் துரியோதனன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 5.1.14. சிவபெருமான்:

**5.1.14.0.** பர்வதராஜனுக்கும் மேனைக்கும் மகளாகப் பிறந்த பார்வதி தேவியை மனைவியாகப் பெற்றவர் சிவபெருமான். மன்மதன் தன் மனைவியான ரதிதேவியோடு மோகக் கேளிக்கைகளில் களிக்க சாபவிமோசனம் தந்தவர். அசுரர்கள் இடமிருந்து தேவர்களைக் காக்க, முருகப் பெருமான் ஆறுமுகங்களாக அவதாரமெடுக்கச் செய்தவர்.

சூரபதுமனும் அவன் தம்பியரும் சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் செய்தபோது, கிழவேதியர் உருவில் தோன்றிச் சூரபதுமன் கேட்டுக் கொண்டபடி, உலகில் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகம் ஆட்சி செய் என இந்திரஜாலம் என்னும் தேரையும் அனைவரையும் வெல்லும் பாசுபதப் படைக்கலத்தையும் வச்சிராயுதத்தையும் நான்குவகைப் படைகளையும் தந்தருளி, என் சக்தியை தவிர வேறு எச்சக்தியும் உங்களை அழிக்காது என்று கூறி மறைந்தவர்.

சிவபெருமானே திருவிளையாடலின் காரணமாகக் குழந்தை முருகப்பெருமானாக வடிவு கொண்டவர். பாற்கடலில் உதித்த ஆலகால விஷத்தைப் பருகி நீலகண்டன் என்று போற்றப்பட்டவர்.[31]

சிவபெருமான் திரிபுரத்தை எரித்தருளியது, கயிலையைப் பெயர்த்தெடுத்த இராவணனைத் திருவடிப்பெருவிரலொன்றினால் அடர்த்தருளியது, ஆலின் கீழ் அமர்ந்து முனிவர்க்கு அறமுரைத்தருளியது, மலையரையன் மகளாகிய உமையை மணந்து மாதொரு பாகனாகியது, கங்கையைச் சடையிற் கரந்தருளியது,

தேய்மதியாகிய திங்களைச் சடையில் அணிந்தருளியது, ஆலகால நஞ்சினைக் கண்டத்தடக்கி நீலமணிமிடற்றினனாகத் திகழ்ந்தது முதலிய சிவனைப் பற்றிய புராணச் செய்திகள் சங்கச் செய்யுட்களில் இடம்பெற்றுள்ளன.

சிவன் புலித்தோலையும் பாம்பையும் அணிந்த பழமையான உயர்ந்த கடவுள். குறிஞ்சி முதலிய எந்நிலத்திற்கும் உரிமை இல்லாதவன். சிவபெருமான் கொன்றை வேய்ந்த காரணத்தால் கொன்றை வேந்தன் எனப்பட்டான்.[32]

**5.1.14.1.** இமயமலையில், கங்கை ஈரத்தை உடைய சிவபெருமான் உமையம்மையுடன் வீற்றிருந்த பொழுது, அந்த மலையைத் தன் கைகளால் எடுக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, இராவணன் என்னும் அரக்கர் தலைவன் பத்துத் தலைகளையும் உடையவனாய், அந்த இமய மலையை எடுப்பதற்குத் தன் கைகளைக் கீழே செருகி, முயன்றபோது, அம்மலையின் அசைவால் நிகழ்வதை உணர்ந்த சிவபெருமான், தனது கால் விரலால் அம்மலையை ஊன்றிய அளவில், இராவணன் தனது கையை மீட்டு எடுக்க இயலாது வருந்தினான், என்றமையால் சிவபெருமானுக்கு இராவணன் எதிர்நிலைப் பாத்திரமானான். இச்செய்திக் கபிலரின்,

> "*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்*
> *உமைஅமர்ந்து உயர்மலை இருந்தன னாக*
> *ஐயிரு தலையின் அரக்கர் கோமான்*
> *தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து, அம்மலை*
> *எடுக்கல் செல்லாது உழப்பவன் ......*" (கலி.38.1-5)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.14.2.** பிற உயிர்கள் வருந்தக் கொல்லும் எருமையை ஏறும் இயமனது கொட்டத்தை அடக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, பல உயிர்களும் வருத்தம் அடையும் யுக முடிவில் பசிய நிறத்தையுடைய உமையம்மையைத் தனது ஒரு பாகத்தில் பொருந்திய உருத்திரன் என்னும் சிவன், கூற்றுவனின் நெஞ்சைப் பிளந்து, அதன் குடலைப் பேய்க்களித்து, அப்பேய்களின் வயிற்றை நிறைவிப்பான் என்றமையால், உருத்திரன் என்னும் சிவனுக்குக் கூற்றுவன் எதிர்நிலையானான்.

இதனைச் சோழன் நல்லுருத்திரன்,

> "*படர்அணி அந்தி, பசுங்கட் கடவுள்*
> *இடரிய ஏற்று எருமைநெஞ்சு இடந்துஇட்டு*
> *குடர்கூளிக்கு ஆர்த்துவான் .....*" (கலி.101.24-26)

என்னும் பாடல் வரிகளில் மொழிந்துள்ளார்.

அனைத்து உயிர்களையும் பிடிக்கும் எமனை வதைக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, எருமை மீது ஏறும் இயமனின் மார்பைக் கால்விளிம்பால் பிளந்து போட்டுச் சினத்துடன் அரிய உயிர் வாங்கினான் முன்பு அச்சிவபெருமான் என்றனமயால், சிவபெருமானுக்கு இயமன் எதிர்நிலைப் பாத்திரமானான். இக்கருத்து, சோழன் நல்லுருத்திரனாரின்,

> "*ஏற்றெருமை நெஞ்சம் வடிம்பின் இடந்துஇட்டு*
> *சீற்றமொடு ஆர்உயிர் கொண்டஞான்று இன்னன்கொல்*
> *கூற்று என .....................*" (கலி.103.43-45)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.14.3.** சிவபெருமானை நோக்கித் தவம் செய்து அவரிடம் அழியாத வரத்தைப் பெற்ற அவுணர் மூவர் (கமலாட்சன், வித்யுன்மாலி, தாரகாட்சன் ஆகிய மூவரும்) இரும்புநகர், வெள்ளிநகர், பொன்னகர் என்ற மூன்று வானுலக நகரங்களிலும் அமர்ந்து தேவர்களுக்குப் பல துன்பங்களைச் செய்து வந்தனர்.

அப்படிப்பட்ட அவுணர்களைத் தண்டித்துத் தம்மைக் காக்க வேண்டுமென்று தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். எனவே, சிவபெருமான் அவுணர்களை அழிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக, அவுணர் மூவரின் மூன்று கோட்டைகளையும் தீயிட்டுக் கொளுத்தி, அதனால் மூவரையும் அழித்த வில்லையுடையவன் சிவபெருமான்[33] என்றமையால், சிவபெருமானுக்கு அவுணர் மூவரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தி, இதனை இயற்றியோரின்,

*"வரிவண்டு அன்ன நிறத்தன், விரிஇணர்க்*

*கொன்றையம் பைந்தார் அகலத்தன், பொன்றார்*

*எயில்வரி ஊட்டிய வில்லன் .......*" (பதிற்.கடவுள் வாழ்த்து,1-3)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியலாகிறது.

**5.1.14.4.** இராவணன் இமயமலையைத் தன் கைகளால் எடுக்க முயன்றதன் காரணமாகவும், எருமையை ஏறும் இயமனது கொட்டத்தை அடக்க வேண்டிக் கொன்றதன் காரணமாகவும், தேவர்களுக்குத் துன்பம் செய்து வந்த அவுணர்களை அழித்ததன் காரணமாகவும் சிவபெருமானுக்கு, இராவணன், கூற்றுவன் எனப்படும் இயமன், அவுணர் மூவர் போன்றவர்கள் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**5.1.15. கௌதம முனிவன்:**

**5.1.15.0.** கௌதம முனிவன் தீர்க்கதம முனிவர்க்குமாரர்; இவரது மனைவியின் பெயர் அகலிகை; இவரது குமாரர் சதாசநந்தர். மேலும் இவர் கிருபாசாரியனுக்குப் பாட்டன். மனைவி, இந்திரனால் விபசார தோஷமடைந்தது பற்றிக் கல்லாகச் சபித்து, அவள் வேண்ட இராமமூர்த்தியின் திருவடித்துகளால் முன்னுருபெற்றுத் தம்மையடைய அருள்புரிந்த தவச்சிரேட்டர்.

தேவர் பாற்கடல் கடைகையில் பிறந்த அகலிகை பொருட்டுத் தேவர் பலரும் ஆசைப்பட்டனர். விஷ்ணுமூர்த்தி தேவரையும் மற்றவர்களையும் நோக்கி, இந்தப் பாற்கடலில் யாவர் மூழ்கி, நெடுநாள் பொறுத்து வருகின்றனரோ அவர்க்கு அகலிகை உரியவள் என்றார். அந்தப்படி தேவர் பலரும் கடலுள் மூழ்கிச் சில நாட்களுள் வெளிவந்தனர். கௌதமர் கடலுட் சென்று நெடுங்காலம் பொறுத்து வெளிவந்ததால், அகலிகையை இவர்க்கு அளித்தனர்.[34]

**5.1.15.1.** திருமாலின் மருமகனான முருகப்பெருமான் எழுந்தருளிய திருப்பரங்குன்றத்தின் ஓவியம் எழுதப்பட்ட மாடத்தின் பக்கம் சென்ற சிலர், அங்கு எழுதப்பட்டிருந்த ஓவியத்தைக் கண்டு உணர்ந்ததன் காரணமாகத் தம் மனைவியர்க்கு, இவ்ஓவியம் இரதியினுடையது; இவ்ஓவியம் அவளுடைய கணவனான காமன்.

இப்பூனையின் வடிவம் இந்திரன்; இங்கு நிற்பவள் அகலிகையாவாள் என்றெல்லாம் சொல்லி விளக்கி வருங்கால், சற்றுத் தொலைவில் நிற்பவன் கௌதம முனிவன். இவன் பூனையாய் வந்த இந்திரனின் சூழ்ச்சியால் அகலிகையைத் தனியே விட்டு ஆற்றுக்குச் சென்றான். அப்போது, அகலிகை இந்திரனால் இன்பம் நுகரப்பட்டாள்.

சற்று நேரம் கழித்து ஆற்றினின்றும் திரும்பி வந்த கௌதமன் தன் மனைவி அகலிகை, இந்திரனோடு இன்பம் நுகர்ந்த நிலையை அறிந்து மிக்க சினங்கொண்டு, தனக்குத் துரோகம் செய்த அகலிகை கல்லாய்ப் போக வேண்டும் என்று சாபமிட்டதால், அதோ அந்த அகலிகை கல்லாய்க் கீழே விழுந்து கிடக்கின்றாள் என்று காட்டி, அகலிகை தன் கணவனாகிய கௌதம முனிவனுக்குத் தவறிழைத்தமையால் உண்டான தண்டத்தை விளக்கியுரைப்பர் என்று தெரிவித்துள்ளமையால் கௌதம முனிவனுக்கு, இந்திரனும் அகலிகையும் எதிர்நிலைப் பாத்திரமாயினர் (பரி. 19. 46-57).

**5.1.15.2.** தன் மனைவி, இந்திரனோடு சேர்ந்து தவறிழைத்தமையால் உண்டான சினத்தின் காரணமாகக் கௌதம முனிவனுக்கு, இந்திரனும் அகலிகையும் எதிர்நிலைப் பாத்திரங்களாயினர்.

**<u>5.1.16. முடிவுகள்:</u>**

1. அவுணராய் நின்ற மாமரத்தை வெட்டி வீழ்த்தியதால், அசுரர் தலைவன் சூரனைக் கொன்றதால், சூரன்பன்மனையும் அவனது குலத்தையும் கொன்றதால், மக்களுக்குத் தீமை செய்து வந்த அசுரர்களைக் கொன்றதால், இந்திரன் முருகப்பெருமானது சூல் அழியக் காரணமானதால், கூற்றுவனது ஆணையை இகழ்ந்ததால் முருகப்பெருமானுக்கு, சூரபன்மன், அவனது சுற்றம், அசுரர்கள், அவுணர்கள், இந்திரன், கூற்றுவன் போன்றவர்கள் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

2. முருகப் பெருமானைப் பகைத்துக் கொண்டதால் கொன்று வெற்றி பெற வேண்டும் என்னும் காரணத்திற்காக முருகப் பெருமானின் கூளிச் சுற்றத்திற்குச் சூரபன்மன் எதிர்நிலையானான்.

3. தேவசேனையை வணங்கிய முருகப்பெருமானின் கைகளைக் கட்டி மாலையால் புடைத்ததால், வள்ளிநாச்சிக்கு தேவசேனையும் முருகப்பெருமானும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

4. தேவசேனையின் தோழியர் சண்டையிட்டதன் காரணமாக வள்ளியின் தோழியருக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள்.

5. தேவ அசுர நெறிகளை உலகமக்கள் பின்பற்றி வாழ்கிறார்கள் என்பதை விளக்க வேண்டும் என்னும் காரணத்திற்காகத் தேவரின் குரு வியாழனும் அசுரரின் குரு வெள்ளியும் மாறுபட்டமையால் தேவரின் குரு வியாழனுக்கு, அசுரரின் குரு வெள்ளி எதிர்நிலைப் பாத்திரம்.

6. கொடியவரைக் கொன்றதால், எதிரியைக் கொன்றதால், மாவலி சக்கரவர்த்தி என்னும் அசுரனைக் கொன்றதால், தீவினை செய்பவரை அழித்ததால், பிறர்க்குப் பல துன்பங்களைச் செய்து வந்த மல்லர்களைக் கொன்றதால், சினத்துடன் வந்து எதிர்த்த பகைவரைக் கொன்றதால், பிறர்க்குத் துன்பம் செய்தவரைக் கொன்றதால், கொடியவர், இரணியன், மாவலி என்னும் அசுர சக்கரவர்த்தி, கேசி என்னும் அசுரன், அவுணர்கள், கம்சனால் அனுப்பப்பட்ட மல்லர், பகைவர், ஞாயிற்றை மறைத்த அசுரர், கம்சன் போன்றவர்கள் திருமாலுக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள்.

7. வேள்வித்தீ மூட்டி தவம் செய்தமைக்கு இடையூறாக இருந்து வந்தனர் என்னும் காரணத்தால் பரசுராமனுக்கு, மன்னர் பரம்பரையினர் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

8. தன்னைப் புகழ்ந்து பேசாமல் திருமாலைப் புகழ்ந்து பேசியமைக்காகப் பல்வேறு துன்பங்களைச் செய்த இரணியனுக்கு அவனது மகன் பிரகலாதன் எதிர்நிலைப் பாத்திரம்.

9. சீதையைக் கவர்ந்து சென்ற காரணத்தால் இராமன், சீதை ஆகிய இருவருக்கும் இராவணன் எதிர்நிலைப் பாத்திரம்.

10. தேவர்களிடமிருந்து தன் தாயை மீட்க வேண்டிப் போரிட்டமையாலும், திருமாலைக் காக்க ஆதிசேடனைத் தன் வாயில் பற்றிக் கொண்ட காரணத்தாலும் கருடனுக்குத் தேவர்களும் ஆதிசேடனும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

11. மேருமலையைக் காக்க வேண்டும் என்னும் காரணத்திற்காக அம்மலையைச் சுற்றிக் கொண்ட ஆதிசேடனார்க்கு, மேருமலையைப் பெயர்க்க வந்த காற்றுத்தேவன் எதிர்நிலைப் பாத்திரம்.

12. தமக்குத் துன்பம் செய்த துரியோதனன் முதலியோரைக் கொல்லப் போரிட்டமையாலும், தர்மபுத்திரர் முதலியோர் உள்ளே இருக்க அரக்கு மாளிகை தீப்பற்றி எரியக் காரணமானதாலும், தமக்குரிய நாட்டைப் பிடுங்கிக் கொண்ட காரணத்தால் போரிட்டதாலும், ஐவர் பாண்டவர்க்குத் துரியோதனன் முதலியோரும், துரியோதனனுடன் பிறந்த நூறுபேரும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

13. பாஞ்சாலியின் ஆடையைப் பற்றி இழுத்து அவமானப்படுத்தியதாலும், பாஞ்சாலியின் சபதத்தை முடிக்க வேண்டும் என்னும் காரணத்திற்காகவும் துரியோதனனைக் கொன்றமையால் வீமனுக்குத் துரியோதனன் எதிர்நிலைப் பாத்திரம்.

14. இராவணன் இமயமலையைத் தன்கைகளால் எடுக்க முயன்றதன் காரணமாகவும், எருமையை ஏறும் இயமனது கொட்டத்தை அடக்க வேண்டிக் கொன்றதன் காரணமாகவும், தேவர்களுக்குத் துன்பம் செய்து வந்த அவுணர்களை அழித்ததன் காரணமாகவும் சிவபெருமானுக்கு, இராவணன், கூற்றுவன் எனப்படும் இயமன், அவுணர் மூவர் போன்றவர்கள் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

15. தன் மனைவி, இந்திரனோடு இன்பம் நுகர்ந்து தவறிழைத்தமையால் உண்டான சினத்தின் காரணமாகக் கௌதம முனிவனுக்கு, இந்திரனும் அகலிகையும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

16. பகைவரைக் கொன்றதன் காரணமாகத் திருமாலுக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.



# அடிக்குறிப்புகள்

1. கந்தபுராணக் கதைகள், எஸ். தமயந்தி, பக். 7,9,3,10,11, 22-26, 27, 28, 30, 32, 36, 72, 73, 75-78, 80-88, 87, 84, 85, 107, 108.
2. சங்க இலக்கியம், பன்முகநோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 86.
3. சங்க இலக்கியம், பன்முக நோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 69.
4. சங்க இலக்கியம், பன்முக ஆய்வு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 92.
   சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 167.
5. கழகத் தமிழகராதி, கழகப் புலவர் குழுவினர், ப. 378.
6. கந்தபுராணக் கதைகள், எஸ். தமயந்தி, பக். 68, 69.
7. மேலது, பக். 80, 81, 81-89.
8. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 167.
9. கந்தபுராணக் கதைகள், எஸ். தமயந்தி, பக். 83, 88.
10. சங்க இலக்கியம், பன்முக நோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 87.
    சங்க இலக்கியம், பன்முக ஆய்வு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 94.
11. கந்தபுராணக் கதைகள், எஸ். தமயந்தி, பக். 52, 42, 43, 53, 60, 61, 62.
12. மேலது, பக். 24, 48, 49, 50, 80, 81, 92.
13. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், பக். 164, 166, 167, 214, 215, 216, 217, 218, 220, 225.
14. அபிதானசிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார், பக். 1050, 1051.
15. சங்க இலக்கியம், பன்முகநோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 69.
16. வில்லி பாரதம், குருகுலச் சருக்கம், பக். 79-81, பாடல். 133-137.
17. மேலது, சம்பவச் சருக்கும், ப. 115, பாடல் 189.
18. கம்பராமாயணம், பாலகாண்டம், பரசுராமப் படலம், பக். 568, 569, 578, 579, 564, 565, பாடல், 1227, 1247, 1220.
19. கந்தபுராணக் கதைகள், எஸ். தமயந்தி, ப. 73.
20. பரிபாடல், கடவுள் வாழ்த்து, 4, பக். 76. 77, அடிகள். 10-15.
21. கம்பராமாயணம், பாலகாண்டம், திருஅவதாரப் படலம், பக். 140, 141, 244, 245, பாடல் 283, 519.

22. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 53.
23. அபிதான சிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார், ப. 357.
24. மேலது, ப. 126.
25. வில்லி பாரதம், சம்பவச் சருக்கும், பக். 128, 129, 132, 133, 136, 137, 138, 139, பாடல். 214, 222, 223, 229, 230, 232, 234.
26. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 54, 56.
27. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 54.
28. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 59.
29. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 54.
30. வில்லி பாரதம், சம்பவச் சருக்கம், வாரணா வதச் சருக்கம், பக். 133, 221, பாடல் 222, 223, 394-396.
31. கந்த புராணக் கதைகள், எஸ். தமயந்தி, பக். 14, 16, 22-24, 45, 46, 94.
32. சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், பக். 166, 225, 226.
33. சங்க இலக்கியம், பன்முக நோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 152.
34. அபிதான சிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார், ப. 534.
இராமாயணம், பாலகாண்டம், அகலிகைப் படலம், பக். 214-218, பாடல் 458-485.



## 5.2. நட்புநிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள்

**5.2.0.** சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்னும் ஆய்வுத் தலைப்பின் ஐந்தாம் இயலில், இரண்டாவதாக அமைந்திருப்பது நட்புநிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள். இதில் மிஞிலி, ஆஅய் எயினன், திதியன் அல்லது திதியன் வெளியன், பாணன், வெண்ணிக் குயத்தியார், சேரமன்னன், சேரன் செங்குட்டுவன், கோதை மார்பன் என்ற சேரமன்னன், இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி, சோழிய ஏனாதி திருக்கண்ணன், பெயர் குறிப்பிடப் பெறாத ஒரு வீரன், தோழி ஆகியோருக்கான எதிர்நிலைப் பாத்திரங்கள் பற்றி ஆராயப்பட்டுள்ளது.

**5.2.1. மிஞிலி:**

**5.2.1.0.** பாரம் என்ற பெயருடைய நாட்டை ஆண்டு வந்த முதலாம் நன்னனின் படைத்தலைவன் மிஞிலி. இவன் ஒரு குறுநில மன்னன். இவனது தலைநகர் பாழி. இவனது காலம் கி.மு. 325-300.[1]

**5.2.1.1.** மிஞிலி முதலாம் நன்னனுக்கு நண்பன். நன்னன் புனல் நாடு என்னும் நாட்டை எதிர்த்துத் தாக்கிய பொழுது, அந்நாட்டு மக்களை அஞ்ச வேண்டாம் எனக்கூறி ஆஅய் எயினன் பாதுகாத்தான். அதன் காரணமாக ஆஅய் எயினனுக்கும் நன்னனுக்கும் பகைனம உண்டாயிற்று. இருவருக்கும் பாழிப்பறந்தலை என்னும் இடத்தில் போர் ஏற்பட்டது. அப்போது மிஞிலி நன்னனுக்குத் துணையாய் வந்து ஆஅய் எயினனுடன் போரிட்டு அவனைக் கொன்றான். ஆஅய் எயினன் இறந்தான். நன்னனுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக மிஞிலி என்பவனுக்கு ஆஅய் எயினன் எதிர்நிலைப் பாத்திரமானான் (அகம். 208.5-14).

**5.2.1.2.** நன்னனுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக மிஞிலிக்கு, ஆஅய் எயினன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

**5.2.2. ஆஅய் எயினன்:**

**5.2.2.0.** ஆஅய் எயினன், முதலாம் நன்னனின் படைத்தலைவன். மிஞிலியோடு போரிட்டு மடிந்தவன். பறவைகளின் பாதுகாவலன். இவனது காலம் கி.மு. 325-300.[2]

**5.2.2.1.** ஆஅய் எயினன் புனல் நாட்டவருடன் நட்பு கொண்டிருந்தான். ஒரு சமயம் நன்னன் என்ற மன்னனும் அவனது படைத்தலைவனாகிய மிஞிலியும் ஒன்று சேர்ந்து புனல் நாட்டின் மீது சினந்து எழுந்தனர். அப்போது, ஆஅய் எயினன் என்ற மன்னன் யாழிசை உள்ள தெருக்களையுடைய பாழி என்ற நகரில் நின்று அஞ்சாதீர் என்று புனல் நாட்டவருக்குத் துணையாக வந்து, போரில் வெல்லும் பயிற்சியுடைய மிஞிலி என்பவனுடன் போரிட்டுத் தன் உயிரைத் தந்துள்ளான். இதனைப் பரணர்,

> ***"அஞ்சல் என்ற ஆஅய் எயினன்***
> ***இகல்அடு கற்பின் மிஞிலியொடு தாக்கி***
> ***தன்உயிர் கொடுத்தனன் ..........."*** (அகம். 396.4-6)

என்னும் பாடல் வரிகள் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார்.

**5.2.2.2.** புனல் நாட்டவர் மீது கொண்டிருந்த நட்புக் காரணமாக ஆஅய் எயினனுக்கு, முதலாம் நன்னனும் அவனது படைத்தலைவன் மிஞிலியும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**<u>5.2.3. திதியன் அல்லது திதியன் வெளியன்:</u>**

**5.2.3.0.** சங்கப் பாடல்களில் மூன்று திதியர்களைப் பற்றி அறிய முடிகிறது. இவர்களில் இரண்டாம் திதியன் எனப்படும் திதியன் வெளியன் இவன். இவன் அழுந்தையிலிருந்து ஆட்சி புரிந்தவன். இவனது காலம் கி.மு. 300-275.[3]

இவன் அன்னி மிஞிலி மீது கொண்டிருந்த நட்பு நிலை காரணமாக, அன்னிமிஞிலிக்கு உதவும் பொருட்டுக் கோசருடன் போரிட்டு அக்கோசரைக் கொன்றுள்ளான்.

**5.2.3.1.** திதியன் வெளியன் அன்னிமிஞிலி என்பவளுடன் நட்புக் கொண்டிருந்தான். ஒருசமயம் அன்னிமிஞிலி என்பவளின் தந்தையின் கண்களைக் கோசர் இரக்கமின்றிப் பிடுங்கியதால், சினங்கொண்டு உண்ணாமலும் உறங்காமலும் இருந்த அன்னிமிஞிலி, கோசரைப் பழி வாங்கும் எண்ணத்துடன் திதியன் வெளியன் என்பவனுக்குச் சொன்னாள். திதியன் வெளியன் அன்னிமிஞிலிக்கு உதவும்

பொருட்டு, கோசருடன் போரிட்டு அக்கோசரைக் கொன்றான்.[4] இச்செய்தியைப் பரணர்,

> ***"மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்***
> ***செருஇயல் நல்மாண் திதியற்கு உரைத்து, அவர்***
> ***இன்உயிர் செகுப்பக் கண்டுசினம் மாறிய***
> ***அன்னி மிஞிலி .................."*** (அகம். 262.9-12)

என்னும் பாடல் வரிகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

**5.2.3.2.** அன்னிமிஞிலியுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக இரண்டாம் திதியன் வெளியனுக்குக் கோசர் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளனர்.

(குறிப்பு: தித்தன் வெளியன் அல்லது வெளியன் தித்தன் என்பவன் வேறு. இவ்வெளியன் தித்தன் என்பவன் சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி எனப்படுவான்.)

## 5.2.4. பாணன்:

**5.2.4.0.** பாணன் என்ற பெயரில் சங்க இலக்கியத்தில் இருவர் காணப்படுகின்றனர். இங்கே குறிப்பிடப்படும் பாணன் முதலாம் பாணன் எனப்படுவான். மல்யுத்தம் செய்வதில் இவனுக்கு நிகர் யாரும் இல்லை என்று பேசுவர். இவனது தலைநகர் உறையூர். இவனது காலம் கி.மு. 300-275.[5]

**5.2.4.1.** பாணன் என்ற மறவன் கட்டி என்ற மன்னனுடன் நட்பு கொண்டிருந்தான். கட்டி என்ற மன்னனுக்கும் தித்தன் வெளியன் என்னும் பெயரையுடைய மன்னனுக்கும் பகைமை உண்டானதன் காரணமாக உறையூர் என்னுமிடத்தில் போர் ஏற்பட்டபோது கட்டி என்பவன் பாணன் என்ற மறவனைத் தனக்கு நட்புநிலைத் துணையாகக் கொண்டு வந்தான். ஆனால், தித்தன் வெளியனின் அரண்மனை அவையில் எழுந்த போர் முழக்க முரசொலியைக் கேட்ட அளவில் ஓடிப் போய்விட்டான். இக்கருத்தைப் பரணரின்,

*"வலிமிகும் முன்பின் பாணனொடு, மலிதார்த்*
*தித்தன் வெளியன் உறந்தை நாள்அவைப்*
*பாடுஇன் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சிப்*
*போர்அடு தானைக் கட்டி*
*பொராஅது ஓடிய ஆர்ப்பினும் ........"* (அகம். 226.13-17)

என்னும் பாடல் வரிகள் மொழிந்துள்ளன.

**5.2.4.2.** கணையன், ஆரிய மல்லன் என்பவனுடன் நட்பு கொண்டிருந்தான். ஒரு சமயம் சிறந்த மற்போர் வீரனான பாணனை வெல்ல எண்ணினான் கணையன். கணையனால் பாணனை வெல்ல முடியாததால், தன் நண்பனான ஆரிய மல்லனைத் துணைக்கு அழைத்து ஏவினான். ஆனால், பாணன் ஆரிய மல்லனை வென்றுவிட்டான்.

இதனால், கணையன் தன் நண்பன் ஆரிய மல்லனைப் போருக்கு அழைத்தும் பாணனை வெல்ல முடியவில்லையே என்ற காரணத்தால் நாணம் கொண்டான். இதனைப் பரணர்,

*"எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்*
*நிறைத்திரள் முழவுத்தோள் கையகத்து ஒழிந்த*
*திறன்வேறு கிடக்கை நோக்கி, நல்போர்க்*
*கணையன் நாணியாங்கு ..........."* (அகம். 386.5-8)

என்னும் பாடல் வரிகள் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார்.

**5.2.4.3.** கட்டி என்னும் மன்னன் நட்புநிலை காரணமாகப் பாணனைத் துணைக்கு அழைத்து தித்தன் வெளியன் என்னும் மன்னனுடன் போரிட்டதால் பாணனுக்குத் தித்தன் வெளியனும், கணையன் ஆரியமல்லருடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக ஆரிய மல்லரைத் துணைக்கு அழைத்துப் பாணனுடன் போரிட்டுத் தோற்றதால் பாணனுக்கு ஆரிய மல்லரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**<u>5.2.5. வெண்ணிக்குயத்தியார்:</u>**

**5.2.5.0.** வெண்ணிக்குயத்தியார் முதலாம் கரிகால் பெருவளத்தானைப்

புகழ்ந்து பாடியவர். வெண்ணி என்பது இப்புலவரின் ஊர்ப்பெயர் (வெண்ணிப் பறந்தலை என்பது வெண்ணி என்னும் ஊர்க்குப் புறத்தே உள்ள பகுதி). குயத்தியார் என்பது இவரது பெயர். எனவே, ஊர்ப்பெயரோடு சேர்த்து வெண்ணிக்குயத்தியார் என்றே அழைக்கப் பெற்றார். வேட்கோவருள் சிறந்தவர்க்குக் குயம் என்று பண்டைக்காலத்தில் மன்னர் பட்டம் தருவர். எனவே, இப்புலவர் குயவருள் சிறந்தவராதல் வெள்ளிடைமலை. இப்புலவரது காலம் கி.மு. 275-250.[6]

**5.2.5.1.** புலவர் வெண்ணிக்குயத்தியார் சேரமான் பெருஞ்சேரலாதனோடு பெருநட்புக் கொண்டவர். இச்சேரமான் பெருஞ்சேரலாதனைச் சோழன் கரிகால் பெருவளத்தான் வெண்ணி என்ற இடத்தில் நடைபெற்ற போரில் வென்று புகழ்பெற்றான்.

சோழன் செலுத்திய வேல் சேரமான் பெருஞ்சேரலாதனின் மார்பில் தைத்து ஊடுருவி மார்பின் புறத்தே சென்றது. இப்படிச் சேரமான் பெருஞ்சேரலாதன் மார்பில் புண்பட்டு விழுப்புண் அடைந்தும் புறப்புண் என நாணம் கொண்டது மிக்க புகழ் உடையதாயிற்று.

அதனால், வளவனே, நின்னினும் நல்லவன் அல்லனோ சேரமான் பெருஞ்சேரலாதன், என்று புலவர் வெண்ணிக்குயத்தியார் தமது மன்னன் கரிகால் பெருவளத்தானின் புகழைவிட, மார்பில் புண்பட்டும் புறத்தே வேல் பாய்ந்ததால் புறப்புண் என நாணம் கொண்டு வடக்கிருந்து உயிர்விட்ட தமது நண்பன் சேரமான் பெருஞ்சேரலாதனே மிகவும் நல்லவன் என்று உயர்த்திக் கூறியமையால், வெண்ணிக் குயத்தியார்க்குக் கரிகால் பெருவளத்தான் எதிர்நிலைப் பாத்திரமானான். இதனை, கீழ்வரும் வரிகளால் அறியலாம்.

> "........... *நின்னினும் நல்லன் அன்றே*
> *கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை*
> *மிகப்புகழ் உலகம் எய்தி*
> *புறப்புண் நாணி வடக்கிருந் தோனே*" (புறம்.66.5-8)

**5.2.5.2.** மார்பில் புண்பட்டும் புறப்புண் என நாணம் கொண்டு வடக்கிருந்து

உயிர்விட்ட பெருஞ்சேரலாதனோடு கொண்டிருந்த நட்புநிலை காரணமாக அவனை, நின்னினும் நல்லவன் என்று தமது மன்னன் கரிகால் பெருவளத்தானிடம் கூறியதால் புலவர் வெண்ணிக்குயத்தியார்க்கு, முதலாம் கரிகாற் பெருவளத்தான் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 5.2.6. சேரமன்னன்:

**5.2.6.0.** இச்சேரமன்னன் முதலாம் மலையமான் திருமுடிக்காரியின் காலமாகிய கி.மு. 250-225இல் வாழ்ந்தவனாதல் வேண்டும்.[7]

**5.2.6.1.** சேரமன்னனும் முதலாம் மலையமான் திருமுடிக்காரி எனப்படும் முள்ளூர் நகரத்து மன்னன் காரியும் நட்பு கொண்டிருந்தனர்.

இக்காரி என்ற வள்ளல், ஒழியாத பெரும்புகழை உலகில் நாட்டிய வலிய வில்லை உடைய ஓரி என்ற வள்ளலைப் போர்க்களத்தில் கொன்று, அவனுக்குரிய பலாமரத்தின் பயன்மிக்க கொல்லிமலையைச் சேரமன்னனுக்குக் கொடுத்தான்[8] (அகம். 209.11-15).

**5.2.6.2.** ஓரியின் கொல்லி மலையைத் தன் நண்பனாகிய சேரமன்னனுக்குக் கொடுத்ததன் காரணமாகச் சேரமன்னனுக்கு வல்வில் ஓரி எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 5.2.7. சேரன் செங்குட்டுவன்:

**5.2.7.0.** சேரன் செங்குட்டுவன் பற்றிய வரலாறு சேரன் என்ற தலைப்பில் (1.3.9.) இல் சுட்டப்பட்டுள்ளது.

**5.2.7.1.** சேரன் செங்குட்டுவன் அறுகை என்னும் மன்னனுடன் நட்பு கொண்டிருந்தான். அறுகைக்கும் மோகூர் மன்னன் பழையனுக்கும் உண்டான போரில் அறுகை ஓடி ஒளிந்து கொண்டான். எனவே, தன் நண்பன் அறுகைக்கு உண்டான பழிச்சொல் தனக்கு உண்டாகியது போலக் கருதிய சேரன் செங்குட்டுவன் நண்பனைப் பழிச் சொல்லினின்றும் காக்க வேண்டி மோகூர் மன்னன் பழையனுடன் போரிட்டு அவனது அரண்களை அழித்தான். அவனது

காவல் முரசும் கைப்பற்றி, அவனது வஞ்சினத்தைக் கெடுத்து, அவனைப் பணியும்படி செய்தான்.

அத்துடன் பழையனின் காவல்மரமான வேம்பினை அடியுடன் வெட்டி வீழ்த்தி, வண்டியில் ஏற்றி, யானைகளை அவ்வண்டியில் எருதுபோல் பூட்டி இழுக்கச் செய்தான்.

இவ்வாறு, தன் நண்பன் அறுகை என்பவனுக்காக, நட்பு முறையில் உதவச் சென்று, பழையனுடன் போரிட்டு வென்றதால் சேரன் செங்குட்டுவனுக்கு, மோகூர் மன்னன் பழையன் (இரண்டாம் பழையன் எனப்படும் மோகூர் மன்னன் பழையன்) எதிர்நிலைப் பாத்திரமானான் (பதிற்.ஐ.ப.44.10-17). இச்செய்தியைப் பரணர்,

> *"வெல்போர் வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து*
> *மொய்வளம் செருக்கி மொசிந்து வருமோகூர்*
> *வலம்படு குழுஉநிலை அதிர மண்டி .........."* (பதிற்.ஐ.ப. 49.7-9)

என்னும் பாடல் வரிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**5.2.7.2.** சேரன் செங்குட்டுவன் அறுகை என்னும் மன்னனுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக மோகூர் மன்னன் பழையனுடனும்; அப்பழையனுடன் சேர்ந்து வந்த சோழ மன்னர், வேளிர் எனப்படும் குறுநில மன்னர் ஆகியோருடனும் போரிட்டதால் பழையன், சோழ மன்னர், வேளிர் போன்றோர் எதிர்நிலையாயினர்.

## <u>5.2.8. கோதை மார்பன் என்ற சேரமன்னன்:</u>

**5.2.8.0.** கோதை மார்பன் என்ற சேரமன்னன் சேரமான் கோக்கோதை மார்பன் என்றும், கோதை மார்பன் என்றும் அழைக்கப்பட்டவன். இவனைப் பற்றிய வரலாறு சேரர் என்ற தலைப்பில் (1.3.14) சுட்டப்பட்டுள்ளது.

**5.2.8.1.** கோதை மார்பன் என்ற சேர மன்னன், வஞ்சியிலிருந்து ஆண்டபொழுது சோழன் கிள்ளிவளவன் வஞ்சி நகரை முற்றுகையிட்டு அழித்தான். இதனால் கோதைமார்பன் வலிமை இழந்தநிலையில், கிள்ளிவளவனைக் கூடலில் பாண்டியன் நெடுஞ்செழியனின் படைத்தலைவன் பழையன் மாறன்

தோற்கடித்தான். இதனால் கோதை மார்பன் மகிழ்ச்சியடைந்ததோடு, தன் எதிரியைத் தோற்கடித்த பழையன் மாறனுடன் நட்பு கொண்டவனானான். இக்கருத்தை நக்கீரர்,

*"வெள்ளத் தானையொடு வேறுபுலத்து இறுத்த*
*கிள்ளி வளவன் நல்அமர் சாஅய்*
*கடும்பரிப் புரவியொடு களிறுபல வவ்வீ*
*ஏதில் மன்னர் ஊர்கொள*
*கோதை மார்பன் உவகை ........."* (அகம். 346.21-25)

என்னும் பாடல் வரிகள் மூலமாகப் புலப்படுத்தியுள்ளார்.

**5.2.8.2.** நட்புநிலை காரணமாகப் பழையன் மாறன், தன் நண்பன் கோதை மார்பனுக்கு எதிரியாக விளங்கிய சோழன் கிள்ளிவளவனைப் போரிட்டுக் கொன்றான் என்பதால் கோதை மார்பன் என்ற சேரமன்னனுக்குச் சோழன் கிள்ளிவளவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

**5.2.9. மலையமான் திருமுடிக்காரி-2:**

**5.2.9.0.** மலையமான் திருமுடிக்காரி என்ற பெயரில் இருவர் ஆண்டுள்ளனர். இங்கே குறிப்பிடப்படும் மலையமான் திருமுடிக்காரி, முதலாம் மலையமான் திருமுடிக்காரியின் பேரன். இவனை இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி என்று அழைப்பர். இவனைப் பற்றிய வரலாறு குறுநில மன்னர்கள் என்ற தலைப்பில் (1.4.20.2) சுட்டப்பட்டுள்ளது.

**5.2.9.1.** இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி எனப்படும் இவன் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு நட்பு கொண்டிருந்தான். அச்சமயத்தில் சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் போரிட்டுக் கொண்டனர். சோழனுக்கு மலையமான் திருமுடிக்காரி நட்புமுறை காரணமாகப் படைத்துணையாக வந்ததால் பெருநற்கிள்ளி வெற்றி பெற்றான். இதனைப் புலவர், வடமவண்ணக்கன் பெருஞ்சாத்தனார்,

"குன்றத் தன்ன களிறு பெயரக்
கடந்தட்டு வென்றோனும் நிற்கூ றும்மே
வெலீஇயோன் இவன் எனக்
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்து வந்து சமந் தாங்கிய
வல்வேல் மலையன் அல்லன் ஆயின்
நல்லமர் கடத்தல் எளிதுமன் நமக்குஎனத்
தோற்றோன் தானும் நிற்கூ றும்மே
தொலைஇயோன் இவன் என
ஒருநீ ஆயினை பெரும ........" (புறம். 125.9-18)

என்னும் பாடல் வரிகளில் தெரிவித்துள்ளார்.

**5.2.9.2.** தேர்வண் மலையன் எனப்படும் இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு கொண்டிருந்த நட்புநிலை காரணமாக அவனுக்குப் படைத்துணையாகச் சென்று வெற்றியைத் தேடித் தந்ததால் மலையமான் திருமுடிக்காரிக்குச் சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறை எதிர்நிலைப் பாத்திரமானான்.

**5.2.10. சோழிய ஏனாதி திருக்கண்ணன்:**

**5.2.10.0.** இவன் இரண்டாம் மலையமான் திருமுடிக்காரியின் மக்களுள் ஒருவன். மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் என்றும் அழைக்கப்பட்டவன். இவனைப் பற்றிய வரலாறு, குறுநில மன்னர்கள் என்ற தலைப்பில் (1.4.34.) சுட்டப்பட்டுள்ளது.

**5.2.10.1.** சோழிய ஏனாதி திருக்கண்ணன் முள்ளூர் மலைக்கு உரிமை உடையவன். சோழ மன்னன் ஒரு சமயம் பகைவருடன் போரிட்டுத் தோற்று முள்ளூர் மலையில் ஒளிந்து கொண்டிருந்த சமயத்தில், அச்சோழ மன்னனுக்குப் போரில் உதவி செய்து பகைவரிடமிருந்து காப்பாற்றி அழைத்துச் சென்று சோழநாட்டின் மன்னனாக்கினான். எனவே, சோழிய ஏனாதி திருக்கண்ணனுக்குச் சோழ மன்னன் நண்பனானன். இதனை மாறோகத்து நப்பசலையாரின்,

*"செருப்புகல் மறவர் செல்புறம் கண்ட*
*எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை*
*அருவழி இருந்த பெருவிறல் வளவன்*
*மதிமருள் வெண்குடை காட்டி அக்குடை*
*புதுமையின் நிறுத்த புகழ்மேம் படுந"* (புறம். 174.12-16)

என்னும் பாடல்வரிகள் மூலமாக அறியலாகிறது.

**5.2.10.2.** போரில் உதவி செய்யச் சென்று சோழ மன்னனைத் தனக்கு நண்பனாக்கிக் கொண்ட நட்புநிலை காரணமாகச் சோழிய ஏனாதி திருக்கண்ணனுக்குச் சோழ மன்னனை எதிர்த்த பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**5.2..11. ஒருவீரன்:**

**5.2.11.0.** பெயர் குறிப்பிடப் பெறாத ஒரு வீரனைப் பற்றி புலவர் ஒரூஉத்தனார் புறநானூற்றில் பாடியுள்ளார். ஒரூஉத்தனார் வாழ்ந்த காலத்தில், இங்கே குறிப்பிடப் பெறும் வீரன் வாழ்ந்திருக்க வேண்டும் என உணர முடிகிறது.

**5.2.11.1** ஒரு வீரன், ஒருவனிடம் நட்பு கொண்டு நல்ல நண்பனைப் பெற்றிருந்தான். ஒரு சமயம் தன் நண்பனைப் பகைவர் வளைத்துப் போரிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்த இவ்வீரன், தன் நண்பனைப் பகைவரிடமிருந்து காப்பாற்ற வேண்டும் என்னும் காரணத்திற்காகப் பகைவரின் பின்னணிப் படையைப் பிளந்து கொண்டு, பகைவர் தடுத்தபோதும், அத்தடையை மீறி கன்றை விரும்பும் பகவைப் போல், முன்னணிப் போரில் பகைவரை எதிர்த்து, அவர்களால் வளைத்துக் கொள்ளப்பட்டிருந்த நண்பனிடம் உள்ளே சென்றான்.

இவ்வாறு, நட்புநிலை காரணமாகத் தன் நண்பனைப் பகைவரிடமிருந்து காப்பாற்றச் சென்ற வீரனுக்கு, நண்பனின் பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இச்செய்தியைக் கீழ்வரும் வரிகளால் அறிய முடிகிறது.

*"................. இவற்கே செற்றிய*
*திணிநிலை அலறக் கூவை போழ்ந்துதன்*

*வடிமாண் எஃகம் கடிமுகத்து ஏந்தி*
*ஓம்புமின் ஓம்புமின் இவண்என ஓம்பாது*
*தொடர்கொள் யானையின் குடர்கால் தட்பக்*
*கன்றுஅமர் கறவை மான*
*முன்சமத்து எதிர்ந்ததன் தோழற்கே வருமே"*     (புறம். 275.3-9)

**5.2.11.2.** நட்புநிலை காரணமாகத் தன் நண்பனைப் பகைவரிடமிருந்து காப்பாற்றச் சென்ற ஒரு வீரனுக்கு, நண்பனின் பகைவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

**5.2.12. தோழி:**

**5.2.12.0.** நற்றிணையில் தலைவியின் நிலையைப் பார்த்து வருந்திய தோழி பற்றிக் கொற்றனார் பாடியது.

**5.2.12.1.** தோழி ஒருத்தி தன் தலைவி மீது கொண்டிருந்த அளவு கடந்த அன்பின் காரணமாக நட்புடையவளானாள். எனவே, தலைவியை விட்டுப் பிரிந்து சென்ற தலைவன், பரத்தை இடமிருந்து பிரிந்து வந்த போது தோழி தலைவனைப் பார்த்து வினவினாள்.

தலைவனோ பரத்தையர் யாரையும் யானறியேன் என்று தெரிவித்தான். தோழியோ, தன் தலைவியோடு சரியாக வாழாமல் சென்று திரும்பிய தலைவனைப் பார்த்து, பரத்தையர்தம் இழிநிலையைக் கூற வேண்டும் என்பதற்காக, கடலில் புயலில் சிக்கிக் கப்பல் கவிழ்ந்ததால் கலங்கியவர்கள், ஒரு மரப்பலகையைப் பற்றி இழுப்பதைப் போல, பரத்தையர் ஒவ்வொருவரும் உன்னைத் தம்பக்கம் வர இழுக்க இழுக்க, உன் துன்ப நிலையைக் கண்டும் ஒன்றும் செய்ய முடியாமல் இருந்துவிட்டேன்[9] என்று தெரிவித்தாள்.

இவ்வாறு, நட்புநிலை காரணமாகப் பரத்தையர்தம் இழிநிலையையும் அப்பரத்தையரால் துன்புற்ற தலைவனது அவலநிலையையும் வெளிப்படுத்திக் கூறிய தோழிக்குப் பரத்தையரும் தலைவனும் எதிர்நிலைப் பாத்திரமாயினர். இதனைக் கீழ் வரிகளால் அறியலாம்.

*"கண்டனென் மகிழ்ந! கண்டுஎவன் செய்கோ ?*

*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . நின்*

*மார்பு தலைக்கொண்ட மாண்இழை மகளிர்*

*கவல்ஏ முற்ற வெய்துவீழ் அரிப்பனி*

*கால்ஏ முற்ற பைதரு காலை,*

*கடல்மரம் கவிழ்ந்தெனக் கலங்கி, உடன்வீழ்பு,*

*பலர்கொள் பலகை போல*

*வாங்க வாங்க நின்றுஊங்கு அஞர்நிலையே"* (நற். 30).

**5.2.12.2.** தலைவி மீது கொண்டிருந்த நட்புநிலை காரணமாகப் பரத்தையர்தம் இழிநிலையையும், தலைவனது அவலநிலையையும் புலப்படுத்திய தோழிக்குப் பரத்தையரும் தலைவனும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 5.2.13. முடிவுகள்:

1. நன்னனுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக மிஞிலிக்கு, ஆஅய் எயினன் எதிர்நிலைப் பாத்திரம்.

2. புனல் நாட்டவர் மீது கொண்டிருந்த நட்புக் காரணமாக ஆஅய்எயினனுக்கு முதலாம் நன்னனும் அவனது படைத்தலைவன் மிஞிலியும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

3. அன்னிமிஞிலியுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக இரண்டாம் திதியன் எனப்படும் திதியன் வெளியனுக்குக் கோசர் எதிர்நிலைப் பாத்திரம்.

4. கட்டி என்னும் மன்னன் நட்புநிலை காரணமாகப் பாணனைத் துணைக்கு அழைத்து தித்தன் வெளியன் என்னும் மன்னனுடன் போரிட்டதால் பாணனுக்குத் தித்தன் வெளியனும்,

கணையன் ஆரிய மல்லருடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக ஆரியமல்லரைத் துணைக்கு அழைத்துப் பாணனுடன் போரிட்டுத் தோற்றதால் பாணனுக்கு ஆரியமல்லரும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

5. பெருஞ்சேரலாதனோடு கொண்டிருந்த நட்புநிலை காரணமாக அவனை, நின்னினும் நல்லவன் என்று தமது மன்னன் கரிகால் பெருவளத்தானிடம் கூறியதால் புலவர் வெண்ணிக் குயத்தியார்க்கு முதலாம் கரிகாற் பெருவளத்தான் எதிர்நிலைப் பாத்திரம்.

6. காரி என்னும் வள்ளல் தமது நட்புநிலை காரணமாக ஓரியின் கொல்லிமலையை வென்று சேரமன்னனுக்குக் கொடுத்தான் என்பதனால் இச்சேரமன்னனுக்குக் கொல்லிமலையை ஆண்ட வல்வில் ஓரிஎதிர்நிலைப் பாத்திரம்.

7. சேரன் செங்குட்டுவன் அறுகை என்னும் மன்னனுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக மோகூர் மன்னன் பழையனுடனும், அப்பழையனுடன் சேர்ந்து சோழ மன்னரும் வேளிர் எனப்படும் குறுநில மன்னரும் ஒன்றாகச் சேர்ந்து வந்த படைக்கூட்டத்துடனும் போரிட்டுப் பணியுமாறு செய்தும், அழியுமாறு தாக்கியும் போரிட்டான் என்பதால் சேரன் செங்குட்டுவனுக்கு மோகூர்ப் பழையன், அப்பழையனுடன் போரிட வந்த சோழமன்னர், வேளிர் எனப்படும் ஒன்பது குறுநில மன்னர் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

8. நட்புநிலை காரணமாகப் பழையன் மாறன், தன் நண்பன் கோதை மார்பனுக்கு எதிரியாக விளங்கிய சோழன் கிள்ளிவளவனைப் போரிட்டுக் கொன்றான் என்பதால் கோதைமார்பன் என்ற சேரமன்னனுக்குச் சோழன் கிள்ளிவளவன் எதிர்நிலைப்பாத்திரம்.

9. தேர்வண் மலையன் எனப்படும் இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியோடு கொண்டிருந்த நட்புநிலை காரணமாக அவனுக்குப் படைத்துணையாகச் சென்று வெற்றியைத் தேடித்தந்ததால் மலையமான் திருமுடிக்காரிக்குச் சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை எதிர்நிலைப் பாத்திரம்.

10. போரில் உதவி செய்யச் சென்று சோழமன்னனைத் தனக்கு நண்பனாக்கிக் கொண்ட நட்புநிலை காரணமாக, சோழிய ஏனாதி திருக்கண்ணனுக்குச் சோழ

மன்னனை எதிர்த்த பகைவர் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

11. நட்புநிலை காரணமாகத் தன் நண்பனைப் பகைவரிடமிருந்து காப்பாற்றச் சென்ற ஒரு வீரனுக்கு நண்பனின் பகைவர் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

12. தலைவி மீது கொண்டிருந்த நட்புநிலை காரணமாகப் பரத்தையர்தம் இழிநிலையையும், தலைவனது அவலநிலையையும் புலப்படுத்திய தோழிக்குப் பரத்தையரும் தலைவனும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

13. மேற்கண்டவர்களில், முதலாம் பாணனுக்கும், சேரன் செங்குட்டுவனுக்கும் அதிக எதிர்நிலைப் பாத்திரங்கள்.



## அடிக்குறிப்புகள்

1. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 11,16, 260.
2. மேலது, பக். 190, 12, 16, 7.
3. மேலது, பக். 35-37, 20, 21.
4. சங்க இலக்கியம், பன்முக நோக்கு, முனைவர் இரா. சந்திரசேகரன், ப. 160.
5. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 251, 30, 31, 19, 21.
6. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 389.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 43.
7. அகநானூறு, தொகுதி-2, பாடல். 209, பக். 344, 345.
8. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ. தட்சிணாமூர்த்தி, ப. 237.
9. நற்றிணைச் செல்வம், டாக்டர் மு. வரதராசன், பக். 161, 162.



## 5.3. உறவுநிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள்

5.3.0 முன்னுரை

5.3.1 அசுவத்தாமன்

5.3.2 வீமன்

5.3.3 விதவையர்

5.3.4 கோப்பெருஞ்சோழன்

5.3.5 அரசன்

5.3.6 தாய்

5.3.7 மக்கள்

5.3.8 பரத்தை

5.3.9 முடிவுரை

**5.3.0.** சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்னும் ஆய்வுத் தலைப்பின் ஐந்தாம் இயலில் மூன்றாவதாக ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது உறவுநிலையில் எதிர்நிலைப் பாத்திரங்கள். இதில், அசுவத்தாமன், வீமன், விதவையர், கோப்பெருஞ்சோழன், அரசன், தாய், மக்கள், பரத்தை ஆகியோருக்கான எதிர்நிலைப் பாத்திரங்கள் உறவுநிலை காரணமாக ஆராயப்பட்டுள்ளது.

**5.3.1.அசுவத்தாமன்:**

**5.3.1.0.** துரோணருக்கும் கிருபைக்கும் மகனாகப் பிறந்தவன் அசுவத்தாமன். துரோணர், மனைவியாகிய கிருபையின் கற்பினை, நாரதரால் அறிந்த ருத்திரன், அதனை அறிய நிருவாணப் பிச்சை கேட்டு, இவள் அழகினைக் கண்டு வீர்யத்தைத் தட்டில் விட, அதனை அவள் குதிரையிடம் வைத்ததனால் குதிரையின் முதுகைக் கிழித்துக் கொண்டு அசுவத்தாமன் பிறந்தான்.

அசுவம் என்றால் குதிரை என்று பொருள். குதிரையின் முதுகைக் கிழித்துக் கொண்டு பிறந்ததால் அசுவத்தாமன் என்று அழைக்கப்பட்டான்.

சிவபூசைக்கு இடையூறு வந்ததென அசுவத்தாமன் குண்டத்தில் வீழ்ந்து இறக்கத் துணிந்தனன். அப்போது சிவமூர்த்தியும் உமையும் தரிசனந் தந்து வேண்டிய தென்னவெனக் கேட்க, அவன் பாரதப் போரில் மிகுந்த வீரர்களைக் கொல்ல வேண்டும் என்றனன்.

சிவபிரான் ஒரு வாளைப் பிரசாதித்து இன்றிரவு யாரைச் சந்திக்கின்றனையோ அவர்கள் மாய்வர் என்று மறைந்தனர். அவ்வாறே பாசறை யுத்தத்தில் எதிர்த்தவரை மாய்த்தவன். இவனது காலம் இதிகாசக் காலம்.[1]

**5.3.1.1.** துரோணரைத் திட்டத்துய்மன் கொன்றுவிட்டான். இதன் காரணமாகச் சினங்கொண்ட துரோணரின் மகன் அசுவத்தாமன் தன் தந்தையைக் கொன்றுவிட்டானே என்ற காரணங்கருதி உறவுநிலை பாராட்டி, திட்டத்துய்மனின் தலையைத் திருகி எறிந்தான். எனவே, அசுவத்தாமனுக்கு, திட்டத்துய்மன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

> "ஆர்இருள் என்னான் அருங்கங்குல் வந்துதன்
> தாளின் கடந்துஅட்டு, தந்தையைக் கொன்றானைத்
> தோளின் திருகுவான் போன்ம் .........." (கலி.101.30-32)

**5.3.1.2.** தன் தந்தை துரோணரைக் கொன்ற திட்டத்துய்மனின் தலையைத் திருகி எறிந்தமையால், அசுவத்தாமனுக்குத் திட்டத்துய்மன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

## 5.3.2. வீமன்:

**5.3.2.0.** பாண்டு மன்னனுக்கும் குந்திக்கும் பிறந்த ஐவர் பஞ்ச பாண்டவர் எனப்பட்டனர். அவர்களுள் இரண்டாவதாக வாயுத்தேவன் அருளால் பிறந்தவன் வீமன். இவர்களது காலம் இதிகாசக் காலம் எனலாம்.[2]

**5.3.2.1.** துரோபதையினது தூய்மையான கூந்தலில் கையை நீட்டிப் பற்றிய துச்சாதனனின் நெஞ்சைப் பிளந்து போட்டுப் பகைவராகிய கௌரவர் முன்னே தான் சொன்ன வஞ்சினத்தை வீமன் முடித்தான்.

இதில், தன் மனைவி துரோபதையின் கூந்தலைத் துச்சாதனன் பற்றி இழுத்ததன் காரணமாக, மனைவி துரோபதைக்கு உற்ற இடரைக் களையும் பொருட்டு உறவுநிலை பாராட்டியவனாக வீமன், தனது பங்காளியாக விளங்கிய துச்சாதனனின் நெஞ்சைப் பிளந்து வஞ்சினத்தை முடித்தான் என்றமையால், வீமனுக்குப் பங்காளியாகிய துச்சாதனன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

> "அம்சீர் அசைஇயல் கூந்தற்கை நீட்டியான்
> நெஞ்சம் பிளந்துஇட்டு, நேரார் நடுவண், தன்
> வஞ்சினம் வாய்த்தானும் ............" (கலி.101.18-20)

**5.3.2.2.** தன் மனைவி துரோபதையின் இடரைக் களைய வேண்டியும், பங்காளியாகிய துச்சாதனனின் நெஞ்சைப் பிளந்து போட்டு வஞ்சினத்தை முடித்தான் என்றமையாலும் வீமனுக்குத் துச்சாதனன் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளான்.

**5.3.3. விதவையர்:**

**5.3.3.0.** புறநானூற்றில், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரிட்டு விழுப்புண்பட்டு வீழ்ந்து கிடக்கக் கழாத்தலையார் இவ்விதவையரைப் பற்றிப் பாடியுள்ளார். இவர்கள் காலம் கி.மு. 250-225.[3]

**5.3.3.1.** சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போரினால் இருதிறத்தவரும் இறந்தனர். அவர்தம் வீரரும் மடிந்தனர்.

அப்போது, அவ்வீரரின் மனைவியர், கீரை உணவைத்தின்ன விரும்பாதவராகவும், குளிர்ந்த நீரில் மூழ்க விரும்பாதவராகவும், அஃதாவது உலகவழக்கினின்று பிறழ்ந்து கணவன் இறந்தபின் உயிர்வாழ விரும்பாதவர்களாகி, சுமங்கலிகளாகத் தம் கணவரின் மார்புகளைத் தழுவியபடி அப்போர்க்களத்திலேயே இறந்து கிடந்தனர்.

விதவையாய் இல்லாமல், கணவனுடனேயே சேர்ந்து மனைவியரும் இறந்தனர் என்றமையால், விதவையாய் வாழும் பெண்களுக்குச் சுமங்கலியாகத் தம் கணவருடன் உயிர்நீத்த பெண்கள் தம்மங்கல வாழ்வோடு மறைந்தனர் என்னும் காரணத்தால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்,

> "..............*வியன்கண் பாசறைக்*
> *களங்கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர*
> *உடன்வீழ்ந் தன்றால் அமரே பெண்டிரும்*
> *பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்*
> *மார்பகம் பொருந்தி ஆங்கமைந் தனரே*" (புறம்.62.11-15)

**5.3.3.2.** விதவையர்க்கு, கணவனுடனே சேர்ந்து சுமங்கலிகளாக உயிர்நீத்த பெண்கள் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 5.3.4.கோப்பெருஞ்சோழன்:

**5.3.4.0.** கோப்பெருஞ்சோழன், வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியின் மகன். இவனைப் பற்றிய வரலாறு 1.1.9.இல் சுட்டப்பட்டுள்ளது.

**5.3.4.1.** கோப்பெருஞ்சோழனின் மக்கள் இருவரும் அரசாட்சி உரிமை கோரி மாறுபட்டபோது, கோப்பெருஞ்சோழன் தன் மக்கள் என்றும் பாராது அவர்கள் மேல் போருக்கு எழுந்தான். அப்போது, பொங்கு நீர் கடலால் சூழப்பட்ட இப்பரந்த உலகத்தில் கோப்பெருஞ்சோழனுடன் போர் செய்ய வந்த அவனது மக்கள் இருவரையும் எண்ணிப் பார்த்தால், கோப்பெருஞ் சோழனுக்குப் பகைவராகிய சேர பாண்டியரும் அல்லர்.

கோப்பெருஞ்சோழன் நல்ல புகழை இவ்வுலகத்தில் அடைந்து தேவர் உலகத்தில் சென்றால், அவ்வரசனது அரசாட்சி உரிமை அம்மன்னனுடன் போரிட வந்த அவனது மக்களுக்கே உரியதாகும்.

கோப்பெருஞ்சோழனுடன் போரிட வந்த சூழ்ச்சியில்லாத அறிவையுடைய அவனது மைந்தர், அவ்வரசனாகிய தந்தையிடம் தோற்றுப் போனால், அவ்வரசன் தன் அரசுரிமைச் செல்வத்தைத் தன்னுடன் போரிட வந்த மக்களுக்கே அல்லாது வேறு யாருக்குத் தருவான் என்று புல்லாற்றூர் எயிற்றியனார் பாடியதில் மக்கள் இருவரும் அரசாட்சி உரிமைக்காகத் தந்தையிடமே போர் செய்ய வந்தமை பற்றித் தெரிவிக்கப்பட்டுள்ளமையால்[4] கோப்பெருஞ்சோழனுக்கு அவனது மக்கள் இருவரும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

> ***"உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்***
> ***ஒழித்த தாயம் அவர்க்குஉரித்து அன்றே***
> ..........................
> ***நின்ற துப்பொடு நின்குறித்து எழுந்த***
> ***எண்ணில் காட்சி இளையோர் தோற்பின்***
> ***நின்பெரும் செல்வம் யார்க்குஎஞ் சுவையே***
> ............................." (புறம்.213.7-8, 11-13)

**5.3.4.2.** மக்கள் இருவரும் அரசாட்சி உரிமைக்காகத் தந்தையிடம் போரிட்டமையால் கோப்பெருஞ்சோழனுக்கு எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

## 5.3.5. அரசன்:

**5.3.5.0.** புறநானூற்றில், அரசனது இயல்பு பற்றிப் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடியது. இவன் புவி மன்னனாய் விளங்கியதுடன் கவி மன்னனாகவும் விளங்கினான். கல்வியின் சிறப்பை விளக்க இப்புறநானூற்றுப் பாடலைப் பாடியுள்ளான். இவனது காலம் கி.மு. 225-200.[5]

**5.3.5.1.** ஒரு குடியில் பிறந்த அனைவரும் ஒத்த இயல்பு உடையவர். அவருள் மூத்தவன் படிக்காதவனாயின் வயது காரணமாக அவனை அரசன் பாராட்டாமல் இளையவன் கல்வியறிவு உடையவனாக இருப்பின் அவன் சென்ற வழியைத் தேடித் தேடித் தானும் அவன் பின்னே செல்லுவான்.[6]

அறிவின் பெருக்கமே அரசுக்குத் தேவையான ஒன்று என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து மூத்தவன் கல்வி கற்காதவன் என்னும் காரணத்தால் அரசனால் வெறுத்து ஒதுக்கப்பட்டு அரசனுக்கு எதிர்நிலைப் பாத்திரமானான்.

> ***"ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்***
> ***மூத்தோன் வருக வென்னாது அவருள்***
> ***அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும்"*** (புறம்.183.5-7)

**5.3.5.2.** ஒரு குடியில் பிறந்த மூத்தவன் கல்வி கற்காதவன் என்னும் காரணத்தால் அரசன் ஒருவனுக்கு எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளான்.

## 5.3.6. தாய்:

**5.3.6.0.** புறநானூற்றில், தாயின் மன இயல்பு பற்றிப் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடியது. இவனைப் பற்றிய வரலாறு முன் தலைப்பில் (5.3.5.) சுட்டப்பட்டுள்ளது.

**5.3.6.1.** ஒருதாய் தான் பெற்ற பிள்ளைகள் எல்லாரிடத்தும் ஒத்த அன்பு

உடையவளாக இருப்பாள். அத்தகையவளும் கல்வி கற்ற மகனிடம் பேரன்பு காட்டுவாள்.

எனவே, தாயின் மனமும் கல்வி கற்காதவன் என்னும் காரணத்தால், கல்வி கற்காத தன் மகனிடமே மனம் திரிந்து வேறுபடும் என்றமையால், தாய்க்குக் கல்வி கற்காத மகன் எதிர்நிலையானான்.

"*பிறப்பு ஓர்அன்ன உடன்வயிற்று உள்ளும்*
*சிறப்பின் பாலால் தாயும் மனம்திரியும்*" (புறம்.183.3-4)

**5.3.6.2.** ஒருமகன் கல்வி கற்காதவன் என்னும் காரணத்தால் அவனது தாய்க்கு எதிர்நிலைப்பாத்திரமானான்.

**5.3.7. மக்கள்:**

**5.3.7.0.** புறநானூற்றில், பாண்டிய மன்னருள் ஒருவனாகிய அறிவுடை நம்பி (பாண்டியன் அறிவுடை நம்பி) மக்களிடமிருந்து வரி வாங்குவதில் குறை இருப்பதை அறிந்து, குடிமக்களிடமிருந்து மன்னன் வரிவாங்கும் முறையை உணர்த்தப் பிசிராந்தையார் புறம். 184ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

பிசிராந்தையாரின் பாடலைக் கேட்டபின் பாண்டியன் அறிவுடை நம்பி வரிவாங்கும் முறையை மாறுதல் செய்து ஒழுங்குபடுத்தினான் என்பர். இவர்களது காலம் கி.மு. 225-175.[7]

**5.3.7.1.** மன்னன் அறநெறியை அறியும் அறிவற்றவனாகி, நாள்தோறும் தகுதி அறியாதவரும் உறுதி கூறாதவருமான, மன்னன் விரும்பியதையே விரும்பிப் பேசும் இயல்பும் ஆரவாரமும் உடைய அமைச்சர்களுடன் கூடி, மக்கள் மன்னனிடம் கொண்ட அன்பு கெடும்படி வாங்கும் வரியை விரும்புவானாயின், யானை புகுந்த விளைநிலத்தைப் போல தானும் உண்ணான் உலகமும் அழியும் என்று கூறப்பட்டுள்ளது.

இதிலிருந்து, அறிவற்ற மன்னன் போக்கிலேயே ஆரவாரம் உடைய

அமைச்சர்களும் சேர்ந்து, அளவுக்குப் பொருந்தாத முறையில் வரிவாங்கும் காரணத்தினால், மக்கள் தெய்வமாகக் கருதும் மன்னனிடம் கொண்ட அன்பு கெடும்[8] என்று கூறப்பட்டிருப்பதால் மக்களுக்கு, தெய்வநிலையில் கருதத்தக்க அரசனும் அமைச்சர்களும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

*"மெல்லியன் கிழவன் ஆகி வைகலும்*
*வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு*
*பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்*
*யானை புக்க புலம்போலத்*
*தானும் உண்ணான் உலகமும் கெடுமே"* (புறம். 184.7-11)

**5.3.7.2.** அளவுக்குப் பொருந்தாத முறையில் வரி வாங்கும் காரணத்தால் மக்களுக்கு, அரசன் ஒருவனும் அமைச்சர்களும் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளனர்.

**5.3.8. பரத்தை:**

**5.3.8.0.** நற்றிணையில், மருத நிலத் தலைவன் ஒருவன் மீது கொண்டிருந்த உறவின் காரணமாகப் பரத்தை ஒருத்தி கூறியது பற்றிக் கடுவன் இளமள்ளனார் பாடியுள்ளார்.[9]

**5.3.8.1.** தலைவிக்காகத் தலைவனிடம் வந்த பாணனைக் கண்ட பரத்தை, தலைவன் மீது கொண்டிருந்த உறவின் காரணமாகக் கூறியதாவது.

என்னிடம் வந்த தலைவன் தாரும் கண்ணியும் காட்டி ஒரு தன்மையான என் நெஞ்சத்தைக் கவர்ந்து கொண்டான். அதனால், இனித் தலைவனை விடுதல் அமையாது.

எம்தாய், நீ அஞ்சும்படி கணுக்களையுடைய சிறிய மூங்கிற்கோலைப் பிடித்துக் கொண்டு சினம் பெரிதுடையவளாய் இருப்பாள். எனவே, அக்கணுக்கோல் பற்றி ஒறுக்கவும் செய்வாள். எதற்கும் அவள் வருந்துவது இலள், என்று தலைவனுக்கு நட்பாக விளங்கிய பாணனைத் தான் தலைவன் மீது கொண்டிருந்த

உறவின் காரணமாக அச்சுறுத்திக் கூறியதால், பரத்தைக்குப் பாணன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

> *"கலிமா கடைஇ வந்து, எம்சேரித்*
> *தாரும் கண்ணியும் காட்டி, ஒருமைய*
> *நெஞ்சம் கொண்டமை விடுமோ? அஞ்ச,*
> *கண்ணுடைச் சிறுகோல் பற்றிக்*
> *கதம்பெரிது உடையள்; யாய்; அழுங்கலோ இலளே"*
>
> (யாய்-எம் ஆய்-எம்தாய்)(நற்.150.7-11)

**5.3.8.2.** தலைவனுக்கு நட்பாக விளங்கிய பாணன் தலைவிக்காகப் பரத்தையிடம் வந்ததன் காரணமாக அப்பரத்தைக்கு எதிர்நிலைப் பாத்திரமானான்.

**5.3.9. முடிவுகள்:**

1. தன் தந்தை துரோணரைக் கொன்ற திட்டத்துய்மனின் தலையைத் திருகி எறிந்தமையால் அசுவத்தாமனுக்கு திட்டத்துய்மன் எதிர்நிலைப் பாத்திரம்.

2. தன் மனைவி துரோபதையின் கூந்தலைப் பற்றி இழுத்ததன் காரணமாக அவள் உற்ற இடரைக் களைய வேண்டியும், பங்காளியாகிய துச்சாதனின் நெஞ்சைப் பிளந்து போட்டு வஞ்சினத்தை முடித்தான் என்றமையாலும் வீமனுக்குத் துச்சாதனன் எதிர்நிலைப் பாத்திரம்.

3. விதவையர்க்கு, கணவனுடனே சேர்ந்து சுமங்கலிகளாக உயிர்நீத்த பெண்கள் எதிர்நிலையாயினர்.

4. மக்கள் இருவரும் அரசாட்சி உரிமைக்காகத் தந்தையிடம் போரிட்டமையால் கோப்பெருஞ்சோழனுக்கு எதிரிகள்.

5. ஒருகுடியில் பிறந்த மூத்தவன் கல்வி கற்காதவன் என்னும் காரணத்தால் அரசன் ஒருவனுக்கு எதிர்நிலைப் பாத்திரம்.

6. ஒருமகன் கல்வி கற்காதவன் என்னும் காரணத்தால் அவனது தாய்க்கு எதிர்நிலைப் பாத்திரம்.

7. அளவுக்குப் பொருந்தாத முறையில் வரிவாங்கும் காரணத்தால் மக்களுக்கு அரசன் ஒருவனும் அமைச்சர்களும் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

8. தலைவனுக்கு நட்பாக விளங்கிய பாணன், தலைவிக்காகப் பரத்தையிடம் வந்ததன் காரணமாக அப்பரத்தைக்கு எதிராளியானான்.

இவர்களில், வீமனுக்கு எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.



## அடிக்குறிப்புகள்

1. அபிதான சிந்தாமணி, ஆ. சிங்காரவேலு முதலியார், பக். 24,25.
   கழகத் தமிழகராதி, கழகப் புலவர் குழுவினர், ப.11.
2. வில்லி பாரதம், சம்பவச் சருக்கம், 222,223, ப. 133.
3. புறநானூறு, தொகுதி-1, 62, பக். 146-148,
   சங்ககாலமன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 54, 57.
4. சங்க இலக்கியம், பன்முக ஆய்வு, முனைவர் இரா. சந்திரசேகரன் பக்.192,193.
5. புறநானூறு, தொகுதி-1, 183, பக். 356-358.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 75, 81.
6. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 246.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-1, ப. 159.
7. புறநானூறு, தொகுதி-1, 184,. பக். 358-360.
   மேலது, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 382.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 75, 90, 92.
8. சங்ககாலத் தமிழக வரலாறு, தொகுதி-2, ப. 188.
   சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி, ப. 162.
   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 246.
9. நற்றிணை, 150, பக். 279, 280.



## 5.4. சான்றோரின் எதிர்நிலைப் பாத்திரங்கள்

5.4.0 முன்னுரை

5.4.1 சான்றோர்

5.4.2 பொத்தியார் மற்றும் மற்ற புலவர்கள்

5.4.3 முடிவுரை

**5.4.0.** சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்னும் ஆய்வுத் தலைப்பின் ஐந்தாம் இயலில் நான்காவதாக ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது சான்றோர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள். இதில், சான்றோர், பொத்தியார் மற்றும் மற்ற புலவர்கள் ஆகியோருக்கான எதிர்நிலைப் பாத்திரங்கள், சான்றோர்களின் எதிர்நிலை காரணமாக ஆராயப்பட்டு, காலநிரல்படி சொல்லப்பட்டுள்ளது.

புலவர்களைக் குறிக்க வழங்கிய பிறசொற்கள் சான்றோர், பரிசிலர், இரவலர் என்பனவாகும். சால் என்னும் சொற்கு நிறைவு என்பது பொருளாகும். எனவே, அறிவானும் ஒழுக்கத்தானும் நிறையுடையார், முழுமை பெற்றவர்கள் என்னும் பொருளிற் சான்றோர் என்னும் சொல்லை ஆண்டனர் எனத் தெரிகிறது.[1]

**5.4.1. சான்றோர்:**

**5.4.1.0.** புறநானூற்றில் பூதப்பாண்டியனின் மனைவியான பெருங்கோப் பெண்டு பாடியது. ஒல்லையூர் கூற்றத்தை வென்ற பூதப்பாண்டியனுடன் ஆட்சி செய்தவள். பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு என்று அழைக்கப்பட்டவள். இவள் பூதப்பாண்டியனின் காலமான கி.மு. 350-325இல் வாழ்ந்துள்ளாள்.[2]

**5.4.1.1.** ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் இறந்த பொழுது அவன் மனைவி பெருங்கோப்பெண்டு தன் கணவனுடன் தீப்புக முனைந்தாள். அதைக் கண்ட அரசியல் சுற்றத்தாரான சான்றோர் அப்பெருமாட்டியைத் தீயில் புகவேண்டா என்று தடுத்தனர். அரசன் இல்லாத குறைநீங்க அரசை ஏற்று நடத்திட வேண்டும் என்றனர். அவர்தம் கூற்றை ஏற்காத பெருங்கோப்பெண்டு, தன்னைத் தீப்புகா வண்ணம் தடுக்கும் சான்றோரிடம் சினங்கொண்டு, பல்சான்றீரே! பொல்லாத ஆராய்ச்சியின் விளைவாகக் கணவனுடன் இறத்தலைக் கைவிடுக எனக்கூறும் பல்சான்றீரே! நெய்யை உணவில் சேர்த்துக் கொள்ளாமல் நீர்ச்சோற்றை வேளைக்கீரையுடன் உண்டும், பாயின்றிப் படுத்தும் வருந்தும் கைம்மை நோன்பு மேற்கொள்ள உடன்படேன்; தாமரைப் பொய்கையும் தீயும் எனக்கு ஒரே தன்மை உடையதாகும் என்று கூறிச் சான்றோர்தம் கூற்றை ஏற்காமல் மறுப்புக் கூறியதால் அச்சான்றோர்க்குப் பெருங்கோப்பெண்டு எதிர்நிலைப் பாத்திரமானாள் (புறம். 246).[3]

**5.4.1.2.0.** புறநானூற்றில் கூறப்படும் நரிவெரூஉத்தலையார் நரியும் அஞ்சத்தக்க தோற்றத்தை உடையவராக விளங்கியமையால், நரிவெரூஉத்தலையார் எனப்பட்டார். இவரது காலம் கி.மு. 300-275.[4]

**5.4.1.2.1.** பல நல்ல குணங்களை உடைய சான்றோர்களே ஆயினும், கயல்மீனின் முள்ளைப் போன்ற நரைமயிர் மிக்க, சுருங்கிய கன்னங்களையுடைய பயன் இல்லாத முதுமைப் பருவம் உடைய நற்சான்றோரேயாயினும், மழு என்ற கூர்மையான படைக்கலத்தையும் மிகுந்த வலிமையையும் உடைய கூற்றுவன் அவர்களைப் பாசக்கயிற்றால் கட்டுதல் காரணமாகப் பிடித்துக் கொண்டுப் போகுங் காலத்தில் அவர்கள் மிகவும் மனம் வருந்துவர் என்றமையால், சான்றோர்களுக்குக் கூற்றுவன் எதிர்நிலையானான்.

*"பல்சான் றீரே பல்சான் றீரே*
*கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்*
*பயனில் மூப்பின் பல்சான் றீரே*
*கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்*
*பிணிக்கும் காலை இரங்குவிர் மாதோ"* (புறம். 195)

**5.4.1.3.0.** புறநானூற்றில், கோடை பாடிய பெரும்பூதனார் பாடியது. கோடை என்ற கொடைக்கானலைப் புகழ்ந்து பாடிய காரணத்தால் கோடை பாடிய பெரும்பூதனார் என அழைக்கப் பெற்றார்.[5]

**5.4.1.3.1.** பகைவர் பசுக்கூட்டத்தைக் கவர்ந்து கொண்டுபோனதால், பசுக்கூட்டத்திற்குரிய மறவர், அப்பசுக்களை மீட்டுவர எண்ணித்தம் தலைவனுடன் செல்லுங்கால் பகைவரின் நிலையும் காவலின் நிலையும் அறிந்து கொள்ளாமல் போருக்குச் செல்லக்கூடாது (காவல் செய்வாரைக் கொன்றே போருக்குச் செல்ல வேண்டும்) என்பதை அறிந்து ஒரு சான்றோர் கூறியதால் அச்சான்றோருக்கு நிரை கவரச் சென்ற மறவர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

*"ஏறுஉடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது*
*இலையுதை பெருங்காட்டுத் தலைகரந்து இருந்த*

*வல்வில் மறவர் ஒடுக்கம் காணாய்*

*செல்லல் செல்லல் சிறக்கநின் உள்ளம்*

*முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்*

*தாவுபு தெறிக்கும் ஆன்மேல்*

*புடையிலங்கு ஒள்வாள் புனைகழ லோயே"* (புறம். 259)

## 5.4.2. பொத்தியார் மற்றும் மற்ற புலவர்கள்:

**5.4.2.0.** புறநானூற்றில், 221ஆம் பாடலைப் பொத்தியார் என்ற புலவர் பாடியுள்ளார். இவர் கோப்பெருஞ்சோழனின் நண்பர். அவன் வடக்கிருந்தபோது தாமும் வடக்கிருக்க முனைந்தார். அப்போது கோப்பெருஞ்சோழன், இவர் மனைவி குழந்தை பெற்ற பின்பு வடக்கிருக்க வருமாறு கூற, அவ்வாறே சென்று வடக்கிருந்து உயிர்நீத்தவர். இவரால் பாடப்பட்டவர்கள் கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் போன்றோர். இவரது காலம் கி.மு. 225-200.[6]

இவர், கோப்பெருஞ்சோழனது உயிரைக் கூற்றுவன் கொண்டு சென்றமையால், அந்தக் கூற்றுவனை வையலாம் வாருங்கள் என்று மற்ற மெய்ம்மையுடைய புலவர்களையும் (அவர் காலத்தில் வாழ்ந்த பிசிராந்தையார், புல்லாற்றூர் எயிற்றியனார், கண்ணகனார், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார், காப்பியாற்றுக் காப்பியனார், பரணர், மோசிகீரனார், அரிசில் கிழார், முடத்தாமக் கண்ணியார், கடியலூர் உருத்திரங்கண்ணனார்-I,கருங்குழலாதனார் போன்ற புலவர்களில் தனக்குத் தொடர்புடைய புலவர்களை மனத்தில் நினைத்து) சுற்றத்துடன் சேர்த்து அழைத்துள்ளார் என்பது தெரிவிக்கப்பட்டுள்ளது.

**5.4.2.1.** கோப்பெருஞ்சோழன் சான்றோரால் புகழப்பட்ட நட்பும், வலியோரிடம் வலிமை காட்டும் திறனும், அந்தணர்க்குப் புகலிடம் தரும் தன்மையும் உடையவன் என்பதை எல்லாம் எண்ணிப் பாராது கூற்றம் அவனது உயிரைக் கொண்டு சென்றமையால், அந்தக் கூற்றுவனை வையலாம் வாருங்கள் என்று மற்ற புலவர்களிடம் பொத்தியார் என்ற புலவர் தெரிவித்துள்ளமையால், பொத்தியார் என்ற புலவர்க்கும் மற்ற புலவர்களுக்கும் கூற்றுவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

"திறவோர் புகழ்ந்த திண்நண் பினனே
மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்
அனையன் என்னாது அத்தக் கோனை
நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று
பைதல் ஒக்கல் தழீஇ அதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்!" (புறம். 221.4-10)

## 5.4.3. முடிவுகள்:

1. சான்றோர்தம் கூற்றை ஏற்க மறுப்புத் தெரிவித்ததன் காரணமாக அச்சான்றோர்க்குப் பெருங்கோப்பெண்டு எதிர்நிலைப் பாத்திரம்.

2. பாசக் கயிற்றால் கட்டி மனம் வருந்தப் பிடித்துக் கொண்டு போவதன் காரணமாகச் சான்றோருக்குக் கூற்றுவன் எதிர்நிலைப் பாத்திரம்.

3. காவல் செய்வாரைக் கொன்று அதன் பிறகே நிரை கவரச் செல்ல வேண்டும் என்று கூறிய சான்றோருக்கு நிரைகவரச் சென்ற மறவர் எதிர்நிலைப் பாத்திரம்.

4. கோப்பெருஞ்சோழனின் நல்ல பண்புகளை எண்ணிப் பாராது அவனது உயிரைக் கொண்டு சென்றவன் கூற்றுவன் என்பதால் அக்கூற்றுவனை வையலாம் வாருங்கள் என்று பொத்தியார் மற்ற புலவர்களிடம் தெரிவித்தமையால் பொத்தியார்க்கும் மற்ற புலவர்க்கும் கூற்றுவன் எதிர்நிலைப்பாத்திரம்.



# அடிக்குறிப்புகள்

1. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், அ. தட்சிணாமூர்த்தி, ப. 263.

   சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், ப. 131.

2. சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 4,5.

3. சங்க காலத் தமிழர் வாழ்வு, லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார், ப. 117.

   இலக்கிய வரலாறு, முதற்பாகம், கா.சு. பிள்ளை, ப. 92.

4. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 380.

   மேலது, தொகுதி-1, 195, ப. 376.

   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, பக். 20,21.

5. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 376.

6. புறநானூறு, தொகுதி-2, பாடினோர் வரலாறு, ப. 384.

   சங்ககால மன்னர்களின் காலநிலை, தொகுதி-2, ப. 75.



# முடிவுரை

**0.** சங்க இலக்கியங்களில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்ததில் கண்ட முடிவுகள் இயல்வாரியாக இவ்வியலில் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

## 1. அரசரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற முதல் இயலில் கண்ட முடிவுகள்:

**1.1.** எதிர்நிலை என்பதற்கு எதிர்ந்த, எதிர்ந்து, எதிர்கொண்ட, எதிர்நின்று, எதிர்பூண்டோர், எதிர்தலைக்கொண்ட என்ற நேரடிச் சொற்களும் இதே பொருள் தரக்கூடிய பொருது, மாற்று, முரணிய, முரண் கொள், மாற்றோர், பகைவர், ஒன்னார், நண்ணார், ஏதில், அடங்கான், போர்அடு, பொருது களம் பட்டென, பெண்கொலை புரிந்த, தெவ்வர், ஒன்னாத் தெவ்வர், ஒட்டாது அகன்ற ஒன்னாத் தெவ்வர், பொருந்தாத் தெவ்வர், பணியாமையின், வேற்று, நண்ணாத் தெவ்வர், அடங்கா, ஒழித்த, இகல்முனை, அறன்இல், பணிந்து பொழியலனே, ஒன்னலர், பகைமுக, அருளாது, எடுக்க வல்லேன், யாத்துப் புடைப்ப, ஒழிந்த போன்ற சொற்களும் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இதில், நேரிடையாக எதிர்நிலைப் பொருள் கொள்ளும் சொற்களாக எதிர்ந்த, எதிர்ந்து, எதிர்கொண்ட, எதிர்நின்று, எதிர்பூண்டோர், எதிர்தலைக்கொண்ட போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளதை ஆய்வு மூலம் அறிய முடிந்தது.

## 1.2. சோழ மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பகுதியில் கண்ட முடிவுகள்:

1. சேரனின் படைத்தலைவன் கணையன், சோழ மன்னன் பெரும்பூண் சென்னிக்கு, நாடு பிடிக்கும் ஆசையின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானான்.

2. சேரரின் படைத்தலைவர்கள் நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை போன்ற அறுவர், பெரும்பூண் சென்னியின் படைத்தலைவன் பழையனுக்கு, வீரம் காரணமாக எதிர்நிலையாயினர்.

3. ஆமூர்மல்லன், தந்தை தித்தன் போன்றவர், சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளிக்கு, வீரம் காரணமாக எதிர்நிலைப்பாத்திரமாயினர்.

4. வேளிர் பதினொருவர், முதலாம் கரிகாற் பெருவளத்தானுக்கு வீரம், பகைவர் நாட்டை எரியூட்டிக் கொள்ளை செய்து அழித்தல் வேண்டும் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

5. சேரபாண்டியர், தாயத்தார், பல ஒளி நாட்டார், பழைய அருவாள நாட்டு மன்னர், வடதிசை மன்னர், குடநாட்டு மன்னர், முல்லைநில மன்னர், இருங்கோவேள் போன்றவர்கள் இரண்டாம் கரிகாற் பெருவளத்தானுக்கு வீரம், தன்னுணர்வு, இளமையில் தாயத்தார் சிறையிலடைத்து இழிப்படுத்தியமை காரணங்களால் எதிர்நிலையாயினர்.

6. பரதவர், வடநாட்டு வடுகர், நன்னன் போன்றவர் இளஞ்சேட்சென்னிக்கு வீரத்தின், தன்னுணர்வின், முன்னோர் குறையாக விட்டுச் சென்ற செயலைச் செய்து முடிக்க வேண்டியதன் காரணங்களால் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

7. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளிக்கு, பகைமையின், கோபத்தின் காரணங்களால் எதிரியாக இருந்துள்ளனர்.

8. சேரன் செங்குட்டுவன், செம்பியனுக்கு, பகைவரை அடக்கியாள வேண்டியதன் காரணமாக எதிர்நிலையானான்.

9. மக்கள் இருவர், கோப்பெருஞ்சோழனுக்கு, தாயமுறை அரசாட்சி காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

10. சேர பாண்டியர், நலங்கிள்ளிக்கு, வீரம் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

11. சோழன் நலங்கிள்ளி, புலவர் இளந்தத்தன் போன்றவர் நெடுங்கிள்ளிக்கு,

பகைமை, நலங்கிள்ளியின் ஒற்றன் என எண்ணிக் கொல்ல முற்பட்டமை காரணங்களால் எதிர்நிலையாயினர்.

12. பாண்டியன் பழையன் மாறன், இமயம்வென்ற சேரன், சேர பாண்டிய பெருவேந்தர், மலையமான் மக்கள், தாழி செய்யும் குயவன், கொங்கு நாட்டவர் போன்றவர் கிள்ளிவளவனுக்கு, வீரத்தின், தன்னுணர்வின், சினத்தின், பகைமையின், தாழியைச் செய்யும் ஆற்றல் குயவனுக்கில்லாமை காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

13. சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, அம்பர்கிழவோன் எனப்படும் அருவந்தை போன்றவர் சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளிக்கு, பகைமை, வீரம் காரணங்களால் எதிர்நினலயாயினர்.

14. ஆமூர் மல்லன், பாண்டியர், சேரர், கோசர், ஆரியர், போன்றவர் சோழருக்கு, வீரத்தின், தன்னுணர்வின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

15. சோழ மன்னர்களில் கிள்ளிவளவனுக்கு, அவனது வீரம், தன்னுணர்வு, சினம், புலவருக்குப் பரிசில் தருதல், நாடு பிடிக்கும் ஆசை, பகைமை, புகழ் போன்ற காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

## <u>1.3. பாண்டிய மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பகுதியில் கண்ட முடிவுகள்:</u>

1. பசும்பூண் பாண்டியனுக்கு, அவனது வீரம், நாடுபிடிக்கும் ஆசையின் காரணங்களால் கொங்கர் எதிர்நிலையானார்.

2. சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை, சோழன் நலங்கிள்ளி, குறுநில மன்னர் திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன் ஆகிய வேளிர் ஐவர், நாவலந்தீவு மன்னர்கள், தென் பரதவர் என்னும் குறுநில மன்னர் போன்றவர்கள் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு நாடு பிடிக்கும் ஆசையின், பகைமையின், இழிவுபடுத்திப்

பகைச் சொல் பேசியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

3. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிக்கு, அவனது தன்னுணர்வு காரணமாக வடநாட்டு அரசர் எதிர்நிலையாயினர்.

4. வேங்கைமார்பன், கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதிக்கு அவனது வீரம் காரணமாக எதிர்நிலையானான்.

5. பாண்டிய மன்னர்களில், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு, அவனது வீரம், தன்னுணர்வு, நாடு பிடிக்கும் ஆசை, பகைமை, படை வலிமை, படைப் பயிற்சி, சினம், பகைவர் இழிவுபடுத்திப் பகைச் சொல் பேசுதல், பகைவரது நகரைக் கொள்ளையிடல் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

## 1.4. சேர மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பிரிவில் கண்ட முடிவுகள்:

1. யவனர், கரிகாற் பெருவளத்தான் போன்றோர் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனுக்கு அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

2. ஆரிய மன்னர், யவனர், கடம்பன் போன்றவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு, வீரத்தின், மாற்றாரைக் கொள்ளையடித்துச் சிறைபிடித்தலின், சினத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

3. பாண்டியர், கொங்கர், சோழர், வேளிர் போன்றவர்கள் பல்யானைச் செல்கெழு குட்டுவனுக்கு, வீரத்தின், பகைவரது அரண்களை அழித்ததின், சினத்தின், பகைவர் நாட்டைத் தீயிட்டுக் கொளுத்தியதின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

4. இரண்டு பேரரசர்கள் ஆகிய சோழ பாண்டியர் செல்வக்கடுங்கோ வாழியாதனுக்கு அவனது படைபலத்தின் காரணமாக எதிர்நிலையாயினர்.

5. பூழிநாட்டவர், நன்னன், நெடுமிடல் அஞ்சி, சேரமன்னர் போன்றோர் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கு நாடுபிடிக்கும் ஆசையின், வீரத்தின், பகைவர் நிலங்களைக் கெடுத்துத் தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டதின், இழிவுபடுத்தல் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

6. கனக விசயர், யவனச் சிற்றரசர், இடும்பாவனத்து வீரர்கள், பழையன், சோழ நாட்டுக் குறுநிலமன்னர் ஒன்பதின்மர், குறும்பர் போன்றோர் சேரன் செங்குட்டுவனுக்கு, கண்ணகிக்குச் சிலை சமைப்பதற்குரிய கல்லை இமயமலையிலிருந்து எடுத்துவர எண்ணியதின், கப்பற்படை செலுத்திப் போரிட்டதின், மாற்றரசரின் காவல் மரத்தை வெட்டியதின், மாற்றரசர்தம் மகளிரின் கூந்தலைக் களைந்தமையின், சினத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

7. அதிகமான், கழுவுள் என்னும் ஆயர் தலைவன், பதினான்கு வேளிர்கள், அதிகமான் மகன் பொகுட்டெழினி ஆகியோர், பெருஞ்சேரல் இரும்பொறைக்கு அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின், வலிமையின், தகடூர்க் கோட்டையை அழித்ததின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

8. மழவர், ஆரிய மக்கள் போன்றோர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு, அவனது வீரத்தின், கவர்ந்து சென்ற ஆடுகளை மீட்டுக் கொண்டு வருவதற்காகப் போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

9. விச்சிக்கோன், கோப்பெருஞ்சோழன், பழையன் மாறன் போன்றோர் இளஞ்சேரல் இரும்பொறைக்கு, வீரத்தின், சினத்தின், வஞ்சினத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

10. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், மூவன் போன்றோர் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறைக்கு, பகைவர் நாட்டை அழித்து அவர்தம் அணிகலன்களைக் கவர்ந்து கொண்டதின், போரிட்டுப் பல்லைப் பிடுங்கியதின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

11. கிள்ளிவளவன், சேரமான் கோக்கோதை மார்பனுக்கு, பழையன் மாறன்

கிள்ளிவளவனின் ஊரைக் கவர்ந்து கொண்டதைக் கண்டு மகிழ்ச்சியடைந்ததின் காரணத்தால் எதிராளியானான்.

12. சோழன் செங்கணான், அவனது சிறைக்காவலர்கள் ஆகியோர் சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கு, அவன் போரில் தோற்றுச் சிறை வைக்கப்பட்டதின், மானத்தைக் காக்க உயிர் துறந்ததின் காரணங்களால் எதிராளியானார்கள்.

13. சேரமன்னர்களில் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலுக்கும் சேரன் செங்குட்டுவனுக்கும் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இது அவர்களின் வீரம் காரணமாக இருந்துள்ளது.

## <u>1.5. குறுநில மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பகுதியில் கண்ட முடிவுகள்:</u>

1. அதிகன், கொங்கருக்கு, அவர்களது வீரத்தின் காரணமாக எதிரியானான்.

2. வேளிர், முதலாம் திதியனுக்கு அவனது வீரம் காரணமாக எதிராளியானார்கள்.

3. கோசர், இரண்டாம் திதியனுக்கு அவனது வீரம் காரணமாக எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

4. அன்னி, மூன்றாம் திதியனுக்கு, அவனது காவல் மரத்தை வெட்டியதின் காரணமாக எதிர்நிலையானான்.

5. அதிகன், ஆஅய் எயினன் ஆகியோர் மிஞிலிக்கு, அஞ்சாமையின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

6. முதலாம் எவ்வி, நன்னன், நன்னனின் படைத்தலைவன் மிஞிலி போன்றோர் அகுதைக்கு, அவன் சக்கரப்படை வைத்திருந்ததன், ஆஅய் எயினனின் உடலை எடுத்து வந்து வேள்மகளிரிடம் ஒப்படைத்ததின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

7. பிண்டன், நீராடச் சென்று மாங்கனி உண்ட பெண் மற்றும் அவளது சுற்றத்தார் போன்றோர், முதலாம் நன்னனுக்கு, அவனது வீரத்தின், பெண் கொலை புரிந்ததின் காரணங்களால் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

8. அகுதை, முதலாம் எவ்விக்கு, அவனது வீரத்தின், விழுப்புண்பட்டு போர்க்களத்தில் இறந்ததின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

9. நெடுமிடல், இரண்டாம் எவ்விக்கு, அவனது ஏவலைக் கேட்டு நடக்காமையின் காரணமாக எதிர்நிலையானான்.

10. அன்னி, மூன்றாம் எவ்விக்கு, அவனது அறிவுரையை ஏற்றுக் கொள்ளாமை காரணத்தால் எதிர்நிலையானான்.

11. நன்னன், அன்னி மிஞிலி, மோகூர் மன்னன் பழையன் போன்றோர் கோசருக்கு, அவர்தம் வஞ்சினத்தின், அன்னி மிஞிலியின் தந்தையின் கண்களைப் பிடுங்கியதின், அஞ்சாமையின் காரணங்களால் எதிராளியானார்கள்.

12. கழுவுள், பதினான்கு வேளிர்க்கு, அவர்கள் ஒன்று கூடித் தாக்கிப் போரிட்டதின் காரணமாக எதிராளியானான்.

13. கணையன், ஆரியமல்லன், வெளியன் தித்தன் ஆகியோர் முதலாம் பாணனுக்கு அவனது வல்லமை, அச்சம் காரணமாக எதிர்நிலையானார்கள்.

14. கொங்கர், சேரனின் படைத்தலைவர்கள் அறுவர், நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை ஆகியோர் முதலாம் பழையனுக்கு, அவனது பிறர்க்கு உதவும் மனப்பான்மையின், வீரத்தின் காரணங்களால் எதிராளியானார்கள்.

15. அறுகை, சேரன் செங்குட்டுவன் ஆகியோர், இரண்டாம் பழையன் மோகூர் மன்னனுக்கு, அவனது வீரத்தின், காவல் மரமான வேப்ப மரத்தைக் காக்க இயலாமையின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

16. மோரியர், கிள்ளிவளவன் போன்றோர், மூன்றாம் பழையன் மோகூர் மன்னனுக்கு, அவனது பகைவர் போர்முனையை அழிக்கும் ஆற்றலின், எதிரியின் குதிரை, யானை கைப்பற்றியதின் காரணங்களால் எதிராளியானார்.

17. கோசர், அன்னி மிஞிலிக்கு, அவள் அக்கோசர்களைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டதின் காரணமாக எதிர்நிலையாயினர்.

18. தித்தன் வெளியன் அவையிலிருந்த பாணன், பழையன் போன்றோர் கட்டிக்கு அவனது தன்னுணர்வின், கூட்டணியில் சேர்ந்து போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

19. சோழனின் படைத்தலைவன் மத்தி, முதலாம் எழினிக்கு அவன் ஏவலைக் கேட்டு நடக்காத காரணத்தால் எதிர்நிலையானான்.

20. பெருஞ்சேரலிரும்பொறை, இரண்டாம் எழினி எனப்படும் அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலையானான்.

21. பாண்டியன் நெடுஞ்செழியன், மூன்றாம் எழினிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானான்.

22. கொங்கர், ஆஅய் அண்டிரனுக்கு அவனது வீரம் காரணமாக எதிர்நிலையாயினர்.

23. ஓரி, முதலாம் மலையமான் திருமுடிக்காரிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலையானான்.

24. சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, இரண்டாம் மலையமான் திருமுடிக்காரிக்கு, அவனது உதவும் மனப்பான்மை காரணமாக எதிர்நிலையானான்.

25. சேர, சோழ, பாண்டியர், பாரிக்கும் ஓய்மான் நல்லியங் கோடனுக்கும் வீரத்தின், தன்னுணர்வின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

26. மூவேந்தர், பாரி மகளிர்க்கு, பாரியை வஞ்சித்துக் கொன்றுவிட்டதன் காரணமாக எதிராளியானார்கள்.

27. மழவர், புல்லிக்கு அவன் பகைவரது செல்வத்தைக் கவர்ந்து கொள்ளுதல் காரணமாக எதிர்நிலையாயினர்.

28. பெரியன், திதியன் போன்றோர் அன்னிக்கு, பகைமையின் காவல் மரத்தை வெட்டிச் சாய்த்தமையின் காரணங்களால் எதிராளியாயினர்.

29. தொண்டைமான், குறும்பர், கோவலூர் மலாடர் மன்னன், சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் போன்ற ஏழ்மன்னர்கள் போன்றோர் அதியமான் நெடுமான் அஞ்சிக்கு, அவனது படை வலிமையின், மாற்றார் பொருள் கவர்தலின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

30. குறுநில மன்னர்களில் அதியமான் நெடுமான் அஞ்சிக்கு, அவனது படை வலிமையின், மாற்றார் பொருள் கவர்தலின், தன்னுணர்வின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள் அதிகம்.

## 1.6. வீரர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பிரிவில் கண்ட முடிவுகள்:

1. முதலாம் எழினி, வீரன் மத்திக்கு, அவனது அரசன் ஆணை காரணமாகப் பிடித்து வந்ததால் எதிர்நிலையானான்.

2. சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியின் வீரர்கள், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனின் வீரர்க்கு, அவனது தேர்ப்படை கொண்டு போரிட்டதன் காரணமாக எதிராளியாயினர்.

3. இளையோரும், முதியோரும், மூன்றாம் திதியன், அன்னி ஆகியோரின் வீரர்க்கு, அவர்களுடன் போரிடத் தகுதியில்லாமை காரணமாக வேறிடத்திற்குச் செல்லல் வேண்டும் என அனுப்பியதன் காரணமாக எதிராளியாயினர்.

4. வீரர்களில், பெண்ணின் தந்தை, தமையர் போன்ற வீரர்க்கு, அவர்களது வீரம், குடிமை ஆண்மை போன்றவற்றால் பொருந்தாதவர்க்குப் பெண் தருவதில்லை, போரில் சிறந்தவர்க்கு மட்டும் பெண் தர வேண்டும், போர் வெறி கொண்டதின், பெண் தர மறுத்தமையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இது அவர்களது வீரம் காரணமாக இருந்துள்ளது.

## 2. புலவரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற இரண்டாம் இயலில் கண்ட முடிவுகள்:

1. சேர, சோழ, பாண்டியர், வையாவிக் கோப்பெரும்பேகன் ஆகியோர் கபிலருக்கு, பாரியை எதிர்த்து வெற்றி பெற்றுவிடலாம் என்று ஒன்று சேர்ந்து வந்ததன், பேகனைத் திருத்திக் கண்ணகியை அவனுடன் ஒன்று சேர்க்க வேண்டும் என்று அறிவுறுத்தியதன் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

2. முதலாம் பெருங்குன்றூர் கிழார் அறிவுரை கூறியமையால் வையாவிக் கோப்பெரும் பேகன் எதிர்நிலையானான்.

3. சேரமான் குடக்கோச்சேரலிரும்பொறை, இரண்டாம் பெருங்குன்றூர் கிழாருக்குப் பரிசில் கொடுக்காததன் காரணமாக எதிர்நிலையானான்.

4. வையாவிக் கோப்பெரும் பேகன், பரணர்க்கும் அரிசில் கிழாருக்கும் அவர்களின் அறிவுரை காரணமாக எதிர்நிலையாயினர்.

5. புல்லாற்றூர் எயிற்றியனார் அறிவுரை கூறியதால் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலையானான்.

6. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார் மன உணர்வினால் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலையானான்.

7. கோப்பெருஞ்சோழன், பொத்தியாருக்கு, பிள்ளை பெறாதவர் வடக்கிருக்கத் தகுதியற்றவர் எனத் தடுத்ததன் காரணமாக எதிர்நிலையானான்.

8. ஆலத்தூர் கிழார் அறிவுரை காரணமாகக் கிள்ளிவளவன் எதிர்நிலையானான்.

9. கோவூர் கிழாரின் அறிவுரை காரணமாக நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

10. தாமப்பல் கண்ணனார் அறிவுரை கூறியதால் மாவளத்தான் எதிர்நிலைப் பாத்திரம்.

11. இளவிச்சிக்கோ, இளங்குமணன், மூவன் போன்றோர் பெருந்தலைச் சாத்தனார்க்கு, தழுவ மறுத்ததின், அறிவுரையின், பரிசில் தராது காலம் நீட்டித்தமையின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

12. இளவெளிமான், அதியமான் நெடுமான் அஞ்சி போன்றோர் பெருஞ்சித்திரனார்க்குச் சிறிது பொருள் கொடுத்ததின், மனம் கனிந்து ஈயாததின், இழிவுபடுத்தியதின், தகுதி அறிந்து பொருள் தராததின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

13. ஐயூர் முடவனார் அறிவுரையால் தாழியைச் செய்யும் குயவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

14. பெருஞ்சிக்கல்கிழான், மதுரை மருதனிள நாகனார்க்கு, போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்துவிடக்கூடாது என அறிவுரை கூறியதன் காரணத்தால் எதிர்நிலையானான்.

15. பெருங்கோப்பெண்டை, தீயில் புகத்தடை செய்ததன் காரணமாகச் சான்றோர் எதிர்நிலைப் பாத்திரம்.

16. சோழன், போரவைக் கோப்பெரு நற்கிள்ளி, நக்கண்ணையாருக்கு, அவளது காதல் அறிந்து பசலையைப் போக்க வராத மன்னனோடு கூடப் பெறாமல் இருந்தமை காரணமாக எதிர்நிலையானான்.

17. தொண்டைமான், ஔவையார்க்கு, வஞ்சப்புகழ்ச்சி காரணமாக எதிர்நிலையானான்.

18. புலவர்களில், ஔவையார் என்னும் பெண்பாற் புலவர்க்கு, அதியமானுடன் பகைவர் போரிடலைத் தடுத்ததின், அதியமானின் வீரத்தை வெளிப்படுத்தியதின், தொண்டமானிடம் தூது சென்று அவனை வஞ்சப் புகழ்ச்சியில் புகழ்வது போலப் பழித்துப் பேசியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

## 3. தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற மூன்றாம் இயலில் கண்ட முடிவுகள்:

1. கபிலர் குறிப்பிடும் பாணர் கூற்றிலிருந்து வையாவிக் கோப்பெரும் பேகனுக்கு, பரத்தை பிரிவு காரணமாக அவனது மனைவி கண்ணகி எதிர்நிலையாய் இருந்துள்ளாள்.

2. தலைவனுக்கு, தலைவி, தலைவியின் தோழி, தலைவியின் தாய் போன்றோர் தலைவனின் காதல் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

3. தொண்டைமான் இளந்திரையன் தம் கூற்றிலிருந்து தனலவனுக்கு, தலைவி அறிவு மயக்கமுற்றமையால் எதிர்நிலைப் பாத்திரமானாள்.

4. ஓரம்போகியார் தம் கூற்றிலிருந்து பரத்தை நிமித்தமாகச் சென்ற தலைவனுக்கு, தலைவி, பரத்தை, தலைவியின் தோழி போன்றோர் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

5. கொற்றனார் தம் கூற்றிலிருந்து பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, பரத்தையர், தோழி போன்றோர் எதிர்நிலையாயினர்.

6. நல்லந்துவனார் கூற்றிலிருந்து பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, தலைவி, தோழி போன்றோர் எதிர்நிலையாயினர்.

7. சீத்தலைச் சாத்தனார் கூற்றிலிருந்து, பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, தலைவி, தோழி ஆகியோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

8. தலைவன் கூற்றாக வெளிப்படுத்துவதிலிருந்து பிரிதலினால் தலைவனுக்கு, தலைவி எதிர்நிலையானாள்.

9. பேயனார் கூற்றிலிருந்து, குறிப்பிட்ட நேரத்தில் தலைவன் வராததால் தலைவனுக்கு, தலைவி, பாணன் போன்றோர் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

10. மதுரைத் தமிழ்கூத்தனார் கடுவன் மள்ளனாரின் கூற்றிலிருந்து அறநெறி நில்லாத தலைவன் ஒருவனுக்கு, அறங்கூறு அவையத்தார், தலைவன் உற்ற தண்டனையைப் பார்த்தவர், தலைவி போன்றோர் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

## 4. தலைவியின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற நான்காம் இயலில் கண்ட முடிவுகள்:

1. வன்பரணர் கூற்றில், போர்வீரன் ஒருவன் இறந்த பிரிவாற்றாமை காரணமாக அவன் மனைவிக்கு, கூற்றுவன் எதிர்நிலையானான்.

2. பெருஞ்சித்திரனார், தம் மனைவிக்குப் பரிசில் பெற்று வரத் தாமதமாகியதால் எதிர்நிலையானார்.

3. பெருந்தலைச் சாத்தனார், தம் மனைவிக்கு, வறுமை காரணமாக எதிர்நிலையானார்.

4. இளந்திரையனார் கூற்றிலிருந்து, தலைவன், தலைவிக்கு, அவளது காமநோய் காரணமாக எதிர்நிலையானான்.

5. மாறன் வழுதி கூற்றில், பிரிவாற்றாது வருந்தியிருந்த தலைவிக்கு, மகிழ்ச்சி காரணமாகப் பூவிற்றுக் கொண்டிருந்த ஒருத்தி எதிர்நிலையானாள்.

6. உக்கிரப்பெருவழுதி கூற்றில், தலைவன் வரவுக்குக் காவலர் இடையூறாக இருந்ததன் காரணமாகத் தலைவிக்கு, அக்காவலர் எதிர்நிலையாயினர்.

7. பரதவர் மகளாகிய தலைவிக்கும் அவளது தோழிக்கும், பயன்படாதிருந்ததன் காரணமாகத் தலைவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

8. பரத்தை நிமித்தமாகத் தலைவன் பிரிந்து சென்றதால், தலைவிக்கு, பரத்தை எதிர்நிலைப் பாத்திரம் என்பதைப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

9. பேகனின் காதலி வீட்டிற்குச் சென்று பேகனைக் கண்டு கண்ணகியிடம் திரும்புமாறு கேட்டுக் கொண்டதால் அவனது காதலிக்கு, பேகனின் மனைவி கண்ணகி, புலவர்கள் பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் மற்றும் ஊர்மக்கள் போன்றோர் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

10. புலவர்கள் நக்கண்ணையார், முதுகூற்றனார், உலோச்சனார், வெண்பூதியார் போன்றோர் கூற்றிலிருந்து, பிரிவு நிமித்தம் காரணமாகத் தலைவிக்கு, தலைவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

11. பிரிவு நிமித்தம் காரணமாகவும், சினம் காரணமாகவும் கண்ணகிக்கு, வையாவிக் கோப்பெரும் பேகனும் அவனது பரத்தையும் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

12. போர், பரத்தை பிரிவு, தொழில் தேடல் பிரிவு காரணமாகத் தலைவிக்கு, தலைவன் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளான்.

## 5. பிற கூறுகளில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற ஐந்தாம் இயலில் கண்ட முடிவுகள்:

1. சூரபன்மன் மற்றும் அவனது சுற்றம், இந்திரன் போன்றவர்கள் முருகப்பெருமானுக்கு, அவுணராய் நின்ற மாமரத்தை வெட்டி வீழ்த்தியதின், அசுரர் தலைவனைக் கொன்றதின், இந்திரன் முருகப் பெருமானது சூல் அழித்ததின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

2. சூரபன்மன், முருகப்பெருமானின் கூளிச் சுற்றத்திற்கு, முருகப்பெருமானைப் பகைத்துக் கொண்டதால், கொன்று வெற்றி பெற வேண்டும் என்னும் எண்ணத்தால் எதிர்நிலையானான்.

3. தேவசேனையும் முருகப்பெருமானும், வள்ளிநாச்சிக்கு, அவள்

தேவசேனையை வணங்கிய முருகப்பெருமானின் கைகளைக் கட்டி மாலையால் புடைத்ததன் காரணமாக எதிர்நிலையாயினர்.

4. வள்ளியின் தோழியருக்கு, தேவசேனையின் தோழியர் சண்டையிட்டதன் காரணமாக எதிர்நிலையாயினர்.

5. தேவரின் குரு வியாழனுக்கு, அசுரரின் குரு வெள்ளி, தேவ அசுர நெறிகளை விளக்க வேண்டி ஒருவருக்கொருவர் மாறுபட்டமையால் எதிர்நிலைப் பாத்திரம்.

6. இரணியன், மாவலி என்னும் அசுரச் சக்கரவர்த்தி, கேசி என்னும் அசுரன், மல்லர், கம்சன் போன்றவர்கள் திருமாலுக்கு, அவர் எதிரியைக் கொன்றதின், மாவலி சக்கரவர்த்தி என்னும் அசுரனைக் கொன்றதின், தீவினை செய்பவரை அழித்ததின், மல்லர்களைக் கொன்றதின், பிறர்க்குத் துன்பம் செய்ததின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

7. மன்னர் பரம்பரையினர், பரசுராமனுக்கு, அவன் தவம் செய்தமைக்கு இடையூறு செய்ததின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

8. பிரகலாதன், இரணியனுக்கு, தந்தையைப் புகழ்ந்து பேசாமல் திருமாலைப் புகழ்ந்து பேசியமைக்காக எதிர்நிலைப் பாத்திரமானான்.

9. இராமன், சீதை ஆகிய இருவருக்கும், இராவணன், சீதையைக் கவர்ந்து சென்ற காரணத்தால் எதிர்நிலையானான்.

10. தேவர்களும் ஆதிசேடனும் கருடனுக்கு, அவன்தன் தாயை மீட்க வேண்டிப் போரிட்டமையாலும், திருமாலைக் காக்க ஆதிசேடனைத் தன் வாயில் பற்றிக் கொண்டமையாலும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

11. மேருமலையைக் காத்த ஆதிசேடனார்க்கு, அம்மலையைப் பெயர்க்க வந்த காற்றுத் தேவன் எதிர்நிலையானான்.

12. துரியோதனன், துரியோதனனுடன் பிறந்த நூறு பேர் போன்றவர்கள் ஐவர் பாண்டவர்க்கு, அவர்களைக் கொல்லப் போரிட்டமையின், தர்மபுத்திரர் முதலியோர் உள்ளே இருக்க அரக்கு மாளிகை தீப்பற்றி எரியக் காரணமானதின், அவரது நாட்டைப் பிடுங்கிக் கொண்டதின் காரணங்களால் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

13. துரியோதனன், வீமனுக்கு, பாஞ்சாலியின் ஆடையைப் பற்றி இழுத்து அவமானப்படுத்தியதின், பாஞ்சாலியின் சபதம் முடிக்க வீமனால் கொல்லப்பட்டதின் காரணங்களால் எதிர்நிலையானான்.

14. இராவணன், கூற்றுவன், அவுணர் மூவர் போன்றோர் சிவபெருமானுக்கு, இமயமலையை இராவணன் தன் கைகளால் எடுக்க முயன்றதின், கூற்றுவனைக் கொன்றதின், தேவர்க்குத் துன்பம் செய்து வந்த அவுணரை அழித்ததின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

15. தன் மனைவி அகலிகை இந்திரனோடு இன்பம் நுகர்ந்து தவறிழைத்தமையால் உண்டான சினத்தின் காரணமாக கௌதம முனிவனுக்கு இந்திரனும் அகலிகையும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

16. பத்திநிலைப் பாத்திரங்களில், திருமாலுக்கு, பகைவரைக் கொன்றதன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

17. நன்னனுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக மிஞிலிக்கு ஆஅய்எயினன் எதிர்நிலையானான்.

18. புனல்நாட்டவர் நட்புக் காரணமாக ஆஅய்எயினனுக்கு, முதலாம் நன்னனும் அவன் படைத்தலைவன் மிஞிலியும் எதிர்ப்பாக இருந்துள்ளனர்.

19. அன்னி மிஞிலி நட்புக் காரணமாக இரண்டாம் திதியன் எனப்படும் திதியன் வெளியனுக்கு, கோசர் எதிர்நிலையாயினர்.

20. கட்டி நட்பு நிலை காரணமாகப் பாணனைத் துணைக்கு அழைத்து

தித்தன் வெளியனுடன் போரிட்டதால் பாணனுக்குத் தித்தன் வெளியனும், கணையன் ஆரிய மல்லரின் நட்புக் காரணமாகப் பாணனுடன் போரிட்டதால் பாணனுக்கு ஆரிய மல்லரும் எதிர்நிலையாயினர்.

21. பெருஞ்சேரலாதனின் நட்புக் காரணமாக அவனை நின்னினும் நல்லவன் என்று தமது மன்னன் கரிகால் பெருவளத்தானிடம் கூறிய வெண்ணிக்குயத்தியார்க்கு, முதலாம் கரிகாற் பெருவளத்தான் எதிர்நிலையானான்.

22. காரி நட்புநிலை காரணமாக ஓரியின் கொல்லி மலையை வென்று சேர மன்னனுக்குக் கொடுத்ததால் இச்சேரமன்னனுக்கு ஓரி எதிரியானான்.

23. சேரன் செங்குட்டுவன் அறுகையின் நட்புக் காரணமாக மோகூர் மன்னன் பழையன், அவனுடன் வந்த வேளிர் போன்றவருடன் போரிட்டமையால் எதிர்நிலையாயினர்.

24. பழையன் மாறன் தன் நண்பன் கோதை மார்பனுக்கு எதிரியாகிய கிள்ளிவளவனைப் போரிட்டுக் கொன்றதால் கோதை மார்பனுக்கு (சேரன்), கிள்ளிவளவன் எதிர்நிலையானான்.

25. தேர்வண்மலையன் எனப்படும் இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் நட்புக் காரணமாக அவனுக்குத் துணையாகச் சென்று போரிட்டு வென்றதால், சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை எதிர்நிலையானான்.

26. தலைவி மீது கொண்டிருந்த நட்புக் காரணமாகத் தோழிக்கு, பரத்தையரும் தலைவனும் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

27. அசுவத்தாமனுக்கு, அவனது தந்தை துரோணரைக் கொன்ற திட்டத்துய்ம்மனின் தலையைத் திருகி எறிந்தமையால் திட்டத்துய்ம்மன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

28. வீமனுக்கு, துரோபதையின் கூந்தலைப் பற்றி இழுத்ததின், அவளது இடரைக் களைய வேண்டியதின், நெஞ்சைப் பிளந்து போட்டதின் காரணங்களால் துச்சாதனன் எதிர்நிலையானான்.

29. கோப்பெருஞ்சோழனுக்கு, அவனது மக்கள் இருவரும் அரசாட்சி காரணமாக எதிர்நிலையானார்கள்.

30. பெருங்கோப்பெண்டு, சான்றோரின் கூற்றை ஏற்க மறுத்தமையால் எதிர்நிலையானாள்.

31. கோப்பெருஞ்சோழனின் நல்ல பண்புகளை எண்ணிப் பாராது அவனது உயிரைக் கொண்டு சென்ற கூற்றுவனை வையலாம் வாருங்கள் எனப் பொத்தியார் மற்ற புலவர்களிடம் கூறியதால் கூற்றுவன் எதிர்நிலையாக இருந்துள்ளான்.

**6.** முதல் இயலில் வீரத்தினால், இரண்டாம் இயலில் அறிவுரையினால், மூன்றாம், நான்காம் இயலில் பிரிவினால், ஐந்தாம் இயலில் பகை, நட்பு, உறவு காரணங்களால் ஒருவருக்கொருவர் எதிர்நிலை ஆயினார் என்பதை உறுதி செய்யப்பட்டுள்ளது.

**<u>பரிந்துரைகள்:</u>**

1. சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற ஆய்வைப் போல், சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகைப் பாடல்கள் ஓரங்க நாடக அமைப்பு கொண்டவை என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
2. சங்ககால மக்களின் பழக்க வழக்கங்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
3. சங்க இலக்கியத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் என்ற தலைப்பிலும் ஆய்வு செய்யலாம்.
4. சங்க இலக்கியங்கள் படைப்பிலக்கிய முன்னோடிகள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
5. சங்க இலக்கியத்தில் அகக் கோட்பாடுகள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
6. ஒப்பாய்வு நோக்கில் சங்க இலக்கியப் பாத்திரங்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
7. சங்க இலக்கிய உளவியல் சிந்தனைகள் என்ற நோக்கில் ஆய்வு செய்யலாம்.



# துணைநூற் பட்டியல்

**I முதன்மை நூல்கள்:**


1. இராமையா பிள்ளை, புலவர் நா, : நற்றிணை, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

2. பத்மஜா இரமேஷ், டாக்டர், புருஷோத்தமன், வி.பி., : சங்ககால மன்னர்களின் காலநிலை, முதற்றொகுதி மற்றும் இரண்டாம் தொகுதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2000.

3. பிரேமா, முனைவர் இரா., : குறுந்தொகை, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

4. மாணிக்கனார், புலவர் அ., : ஐங்குறுநூறு, முதற்றொகுதி மற்றும் இரண்டாம் தொகுதி, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, முதற்றொகுதி மற்றும் இரண்டாம் தொகுதி, அகநானூறு, முதற்றொகுதி, இரண்டாம் தொகுதி மற்றும் மூன்றாம் தொகுதி, புறநானூறு முதற்றொகுதி மற்றும் இரண்டாம் தொகுதி, திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை,

மலைபடுகடாம்,
பெரும்பாணாற்றுப்படை,
முல்லைப்பாட்டு,
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை, 1999, 2000.

5. வேங்கடசாமி, மயிலை. சீனி., : சங்ககால வரலாற்று ஆய்வுகள், முதற்றொகுதி மற்றும் இரண்டாம் தொகுதி

சங்ககாலத் தமிழக வரலாறு, முதற்றொகுதி மற்றும் இரண்டாம் தொகுதி,
எம். வெற்றியரசி, மனை எண் 9, கதவு எண் 26, ஜோசப் குடியிருப்பு, ஆதம்பாக்கம்,
சென்னை, 2001, 2003.

**II துணை நூல்கள்:**


1. இராமநாதன் செட்டியார், லெ.ப.கரு., : சங்ககாலத் தமிழர் வாழ்வு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1958.

2. சரளா இராஜகோபாலன், டாக்டர், : சங்க இலக்கியம் (அகம்), ஒளிப் பதிப்பகம், சென்னை, 1988.

3. சந்திரசேகரன், முனைவர் இரா., (முதன்மை பதிப்பாசிரியர்) : சங்க இலக்கியம்: பன்முக ஆய்வு, வெளியீடு - மகாகவி பாரதியார் நூலகம், கோயம்புத்தூர், 2001.

4. சந்திரசேகரன். முனைவர் இரா., : சங்க இலக்கியம்: பன்முகப் பார்வை, வெளியீடு - மகாகவி பாரதியார் நூலகம், கோயம்புத்தூர், 2001.

5. சந்திரசேகரன்., முனைவர் இரா., : சங்க இலக்கியம்: பன்முக நோக்கு, வெளியீடு - மகாகவி பாரதியார் நூலகம், கோயம்புத்தூர், 2001.

6. சுப்பிரமணியப் பிள்ளை, கா., : இலக்கிய வரலாறு, முதற்பாகம், ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1979.

7. சுப்பிரமணியன், ச.வே., : தமிழிலக்கிய வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2000.

8. தட்சிணாமூர்த்தி, அ., : சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், மங்கையர்க்கரசி பதிப்பகம், தஞ்சாவூர், 2001.

9. தமயந்தி, எஸ்., : கந்த புராணக் கதைகள், சுவாமிமலைப் பதிப்பகம், சென்னை, 1999.

10. தமிழண்ணல், : புதிய நோக்கில் தமிழிலக்கிய வரலாறு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2000.

11. தாயம்மாள் அறவாணன், டாக்டர், : அவ்வையார் அன்று முதல் இன்று வரை, பச்சைப்பசேல் வெளியீடு, புதுச்சேரி, 2000.

12. திருவேங்கடம், முனைவர் எ.கு., : அழகு முருகனின் அற்புத வடிவங்கள், விசய ராசேசுவரி பதிப்பகம், சென்னை, 1998.

13. தேவநேயப் பாவாணர். மொழிஞாயிறு, அ., : தமிழர் வரலாறு, தமிழ் மண் பதிப்பகம், சென்னை, 2000.

14. நாராயண வேலுப்பிள்ளை, வித்துவான், எம்., : நம்பி அகப்பொருள் (மூலமும் தெளிவுரையும்), முல்லை நிலையம், சென்னை, 2003.

15. பரமசிவானந்தம், அ.மு., : தமிழக வரலாறு, தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை, 1962.

16. பாலசுப்பிரமணியன், டாக்டர் கு.வெ., : சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1994.

17. புலியூர்க் கேசிகன்., : சயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணி, பாரி நிலையம், சென்னை, 1967.

18. பூவண்ணன், டாக்டர், : கம்பராமாயணம், பாலகாண்டம் (மூலமும் தெளிவுரையும்), வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1984.

19. பூவண்ணன், டாக்டர், : தமிழிலக்கிய வரலாறு, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1998.

20. பொற்கோ, டாக்டர், : ஆராய்ச்சி நெறிமுறைகள், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 2001.

21. மாணிக்கம், புலவர் அ., : வில்லி பாரதம், முதல் பாகம், ஆதிபருவம் (மூலமும் தெளிவுரையும்), வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1985.

22. முத்துராசன், டாக்டர் கு., : சங்ககாலம், தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1989.

23. வரதராசன், டாக்டர் மு., : இலக்கியக் காட்சிகள், பாரி நிலையம், சென்னை, 1962.

24. வரதராசன், டாக்டர் மு., : நெடுந்தொகைச் செல்வம், பாரி நிலையம், சென்னை, 1954.

25. வரதராசன், டாக்டர் மு., : நற்றிணைச் செல்வம், பாரி நிலையம், சென்னை, 1958.

26. வரதராசன், டாக்டர் மு., : இலக்கியத்திறன், பாரி நிலையம், சென்னை, 1965.

27. வரதராசன், டாக்டர் மு., : இலக்கிய ஆராய்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1967.

28. வரதராசன், டாக்டர் மு., : திருக்குறள் தெளிவுரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1988.

29. வரதராசன், டாக்டர் மு., : தமிழிலக்கிய வரலாறு, சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 1989.

30. ஜம்புலிங்கம், டாக்டர் அ., : சங்ககால வேந்தர்களின் சமுதாயப் பணி, இந்துமதிப் பதிப்பகம், சிதம்பரம், 2003.

31. ........ : சங்க இலக்கியக் கட்டுரைகள், கருத்தரங்கம், பதிப்புத் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.

<u>அகராதிகள்-தமிழ்:</u>


1. இராமநாதன், பி., : இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, வெளியீட்டாளர், இன்ஸ்டிடியூட் ஆப் சவுத் இண்தியன் ஸ்டடிஸ், சென்னை, 1991.

2. ஐயன்பெருமாள் கோனார், : கோனார் தமிழ்க்கையகராதி, பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 1972.

3. கந்தையா, நா.சி., : செந்தமிழ் அகராதி, அமிழ்தம் பதிப்பகம், சென்னை, 2003.

4. கதிரைவேற்பிள்ளை, நா., : தமிழ் மொழி அகராதி, எஜுகேஷனல் சர்வீசஸ், புதுடில்லி, 1998.

5. கௌமாரீஸ்வரி, எஸ்., : கௌரா தமிழகராதி, சாரதா பதிப்பகம், சென்னை, 2003.

6. கௌமாரீஸ்வரி, எஸ்., உதவி கார்த்திகாதேவி, ஆர்., : நா. கதிரைவேற்பிள்ளையின் தமிழ் மொழி அகராதி, சாரதா பதிப்பகம், சென்னை, 2003.

7. சபாபதி முதலியார், வித்துவான் ஈக்காடு, : ஸ்ரீமகள் தமிழகராதி, ஸ்ரீமகள் கம்பெனி, சென்னை, 1957.

8. சுப்பிரமணியம், இராம., : திருமகள் தமிழகராதி, திருமகள் நிலையம், சென்னை, 2001.

| | | | |
|---|---|---|---|
| 9. | செந்தமிழ்ச்சேய்., புலவர் பொறிஞர் சி., | : | ஆட்சிச் சொற்கள் அகர முதலி, மின்வாரியத் தமிழார்வலர் தமிழ்ப் பணி அறக்கட்டளை, கடலூர், 1999. |
| 10. | செந்தூர்ப்பாண்டியன், செ., | : | கல்வித் தமிழகராதி, அம்மையப்பன் வெளியீட்டகம், நெல்லை, 1979. |
| 11. | பழநிச்சாமி, வை.இ.ஆ.ப., (முதன்மை பதிப்பாசிரியர்) | : | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1997. |
| 12. | பவானந்தம் பிள்ளை., திவான் பகதூர். ச., | : | பவானந்தர் தமிழ்ச்சொல் அகராதி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2003. |
| 13. | மணிமேகலைப் பிரசுரம் | : | மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 1979. |
| 14. | மாருதிதாசன், செந்தமிழ் அறிஞர், மாணிக்க முதலியார், கே., அங்கமுத்து, என்., கலைவாணி, என்., பத்மாவதி, எஸ்., (ஆசிரியர் குழு) | : | நர்மதாவின் தமிழகராதி, நர்மதா பதிப்பகம், சென்னை, 2002. |
| 15. | லாசரஸ், டாக்டர் ஜி.பி., | : | மலேசிய செந்தமிழ் அகராதி, உலக இலக்கியக் கழகம், சென்னை, 1997. |

16. வீரமாமுனிவர், : சதுரகராதி, சென்னைப் பட்டினக் கல்விச் சங்கம், சென்னை, 1824.

17. ஸ்ரீகதிரைவேற்பிள்ளை, : தமிழ்ச்சொல்லகராதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

18. . . . . . . . . . . . . : கழகத் தமிழகராதி, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 2000.


**அகராதிகள் ஆங்கிலம் - தமிழ், தமிழ் - ஆங்கிலம் :**


1. அருளி, ஆய்வறிஞர் ப., : அருங்கலைச் சொல் அகரமுதலி (ஆங்கிலம் - தமிழ்), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 2002.

2. பாலகிருஷ்ண முதலியார், இரா., தொகுப்பு : தமிழ் - ஆங்கிலம் அகராதி, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1983.


**ஆங்கில அகராதிகள்:**


1. Acharya, Author & Editor., : Standard Dictionary, Eng-Eng-Telugu, S.R. Publishers, Vijayawada, 2002.

2. Bergen Evans, Comments by., : Dictionary of Quotations, Published by Avenel Books, Newyork, 1978.

3. Catherine Schwarz, George Davidson, Editors, : Chamber's English Dictionary, Published by Allied Publishers Limited, Madras, 1992.

4. Catherine Soanes, Angus Stevenson, Edited by, : Concise Oxford English Dictionary, published by Manzarkhan, Oxford University press, New Delhi, 2004.

5. Philip Babcock Gove. Ph.D., Editor in chief and The Merrian Webster editional staff, : Webster's third new International Dictionary, Published by Koneman verlagesells chaft, Cologne, 1993.

6. University of Madras, : Tamil Lexicon, Vol-I, Published under the Authority of the University of Madras, 1982

7. University of Madras, : Tamil Lexicon, Vol-I, Part-I, Published under the Authority of the University of Madras, 1982.

8. University of Madras, : Tamil Lexicon, Vol-V, Part-I, Published under the Authority of the University of Madras, 1982.

9. Winslow, : Winslow's a Comprehensive Tamil and English Dictionary, Asian Educational Services, New Delhi, 1979.

**களஞ்சியங்கள்:**

1. இராசேந்திரன், முனைவர் ச., : தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2001.

2. கோவேந்தன், புலவர் த., : சங்க இலக்கியச் செய்திக் களஞ்சியம், வேமன் பதிப்பகம், சென்னை, 2003.

3. சிங்காரவேலு முதலியார், ஆ., : அபிதானசிந்தாமணி, சாரதா பதிப்பகம், சென்னை, 2001.

**நிகண்டுகள்:**

1. அருமருந்தைய தேசிகர், : அரும்பொருள் விளக்க நிகண்டு, செந்தமிழ்ப் பிரசுரம், மதுரைத் தமிழ்ச்சங்கம், முத்திரா சாலை, 1931.

2. பிங்கல முனிவர், : பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, இந்து தியாலஜிகல் யந்திர சாலை, சென்னை, 1890.

3. யாழ்ப்பாணத்து நல்லூர் நாவலர் பரிசோதித்து சுவாமிநாத பண்டிதரால் அச்சிற் பதிக்கப்பட்டது, : சூடாமணி நிகண்டு, சைவ வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னப்பட்டணம், 1909.

**கட்டுரைத் தலைப்புகள்:**

1. அனுசூயா, ப., : புறநானூற்றில் செஞ்ஞாயிறு, செந்தமிழ்ச்செல்வி, சூன் 2002, ப. 32.

2. சாமி, பி.எல்., : வடமலையாள நாட்டில் நன்னன் நினைவுகள், செந்தமிழ்ச்செல்வி, மார்ச்சு, ஏப்ரல், மே, 2005, பக். 4,5,23.

3. பன்னீர்செல்வம், சு.கு., : சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள், செந்தமிழ்ச்செல்வி, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர், நவம்பர், 2002, பக். 29,25,17,17.

4. பொற்கோ, டாக்டர், : வரலாற்று நோக்கில் சங்க இலக்கியம், செந்தமிழ்ச்செல்வி, நவம்பர், 2004, ப. 25.

5. வாணி அறிவாளன், : சங்க காலத்தில் யானைகள், செந்தமிழ்ச்செல்வி, செப்டம்பர், 2005, ப. 36.

6. வாணி அறிவாளன், : பண்டைப் பெண் புலவர்க்கேயுரிய படைப்பியல் தனித்தன்மைகள், செந்தமிழ்ச்செல்வி, டிசம்பர், 2004, ப. 23, ஜனவரி, பிப்ரவரி, 2005, பக். 20, 28.




# சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள்

**முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.,) சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**பகுதி நேர ஆய்வாளர்**

**புலவர் பெ. வரதராசன்,** எம்.ஏ,. எம்.ஃபில்., எம்.எட்.,

**மேற்பார்வையாளர்**

முனைவர் **சு. தங்கதுரை,** எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்,. பி.எச்.டி.,





**தமிழ் ஆராய்ச்சித்துறை**

**திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி**

**விருத்தாசலம் -606 001.**


**செப்டம்பர் -2006**

# முடிவுரை

**0.** சங்க இலக்கியங்களில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்ததில் கண்ட முடிவுகள் இயல்வாரியாக இவ்வியலில் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

## 1. அரசரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற முதல் இயலில் கண்ட முடிவுகள்:

**1.1.** எதிர்நிலை என்பதற்கு எதிர்ந்த, எதிர்ந்து, எதிர்கொண்ட, எதிர்நின்று, எதிர்பூண்டோர், எதிர்தலைக்கொண்ட என்ற நேரடிச் சொற்களும் இதே பொருள் தரக்கூடிய பொருது, மாற்று, முரணிய, முரண் கொள், மாற்றோர், பகைவர், ஒன்னார், நண்ணார், ஏதில், அடங்கான், போர்அடு, பொருது களம் பட்டென, பெண்கொலை புரிந்த, தெவ்வர், ஒன்னாத் தெவ்வர், ஒட்டாது அகன்ற ஒன்னாத் தெவ்வர், பொருந்தாத் தெவ்வர், பணியாமையின், வேற்று, நண்ணாத் தெவ்வர், அடங்கா, ஒழித்த, இகல்முனை, அறன்இல், பணிந்து பொழியலனே, ஒன்னலர், பகைமுக, அருளாது, எடுக்க வல்லேன், யாத்துப் புடைப்ப, ஒழிந்த போன்ற சொற்களும் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இதில், நேரிடையாக எதிர்நிலைப் பொருள் கொள்ளும் சொற்களாக எதிர்ந்த, எதிர்ந்து, எதிர்கொண்ட, எதிர்நின்று, எதிர்பூண்டோர், எதிர்தலைக்கொண்ட போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளதை ஆய்வு மூலம் அறிய முடிந்தது.

## 1.2. சோழ மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பகுதியில் கண்ட முடிவுகள்:

1. சேரனின் படைத்தலைவன் கணையன், சோழ மன்னன் பெரும்பூண் சென்னிக்கு, நாடு பிடிக்கும் ஆசையின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானான்.

2. சேரரின் படைத்தலைவர்கள் நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை போன்ற அறுவர், பெரும்பூண் சென்னியின் படைத்தலைவன் பழையனுக்கு, வீரம் காரணமாக எதிர்நிலையாயினர்.

3. ஆமூர்மல்லன், தந்தை தித்தன் போன்றவர், சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளிக்கு, வீரம் காரணமாக எதிர்நிலைப்பாத்திரமாயினர்.

4. வேளிர் பதினொருவர், முதலாம் கரிகாற் பெருவளத்தானுக்கு வீரம், பகைவர் நாட்டை எரியூட்டிக் கொள்ளை செய்து அழித்தல் வேண்டும் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள்.

5. சேரபாண்டியர், தாயத்தார், பல ஒளி நாட்டார், பழைய அருவாள நாட்டு மன்னர், வடதிசை மன்னர், குடநாட்டு மன்னர், முல்லைநில மன்னர், இருங்கோவேள் போன்றவர்கள் இரண்டாம் கரிகாற் பெருவளத்தானுக்கு வீரம், தன்னுணர்வு, இளமையில் தாயத்தார் சிறையிலடைத்து இழிப்படுத்தியமை காரணங்களால் எதிர்நிலையாயினர்.

6. பரதவர், வடநாட்டு வடுகர், நன்னன் போன்றவர் இளஞ்சேட்சென்னிக்கு வீரத்தின், தன்னுணர்வின், முன்னோர் குறையாக விட்டுச் சென்ற செயலைச் செய்து முடிக்க வேண்டியதன் காரணங்களால் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

7. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளிக்கு, பகைமையின், கோபத்தின் காரணங்களால் எதிரியாக இருந்துள்ளனர்.

8. சேரன் செங்குட்டுவன், செம்பியனுக்கு, பகைவரை அடக்கியாள வேண்டியதன் காரணமாக எதிர்நிலையானான்.

9. மக்கள் இருவர், கோப்பெருஞ்சோழனுக்கு, தாயமுறை அரசாட்சி காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

10. சேர பாண்டியர், நலங்கிள்ளிக்கு, வீரம் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள்.

11. சோழன் நலங்கிள்ளி, புலவர் இளந்தத்தன் போன்றவர் நெடுங்கிள்ளிக்கு,

பகைமை, நலங்கிள்ளியின் ஒற்றன் என எண்ணிக் கொல்ல முற்பட்டமை காரணங்களால் எதிர்நிலையாயினர்.

12. பாண்டியன் பழையன் மாறன், இமயம்வென்ற சேரன், சேர பாண்டிய பெருவேந்தர், மலையமான் மக்கள், தாழி செய்யும் குயவன், கொங்கு நாட்டவர் போன்றவர் கிள்ளிவளவனுக்கு, வீரத்தின், தன்னுணர்வின், சினத்தின், பகைமையின், தாழியைச் செய்யும் ஆற்றல் குயவனுக்கில்லாமை காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

13. சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, அம்பர்கிழவோன் எனப்படும் அருவந்தை போன்றவர் சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளிக்கு, பகைமை, வீரம் காரணங்களால் எதிர்நினலயாயினர்.

14. ஆமூர் மல்லன், பாண்டியர், சேரர், கோசர், ஆரியர், போன்றவர் சோழருக்கு, வீரத்தின், தன்னுணர்வின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

15. சோழ மன்னர்களில் கிள்ளிவளவனுக்கு, அவனது வீரம், தன்னுணர்வு, சினம், புலவருக்குப் பரிசில் தருதல், நாடு பிடிக்கும் ஆசை, பகைமை, புகழ் போன்ற காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

## 1.3. பாண்டிய மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பகுதியில் கண்ட முடிவுகள்:

1. பசும்பூண் பாண்டியனுக்கு, அவனது வீரம், நாடுபிடிக்கும் ஆசையின் காரணங்களால் கொங்கர் எதிர்நிலையானார்.

2. சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை, சோழன் நலங்கிள்ளி, குறுநில மன்னர் திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன் ஆகிய வேளிர் ஐவர், நாவலந்தீவு மன்னர்கள், தென் பரதவர் என்னும் குறுநில மன்னர் போன்றவர்கள் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு நாடு பிடிக்கும் ஆசையின், பகைமையின், இழிவுபடுத்திப்

பகைச் சொல் பேசியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

3. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதிக்கு, அவனது தன்னுணர்வு காரணமாக வடநாட்டு அரசர் எதிர்நிலையாயினர்.

4. வேங்கைமார்பன், கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதிக்கு அவனது வீரம் காரணமாக எதிர்நிலையானான்.

5. பாண்டிய மன்னர்களில், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு, அவனது வீரம், தன்னுணர்வு, நாடு பிடிக்கும் ஆசை, பகைமை, படை வலிமை, படைப் பயிற்சி, சினம், பகைவர் இழிவுபடுத்திப் பகைச் சொல் பேசுதல், பகைவரது நகரைக் கொள்ளையிடல் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

## 1.4. சேர மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பிரிவில் கண்ட முடிவுகள்:

1. யவனர், கரிகாற் பெருவளத்தான் போன்றோர் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனுக்கு அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

2. ஆரிய மன்னர், யவனர், கடம்பன் போன்றவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு, வீரத்தின், மாற்றாரைக் கொள்ளையடித்துச் சிறைபிடித்தலின், சினத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

3. பாண்டியர், கொங்கர், சோழர், வேளிர் போன்றவர்கள் பல்யானைச் செல்கெழு குட்டுவனுக்கு, வீரத்தின், பகைவரது அரண்களை அழித்ததின், சினத்தின், பகைவர் நாட்டைத் தீயிட்டுக் கொளுத்தியதின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

4. இரண்டு பேரரசர்கள் ஆகிய சோழ பாண்டியர் செல்வக்கடுங்கோ வாழியாதனுக்கு அவனது படைபலத்தின் காரணமாக எதிர்நிலையாயினர்.

5. பூழிநாட்டவர், நன்னன், நெடுமிடல் அஞ்சி, சேரமன்னர் போன்றோர் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலுக்கு நாடுபிடிக்கும் ஆசையின், வீரத்தின், பகைவர் நிலங்களைக் கெடுத்துத் தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டதின், இழிவுபடுத்தல் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

6. கனக விசயர், யவனச் சிற்றரசர், இடும்பாவனத்து வீரர்கள், பழையன், சோழ நாட்டுக் குறுநிலமன்னர் ஒன்பதின்மர், குறும்பர் போன்றோர் சேரன் செங்குட்டுவனுக்கு, கண்ணகிக்குச் சிலை சமைப்பதற்குரிய கல்னல இமயமலையிலிருந்து எடுத்துவர எண்ணியதின், கப்பற்படை செலுத்திப் போரிட்டதின், மாற்றரசரின் காவல் மரத்தை வெட்டியதின், மாற்றரசர்தம் மகளிரின் கூந்தலைக் களைந்தமையின், சினத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

7. அதிகமான், கழுவுள் என்னும் ஆயர் தலைவன், பதினான்கு வேளிர்கள், அதிகமான் மகன் பொகுட்டெழினி ஆகியோர், பெருஞ்சேரல் இரும்பொறைக்கு அவனது வீரத்தின், நாடு பிடிக்கும் ஆசையின், வலிமையின், தகடூர்க் கோட்டையை அழித்ததின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

8. மழவர், ஆரிய மக்கள் போன்றோர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு, அவனது வீரத்தின், கவர்ந்து சென்ற ஆடுகளை மீட்டுக் கொண்டு வருவதற்காகப் போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

9. விச்சிக்கோன், கோப்பெருஞ்சோழன், பழையன் மாறன் போன்றோர் இளஞ்சேரல் இரும்பொறைக்கு, வீரத்தின், சினத்தின், வஞ்சினத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

10. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், மூவன் போன்றோர் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறைக்கு, பகைவர் நாட்டை அழித்து அவர்தம் அணிகலன்களைக் கவர்ந்து கொண்டதின், போரிட்டுப் பல்லைப் பிடுங்கியதின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

11. கிள்ளிவளவன், சேரமான் கோக்கோதை மார்பனுக்கு, பழையன் மாறன்

கிள்ளிவளவனின் ஊரைக் கவர்ந்து கொண்டதைக் கண்டு மகிழ்ச்சியடைந்ததின் காரணத்தால் எதிராளியானான்.

12. சோழன் செங்கணான், அவனது சிறைக்காவலர்கள் ஆகியோர் சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கு, அவன் போரில் தோற்றுச் சிறை வைக்கப்பட்டதின், மானத்தைக் காக்க உயிர் துறந்ததின் காரணங்களால் எதிராளியானார்கள்.

13. சேரமன்னர்களில் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலுக்கும் சேரன் செங்குட்டுவனுக்கும் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இது அவர்களின் வீரம் காரணமாக இருந்துள்ளது.

## 1.5. குறுநில மன்னர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பகுதியில் கண்ட முடிவுகள்:

1. அதிகன், கொங்கருக்கு, அவர்களது வீரத்தின் காரணமாக எதிரியானான்.

2. வேளிர், முதலாம் திதியனுக்கு அவனது வீரம் காரணமாக எதிராளியானார்கள்.

3. கோசர், இரண்டாம் திதியனுக்கு அவனது வீரம் காரணமாக எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

4. அன்னி, மூன்றாம் திதியனுக்கு, அவனது காவல் மரத்தை வெட்டியதின் காரணமாக எதிர்நிலையானான்.

5. அதிகன், ஆஅய் எயினன் ஆகியோர் மிஞிலிக்கு, அஞ்சாமையின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

6. முதலாம் எவ்வி, நன்னன், நன்னனின் படைத்தலைவன் மிஞிலி போன்றோர் அகுதைக்கு, அவன் சக்கரப்படை வைத்திருந்ததன், ஆஅய் எயினனின் உடலை எடுத்து வந்து வேள்மகளிரிடம் ஒப்படைத்ததின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

7. பிண்டன், நீராடச் சென்று மாங்கனி உண்ட பெண் மற்றும் அவளது சுற்றத்தார் போன்றோர், முதலாம் நன்னனுக்கு, அவனது வீரத்தின், பெண் கொலை புரிந்ததின் காரணங்களால் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

8. அகுதை, முதலாம் எவ்விக்கு, அவனது வீரத்தின், விழுப்புண்பட்டு போர்க்களத்தில் இறந்ததின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

9. நெடுமிடல், இரண்டாம் எவ்விக்கு, அவனது ஏவலைக் கேட்டு நடக்காமையின் காரணமாக எதிர்நிலையானான்.

10. அன்னி, மூன்றாம் எவ்விக்கு, அவனது அறிவுரையை ஏற்றுக் கொள்ளாமை காரணத்தால் எதிர்நிலையானான்.

11. நன்னன், அன்னி மிஞிலி, மோகூர் மன்னன் பழையன் போன்றோர் கோசருக்கு, அவர்தம் வஞ்சினத்தின், அன்னி மிஞிலியின் தந்தையின் கண்களைப் பிடுங்கியதின், அஞ்சாமையின் காரணங்களால் எதிராளியானார்கள்.

12. கழுவுள், பதினான்கு வேளிர்க்கு, அவர்கள் ஒன்று கூடித் தாக்கிப் போரிட்டதின் காரணமாக எதிராளியானான்.

13. கணையன், ஆரியமல்லன், வெளியன் தித்தன் ஆகியோர் முதலாம் பாணனுக்கு அவனது வல்லமை, அச்சம் காரணமாக எதிர்நிலையானார்கள்.

14. கொங்கர், சேரனின் படைத்தலைவர்கள் அறுவர், நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை ஆகியோர் முதலாம் பழையனுக்கு, அவனது பிறர்க்கு உதவும் மனப்பான்மையின், வீரத்தின் காரணங்களால் எதிராளியானார்கள்.

15. அறுகை, சேரன் செங்குட்டுவன் ஆகியோர், இரண்டாம் பழையன் மோகூர் மன்னனுக்கு, அவனது வீரத்தின், காவல் மரமான வேப்ப மரத்தைக் காக்க இயலாமையின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

16. மோரியர், கிள்ளிவளவன் போன்றோர், மூன்றாம் பழையன் மோகூர் மன்னனுக்கு, அவனது பகைவர் போர்முனையை அழிக்கும் ஆற்றலின், எதிரியின் குதிரை, யானை கைப்பற்றியதின் காரணங்களால் எதிராளியானார்.

17. கோசர், அன்னி மிஞிலிக்கு, அவள் அக்கோசர்களைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டதின் காரணமாக எதிர்நிலையாயினர்.

18. தித்தன் வெளியன் அவையிலிருந்த பாணன், பழையன் போன்றோர் கட்டிக்கு அவனது தன்னுணர்வின், கூட்டணியில் சேர்ந்து போரிட்டதின் காரணங்களால் எதிர்நிலையானார்கள்.

19. சோழனின் படைத்தலைவன் மத்தி, முதலாம் எழினிக்கு அவன் ஏவலைக் கேட்டு நடக்காத காரணத்தால் எதிர்நிலையானான்.

20. பெருஞ்சேரலிரும்பொறை, இரண்டாம் எழினி எனப்படும் அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலையானான்.

21. பாண்டியன் நெடுஞ்செழியன், மூன்றாம் எழினிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமானான்.

22. கொங்கர், ஆஅய் அண்டிரனுக்கு அவனது வீரம் காரணமாக எதிர்நிலையாயினர்.

23. ஓரி, முதலாம் மலையமான் திருமுடிக்காரிக்கு, அவனது வீரம் காரணமாக எதிர்நிலையானான்.

24. சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை, இரண்டாம் மலையமான் திருமுடிக்காரிக்கு, அவனது உதவும் மனப்பான்மை காரணமாக எதிர்நிலையானான்.

25. சேர, சோழ, பாண்டியர், பாரிக்கும் ஓய்மான் நல்லியங் கோடனுக்கும் வீரத்தின், தன்னுணர்வின் காரணமாக எதிர்நிலையானார்கள்.

26. மூவேந்தர், பாரி மகளிர்க்கு, பாரியை வஞ்சித்துக் கொன்றுவிட்டதன் காரணமாக எதிராளியானார்கள்.

27. மழவர், புல்லிக்கு அவன் பகைவரது செல்வத்தைக் கவர்ந்து கொள்ளுதல் காரணமாக எதிர்நிலையாயினர்.

28. பெரியன், திதியன் போன்றோர் அன்னிக்கு, பகைமையின் காவல் மரத்தை வெட்டிச். சாய்த்தமையின் காரணங்களால் எதிராளியாயினர்.

29. தொண்டைமான், குறும்பர், கோவலூர் மலாடர் மன்னன், சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் போன்ற ஏழ்மன்னர்கள் போன்றோர் அதியமான் நெடுமான் அஞ்சிக்கு, அவனது படை வலிமையின், மாற்றார் பொருள் கவர்தலின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

30. குறுநில மன்னர்களில் அதியமான் நெடுமான் அஞ்சிக்கு, அவனது படை வலிமையின், மாற்றார் பொருள் கவர்தலின், தன்னுணர்வின், வீரத்தின் காரணங்களால் எதிர்நிலைப்பாத்திரங்கள் அதிகம்.

## 1.6. வீரர்களின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற பிரிவில் கண்ட முடிவுகள்:

1. முதலாம் எழினி, வீரன் மத்திக்கு, அவனது அரசன் ஆணை காரணமாகப் பிடித்து வந்ததால் எதிர்நிலையானான்.

2. சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியின் வீரர்கள், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனின் வீரர்க்கு, அவனது தேர்ப்படை கொண்டு போரிட்டதன் காரணமாக எதிராளியாயினர்.

3. இளையோரும், முதியோரும், மூன்றாம் திதியன், அன்னி ஆகியோரின் வீரர்க்கு, அவர்களுடன் போரிடத் தகுதியில்லாமை காரணமாக வேறிடத்திற்குச் செல்லல் வேண்டும் என அனுப்பியதன் காரணமாக எதிராளியாயினர்.

4. வீரர்களில், பெண்ணின் தந்தை, தமையர் போன்ற வீரர்க்கு, அவர்களது வீரம், குடிமை ஆண்மை போன்றவற்றால் பொருந்தாதவர்க்குப் பெண் தருவதில்லை, போரில் சிறந்தவர்க்கு மட்டும் பெண் தர வேண்டும், போர் வெறி கொண்டதின், பெண் தர மறுத்தமையின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம். இது அவர்களது வீரம் காரணமாக இருந்துள்ளது.

## 2. புலவரின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற இரண்டாம் இயலில் கண்ட முடிவுகள்:

1. சேர, சோழ, பாண்டியர், வையாவிக் கோப்பெரும்பேகன் ஆகியோர் கபிலருக்கு, பாரியை எதிர்த்து வெற்றி பெற்றுவிடலாம் என்று ஒன்று சேர்ந்து வந்ததன், பேகனைத் திருத்திக் கண்ணகியை அவனுடன் ஒன்று சேர்க்க வேண்டும் என்று அறிவுறுத்தியதன் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

2. முதலாம் பெருங்குன்றூர் கிழார் அறிவுரை கூறியமையால் வையாவிக் கோப்பெரும் பேகன் எதிர்நிலையானான்.

3. சேரமான் குடக்கோச்சேரலிரும்பொறை, இரண்டாம் பெருங்குன்றூர் கிழாருக்குப் பரிசில் கொடுக்காததன் காரணமாக எதிர்நிலையானான்.

4. வையாவிக் கோப்பெரும் பேகன், பரணர்க்கும் அரிசில் கிழாருக்கும் அவர்களின் அறிவுரை காரணமாக எதிர்நிலையாயினர்.

5. புல்லாற்றூர் எயிற்றியனார் அறிவுரை கூறியதால் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலையானான்.

6. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதனார் மன உணர்வினால் கோப்பெருஞ்சோழன் எதிர்நிலையானான்.

7. கோப்பெருஞ்சோழன், பொத்தியாருக்கு, பிள்ளை பெறாதவர் வடக்கிருக்கத் தகுதியற்றவர் எனத் தடுத்ததன் காரணமாக எதிர்நிலையானான்.

8. ஆலத்தூர் கிழார் அறிவுரை காரணமாகக் கிள்ளிவளவன் எதிர்நிலையானான்.

9. கோவூர் கிழாரின் அறிவுரை காரணமாக நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் போன்றோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

10. தாமப்பல் கண்ணனார் அறிவுரை கூறியதால் மாவளத்தான் எதிர்நிலைப் பாத்திரம்.

11. இளவிச்சிக்கோ, இளங்குமணன், மூவன் போன்றோர் பெருந்தலைச் சாத்தனார்க்கு, தழுவ மறுத்ததின், அறிவுரையின், பரிசில் தராது காலம் நீட்டித்தமையின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

12. இளவெளிமான், அதியமான் நெடுமான் அஞ்சி போன்றோர் பெருஞ்சித்திரனார்க்குச் சிறிது பொருள் கொடுத்ததின், மனம் கனிந்து ஈயாததின், இழிவுபடுத்தியதின், தகுதி அறிந்து பொருள் தராததின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

13. ஐயூர் முடவனார் அறிவுரையால் தாழியைச் செய்யும் குயவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

14. பெருஞ்சிக்கல்கிழான், மதுரை மருதனிள நாகனார்க்கு, போரினால் ஊருக்குத் துன்பம் நேர்ந்துவிடக்கூடாது என அறிவுரை கூறியதன் காரணத்தால் எதிர்நிலையானான்.

15. பெருங்கோப்பெண்டை, தீயில் புகத்தடை செய்ததன் காரணமாகச் சான்றோர் எதிர்நிலைப் பாத்திரம்.

16. சோழன், போரவைக் கோப்பெரு நற்கிள்ளி, நக்கண்ணையாருக்கு, அவளது காதல் அறிந்து பசலையைப் போக்க வராத மன்னனோடு கூடப் பெறாமல் இருந்தமை காரணமாக எதிர்நிலையானான்.

17. தொண்டைமான், ஔவையார்க்கு, வஞ்சப்புகழ்ச்சி காரணமாக எதிர்நிலையானான்.

18. புலவர்களில், ஔவையார் என்னும் பெண்பாற் புலவர்க்கு, அதியமானுடன் பகைவர் போரிடலைத் தடுத்ததின், அதியமானின் வீரத்தை வெளிப்படுத்தியதின், தொண்டமானிடம் தூது சென்று அவனை வஞ்சப் புகழ்ச்சியில் புகழ்வது போலப் பழித்துப் பேசியதின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

**3. தலைவனின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற மூன்றாம் இயலில் கண்ட முடிவுகள்:**

1. கபிலர் குறிப்பிடும் பாணர் கூற்றிலிருந்து வையாவிக் கோப்பெரும் பேகனுக்கு, பரத்தை பிரிவு காரணமாக அவனது மனைவி கண்ணகி எதிர்நிலையாய் இருந்துள்ளாள்.

2. தலைவனுக்கு, தலைவி, தலைவியின் தோழி, தலைவியின் தாய் போன்றோர் தலைவனின் காதல் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

3. தொண்டைமான் இளந்திரையன் தம் கூற்றிலிருந்து தனலவனுக்கு, தலைவி அறிவு மயக்கமுற்றமையால் எதிர்நிலைப் பாத்திரமானாள்.

4. ஓரம்போகியார் தம் கூற்றிலிருந்து பரத்தை நிமித்தமாகச் சென்ற தலைவனுக்கு, தலைவி, பரத்தை, தலைவியின் தோழி போன்றோர் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

5. கொற்றனார் தம் கூற்றிலிருந்து பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, பரத்தையர், தோழி போன்றோர் எதிர்நிலையாயினர்.

6. நல்லந்துவனார் கூற்றிலிருந்து பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, தலைவி, தோழி போன்றோர் எதிர்நிலையாயினர்.

7. சீத்தலைச் சாத்தனார் கூற்றிலிருந்து, பரத்தை பிரிவு காரணமாகத் தலைவனுக்கு, தலைவி, தோழி ஆகியோர் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

8. தலைவன் கூற்றாக வெளிப்படுத்துவதிலிருந்து பிரிதலினால் தலைவனுக்கு, தலைவி எதிர்நிலையானாள்.

9. பேயனார் கூற்றிலிருந்து, குறிப்பிட்ட நேரத்தில் தலைவன் வராததால் தலைவனுக்கு, தலைவி, பாணன் போன்றோர் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

10. மதுரைத் தமிழ்கூத்தனார் கடுவன் மள்ளனாரின் கூற்றிலிருந்து அறநெறி நில்லாத தலைவன் ஒருவனுக்கு, அறங்கூறு அவையத்தார், தலைவன் உற்ற தண்டனையைப் பார்த்தவர், தலைவி போன்றோர் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

## 4. தலைவியின் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற நான்காம் இயலில் கண்ட முடிவுகள்:

1. வன்பரணர் கூற்றில், போர்வீரன் ஒருவன் இறந்த பிரிவாற்றாமை காரணமாக அவன் மனைவிக்கு, கூற்றுவன் எதிர்நிலையானான்.

2. பெருஞ்சித்திரனார், தம் மனைவிக்குப் பரிசில் பெற்று வரத் தாமதமாகியதால் எதிர்நிலையானார்.

3. பெருந்தலைச் சாத்தனார், தம் மனைவிக்கு, வறுமை காரணமாக எதிர்நிலையானார்.

4. இளந்திரையனார் கூற்றிலிருந்து, தலைவன், தலைவிக்கு, அவளது காமநோய் காரணமாக எதிர்நிலையானான்.

5. மாறன் வழுதி கூற்றில், பிரிவாற்றாது வருந்தியிருந்த தலைவிக்கு, மகிழ்ச்சி காரணமாகப் பூவிற்றுக் கொண்டிருந்த ஒருத்தி எதிர்நிலையானாள்.

6. உக்கிரப்பெருவழுதி கூற்றில், தலைவன் வரவுக்குக் காவலர் இடையூறாக இருந்ததன் காரணமாகத் தலைவிக்கு, அக்காவலர் எதிர்நிலையாயினர்.

7. பரதவர் மகளாகிய தலைவிக்கும் அவளது தோழிக்கும், பயன்படாதிருந்ததன் காரணமாகத் தலைவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

8. பரத்தை நிமித்தமாகத் தலைவன் பிரிந்து சென்றதால், தலைவிக்கு, பரத்தை எதிர்நிலைப் பாத்திரம் என்பதைப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

9. பேகனின் காதலி வீட்டிற்குச் சென்று பேகனைக் கண்டு கண்ணகியிடம் திரும்புமாறு கேட்டுக் கொண்டதால் அவனது காதலிக்கு, பேகனின் மனைவி கண்ணகி, புலவர்கள் பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் மற்றும் ஊர்மக்கள் போன்றோர் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

10. புலவர்கள் நக்கண்ணையார், முதுகூற்றனார், உலோச்சனார், வெண்பூதியார் போன்றோர் கூற்றிலிருந்து, பிரிவு நிமித்தம் காரணமாகத் தலைவிக்கு, தலைவன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

11. பிரிவு நிமித்தம் காரணமாகவும், சினம் காரணமாகவும் கண்ணகிக்கு, வையாவிக் கோப்பெரும் பேகனும் அவனது பரத்தையும் எதிர்நிலையாய் இருந்துள்ளனர்.

12. போர், பரத்தை பிரிவு, தொழில் தேடல் பிரிவு காரணமாகத் தலைவிக்கு, தலைவன் எதிர்நிலைப் பாத்திரமாக இருந்துள்ளான்.

## 5. பிற கூற்றுகளில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற ஐந்தாம் இயலில் கண்ட முடிவுகள்:

1. சூரபன்மன் மற்றும் அவனது சுற்றம், இந்திரன் போன்றவர்கள் முருகப்பெருமானுக்கு, அவுணராய் நின்ற மாமரத்தை வெட்டி வீழ்த்தியதின், அசுரர் தலைவனைக் கொன்றதின், இந்திரன் முருகப் பெருமானது சூல் அழித்ததின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

2. சூரபன்மன், முருகப்பெருமானின் கூளிச் சுற்றத்திற்கு, முருகப்பெருமானைப் பகைத்துக் கொண்டதால், கொன்று வெற்றி பெற வேண்டும் என்னும் எண்ணத்தால் எதிர்நிலையானான்.

3. தேவசேனையும் முருகப்பெருமானும், வள்ளிநாச்சிக்கு, அவள்

தேவசேனையை வணங்கிய முருகப்பெருமானின் கைகளைக் கட்டி மாலையால் புடைத்ததன் காரணமாக எதிர்நிலையாயினர்.

4. வள்ளியின் தோழியருக்கு, தேவசேனையின் தோழியர் சண்டையிட்டதன் காரணமாக எதிர்நிலையாயினர்.

5. தேவரின் குரு வியாழனுக்கு, அசுரரின் குரு வெள்ளி, தேவ அசுர நெறிகளை விளக்க வேண்டி ஒருவருக்கொருவர் மாறுபட்டமையால் எதிர்நிலைப் பாத்திரம்.

6. இரணியன், மாவலி என்னும் அசுரச் சக்கரவர்த்தி, கேசி என்னும் அசுரன், மல்லர், கம்சன் போன்றவர்கள் திருமாலுக்கு, அவர் எதிரியைக் கொன்றதின், மாவலி சக்கரவர்த்தி என்னும் அசுரனைக் கொன்றதின், தீவினை செய்பவரை அழித்ததின், மல்லர்களைக் கொன்றதின், பிறர்க்குத் துன்பம் செய்ததின் காரணங்களால் எதிர்நிலையாயினர்.

7. மன்னர் பரம்பரையினர், பரசுராமனுக்கு, அவன் தவம் செய்தமைக்கு இடையூறு செய்ததின் காரணமாக எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

8. பிரகலாதன், இரணியனுக்கு, தந்தையைப் புகழ்ந்து பேசாமல் திருமாலைப் புகழ்ந்து பேசியமைக்காக எதிர்நிலைப் பாத்திரமானான்.

9. இராமன், சீதை ஆகிய இருவருக்கும், இராவணன், சீதையைக் கவர்ந்து சென்ற காரணத்தால் எதிர்நிலையானான்.

10. தேவர்களும் ஆதிசேடனும் கருடனுக்கு, அவன்தன் தாயை மீட்க வேண்டிப் போரிட்டமையாலும், திருமாலைக் காக்க ஆதிசேடனைத் தன் வாயில் பற்றிக் கொண்டமையாலும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

11. மேருமலையைக் காத்த ஆதிசேடனார்க்கு, அம்மலையைப் பெயர்க்க வந்த காற்றுத் தேவன் எதிர்நிலையானான்.

12. துரியோதனன், துரியோதனனுடன் பிறந்த நூறு பேர் போன்றவர்கள் ஐவர் பாண்டவர்க்கு, அவர்களைக் கொல்லப் போரிட்டமையின், தர்மபுத்திரர் முதலியோர் உள்ளே இருக்க அரக்கு மாளிகை தீப்பற்றி எரியக் காரணமானதின், அவரது நாட்டைப் பிடுங்கிக் கொண்டதின் காரணங்களால் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

13. துரியோதனன், வீமனுக்கு, பாஞ்சாலியின் ஆடையைப் பற்றி இழுத்து அவமானப்படுத்தியதின், பாஞ்சாலியின் சபதம் முடிக்க வீமனால் கொல்லப்பட்டதின் காரணங்களால் எதிர்நிலையானான்.

14. இராவணன், கூற்றுவன், அவுணர் மூவர் போன்றோர் சிவபெருமானுக்கு, இமயமலையை இராவணன் தன் கைகளால் எடுக்க முயன்றதின், கூற்றுவனைக் கொன்றதின், தேவர்க்குத் துன்பம் செய்து வந்த அவுணரை அழித்ததின் காரணங்களால் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

15. தன் மனைவி அகலிகை இந்திரனோடு இன்பம் நுகர்ந்து தவறிழைத்தமையால் உண்டான சினத்தின் காரணமாக கௌதம முனிவனுக்கு இந்திரனும் அகலிகையும் எதிர்நிலைப் பாத்திரமாயினர்.

16. பத்திநிலைப் பாத்திரங்களில், திருமாலுக்கு, பகைவரைக் கொன்றதன் காரணமாக எதிர்நிலைப் பாத்திரங்கள் அதிகம்.

17. நன்னனுடன் கொண்டிருந்த நட்புநிலை காரணமாக மிஞிலிக்கு ஆஅய்எயினன் எதிர்நிலையானான்.

18. புனல்நாட்டவர் நட்புக் காரணமாக ஆஅய்எயினனுக்கு, முதலாம் நன்னனும் அவன் படைத்தலைவன் மிஞிலியும் எதிர்ப்பாக இருந்துள்ளனர்.

19. அன்னி மிஞிலி நட்புக் காரணமாக இரண்டாம் திதியன் எனப்படும் திதியன் வெளியனுக்கு, கோசர் எதிர்நிலையாயினர்.

20. கட்டி நட்பு நிலை காரணமாகப் பாணனைத் துணைக்கு அழைத்து

தித்தன் வெளியனுடன் போரிட்டதால் பாணனுக்குத் தித்தன் வெளியனும், கணையன் ஆரிய மல்லரின் நட்புக் காரணமாகப் பாணனுடன் போரிட்டதால் பாணனுக்கு ஆரிய மல்லரும் எதிர்நிலையாயினர்.

21. பெருஞ்சேரலாதனின் நட்புக் காரணமாக அவனை நின்னினும் நல்லவன் என்று தமது மன்னன் கரிகால் பெருவளத்தானிடம் கூறிய வெண்ணிக்குயத்தியார்க்கு, முதலாம் கரிகாற் பெருவளத்தான் எதிர்நிலையானான்.

22. காரி நட்புநிலை காரணமாக ஓரியின் கொல்லி மலையை வென்று சேர மன்னனுக்குக் கொடுத்ததால் இச்சேரமன்னனுக்கு ஓரி எதிரியானான்.

23. சேரன் செங்குட்டுவன் அறுகையின் நட்புக் காரணமாக மோகூர் மன்னன் பழையன், அவனுடன் வந்த வேளிர் போன்றவருடன் போரிட்டமையால் எதிர்நிலையாயினர்.

24. பழையன் மாறன் தன் நண்பன் கோதை மார்பனுக்கு எதிரியாகிய கிள்ளிவளவனைப் போரிட்டுக் கொன்றதால் கோதை மார்பனுக்கு (சேரன்), கிள்ளிவளவன் எதிர்நிலையானான்.

25. தேர்வண்மலையன் எனப்படும் இரண்டாம் மலையமான் திருமுடிக்காரி சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் நட்புக் காரணமாக அவனுக்குத் துணையாகச் சென்று போரிட்டு வென்றதால், சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறை எதிர்நிலையானான்.

26. தலைவி மீது கொண்டிருந்த நட்புக் காரணமாகத் தோழிக்கு, பரத்தையரும் தலைவனும் எதிர்நிலையாக இருந்துள்ளனர்.

27. அசுவத்தாமனுக்கு, அவனது தந்தை துரோணரைக் கொன்ற திட்டத்துய்ம்மனின் தலையைத் திருகி எறிந்தமையால் திட்டத்துய்ம்மன் எதிர்நிலைப் பாத்திரமானான்.

28. வீமனுக்கு, துரோபதையின் கூந்தலைப் பற்றி இழுத்ததின், அவளது இடரைக் களைய வேண்டியதின், நெஞ்சைப் பிளந்து போட்டதின் காரணங்களால் துச்சாதனன் எதிர்நிலையானான்.

29. கோப்பெருஞ்சோழனுக்கு, அவனது மக்கள் இருவரும் அரசாட்சி காரணமாக எதிர்நிலையானார்கள்.

30. பெருங்கோப்பெண்டு, சான்றோரின் கூற்றை ஏற்க மறுத்தமையால் எதிர்நிலையானாள்.

31. கோப்பெருஞ்சோழனின் நல்ல பண்புகளை எண்ணிப் பாராது அவனது உயிரைக் கொண்டு சென்ற கூற்றுவனை வையலாம் வாருங்கள் எனப் பொத்தியார் மற்ற புலவர்களிடம் கூறியதால் கூற்றுவன் எதிர்நிலையாக இருந்துள்ளான்.

**6.** முதல் இயலில் வீரத்தினால், இரண்டாம் இயலில் அறிவுரையினால், மூன்றாம், நான்காம் இயலில் பிரிவினால், ஐந்தாம் இயலில் பகை, நட்பு, உறவு காரணங்களால் ஒருவருக்கொருவர் எதிர்நிலை ஆயினார் என்பதை உறுதி செய்யப்பட்டுள்ளது.

**<u>பரிந்துரைகள்:</u>**

1. சங்க இலக்கியத்தில் எதிர்நிலைப் பாத்திரங்கள் என்ற ஆய்வைப் போல், சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகைப் பாடல்கள் ஓரங்க நாடக அமைப்பு கொண்டவை என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
2. சங்ககால மக்களின் பழக்க வழக்கங்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
3. சங்க இலக்கியத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் என்ற தலைப்பிலும் ஆய்வு செய்யலாம்.
4. சங்க இலக்கியங்கள் படைப்பிலக்கிய முன்னோடிகள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
5. சங்க இலக்கியத்தில் அகக் கோட்பாடுகள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
6. ஒப்பாய்வு நோக்கில் சங்க இலக்கியப் பாத்திரங்கள் என்ற தலைப்பில் ஆய்வு செய்யலாம்.
7. சங்க இலக்கிய உளவியல் சிந்தனைகள் என்ற நோக்கில் ஆய்வு செய்யலாம்.

